தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு எண். 74

# சரபேந்திர வைத்திய ரத்னாவளி

மொழிபெயர்த்துப் பதிப்பித்தவர் :

ராஜஸ்ரீ ஆ. கிருஷ்ணசாமி மாடிக்ராவ் சாகேப், B. A.,






தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூல் நிலையம்

*

1985] [விலை ரூ. 35—00

TANJORE

RAJESRI CHATRAPATHI

# Pratapasimha Maharaj Sahib's

# 61st BIRTHDAY



# COMMEMORATION VOLUME

*PRESENTED TO*

Rajesri Chatrapathi

**PRATAPASIMHA MAHARAJ SAHIB**
Prince and Life member of the
Administrative Committee of

The Tanjore Maharaja Serfoji's Sarasvati
Mahal Library, Tanjore.

*In Commemoration of his*

61st BIRTHDAY

*By*

The Administrative Committee
of
The T. M. S. S. M. Library, Tanjore.

தஞ்சை

ராஜேஸ்ரீ சத்ரபதி

# பிரதாபசிம்ஹ மகாராஜா சாகேப்

அவர்களின்



Rajesri Chatrapathi

PRATAPASIMHA MAHARAJA SAHIB

TANJORE

# ௬0-வது ஆண்டு நிறைவு விழா

# நினைவு மலர்

# ஐந்தாம் பதிப்புரை



'சரபேந்திர வைத்திய ரத்னாவளி' என்னும் இந்நூல் பல்வேறு நோய்களுக்கு பல சிகிச்சை முறைகளைக் கூறும் ஒரு தொகுப்பு நூலாகும். இந்நூலுக்குத் தமிழக மக்கள் மத்தியில் பேராதரவு இருக்கிறது என்பதை கடந்த 28 ஆண்டுகளில் இதன் 5-ஆம் பதிப்பு வெளிவருவது மூலம் அறிய முடிகிறது.

இதன்கண் பலவித நோய்களுக்கு சூரணம், லேகியம், கஷாயம் தைலம், நெய், மெழுகு, பற்பம், மாத்திரை முதலிய பல சிசிச்சை முறைகள் கூறப்பட்டுள்ளன. இவற்றில் பல மருந்துகள் அக்காலத்தில் மன்னர்தம் மருத்துவமனையில் நோயாளிகளுக்குக் கொடுத்து பல நோய்களை குணமாக்கி யவைகள் என்பதற்கு இந்நூலில் குறிப்புகள் காணப்படு கின்றன. இம்மருந்து முறைகள் மன்னர் சரபோஜியின் சொந்த உபயோகத்திற்காக மராத்திய மொழியில் எழுதி வைக்கப்பட்டுள்ளவற்றின் தமிழாக்கமே முதல் பதிப்பாக 1957-ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்நூலின் முக்கியத்து வம் கருதி நாட்டு மக்கள் பலருக்கும் பயன்படவேண்டு மென்ற நோக்குடன் மத்திய அரசின் நூல் ஆராய்ச்சிக் கூடம் இதனை சம்ஸ்கிருதம், இந்தி, ஆங்கிலம் முதலிய மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிடும் பணி நடந்து கொண்டிருப்பது நம் அனைவருக்கும் பெருமையளிக்கிறது. மக்கள் இந்நூலைப் பயன் கொண்டு நோயில்லா நல்வாழ்வு வாழ்வார்களாக.

இந்நூலைச் சிறப்புற அச்சிட்டுத் தந்த சரசுவதி மகால் நூலக அச்சகத்தாருக்கு எமது நன்றி. இவ்வரிய நூலை அச்சிட்டு வெளியிடத் தக்க மான்யம் வழங்கிய மத்திய அரசுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்,
17—8—85.

**ஞா. இரா. இராமசாமி**, இ.ஆ.ப.,
மாவட்டாட்சியர் மற்றும் இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



# நான்காம் பதிப்பின் முன்னுரை



உடலை ஓம்புதலின் அருமை கருதியே, 'நோயற்ற வாழ்வில் நான் வாழவேண்டும்' என்கிறார் இராமலிங்க அடிகள். 'உடன் பிறந்தே கொல்லும் நோய்' என்பதும் ஆன்றோர் வாக்கு. எனவே நோய்கள், உள்ளவையும், வருபவையும் போக்கற் பொருட்டு வைத்திய முறைகள் நமக்குத் தேவையாகின்றன.

பலர், தங்கள் அனுபவத்தினால் நோய்களை நீக்கிப் பலருக்கும் உதவி புரிந்து வந்தனர். ஒரு மன்னர் வைத்திய சாலை நிறுவி, மக்களுக்கு வைத்திய சேவை புரிந்தார் என்பதுதான் சிறப்பு. அவ்வாறு மன்னர் சரபோஜி அவர்கள் வெற்றிகண்ட மருந்துகள் இடம்பெற்றுள்ள நூல் "சரபேந்திர வைத்திய ரத்னாவளி" என்பதாகும். இதன் கண் கூறப்பட்ட மருத்துவமுறைகள், தைலங்கள், லேகியங்கள் முதலானவை நல்ல பலனைத் தந்து உதவி புரிந்தன என்பதற்கு இந்த நான்காம் பதிப்பே சான்றாகும். ஒவ்வொரு இல்லத்திலும் அவசியம் இருக்க வேண்டியது இந் நூல்.

மக்களிடையே வரவேற்புபெற்ற இப்பதிப்பு வெளிவரத் துணை புரிந்த மத்திய அரசுக்கு எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்பதிப்பு நன்கு வெளிவரத் துணைபுரிந்த சரசுவதி மகால் ஊழியர்கட்கும், விரைவில் அச்சிட்டுத்தந்த தஞ்சை மகாலிங்கம் அச்சகத்தாருக்கும் எமது நன்றி.

வருமுன் காக்கும் பண்பாளர்களும் இந்நூலைப் பெற்றுப் பயனடைந்து, தமது கருத்துகளைத் தெரிவிப்பார்களாயின் நன்மை பயக்கும்.

இங்ஙனம்,

தஞ்சாவூர், 28—9—80.

துரை. சுந்தரேசன், ஐ. ஏ. எஸ்.,
மாவட்டாட்சியர் & நிர்வாகக்குழுத் தலைவர்,
சரசுவதி மகால் நூலகம்.



# மூன்றும் பதிப்புரை

தஞ்சை சரசுவதி மகால் பேணிக்காத்து வெளியிட்ட பதினெண் இந்திய வைத்திய நூல்களுள் சரபேந்திர வைத்திய ரத்னவளியும் ஒன்றாகும். இது பல்வேறு வியாதிகளுக்கு மருந்து முறை சொல்லும் ஓர் அரிய தொகுப்புநூல். இதன்கண் பல அனுபவ சித்தியான முறைகள் சொல்லப் பட்டிருக்கின்றன. பொதுமக்களின் விருப்பத்திற்கிணங்க இம்மூன்றும் பதிப்பை விரைந்து வெளியிட்டுள்ளோம்.

இப்பதிப்பில் முடிந்த அளவு திருத்தங்கள் செய்தும், மராத்தி மொழிப் பதிப்பிலுள்ள மூலிகைகளின் பட்டியல் ஒன்று தமிழ், ஆங்கிலப் பெயர்களுடன் பிற்சேர்க்கையாக இணைத்தும் வெளியிட்டுள்ளோம். இதனைக் காலத்தோடு கவினுற அச்சிட்டுத்தந்த குடந்தை ஜெமினி அச்சக உரிமை யாளர் அவர்களுக்கும், செம்மையாக வெளிவரத் துணை புரிந்த சரசுவதி மகால் நூலக அலுவலர்கட்கும் கனிந்த உள்ளத்தோடு நனறி கூறிப் பாராட்டுகிறோம்.

தமிழ் மக்களும், சிறப்பாக மருத்துவத் துறையினரும் இதனைப் பெற்றுப் பயனுற்று ஆதரவு தருவார்களாக.

தஞ்சாவூர்,
21—9—1974.

அ. வடிவேலன்,
கௌரவ காரியதரிசி,
சரசுவதி மகால் நூல் நிலையம்.

# இரண்டாம் பதிப்புரை

மக்களின் பிணிகளைப் போக்க வழிகாட்டியாகவுள்ள சிறந்த வைத்திய நூல்களையும், அருமையான மருந்து முறைகளையுஞ் சேர்த்து வைத்து பெருமை புகழ்பெற்ற சரபேந்திர மன்னர் அவர்களுக்கு உரியதாகும். இது அவரின் ஆயுட் காலப் பணியாகும். அத்தகைய மருந்து முறைகளையெல்லாந் திரட்டி "சரபேந்திர வைத்திய ரத்னாவளி" எனும் நூலாக 1957-ல் முதன் முதலாக வெளியிடப்பட்டது. முதற் பதிப்பை பலரும் வாங்கிப் படித்துப் பயன் பெற்றனர். இப்போது அதன் இரண்டாம் பதிப்பை மக்களின் நன்மைக்காக மகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்கின்றோம்.

தலைசிறந்த இந்நூல் நம்நாட்டின் இதர பகுதிகளிலுள்ள மக்களுக்கும் பயன்படுமாறு ஸம்ஸ்கிருதம், ஹிந்தி, ஆங்கிலம் முதலிய மொழிகளிலும் வெளியிடப்பட வேண்டுமென்று மத்திய அரசாங்கத்தாரால் நிறுவப்பட்டுள்ள நாட்டு வைத்திய மத்திய கவுன்சில் ஏற்கனவே முடிவு செய்தவாறே இந்நூலை ஆராய்ச்சியுடன் மொழிபெயர்க்கும் பணியும் இப்போது சரசுவதி மகாலில் நடந்துகொண்டு வருவதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

இம்மாதிரியே பிற மொழிகளிலுள்ள அரும் பெரும் வைத்திய நூல்களைத் தமிழிலும், தமிழிலுள்ள சித்த வைத்திய நூல்களைப் பிற மொழிகளிலும் அச்சிட்டு வெளிப்படுத்துவது வைத்திய ஆராய்ச்சியாளர்களுக்கும் மற்றவர்களுக்கும் மிகவும் உதவியாக இருக்குமென்று நம்புகிறோம்.

தஞ்சாவூர்,
15—7—65.

ஒ. ஏ. நாராயணசுவாமி,
கௌரவ காரியதரிசி.

# PREFACE

This publication issued in memory of the 61st Birthday Celebration of RAJESRI PRATAPASIMHA RAJA SAHEB, the grandson of the last ruler of Tanjore and one of the main donors of this Library, contains a Tamil version of the most valuable recipes selected by Raja Serfoji for his own use, from out of the 5000 and odd tested recipes of the Dhanvantri Mahal Medical Research Institute founded by Raja Serfoji himself.

Raja Serfoji, the Scholar Prince and a versatile genius, conducted a thorough and satisfactory investigation of recipes for various diseases. His researches both in Eastern and western Medicines helped him greatly in that investigation. He opened a hospital as a part of the Dhanvantri Mahal, his medical research institute, and appointed more than a dozen Indian Physicians for prescribing remedies for various ailments of patients and arranged for the recording of each patient's history-sheet by English Doctors. From these history-sheets, the Raja listed the recipes whose efficacy had been established by the record. He collected in this manner more than 5000 recipes. A number of Tamil scholars versed also in medicine, were employed for versifying these recipes in Tamil He divided the versified recipes into eighteen books, each dealing with separate ailments, and preserved them in palmleaf manuscripts. Thirteen of these manuscripts of tested recipes have been published by this Library under series " *Sarabhendra Vaidya Muraigal* " with prose version introduction giving the diagnosis, and notes. These publications are very popular and the recipes therein have been tested and found to be uniformly efficacious.

A Marathi version of the more valuable of these 5000 and odd recipes was made by Serfoji himself and the manuscript was preserved in the Royal family and constantly used by the members and doctors of the Raja's family. This Marathi manuscript has already been published by this Library under the name "*Sarabhendra Vaidya Ratnavali*" It contains about 1000 selected remedies covering all diseases, and the Tamil public has long been feeling the need for a similar comprehensive collection in a single volume of select prescriptions, and hence the present volume.

The Marathi manuscript has been translated into Tamil by the learned Editor of this publication, Rajesri A. Krishnaswami Mahadick Rao Saheb, B. A., member of the Administrative Committee of this Library, and a member of the Royal family, who has already edited the Marathi version with a glossary of the names of drugs in several languages. The translation is a very arduous piece of work and the learned Editor has spared no pains in making the translation as satisfactory as possible. Our thanks are due to him for his valuable services.

This publication is a fitting tribute to the abiding interest taken by Rajesri Pratapasimha Raja Saheb in this Library apart from his being one of its main donars. May he live long with good health and strength to serve the cause of this Library!

Tanjore,<br>18th June 1957.

S. GOPALAN,<br>*Honorary Secretary.*

# மதிப்புரை

தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தின் நிர்வாகக் குழுவினர் சென்ற சில ஆண்டுகளாக மருத்துவ உலகிற்குப் புரிந்து வரும் அரும்பெரும் தொண்டின் சான்றுக நம் நாட்டு அரிய வைத்திய முறை நூல்களை வெளியிட்டு வருகின்றனர். அத்தகைய நூல்களில் **"சரபேந்திர வைத்திய ரத்னவளி"** என்னும் இந்நூல் ஒன்று. நூலின் பெயரைக் கேட்டவுடனேயே வைத்திய முறைக்கும் மன்னர் சரபேந்திரருக்கும் தொடர்பு இருந்திருக்கவேண்டும் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. கி.பி. 1798-1832 வரையில் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர் இரண்டாம் சரபோஜிக்கு, சரபேந்திரர் என்ற சிறப்புப்பெயரும் வழங்கி வந்தது. மன்னர் சரபோஜி கல்வி கேள்விகளில் மிகுந்த பற்றுடைடையவர் என்பது யாரும் மறுக்க முடியாத உண்மை. அவர் சகல கலைகளிலும் ஆர்வம் உடையோராயினும் நம் நாட்டு வைத்திய முறையில் விரிவாக ஆராய்ச்சி செய்து, அனுபவத்தில் சிறந்த வைத்திய முறைகளைத் தேர்ந்தெடுத்ததுமன்றி தன் ஆஸ்தான வித்துவான்களைக் கொண்டு அம்முறைகளைத் தமிழில் கவிகளாக இயற்றி, பதினெட்டு சுவடிகளில் எழுதி வைத்துள்ளார். அந்தச் சுவடிகள்தான் சரசுவதி மகால் வெளியீடுகளில் நாம் காணும் சரபேந்திர வைத்திய முறை நூல்கள்.

மன்னர் சரபோஜி தமிழிலுள்ள மருத்துவமுறை நூல்களினின்றும் சில சிறந்த முறைகளைத் தன் அரண்மனை உபயோகத்திற்காக மகாராஷ்டிரத்தில் மொழி பெயர்க்க வேண்டும் என்று நினைத்தார். உடனே அவர் தன்னுடைய ஆஸ்தானத்தில் மருத்துவத் துறையிலும் மகாராஷ்டிரத்திலும் வல்லுநராக இருந்த மத்தியஸ்தம் கொட்டியம் கோபால் பிள்ளையின் உதவியால் சுமார் ஆயிரத்துக்கும் மேற்பட்ட சிறந்த முறைகளை மகாராஷ்டிரத்தில் மொழி பெயர்த்தார். அந்த முறைகளைத் தனது அரண்மனையில் பல சந்தர்ப்பங்களில் உபயோகித்து, அவற்றின் குணாதிசயங்களைக் கண்டு மனமகிழ்ந்தார்.

மன்னர் சரபோஜியால் தேர்ந்தெடுக்கப்பட்டு மகாராஷ்டிரத்தில் மொழி பெயர்க்கப்பட்ட ஏராளமான வைத்திய முறைகள் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் இன்றும் காணக்கிடைக்கின்றன. மத்தியஸ்தம் கொட்டியம் கோபால் பிள்ளை அவர்களின் உதவியால் மன்னர் சரபோஜியின் சொந்த உபயோகத்திற்காக மொழி பெயர்க்கப்பட்ட இரு மகாராஷ்டிர மருத்துவ நூல்கள் வழி வழியாக அரச பரம்பரையினிடமிருந்து தற்சமயம் என்னிடம் இருக்கின்றன. என் உறவினர்களும் நண்பர்களும் அவ்விரு நூல்களின் நற்பயனை இன்றும் அடைந்து வருகின்றனர் என்பதைக் கூற பெருமிதங் கொள்கிறேன்.

இந்த நூலின் பதிப்பாசிரியர் ராஜேஶ்ரீ ஆ. கிருஷ்ணசாமி மாடிக்ராவ் சாகேப், B. A., அவர்கள் சரசுவதி மகாலிலுள்ள மகாராஷ்டிர வைத்திய முறைகளை என் வசமிருக்கும் இரு நூல்களுடன் ஒப்பிட்டுப் பார்த்து ஆங்காங்கு தோன்றிய பாட பேதங்களின் விளக்கங்களைத் தெரிந்து கொண்டு, குற்றங்குறைகளைக் களைந்தெறிந்த பின்புதான் இந்நூலைத் தொகுக்கும் பணியில் ஈடுபட்டார். மேலும் இந்த நூலைப்பதிப்பிக்கும்பொழுது அவருக்குப் பல சந்தர்ப்பங்களில் சந்தேகங்கள் ஏற்பட்டன. உடனே அவர் என்னை அணுகி. அந்த சந்தேகங்களுக்கெல்லாம் விளக்கம் தெரிந்து கொண்டார்.

இந்த நூல் பதிப்பாசிரியரால் எனக்கு இத்தகைய வாய்ப்பு அளிக்கப்பட்டதால் எனது முன்னோர்களால் ஆக்கி வைக்கப்பட்ட சிறந்த நூலைப் பதிப்பிக்கும் பணியில் பங்கெடுத்துக் கொள்ளும் பெரும் பாக்கியம் எனக்கும் கிடைத்துள்ளது. இந்த நூலில் கண்டுள்ள முறைகள் யாவும் அனுபவ சித்தமானவை என்பதில் ஐயமில்லை. நேயர்கள் இந்த நூலின் வாயிலாய் மருத்துவ உலகிற்குச் சிறந்த தொண்டாற்ற முடியும் என்பது எனது துணிபு. மிக்க பிரயாசையுடன் இந்நூலைத் தொகுத்துப் பதிப்பித்த ராஜேஶ்ரீ ஆ. கிருஷ்ணசாமி மாடிக்ராவ் சாகேப், B. A., அவர்களை மனமார வாழ்த்துகிறேன்.

*தஞ்சாவூர்.*
*1—8—1957.*

JIVAJI MAHADIC

ஸ்ரீ

## சரபேந்திர வைத்திய ரத்னுவளி.

# சரபோஜி மகாராஜாவும் அவருடைய தன்வந்தரிமகாலும்.

தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னருள் மங்காப் புகழ் படைத்தவர் மன்னர் சரபோஜி. இவர் கி. பி. 1798 முதல் 1832 வரையில் அரசாட்சி புரிந்தார். தஞ்சையில் உள்ள பார் புகழும் கலைக்கோவிலாகிய ஸ்ரீ சரசுவதி மகால் நூல் நிலையத்தின் முக்கிய சிற்பி சரபோஜியே ஆவார். மன்னர் சரபோஜி நன்கு கற்றறிந்தவரும், தன் தாய் பாஷையாகிய மகாராஷ்டிரத்தோடு சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, உருது முதலிய பாஷைகளிலும் நல்ல பாண்டித்தியம் பெற்றவர். மேல்நாட்டுப் பாஷைகளாகிய இங்கிலீஷ், பிரெஞ்சு, ஜெர்மன். கிரீக்கு, லத்தீன் முதலிய பாஷைகளையும் அவர் நன்கறிவார். இவரை 'சர்வதேச பாஷா பாரங்கர்' என்று சொல்வது மிகை யாகாது.

இளமையில் இவர் ரெவரெண்ட் சுவாட்ஸ் பாதிரியாரிடமும் ரெவரெண்ட் கெரிக் பாதிரியாரிடமும் கல்வி பயின்று வந்ததன் காரணமாய் இவருக்கு மேல் நாட்டுப் பாஷைகளிலும், கலைகளிலும் விசேஷ பற்றுதல் உண்டாயிற்று. அநேக சாத்திரங்களைக் கூறும் பல்வேறு புத்தகங்களைச் சேகரிப்பதில் மிகவும் ஊக்கங் கொண்டார். இவ் ஊக்கமானது நாளுக்குநாள் பெருகியதன் பயனுய், இன்று இவருடைய சரசுவதி மகால் நூல் நிலையம் உலகில் சிறந்ததோர் நிலையமெனப் போற்றப்படுகின்றது.

மேனாட்டுக் கல்வியைக் கற்றதனால் அவர் நம் நாட்டுக் கலைகளைப் புறக்கணிக்கவில்லை. நம் நாட்டுக் கல்வியைச் சிறந்த வித்துவான்கள், பண்டிதர்கள் முதலானவர்களிடம் சனாதனதர்ம முறைப்படி நன்கு கற்றுக்கொண்டார். சரபோஜி, இருநாடுகளின் கல்வி, நாகரீகம் முதலியவற்றின் சிறந்த அம்சங்களை ஒன்றுபடுத்தி அதனால் ஏற்படும் நற்பயனைத் தானும் தன் பிரஜைகளும் பெறவேண்டுமென்று பெரிதும் முயன்று முக்கியமாக சங்கீதம், வைத்தியம், கல்வி ஆகிய மூன்று துறைகளிலும் வெற்றி பெற்றார்.

இவ்வாறு இரு நாட்டுக் கல்வியின் மேன்மைகளும் சரபோஜியின் உள்ளத்தில் நன்கு ஊறியதன் பயனாய் அவர் பாகுபாடின்றி இரண்டிலும் சிறந்தவற்றைக்கொண்டு, நமது முன்னோர்களால் பாதுகாக்கப்பட்டு வந்த நம் நாட்டுக் கலைப் பண்பாட்டை அழகுறச்செய்து வளர்ப்பதிலேயே தன் வாழ்நாள் முழுவதையும் செலவழித்தார். அவரது இந்த உழைப்பினால் வாழ்க்கை, சமூகம், மதம் பொருளாதாரம், கல்வி முதலிய துறைகளில் சரபோஜியின் பிரஜைகள் முன்னேற்றமும் அடைந்தனர்.

மேனாட்டுக் கீழ்நாட்டுக் கலைகளில் சிறந்தவற்றை ஒன்றுபடுத்துவதில் அவர் கொண்ட ஊக்கம், பிற்காலத்திய சந்ததிகளாகிய நமக்கு மிகுந்த நன்மையை அளித்துள்ளது. சங்கீதம், கல்வி, வைத்தியம் மற்றும் இதர கலைகளிலும் அவர் கண்ட வெற்றியினால்தான் இன்றும் உலகம் அவரைக் கற்றறிந்த வித்துவான் என்றும் சிறந்த அரசர் என்றும் போற்றுகின்றது.

சகல கலைகளிலும் வல்லுனர்களாகிய தன் முன்னோர்களைப்போன்று மன்னர் சரபோஜி அநேக பாஷைகளில் இயற்றிய நூல்கள் கணக்கிடற்பாலவை ஆதலின் அவற்றை இங்கு கூறாது விடுத்தனம்.

சரபோஜி சிறந்த கவியாகவும் விளங்கினர். அவர் மராத்தியிலும், தெலுங்கிலும் நூற்றுக்கணக்கான பாடல்களைப் புனைந்துள்ளார். அவை வாத்தியங்களுக்கும் நாட்டியத்திற்கும், வாய்ப்பாட்டிற்கும் ஏற்றவை. முற்காலத்தில் கோவில்களில் திருவிழா காலங்களில் நாட்டிய நாடகங்கள் நடிப்பது வழக்கம். அத்தகைய பல நாட்டிய நாடகங்களை சரபோஜி இயற்றியுள்ளார். யானைகள் குதிரைகள், ஆடு, மாடுகள், பறவைகள் இவற்றின் லக்ஷணங்களைப் பற்றியும், சிகிச்சையைப் பற்றியும் தானும் தனித்தனியே புத்தகங்கள் எழுதியும், பிறரையும் எழுதச் செய்துள்ளார். பாலகாப்பிய முனிவரால் இயற்றப்பட்ட கஜசாஸ்திரம் என்னும் நூலை அழகிய படங்களுடன் அவர் செய்யுள் ரூபமாக மராத்திய பாஷையில் மொழி பெயர்த்துள்ளார்.

சம்ஸ்கிருத நூலாகிய (1) குமாரசம்பவ டீகா (2) முத்ரா ராக்ஷஸச்சாயா (3) ஸ்ம்ருதிஸங்கிரஹம் (4) ஸ்மிருதிசார சமுச்சயம் ஆகிய நான்கையும் அவர் இயற்றியுள்ளார்.

மகாராஷ்டிரத்தில் அவர் இயற்றிய நூல்கள்:— 1. உமாமகேஸ்வர கதா 2 கிராதார்ஜுனிய நிருபணம் 3. நீலகண்ட குலாலவர சரித்திரம் 4. நீலபில்ல சரித்திரம் 5. சிவராத்திரி கதா 6. பக்ஷப்ரதோஷ சனிப்ரதோஷ கதா 7. கணேசலீலார்ணவ நாடகம் 8. கணேச விஜய நாடகம் 9. கங்கா விஸ்வேஸ்வர பரிணய நாடகம் 10. தேவேந்திர குறவஞ்சி நாடகம் 11. ராதாகிருஷ்ண விலாஸ நாடகம் 12. மோகினி மகேஸ்வர பரிணய நாடகம் 13. சிவராத்திரி உபாக்யானம் 14. கஜசாஸ்திர பாஷா பிரபந்தம் 15. விவித கர்னாடக ராக ராகிணி (நாட்டிய சங்கீதம்) முதலியன ஆகும்.

மேற்கண்டவற்றைத் தவிர பக்தி மார்க்கம், சங்கீதம் இவற்றைப்பற்றிப் பல நூல்களும் இயற்றியுள்ளார்.

மேனுட்டு கோஷ்டி வாத்ய (Orchestra) சங்கீதத்திற்கு ஏற்ற பல பாட்டுக்களைத் தமிழ், தெலுங்கு, மராத்தி பாஷைகளில் அவர் இசைத்துள்ளார்.

இந்திய சங்கித ராகங்களை ஐரோப்பிய முறையில் ஸ்வரப்படுத்தி அவைகளுக்கு மேல்நாட்டு மெட்டுகளையும் அமைத்துப் பல பாடல்களடங்கிய சங்கீத புத்தகங்களை இயற்றியுள்ளார். அவரிடமிருந்த சங்கீத வாத்தியங்கள் நம் நாட்டினரால் மட்டுமல்லாது ஐரோப்பியர்களாலும் போற்றப்பட்டு வந்தன. லார்ட்வாலன்ஷியா அவரது 'Memories of Indian Travels' (இந்திய பிரயாணத்தின் நினைவுகள்) எனும் நூலில் மன்னர் சரபோஜியின் சங்கீத வாத்தியங்களைப் பெரிதும் பாராட்டியுள்ளார்.

அவர் தனது சமஸ்தானத்திலிருந்த கவிகளைக்கொண்டு பல பாட்டுகளை ஆடல் பாடலுக்குகந்த வகையில் இசைத்துள்ளார். பரத நாட்டியம் அவரது காலத்தில் மிகுந்த உன்னத நிலையில் இருந்தது. சிறந்த நாட்டியாசாரியார்கள் என இன்று புகழப்படுபவர்கள் அவரது சமஸ்தானத்திலிருந்தனர். திருவாங்கூரில் கற்றறிந்த வித்துவானும், அநேக பாஷா ப்ரவீனரும், சிறந்த சங்கீத வித்துவானுமாகிய ஸ்வாதித் திருநாள் மகாராஜாவிடம் மன்னர் சரபோஜி விசேஷ அன்புடையவர்.

ஒரே காலத்தில் வசித்த இவ்விருவரும் தம்முடைய நூல்களையும் தம் தம் சமஸ்தானத்திலிருந்த சாஸ்திரக்ஞர்களையும் சங்கீத வித்துவான்களையும் பரிமாறிக்கொண்டதுமுண்டு. தென்னுட்டில் சங்கீத உலகில் ஓர் மகானுகக் கருதப்படும் ஸ்ரீ தியாகராஜஸ்வாமி அவர்களிடம் மன்னர் சரபோஜி மிகுந்த அன்பும் பக்தியுமுடையவர்.

லார்ட் வாலன்ஷியா எழுதிய Voyage and Travels in India எனும் புத்தகத்தில் பின்வருமாறு புகழ்ந்து

உள்ளார்:— "மன்னர் சரபோஜியினிடம் பல இந்திய சங்கீத வாத்யங்களையும், ஆங்கில சங்கீத வாத்யங்களையும் கண்டேன். அவை முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கின்றன. மன்னரின் வித்வான்கள் பலர் அவ்வாத்தியங்களில் "God Save the King" 'Malbrooke' என்னும் இங்கிலீஷ் பாட்டுக்களை வாசிக்கின்றனர். மன்னரும் தான் இசைத்த பாடல்களை அவ்வாத்தியங்களில் வாசிக்கிறார். ஐரோப்பாவிலிருந்து பியாண்டு வாத்தியங்களை வரவழைத்து ஆங்கில பியாண்டு வாசிக்கப் பயிற்சியளிக்கப் படுகிறது." மன்னர் சரபோஜி சங்கீதத்தில் வெகு திறமையும் ஆர்வமும் கொண்டவர் என்பதற்கு லார்டு வாலன்ஷியாவின் மேற்கூறிய குறிப்பே ஓர் சான்றாகும். மேனாட்டு வாத்திய சங்கீதத்தை இந்திய வாத்தியக்காரர்களுக்குக் கற்றுக்கொடுத்து இன்று புகழப்படும் "தஞ்சாவூர் பியாண்டு" எனும் வாத்திய கோஷ்டியை முதன்முதலில் ஏற்படுத்தியவர் சரபோஜியே ஆவர்.

அவரது மந்திரிகளில் ஒருவரின் புதல்வராகிய வரஹப்பையர் என்பவர் மேனாட்டு சங்கீத வாத்தியங்களைப் பழகுவதில் வல்லமை பெற்றிருந்தமையால் அவரை பியாண்டு ஆசிரியராக அமர்த்தி மற்ற வாத்தியக்காரர்களுக்கு பியாண்டு வாத்தியத்தில் பயிற்சியளித்தார். மன்னர் சரபோஜியாலும் அவரது சங்கீத வித்துவான்களாலும் உபயோகிக்கப்பட்டு வந்த சுமார் 150 ஐரோப்பிய முறைப்படி ஸ்வரப்படுத்திய சங்கீத புத்தகங்கள் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் இருக்கின்றன.

கல்வித் துறையில் தன் மக்கள் முன்னேற்றமடைய வேண்டி மன்னர் சரபோஜி புரிந்த சாதனைகள் பல. அவர் பல பாடசாலைகளை நிறுவி அவற்றில் நம் நாட்டுக் கல்வியுடன் ஆங்கிலமும் போதிக்கச் செய்தார். 'நவவித்யா கலாசாலை' 'வேதாந்த சாஸ்திர சாலை' 'நியாய சாஸ்திர சாலை' 'ஜோதிஷ சாஸ்திர சாலை' போன்ற வெவ்வேறு

சாஸ்திரங்களுக்குத் தனித்தனி பாடசாலைகளை நிறுவி சிறந்த ஆசிரியர்களைக்கொண்டு மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி போதிக்கப்பட்டு வந்தது என்று அவர் காலத்திய மோடி எழுத்தில் எழுதப்பட்ட சப சாசனங்கள் கூறுகின்றன.

ஈஸாப் கதைகள், பூகோளம் போன்ற பல ஆங்கில புத்தகங்களைத் தமிழிலும் மராத்தியிலும் மொழி பெயர்த்துள்ளார். மாணவர்களும் ஏனையோரும் எளிதில் புரிந்து கொள்ளும் பொருட்டு பூகோள சாத்திரத்தை தேவேந்திர குறவஞ்சி எனும் நாடக ரூபமாய் எழுதி உள்ளார். அவருடைய ஆட்சி காலத்தில்தான் சென்னையில் ராஜ்ய கல்லூரி ஸ்தாபிக்கப்பட்டது. அதுசமயம் சென்னை அரசாங்கத்தார் சரபோஜியின் சமஸ்தான வித்துவான்களின் பெருமையைக் கேள்வியுற்று சமஸ்தான வித்துவான்களில் ஒருவராகிய கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரை மன்னரின் அனுமதியின்பேரில் அக்கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக நியமித்தனர்.

வைத்தியக்கலை முன்னேற்றமடைய மன்னர் சரபோஜி செய்த அரும்பெரும் சாதனைகளைக் கவனிக்குமிடத்து எவருமே வியப்பர். தன் சுய முயற்சியால் வைத்திய உலகிற்கே புத்தொளியளித்தார் மன்னர். 'தன்வந்தரி மகால்' எனும் ஓர் ஆராய்ச்சிக் கழகத்தை ஏற்படுத்தி வைத்தியத் துறையில் ஆர்வமுள்ள அநேகருக்கு ஊக்கமளித்தார். பற்பல இடங்களிலிருந்து வைத்திய நிபுணர்களை வரவழைத்து அவர்களைக்கொண்டு ஔடத ஆராய்ச்சியை வெகுதிறப்படச் செய்வித்தார். அந்த வைத்திய நிபுணர்கள் ஆயுர்வேதமுறை, சித்தமுறை, யுனானிமுறை ஆகியவற்றின் குணாதிசயங்களை ஒன்றுடனொன்றை ஒப்பிட்டுப் பார்த்து நன்கு ஆராய்ந்து அவர்களின் ஏகோபித்த அபிப்பிராயத்தையும் அனுபவத்தையும் அட்டவணைகளில் குறித்து வைத்துள்ளனர்.

சரபோஜி அத்துடன் நில்லாது தன் சமஸ்தானத்திலுள்ள தமிழ்ப் பண்டிதர்களைக்கொண்டு தன்வந்தரி மகாலில் தயாரித்த மருத்துவ அட்டவணைகளைச் செய்யுள் வடிவாக்கி ஓலைச்சுவடிகளிலும் ஏடுகளிலும் எழுதுவித்தார். மேலும் மராத்திய பிரஜைகளின் உபயோகத்திற்காக தமிழிலிருந்த அட்டவணைகளில் முக்கியமானவற்றை மராத்தியில் மொழி பெயர்ப்பிக்கச் செய்தார். நோய் வகைகளைப் பல பாகங்களாகப் பிரித்து ஒவ்வொரு பாகத்திற்கும் தனித்தனி நூல்கள் எழுதப்பட்டன. அந்நூல்களில் கூறப்பட்ட மருந்து முறைகள் நன்கு பரிசோதித்துப் பார்த்து அனுபவம் பெற்றவையாதலால் அந்நூல்களுக்கு "அனுபோக வைத்திய பாகங்கள்" என்ற பொதுப் பெயரும் உண்டு. அம்மருந்து முறைகள் யாவும் மன்னர் சரபோஜி காலம் முதல் உபயோகத்திலிருந்து வருகின்றன.

இன்றும் தஞ்சையில் பலரால் அம்மருந்து முறைகள் கையாளப்பட்டு வருகின்றன. மன்னர் சரபோஜி ஏராளமான பொருட்செலவில் சிறந்த ஔடதங்களைத் தன்வந்தரி மகாலிலேயே தயாரித்து தன் பிரஜைகளின் நலனுக்கே தேர்ந்த வைத்தியர்களுக்கு இலவசமாக வழங்கினர். தன்வந்தரி மகாலில் கட்டுமுறைப்படி (நீண்டகாலம்வரை உபயோகிக்கக்கூடிய வகையில்) தயாரித்த சில சிறந்த ஔடதங்கள் தஞ்சையில் சில பழைய குடும்பத்தாரிடம் இன்றும் கிடைக்கின்றன. 'சுவர்ணமால்ய வஸந்தம்' 'வஸந்தகுஸுமாகரம்' 'ராஜமிருகாங்கம்' 'சுவர்ணகால கண்டம்' 'பஞ்சாம்ருதம்' 'ரஸபூபதி' 'ராஜபூபதி' 'ஹேமபூபதி' 'கனாசுந்தர ரஸம்' 'த்ரைலோக சிந்தாமணி' 'ஜவஹிரமோஹரர்' 'ரத்னுதி மாத்திரை' 'ஸஹஸ்ரபுட அப்ரகம்' 'சந்த்ரகலாரஸம்' முதலிய மருந்துகள் கட்டையான மாத்திரை வடிவத்தில் தயாரிக்கப்பட்டு அம்மாத்திரைகளின்மேல் அதன் பெயரும் செய்து முடித்த தேதியும் குறிப்பிட்டிருப்பதை இன்றும் காணலாம்.

மேலும் மருந்துகளை எளிதில் தயாரிக்கவேண்டி தன்வந்தரி மகாலின் உபயோகத்திற்கென்றே தனது அரண்மனையில் ஓர் பச்சிலைத் தோட்டத்தையும் ஏற்படுத்தினர். வைத்தியர்கள் பச்சிலைகளின் அடையாளங்களைச் சுலபமாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டு இயற்கையான வர்ணங்களில் முக்கியமான பலபச்சிலைகளின் சித்திரங்களைத் தயாரித்து புத்தக ரூபமாக ஆக்கியுள்ளார். இன்று நூற்று இருபத்தைந்து வருடங்களுக்கு மேலாகியும் வண்ணம் சிறிதும் மங்காத அந்தப் பச்சிலைச் சித்திரங்களைத் தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தில் காண்கிறோம். அவற்றைக் கண்ணுறும் கலையறிஞர் எவரும் மன்னர் சரபோஜியினிடமிருந்த ஓவியக்காரர்களின் நுட்ப அறிவையும் கலைத் திறனையும் போற்றுமலிரார்.

சரபோஜியால் தன்வந்தரி மகாலில் அமர்த்தப்பட்ட வைத்திய நிபுணர்கள் பல்வேறு தேசத்தினராகவும் மதத்தினராகவுமிருந்தனர். அவர்களில் சிலர் மராத்தியிலும், சிலர் சம்ஸ்கிருதத்திலும், சிலர் தெலுங்கிலும், பலர் தமிழிலும் வைத்திய நூல்களை இயற்றியுள்ளனர். சம்ஸ்கிருதத்திலும் தமிழிலும் இருந்த சில நூல்கள் மன்னரின் கட்டளைப்படி மராத்திய பிரஜைகளின் உபயோகத்திற்காக மகாராஷ்டிரத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. அநேக நூல்களில் ஆக்கியோன் பெயரும் நூல் இயற்றத் தொடங்கிய தேதியும் முடிவுற்ற தேதியும் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. தற்சமயம் தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையத்தார் மராத்தியிலும் தமிழிலும் வெளியிடும் வைத்திய நூல்கள் சரபோஜி மன்னரால் தன்வந்தரி மகாலில் தயாரித்த வைத்திய அட்டவணைகளிலிருந்து எடுத்தவையாகும்.

சரபோஜியின் தன்வந்தரி மகாலை அழகுபடுத்திய சிறந்த வித்துவான்களை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துவது நமது கடமையாகும். அந்த வித்துவான்கள் கல்வித்

துறையிலும், வைத்திய சாஸ்திரத்திலும் முதன்மை பெற்றிருந்தனர். சிவக்கொழுந்து தேசிகர், சுப்பராய கவி, வேலாயுத வைத்தியர் போன்ற சிறந்த கவிகளும் அந்த நிபுணர் குழுவில் இருந்தனர். அவர்களுடைய வைத்தியப் பாக்களின் இறுதியில் மன்னர் சரபோஜியின் பெயர் காணப்படுகிறது.

நயனரோக சிகிச்சை, குன்மரோக சிகிச்சை, பிரமேக சிகிச்சை, கருஜரோக சகிச்சை (சொறி, சிரங்கு ஜ்வரரோக சிகிச்சை, விஷ வைத்தியம், சிரோரோக சிகிச்சை, விரேசன முறை, கிரஹணி வைத்தியம், மேகரோக சிகிச்சை, அதிசார வைத்தியம், காசரோக சிகிச்சை மற்றும் வைத்தியத் திரட்டு ஆகிய நூல்களை இயற்றியவர் வேலாயுத வைத்தியர் ஆவர். (கி. பி. 1827)

திருவேங்கடம் பிள்ளை என்பவர் கர்ப்பிணி பாலரோக சிகிச்சை என்னும் நூலையும், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் கி. பி. 1827ம் வருஷம் ஜனவரி மாதத்தில் க்ஷய ரோக சிகிச்சை, வாதரோக சிகிச்சை எனும் நூல்களையும் அதே வருடம் டிசம்பர் மாதத்தில் குன்மரோக சிகிச்சை எனும் நூலையும் இயற்றியுள்ளனர். சுப்பராய கவிராயரின் வைத்திய நூல் ஜ்வர சிகிச்சையாகும். பிள்ளைப் பெருமாள் வைத்தியரின் குமாரராகிய தாமோதரம் பிள்ளை கி. பி. 1816 ஜூன் மாதத்தில் மூத்திர ரோகம் எனும் நூலையும் அனுபோக வைத்திய அட்டவணைகளையும் எழுதியுள்ளார்.

கி. பி. 1800 டிசம்பர் மாதத்தில் சுப்பராயன் என்பவரின் புதல்வரான வெங்கடாஜலம் பிள்ளை (கணக்குப்பிள்ளை) பல வைத்திய அட்டவணை எனும் நூலை இயற்றினர். துபாஷ் கிருஷ்ணப்ப நாயக்கரின் குமாரர் ரங்கைய நாயக்கர் கி. பி. 1800 ஜனவரியில் வைத்திய அட்டவணைகளையும். கி. பி. 1800 பிப்ரவரி மாதத்தில் பற்ப வகைகள் எனும் நூலையும், கி. பி. 1800 ஏப்ரலில் நாளுளிக ரோக சிகிச்சை எனும் நூலையும் எழுதியுள்ளார்.

சரபோஜியின் அரண்மனையில் பிரபல வைத்தியரான கொட்டியம் மத்தியஸ்தர் கோபால பிள்ளை குமாரர் அய்யாக்கண்ணு பிள்ளை என்பவர் கி. பி. 1824 நவம்பர் மாதத்தில் வைத்திய அட்டவணை எனும் நூலையும் இன்னும் அநேக வைத்திய நூல்களையும் இயற்றியுள்ளார். கி. பி. 1824 ஜனவரியில் மச்சமுனி பெருநூல் எனும் வைத்திய நூலை எழுதியவர் சிதம்பரம் பிள்ளையின் குமாரர் பஞ்சநதம் என்பவர்.

இவர்களைத் தவிர தன்வந்தரி மகாலில் அண்ணுசாமி வைத்தியர், அப்பண்ணு வைத்தியர், முததுசாமி அப்பா, க்ஷேத்ர கோவிந்த ராவ், சுப்பையா வஸ்தாத், வைத்திய வாசுதேவ பிள்ளை, அபிராம மேஸ்திரி, பறங்கிப்பேட்டை அப்பு வைத்தியர், தெளலத்துமால் ராவ், வைத்தியர் முத்துசாமி தீக்ஷிதர், வட்டாத்து ஞானி முதலிய பலரும் சரபோஜியால் பெரிதும் ஆதரிக்கப்பட்டு வந்தனர்.

ஆயுர்வேத, சித்த வைத்திய முறைகளுடன் சரபோஜி யுனனி வைத்திய முறையிலும் சிரத்தைகொண்டு அம்முறை விருத்தியடைய ஆவனபுரிந்து வந்தார். வட இந்தியாவில் முகம்மதியர்களுடைய ஆட்சிக்காலத்தில் சிறந்து விளங்கிய சில யுனனி வைத்திய முறைகளைச் சேகரித்து வைத்திருக்கிறார். அவருடைய வைத்திய நூல்களில் யுனனி வைத்திய முறைகளும் அவற்றைக் கண்டுபிடித்துக் கையாண்ட வைத்தியப் பெரியோர்களின் பெயரும் காணப்படுகின்றன.

சரபோஜியின் வைத்திய ஆராய்ச்சிசாலையில் காதர் கான், ரஹிம்கான், அமீர்கான், ஹாஜி ஆமத், மாமூ சாஹேப் முதலிய யுனனி ஹகீம்கள் பங்கெடுத்துக் கொண்டனர். அவர்கள் ஹந்து முகம்மதீய வைத்திய முறைகளை ஒன்றுபடுத்துவதில் ஈடுபட்டிருந்தனர் என்று தெரியவருகிறது. சரபோஜி காசி யாத்திரைக்குச் சென்ற காலத்தில் தன் பரிவாரங்களின் உபயோகத்திற்காக நம்

நாட்டு மருந்துகளுடன் இங்கிலீஷ் மருந்துகளும் நிறைந்த பெட்டிகளைத் தன்னுடன் எடுத்துச் சென்றார் என்று 'சர்க்கார் தயாரித்த மருந்து ஜாபிதா' எனும் ஏடுகளிலிருந்து புலனாகின்றது.

அவர் தன்னுடைய யாத்திரா மார்க்கத்தில் மிகவும் பிரயாசைப்பட்டு ஏராளமான பொருட்செலவில் கணக்கற்ற நூல்களை விலைக்கு வாங்கியும், இவ்விதம் வாங்க இயலாதவைகளின் பிரதிகளையும் சேகரித்ததின் பயனாய் இன்று தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம் உலகிலேயே சிறந்த பழைய ஏட்டுப் பிரதிகளைக் கொண்ட நூல் நிலையமாக விளங்குகின்றது. அரிய வைத்திய நூல்களை மிகப் பிரயாசையோடு சேகரித்ததுமல்லாமல் அவற்றை எளிய நடையில் மொழி பெயர்க்கச் செய்ததால் மன்னர் சரபோஜி காலத்தில் வைத்தியக் கலைக்கே தனித்தோர் பெருமை ஏற்பட்டிருந்தது.

சரபோஜியின் சேமிப்பிலுள்ள சில சமஸ்கிருத வைத்திய நூல்களாவன:— வரருசியின் அஷ்டகர்மஸ்தானம், வாக்கப்கட்டரின் அஷ்டாங்க ஹ்ருதய வியாக்யானமும், பதார்த்த சந்திரிகையும், அருந்ததத்தரின் சர்வாங்க சுந்தரி, ஹடகங்கரின் அஷ்டாங்க ஹ்ருதய தீபிகை, சுஷேணரின் ஆயுர்வேத மகோததி, தாமோதரரின் ஆரோக்கிய சிந்தாமணி, யோகிவராஹமிஹிரரின் உத்பல பரிமளம், உக்ராதித்யரின் கல்யாண காரிகா, கபாலிகரின் நேத்திரரோக நிதானம், கஸ்யபரின் கஸ்யபஸம்ஹிதை, கோவிந்தராஜ கவிராஜரின் சமத்கார சிந்தாமணி, திஸ்ஸடரின் சிகித்ஸா காளிகா, தேவதாஸரின் சிகித்சாம்ருதசாகரம், வங்கசேனரின் சுகித்சாசார ஸங்க்ரஹம், துளஜா மகாராஜாவின் தன்வந்தரி சாரநிதியும், தன்வந்தரி விலாசமும், ராவணனின் பால தந்திரம், பலமிஸ்ரரின் பாவப்பிரகாசிகா, பேலரின் பேலஸம்ஹிதை, பரத்வாஜரின்

பேஷஜகல்பம், மாதவகரரின் மாதவ நிதானம், ஹர்ஷ கிர்த்தியின் யோகசிந்தாமணி, நித்யானந்த சித்தரின் ரஸ ராஜலக்ஷ்மி, கோவிந்தாசாரியாரின் ரஸ சாரம், போஜ ராஜரின் வாஜீகரணமும், ராஜம்ருகாங்கமும், வல்லபேந்திர ரின் வைத்திய சிந்தாமணி, லோலிம்பராஜரின் வைத்திய ஜீவனம், பூபதேவரின் வைத்திய தீப நிகண்டு, சாரங்க தாரரின் சாரங்கதர சம்ஹிதை, மாணிக்கரின் சந்நிபாத சந்திரிகையும், சாராவளியும், சித்த நாகார்ஜுனரின் சித்த நாகாஜுனியம், சுஸ்ருதரின் சுஸ்ருத சம்ஹிதை, சிவா எழுதிய மூலிகாப்ரகரணம், நளனின் பாகதர்ப்பணம், ரகுநாத சூரியின் போஜன குதூகலம், நகுலரின் அஸ்வ சிகிச்சையும், அஸ்வ சாஸ்திரமும், ஸாலிஹோத்ரரின் அஸ்வ சாஸ்திரம், கணு எழுதிய அஸ்வாயுர்வேதம், சித்த யோக சங்கிரஹமும், வைஸம்பாயனரின் அஸ்வாயுர்வேதம் சாரசிந்து, கஜ சாஸ்திரம், மல்லதேவரின் அஸ்வாயுர் வேதம், வேதவியாசரின் கஜ லக்ஷண சிகிச்சை, பால காப்பிய முனிவரின் பால காப்பியம், சரபோஜியின் பால காப்பிய பாஷா பிரபந்தம், தன்வந்தரி பண்டிதரின் தன் வந்தரி நிகண்டுவும், இன்னும் பல ஆனந்தகந்தம், அன்ன பானவிதி, கௌசிகசிந்தாமணி வைத்யாம்ருதம், சாராவளி நாடி பரிக்ஷை, நாடீ லக்ஷணம், நாடீ சக்கரம், நாடீ விஞ்ஞானியம், உஸாபானீயம், மகாரசம், சித்த மாளிகை, கஜ வைத்தியம், அபிதான ரத்னமாலிகை, தைலப்பிர யோகம் முதலிய நூல்களும் சரபோஜியின் சேமிப்பில் இடம் பெற்றுள்ளன. ஆனுல் அவற்றை இயற்றியவர்களின் பெயர் தெரியாமலிருக்கின்றன.

சமஸ்கிருதத்திற்கு அடுத்தாற்போல் தமிழ்வைத்திய நூல்கள் இடம் பெற்றுள்ளன. முற்காலத்து ரிஷிகளாகிய அகஸ்தியர், தேரையர், ப்ரம்ஹமுனி, மச்சமுனி. தன் வந்தரி, சட்டைமுனி, யுகிமுனி, திருமூலமுனி, கொங்கணர் போன்ற ரிஷிகளும் மற்றும் பல பெரியார்களும் இயற்றிய தமிழ் நூல்களையும் சரபோஜி மன்னர் சேமித்தார்.

மேலும் கௌளிநாடி, தும்மல் சாத்திரம், நாடி சாத்திரம், ஜ்வர சாத்திரம், சர்ப்பாரூடம், வாஜீகரணம் (காயகல்பம்), சஸ்திரவிதி (இரண சிகிச்சை ஆயுதங்கள்), விஷ வைத்தியம், மந்திர வைத்திய சாஸ்திரம், சரக்கு வைப்பு, ரசவாதம், சரக்குசுத்தி, மிருக வைத்தியம் முதலிய விஷயங்களைப் போதிக்கும் நூல்களையும் சேகரித்துள்ளார். ஆனால் இவற்றில் இயற்றியவர்களின் பெயர்களைக் காணோம். மற்றும் தலை சிறந்த அறிவாளிகளால் சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு பாஷைகளில் எழுதப்பட்ட காமசாத்திர நூல்கள் பல உள்ளன. அவை யாவும் விஷேசமாக மருத்துவ பாகத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருக்கின்றன. சரபோஜியின் முன்னோராகிய பிரதாபசிம்ம மகாராஜாவும், அவர் புதல்வர் துளஜா மகாராஜாவும் எழுதின மதன சஞ்ஜீவனி எனும் நூல்கள் இவ்வித காமசாத்திரத்தைப் பொருத்ததேயாகும்.

தீர்க்கதரிசியாகிய சரபோஜி தன தரண்மனையிலேயே சரசுவதி மகால் நூல் நிலயத்தையடுத்து "நவவித்யா கலாநிதி வர்ணயந்திரசாலை" என ஓர் பாஷாண (சிலா, கல்) அச்சகத்தை ஏற்படுத்தி அதில் ஏடுகளிலும், ஓலைச் சுவடிகளிலும் உள்ள நூல்களை அச்சிலேற்றியும் வந்தார். அக்காலத்தில் இந்திய பாஷைகளுக்குரிய அச்சகம் ஏற்படாமலிருந்தது. சரபோஜியின் மேற்சொன்ன அச்சகசாலை ஏற்பட்டு 30 வருடங்களுக்குப் பிறகே இந்தியாவில் பல இடங்களில் இவ்வித அச்சகங்கள் தோன்றின. ஆனால் துரதிருஷ்டவசமாக, தன் விருப்பப்படி தான் சேகரித்த நூல்களெல்லாம் அச்சிடப்படுமுன் மன்னர் சரபோஜி கி. பி. 1832ல் விண்ணுலகை அடைந்துவிட்டார். அப் பெரியாரின் பிரிவால் பிற்கால சந்ததிகளாகிய நமக்கு ஓர் பெருத்த நஷ்டம் ஏற்பட்டதென்றே சொல்லலாம். இன்னும் சிறிது காலம் அவர் உயிருடனிருந்திருப்பாராகில் அவரால் மிக்க பிரயாசையுடன் சேகரிக்கப்பட்ட மிகமிகத் தொன்மையான அரிய நூல்கள் யாவும் அச்சிடப்பட்டு

வெகுநாட்களுக்கு முன்பே அவற்றின் நற்பயனை மக்கள் அடைந்து இருப்பார்கள்.

தீர்க்கதர்சியாகிய அம்மன்னர் பெருமானின் உதார குணத்தை என்னென்றுரைப்பது. தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன் மன்னன் சரபோஜி. பிரஜைகளின் நலனையே பெரிதும் போற்றியவர் மன்னர் சரபோஜி. அவர் தனது ராஜ்யத்தில் பிரஜைகளின் நலனைக் கருதி மருத்துவசாலைகளை நிறுவி, அவற்றில் இந்திய வைத்திய நிபுணர்களையும், ஆங்கில வைத்திய மேதாவிகளையும் நியமித்தார். சர்ஜன் பெல் என்பவரும், சர்ஜன் க்யூரி என்பவரும் அவருடைய சமஸ்தான டாக்டர்களாக இருந்தார்கள். அம்மருத்துவச் சாலைகளில் நோயாளிகளுக்கு இலவச வைத்தியம் அளிக்கப்பட்டதுடன் நோய்வாய்ப் பட்டு குணமடைந்து தன் இருப்பிடம் செல்லுவோருக்கு வெகுமதியாகப் பணமும் கொடுக்கப்பட்டது. அவருடைய காலத்தில் புகைப்படம் பிடித்தல் (Photography) எனும் கலை நம் நாட்டில் தோன்றவில்லை. ஆதலால் அரசர், நோயாளிகளின் நோய்வாய்ப்பட்ட கண்கள் முதலிய வெளித்தோற்ற அங்கங்களைச் சிறந்த ஓவியக்காரர்களைக் கொண்டு இயற்கை வர்ணங்களில் சித்திரங்கள் வரையச் செய்தார். முக்கியமாக அவரது கண்ணோய் மருத்துவச்சாலையில் நோயுற்ற கண்களின் சித்திரங்கள் நன்கு வரையப்பட்டு, நோயாளியின் விவரம், நோய்களின் விவரங்களும், சிகிச்சை முறைகளும் ஆங்கிலத்தில் எழுதப் பட்டுள்ள புத்தகங்கள் தஞ்சை சரசுவதி மகாலில் இருக்கின்றன. அச்சித்திரங்கள் யாவும் கண்ணைக் கவரக் கூடியவை. பார்வை இழந்த ஒருவருடைய கண்ணில் ஊசி குத்தி முறிந்துவிட்டது. கண்ணில் தங்கிய அந்த உடைந்த ஊசி சாமணம் எனும் ஆயுதத்தால் எடுக்கப்பட்டிருக்கிறது இத்தகைய விவரங்கள் அப்புத்தகத்தில் காணப்படுகின்றன.

மேனாடுகளில் பிரசுரமான அநேக புத்தகங்களை சரபோஜி தனது நூல் நிலையத்திற்காகச் சேகரித்தார்.

முக்கியமாக வைத்தியம், ரணவைத்திய சாத்திரம், தாவர சாத்திரம், உடற்கூறு சாத்திரம், சரித்திரம், மிருக வைத்தியம் போன்ற பல சாத்திரங்களைக் கூறும் நூல்கள் அவரது கவனத்தைப் பெரிதும் கவர்ந்தன. சரபோஜி பல கழகங்களில் அங்கம் வகித்தார். ராஜாங்க ஆசியக்கழகம் இங்கிலாந்திலிருந்த ராஜாங்க பூகோளக்கழகம், இன்னும் பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களிலிருந்த பல கழகங்களிலும் அங்கத்தினராயிருந்து, அவைகள் வெளியிடும் சஞ்சிகைகளைத் தன் நூல் நிலையத்திற்கென வரவழைத்தார். அக்காலத்தில் பிரசுரிக்கப்பட்ட எந்த ஒரு புத்தகத்தின் முதற்பதிப்பும் சரபோஜியின் நூல்நிலையத்தில் காணப்படுகின்றன. மேனாட்டுப் பாஷைகளிலுள்ள நூற்றுக்கணக்கான புத்தகங்களில் மன்னரின் கையெழுத்துடன் அவர் அப்புத்தகங்களைப் படிப்பதற்கு அடையாளமாக தேதிகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. சிற்சில புத்தகங்களில் அவர் எழுதியிருக்கும் குறிப்புகள் அவருக்கு அந்த சாத்திரத்திலுள்ள நுண்ணிய அறிவை வெளிப்படுத்துகின்றன. உதாரணமாக வாரன் எனும் ஆங்கிலப் பெரியார் கால சங்கலிதை எனும் நூலை ஆங்கிலத்தில் இயற்றினர். அந்நூலில் இந்திய பஞ்சாங்க கணித முறைகளும் ஜோதிட கணித முறைகளும் நன்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளன. அந்நூல் கணித நுட்பங்கள் நிறைந்ததாகும். அந்நூலில் சில பிழைகளிருக்கக்கண்ட மன்னர் சரபோஜி பொருட் செலவைச் சிறிதும் கருதாது ஆசிரியர் வாரன் அவர்களை வரவழைத்துப் பிழைகளைச் சுட்டிக்காட்டி அவற்றைத் திருத்துமாறு செய்தார். அந்த ஆசிரியரும் மன்னர் குறிப்பிட்ட பிழைகளை ஒப்புக்கொண்டு அவற்றைத் திருத்தித் தன்னாலேயே திருத்தப்பட்டதென்பதற்கு அத்தாட்சியாகத் தன் கையொப்பமிட்டு பின்வரும் பதிப்புகள் திருத்தப்பட்ட முறையில் பதிப்பிக்க வேண்டுமென்றும் குறித்துள்ளார்.

சரபோஜி தயாரித்த உடற்கூறு சாஸ்திர புத்தகங்கள் அழகிய பெரிய படங்கள் அடங்கியவை. சரீரத்தின் ஒவ்

வோர் அங்கத்தின் படமும், இயற்கையான வர்ணங்களாலும் எஃகு முனையினாலும் (Steel of Engravings) தீட்டப்பட்டவையாகும். ஆங்கிலத்திலிருந்த அப்புத்தகங்களை மாரத்தியில் மொழிபெயர்க்கச் செய்துள்ளார்.

ஆடு மாடுகள், குதிரைகள், யானைகள் முதலியவற்றை வளர்ப்பதில் சரபோஜி மிகவும் சிரத்தை கொண்டவர். மிருக வைத்திய சாத்திர சம்பந்தமான பல நூல்களையும் சேகரித்தார். அவர் சேகரித்த ஆங்கில மொழியிலுள்ள மிருக வைத்திய சாத்திர நூல்கள் ஒப்புயரற்றவை, பாலகாப்பியமுனி, கனர், நளன், வைசம்பாயனர், வேதவியாசர் சாலிஹோத்திரர் போன்ற பல ரிஷிகள் இயற்றிய கஜ சாத்திரம், அசுவ சாத்திரம் முதலிய நம்நாட்டுச் சிறந்த நூல்களும் அவரிடம் இருந்தன. மேலும் சாலிஹோத்திரரின் அசுவ சாத்திரத்தை (இது சம்ஸ்கிருதத்திலுள்ளது) படத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளும் பொருட்டுக் குதிரைகளின் அழகிய வர்ணப்படங்களை வரையச்செய்து மராத்தியிலும் மொழி பெயர்த்துள்ளார். அதுபோலவே அவர் இயற்றிய கஜ சாஸ்திர பாஷா பிரபந்தம் எனும் நூலில் யானைகளின் அழகிய வர்ணப்படங்களுடன், மராத்தியில் ஆர்யா, ஓவி, ஸ்லோகம் ஆகிய செய்யுள் வடிவங்களில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

சரபோஜி மன்னர் குதிரையேறத்திலும் குறிபார்த்துச் சுடுவதிலும் வல்லமை மிகுந்தவர் என்று பிஷப் ஹிபர், லார்ட் வாலன்ஷ்யா இவர்களின் தஞ்சை விஜயம் பற்றிய புத்தகங்களிலிருந்து புலனாகின்றது. அரேபியா, இங்கிலாந்து, இலங்கை, கத்தியவார், ஹைதராபாத் முதலிய தூர தேசங்களிலிருந்து மிகுந்த பொருட்செலவில் குதிரைகளையும் மாடுகளையும் வரவழைத்தார். அத்துடன் அந்தந்த தேசங்களிலிருந்து மிருக வைத்திய நூல்களையும் வரவழைத்து அவற்றை மொழிபெயர்த்துத் தனது நூல் நிலையத்தில் சேமித்துள்ளார்.

பந்தயக் காளைகளைத் தயாரிப்பதில் அரசருக்கு மிகுந்த விருப்பமுண்டு. அவரது காலத்தில் 'ரேக்ளா பந்தயம்' விசேஷமாக நடைபெற்று வந்தது. ஏழைகளும் தனவந்தர்களும் அப்பந்தயத்தில் கலந்துகொள்வது வழக்கம். அரசரின் 'ஹவலி மகாலில்' பந்தயக் காளைகள் வளர்க்கப்பட்டு வந்தன. பந்தய மாடுகளுக்கென தனித்ததோர் வைத்திய நூல் அவரது நூல் நிலையத்தில் இடம் பெற்றுள்ளது. மாடு குதிரைகளைப் பந்தயத்திற்கென தயாரிக்கும் முறைகளும் சாரத்தியம் செய்யும் முறைகளும் அடங்கிய 'வ்ருஷஸ கட சாரத்தியம்' 'சடுல டுமணி வகையரு' என்ற அரிய புத்தகங்களையும் அவர் சேகரித்திருந்தார். அவர் சேகரித்த அசுவ லக்ஷணங்களும் சிகிச்சையும் பற்றிய நூல்களைப் போன்று இந்தியாவில் வேறு எங்கும் யாராலும் சேகரிக்கப் படவில்லையென்றே சொல்லலாம்.

சரபோஜி மன்னர் வேட்டையாடுவதில் ஒப்பற்றவர். அவருக்குப் பறவை வேட்டையிலும், சிறுத்தை வேட்டைகளிலும் அதிகப் பிரியம், கலைமான், மான்கள் முதலியவற்றை வேட்டையாடுவதற்காகப் பயிற்சி அளிக்கப்பட்ட சிறுத்தைகள் அவரிடமிருந்தன. ஒரு சமயம் அரசர் தனக்கென சில குதிரைகளை வாங்கிவரும்படி புஜங்கராவ் ஹரிராவ் என்பவரை ஹைதராபாத்திற்கு அனுப்பினர்.

அரசரின் மனதை நன்கு அறிந்திருந்த புஜங்கராவ் ஹரிராவ் உதயகிரி நவாபிடமிருந்து 1233 ரூபாய்க்கு வேட்டைப் பறவையாகிய ருஜாளியை விலைக்கு வாங்கி வந்தார். அக்காலத்தில் நைஜாம்ஷா பாதுஷா என்பவர் உருது மொழியில் 'பாஜ நாமா' 'யூஜ நாமா' என்ற புத்தகங்களை எழுதியிருந்தார். அவை முறையே பக்ஷி லக்ஷணங்கள் சிகிச்சைப்பற்றியும் சிறுத்தை வேட்டையைப் பற்றியும் கூறுபவையாகும். அப்புத்தகத்தை சரபோஜி வரவழைத்து தன்னுடைய உபயோகத்திற்காக பதங்கராவ் கோபால்ராவ் என்பவரைக்கொண்டு மகாராஷ்டிரத்தில்

மொழிபெயர்க்கச் செய்தார். விரிவாக இருந்த அந்நூல் அரசின் ஆணைப்படி அச்சுதராவ் என்பவரால் சுருக்கமாக எழுதப்பட்டது.

அம்மட்டில் நில்லாது சிறந்த ஓவியக்காரர்களைக் கொண்டு பல பறவைகளின் படங்களை அவற்றின் இயற்கையான வர்ணங்களில் எழுதுவித்தார். அவரது காலத்தில் எழுதப்பட்ட பல ஊசிமுனை ஓவியங்கள் ஏறக்குறைய மொகலாய ஓவியங்களை ஒத்திருந்தன. சரபோஜியால் போற்றப்பட்டு வளர்க்கப்பட்ட கலைகளில் ஓவியமும் ஒன்றாகும். அவர் காலத்தில் ஒப்புயர்வற்ற பல சிறந்த ஓவியங்களை இன்றும் தஞ்சை அரண்மனையிலும் சரஸ்வதி மகால் நூல் நிலையத்திலும் காணலாம். சுருக்கிக் கூறுமிடத்து அரசர் எல்லாக் கலைகளையும் நுட்பமாகவும் சாஸ்திர முறைப்படியும் ஆராய்ந்து வந்தார்.

அரசரின் ஆகார வகைகளைப்பற்றி ஆராய்வோமாகில், புசிப்பதில் சரபோஜிக்கு ஒப்பாரும் மிக்காரும் ஒருவரும் இருக்கவில்லை என்றே சொல்லவேண்டும். தான் சிறந்த உணவை உண்பதோடு தன்னுடைய பிரஜைகளுக்கு சிறந்த உணவைத் தயாரிக்கும் முறைகளைக் கற்பிப்பதில் அவர் மிகவும் அக்கரை கொண்டிருந்தார். அவரது அரண்மனையில் நன்கு தேர்ச்சி பெற்ற முதுப்போக்கிகள் (சமையல் காரர்கள்) இருந்தனர். உணவுகளில் ஐரோப்பிய வகைகள் மொகலாய வகைகள், வடஇந்திய வகைகள், தென்னிந்திய வகைகள் ஆகியவற்றை நன்றாகத் தயாரிப்பவர்களைக் கொண்டு மகாராஷ்டிரத்திலும் தமிழிலும் பாகசாஸ்திர நூல்களை எழுதிவைத்துள்ளார். ஐரோப்பிய உணவு வகைகளைத் தயாரிக்கும் முறையை நம் நாட்டு மொழிகளில் மொழிபெயர்க்கச்செய்தார்.

மேற்கூறிய மூவகை உணவுகளைத் தயாரிக்கும் முறைகளடங்கிய சரபேந்திர பாகசாஸ்திரம் எனும் நூல் அவரால்

தொகுக்கப்பட்டது. ஆனால் அந்நூலின் முழுப்பிரதி இப்பொழுது கிடைக்கவில்லை. ரகுநாத சூரி என்பவர் சம்ஸ்கிருதத்தில் இயற்றிய போஜன குதூகலம் எனும் நூலை அரசரின் விருப்பத்திற்கிணங்க தொண்டுபட்ட அப்பா என்பவரால் மகாராஷ்டிரத்தில் மொழி பெயர்க்கப் பட்டது. ஆனால் அம்மொழி பெயர்ப்பு முழுவதும் இல்லா மல் சில பாகங்கள் மட்டில் இப்பொழுது சரசுவதி மகாலில் இருக்கின்றன. எல்லாக் கலைகளிலும் மன்னர் சரபோஜிக்கு ஏற்பட்டிருந்த ஆர்வத்தையும் மதிநுட்பத்தையும் உற்று கவனிக்குமிடத்து யாரும் வியப்புறுவர்.

கலையார்வம் மிகுந்திருந்ததால் சரபோஜி தன் அரசியல் அலுவல்களைப் புறக்கணித்ததில்லை. தன் பிரஜைகளின் சுகாதார நலனைக்கருதி அரசர் தன்னுடைய சொந்த பொருளைச் செலவழித்து நகரம் முழுவதிலும் கி. பி. 1825 முதல் 1828-க்குள் ஜலதாரைகளைக் (சாக்கடைகளை) கட்டு வித்தார். ஜலதாரைக் கட்டிட வேலைகளை மேற்பார்வை புரிந்தவர்கள் மான்கோஜி காடே என்பவரும் கொத்தவால் நாகலிங்க சேர்வைகாரருமேயாவார். அன்று அவர் கட்டிய ஜலதாரைகள் இன்றும் குறிப்பிடத்தக்க பழுதுகள் யாவு மின்றி உபயோகத்திலிருந்து வருகின்றன.

தண்ணீர் வசதிக்காக அரசர் கோட்டைக்கு வெளியி லுள்ள சேவப்ப நாயக்கன் ஏரியின் தண்ணீரை ஜல சூத்திரம் ஒன்று அமைத்து கோட்டைக்குள்ளிருந்த சிவகங்கை குளத்தில் விழச்செய்தார். அக்குளத்திலிருந்து தண்ணீரை பூமியினடியில் செல்லும் பாதாளக் கால்வாய் களை அமைத்து வேறு சில குளங்களிலும், பல வீட்டுக் கிணறுகளிலும், அரண்மனைக் கிணறுகளிலும் பாயச்செய் தார். இன்றும் சில வீட்டுக் கிணறுகளுக்கு சிவகங்கைக் குளத்திலிருந்து தண்ணீர் கிடைக்கின்றது.

இம்மட்டிலா! சரபோஜி சிறந்த தெய்வ பக்தர். மதக்கோட்பாடுகளுக்குப் புறம்பானவரல்லர். இந்துக்களின் புண்ணிய க்ஷேத்திரமாகிய காசி யாத்திரையை அவர் செய்து முடித்தார். யாத்ரா மார்க்கத்திலிருந்த பல புண்ணிய ஸ்தலங்களுக்கும் அவர் சென்று ஆங்காங்குள்ள கடவுளை வழிபட்டார். அவரது யாத்திரை வரலாறு "த்ரிஸ்தல யாத்திரையின் லாவணி" (லாவணி, அக்காலத்தில் பிரபலமாயிருந்தது) என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. தன் ராஜ்யத்திலும், ராஜ்யத்தைச் சுற்றிலுமுள்ள க்ஷேத்திரங்களுக்கும் அவர் போகாமலிருக்கவில்லை. ஒவ்வொரு க்ஷேத்திரத்திற்கும் சென்று கடவுளை வழிபட்டு ஒவ்வொரு கோவிலுக்கும் நிலமானியங்களும், நன்கொடைகளும் அளித்தார். அவரது இந்த க்ஷேத்திராடனத்தைப் பற்றி சரபேந்திர தீர்த்தாவளி எனும் நூல் அரசரின் ஆணையின்பேரில் எழுதப்பட்டிருக்கிறது.

மன்னர் சரபோஜி ஆலயங்களுக்குத் திருப்பணி செய்ததுமல்லாமல் பல புதிய ஆலயங்களையும் கட்டுவித்தார். அவர் தஞ்சையிலுள்ள பிரகதீஸ்வரர் ஆலயத்திற்குத் திருப்பணி செய்து மஹா கும்பாபிஷேகம் நடத்தியதாக அவ்வாலயத்திலுள்ள கல்வெட்டுகள் கூறுகின்றன, தஞ்சையிலுள்ள காசி விஸ்வநாதர் ஆலயத்தையும் விடோபாவின் ஆலயத்தையும் நூதனமாகக் கட்டியவர் சரபோஜியே ஆவர். ஸ்ரீ எல்லையம்மன் ஆலயத்திற்கும் பங்காரு காமாக்ஷியம்மன் ஆலயத்திற்கும் அவர் திருப்பணிகள் நடத்தினர். போன்ஸ்லே வமிசத்தாருக்கு நெடுங்காலமாகத் தொடர்புள்ள ஆரணிஜாகீரில் தேவிகாபுரத்திலுள்ள தேவிப்ருஹதாம்பாளை அவர் ப்ரதிஷ்டை செய்தார் என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன.

இவர் அநேக முகம்மதிய, கிருஸ்துவ கோயில்களுக்கு மானியம் அளித்துள்ளார் என்று பல சாசனங்கள் கூறுகின்றன.

சரபோஜியின் தருமசாஸனங்கள் எண்ணிறந்தவையா கும். ஏழைகளுக்காக அவர் ஏற்படுத்திய அன்ன சத்திரங் கள் பல. உதாரணமாக தஞ்சையிலிருந்து 15 மைல் தூரத்திலுள்ள முக்தாம்பாள்புரத்தில் ஓர் சத்திரம் ஏற் படுத்தி நோயாளிகளுக்கு ஔடதங்களும் உலுப்பையும், சுற்றுப்புறத்தில் 6 மைல் விஸ்தீரணத்திற்குள்ளிருக்கும் கர்ப்பிணிகளுக்கு 9-வது மாத முதல் பிரஸவித்து 3 மாதங் கள் வரையில் பாலும் வழங்குவதற்கு நிரந்தரமான ஏற் பாடுகளைச் செய்திருந்தார். பிறந்த குழந்தைகளுக்கு 3 மாதங்கள் வரையில் அந்தச் சத்திரத்தில் பாலும் கொடுக் கப்பட்டு வந்தது. அனாதி சவங்களுக்கு ஈமக்கிரியை இலவசமாகச் செய்ய ஏற்பாடு செய்தார். சரபோஜி இவ் வாறு செய்துள்ள தர்மசாசனங்களைப்பற்றியும், நிறுவிய அன்னதான சத்திரங்களைப்பற்றியும் எழுதுவதனால் அது வோர் பெரிய புத்தகமாகிவிடும். இராமேசுரம் செல்லும் மார்க்கத்தில் யாத்ரீகளும், வழிப்போக்கர்களும் தங்கி இளைப்பாற அநேக பெரிய கட்டிடங்களையும், ஆறுகளைக் கடக்க அற்புத பாலங்களையும், அநேக நீர்ப்பாசன கால் வாய்களையும், ஓடைகளையும் சரபோஜி கட்டியுள்ளார். அவரது ஈகைத்தன்மை ஏடுகளிலடங்கா.

மேல்நாட்டுக் கலைகளையும், கீழ்நாட்டுக் கலைகளையும் ஒன்றுபடுத்தி அவற்றுள் சிறந்தவற்றைக் கைக்கொள்ளு வதற்காக சரபோஜி செய்த அரும் பெரும் முயற்சிகள் யாவும் அவருக்குப் பின்னர் பயனற்றுப்போயின. ஏனெ னில் சுதேச ராஜ்யங்களின்மீது அந்நியர் ஆதிக்கம் வலுப் பெற்றதால் நம் நாட்டுக் கலைகள் நசித்துப்போயின. நாட்கள் செல்லச்செல்ல ஆங்கிலக் கல்வியும், ஆங்கில வைத்திய முறைகளும் பெருகிவந்தமையால் அரசாங்கமும் ஆளப்பட்டவர்களும் நம் நாட்டு வைத்தியக்கலையை அசட்டை செய்யலாயினர். ஆங்கிலேயர்கள், சம்ஸ்கிருதத் திலும், தமிழிலுமிருந்த நம் நாட்டு வைத்திய நூல்கள் யாவும் ஆதாரமற்றவையென்றும், பயனற்றவையென்றும்

கொள்கையுடையவர்களாதலால் வைத்தியத் துறையிலீடு பட்டவர்கள் மேனாட்டு வைத்திய முறைகளைக் கையாள முற்பட்டனர். பழைய முறைகளை அடிப்படையாகக் கொண்டு புதிய முறைகள் ஏற்பட்டவையென்பதை அறியும் திறன் அவர்களுக்கு இல்லாமற் போயிற்று.

நம் நாட்டின் மீது சுதந்திர சூரியன் உதயமாகி மேனாட்டு நாகரீகத்தில் ஈடுபட்டவர்களின் அறியாமையைப் போக்கி வருவதால் நம் நாட்டுக் கலைப்பண்பாடு எனும் தாமரை மலரத் தொடங்கியுள்ளது. தற்சமயம் அதன் அழகும், பெருமையும் அநேகரின் கண்களைக் கவர்ந்து வருகின்றன.

மேனாட்டுக் கலைகளை நம்நாட்டுக் கலைகளுடன் இணைத்து அதன் நற்பயனை அடைந்த முதல் இந்தியன் மன்னர் சரபோஜி என்றே சொல்லலாம். அவரது சுய முயற்சிகள் அவருக்கு நன்கு வெற்றியளித்தன. அவர் ஆண்ட 34 வருட காலத்திற்குள் கலையுலகில் அவர் தனித்து நின்று புரிந்த சாதனைகள் என்றென்றும் போற்றற்குரிய வையே. ஏன்! வியப்புறத்தக்கவை என்று கூறினாலும் மிகையாகாது. மன்னர் சரபோஜியைப் போன்று எல்லாக் கலைகளிலும் ஆர்வம் மிகுந்து அவற்றைத் தன் நுட்ப மதியில் ஊடுருவி ஆராய்ந்தறியும் ஆற்றல் மிக்க பல மக்களை நம் பாரதத்தாய் ஈன்றெடுப்பாளாயின் என்னே அவளது பாக்கியம்!



# ராஜஸ்ரீ பிரதாபசிம்ஹ ராஜா அவர்களும் சரசுவதி மகால் நூல் நிலையமும்



பல்லாண்டுகளுக்கு முன்பிருந்தே நமது தென்னாட்டில் சரித்திர ஆசிரியர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்த நகரங்களுள் தஞ்சாவூர் ஒன்றாகும். இதனைத் தஞ்சையென்றும் அழைப்பதுண்டு. அன்றுமுதல் இன்றுவரையில் இத் தஞ்சை சீரும் சிறப்பும் பெற்று விளங்குவதற்குப் பல காரணங்கள் கூறப்படினும் இந்நகரின்கண் அமைந்துள்ள கல்விச்செல்வம் மிகுந்து கலைக்கோவிலாய்த் துலங்கும் சரசுவதி மகால் நூல் நிலையம் தஞ்சையம்பதிக்கு மங்காப் புகழை பாரினில் தேடித்தந்துள்ளது. இந்நூல் நிலையத்தைக் கலைக் கோவிலாய்த் துலக்கிய பெருமான் மராட்டிய மன்னர் சரபோஜியே ஆவார். அவர் தன் வாழ்நாள் முழுவதிலும் நம் நாட்டுக் கலைகளைப் பெரிதும் போற்றி வளர்த்து. சுவடிகளிலும், ஏடுகளிலும் இருந்த ஆயிரக் கணக்கான நூல்களைப் பெரும் பொருட்செலவில் சேமித்து எண்டிசைகளிலும் தனது சரசுவதி மஹால் நூல் நிலையத்தின் புகழை ஓங்கவைத்தார்.

சரபோஜிக்குப் பின்னர் அவரது மைந்தர் சிவாஜி தந்தையின் வழியைப் பின்பற்றி சரசுவதி மகால் நூல் நிலையம் உலகினில் சிறந்ததெனத் திகழ்வதற்கு ஆவன பல புரிவதில் பின்வாங்கவில்லை. சரசுவதி மகாலில் இன்று நாம் காணும் பலரியற்றிய உடற்கூறு சாஸ்த்திரப் படப் புத்தகங்கள் சிவாஜியால் சேகரிக்கப்பட்டவை. அவர் காலத்தில் தஞ்சைக்கு விஜயம் செய்த வெளிநாட்டினர் அநேகர் சரசுவதி மகாலைப் புகழாமல் இருந்ததில்லை.

கி. பி. 1855-ல் மன்னர் சிவாஜி விண்ணுலகை அடைந்தார். 'ஒண்டவந்த பிடாரி ஊர்ப்பிடாரியைத் துரத்திற்று' என்ற பழமொழிக்கிணங்க வியாபார நிமித்தம் இந்தியாவிற்கு வந்து இராஜ்யத்தை ஸ்தாபித்து சட்டங்கள் பல நிறுவினர் ஆங்கிலேய கிழக்கிந்திய வர்த்தகக் கம்பெனியார். ஏற்கனவே தஞ்சை அவர்களது ஆதிக்கத்தில் சிக்கியிருந்தது. மன்னர் சிவாஜிக்குப்பின் அரசு செலுத்த அன்னாருக்கு ஆண் சந்ததி பிறக்காத காரணத்தால் ஆங்கிலேயர் தஞ்சாவூர் சமஸ்தானத்தை முழுவதும் கபளீகரம் செய்ததுமன்றி இறந்த அரசரின் சொந்த சொத்துக்களையும் தங்கள் வசமாக்கிக்கொண்டனர். அரசரின் குடும்பத்தினரை 1855 முதல் 1863 வரையில் நிர்க்கதியாய் பரிதவிக்கவிட்டனர் ஆங்கிலேயர் தம் வசப்படுத்திக் கொண்ட மன்னரின் சொந்த சொத்துக்களில் சரசுவதி மகால் நூல் நிலையமும் ஒன்றாகும்.

அந்நூல் நிலையத்தின் அதிகாரியான நாராயணராவ் சிந்தே என்பவர் நியமிக்கப்பட்டிருந்தார். ஆயினும் கிழக்கிந்திய வர்த்தகக் கம்பெனியாரும் இந்திய அரசாங்கத்தாரும் கி. பி. 1856-ம் ஆண்டு செப்டம்பர்மீ 8உயிட்ட கடிதத்தில் சரசுவதி மகாலிலுள்ள நூல்களையும் மற்றும் கலைநுட்பம் மிகுந்த அநேக பொருட்களையும் தஞ்சையிலிருந்து அப்புறப்படுத்தப் போவதாக எழுதியிருந்தனர். இதனைக் கேள்வியுற்றதும் காமாக்ஷயம்பா பாயி சாகேப் அவர்கள் தனது வக்கீல் J. B நார்ட்டன் மூலமாய் ஆட்சேபித்து அரசாங்கத்தாரின் யோசனையைக் கைவிடுமாறு செய்தார்.

கி. பி. 1862-ல் இங்கிலாந்திலிருந்த பார்லிமெண்ட் சபையாரிட்ட உத்திரவின்படி சிவாஜி மன்னரின் சொந்த சொத்துக்கள் யாவும் பட்டமகிஷி காமாஷியம்பாபாயி சாகேபிடம் திருப்பிக் கொடுக்கப்பட்டன. அதன் பிறகு மறுபடியும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் 21—9—1982-ம் தேதியுள்ள நெ. 336 கடிதத்திலும் 26—9—1982-ம் தேதி

யுள்ள கடிதத்திலும் சென்னை நூல்நிலையக் கழகத்துடன் இணைக்கும் நோக்கங்கொண்டு சரசுவதி மகால் நூல் நிலையத்தைத் தங்களுக்கு விற்றுவிடும்படி கேட்டனர். ஆனால் பாயி சாகேப் அதற்கு இணங்கவில்லை. எக்காரணத் தாலும் சரசுவதி மகாலை அப்புறப்படுத்தலாகாது எனும் நிச்சயத்துடனிருந்தார். இச்சம்பவத்தால் சரசுவதி மகால் நூல் நிலையத்தின் சரித்திரத்தில் ஓர் நிரந்தரமான மாறுதல் ஏற்பட்டிருக்கவேண்டிய காலத்தில் பாயிசாகேப் அவர்கள் தனது இயற்கையான உதார குணத்தாலும் சமஸ்தான பிரஜைகளிடம் தான் கொண்டிருந்த பேரன்பினாலும் மாறுதல் ஒன்றும் ஏற்படாது சரசுவதி மகாலைக் காத்தருளி னர். தன் மூதாதையர்களின் பெயர்கள் அழிவுறாப் புகழு டன் பொன்னேடுகளில் பொறிக்கப்படுவதற்குக் காரணமா யுள்ள சரசுவதி மகால் நூல் நிலையத்தை அன்று அவர் பொருளாசையால் விற்றிருப்பாரேயாகில் நம் நாட்டுக் கலைகள் பல அழிவுற்றிருக்குமன்றோ! நம் நாட்டுக் கலைக ளின் மேன்மையை நாம் தெரிந்துகொள்ள வகையின்றி அந்நியரின் ஆசியை எதிர்நோக்கியல்லவா நாம் ஏங்கி நின்றிருக்கவேண்டும். கலைக்களஞ்சியமாகிய மன்னர் சரபோஜியால் அரும்பாடுபட்டு சேகரிக்கப்பட்ட அரிய நூல்கள் யாவும் உலகின் மூலை முடுக்குகளில் சிதறுண்டு கிடக்க அப்பெண்ணரசி மனங்கொள்ளவில்லை. நலமுறும் மக்களை நாசமுறச் செய்த பாவம் தன்னைச் சாருமென்று நினைத்தார். அவ்வம்மையின் தியாகத்திற்கும் அவரது பெருந்தன்மைக்கும் கலையுலகம் அவ்வம்மைக்கு அன்றும் இன்றும் என்றும் கடமைப்பட்டதாகும். கி. பி. 1867 வரையில் சரசுவதி மகால் அந்தப் பட்டமகிஷியின் சார்பாக அவரது சுவீகாரப் புத்திரரால் நன்கு நிர்வகிக்கப் பட்டு வந்தது.

அரசரின் சொத்துக்களைப் பராமரிக்கும் விஷயமாய் ராணிமார்களுக்கிடையே சச்சரவுகள் தோன்றத் தலைப் பட்டு கி. பி. 1867ல் தஞ்சை நியாயமன்றத்தில் தாவா

ஏற்பட்டது. ஆதலால் நியாயாதிபதி அரசரின் சொத்துக்களை நிர்வகிக்கும் பொறுப்பை உத்தியோகமுறையில் தான் ஏற்று ஜில்லா கலெக்டரை ரிஸீவராக நியமித்தார். அன்று முதல் சரசுவதிமகாலின் நிர்வாகம் ஜில்லா கலெக்டரிடம் இருந்துவந்தது.

கலெக்டர் அவர்களின் நிர்வாகத்தில் சரசுவதி மகாலில் உள்ள கணக்கெடுப்புப் பட்டியல்கள் (Catalogues) தயாரிக்கப்பட்டன. கி.பி. 1868-ல் சமஸ்கிருத பேராசிரியர் பிக்போர்ட் என்பவர் அவ்வேலையைத் தொடங்கினர் ஆனல் அவரால் அவ்வேலை முற்றுப்பெறவில்லை. பின்னர் கி. பி. 1871-ல் ஜில்லா நீதிபதியாக நியமிக்கப்பட்ட Dr. பர்னல் என்பவர் பிக்போர்டால் தொடங்கப்பட்டு முடிவுபெருத பட்டியல் வேலையைத் தான் ஏற்றுக்கொண்டு கி. பி. 1871-ல் அந்நூல் நிலையத்திலிருந்த எல்லா சமஸ்கிருத நூல்களின் பட்டியல்களைத் தயாரித்து அந்நூல்கள் யாவும் சாதாரணமாக 50,000 பவுன் பொறுமானமுள்ளவையென்றும் மதிப்பிட்டிருக்கிருர். நூல்களின் மேன்மையைக் கருதி அவற்றை மும்மடங்கு அல்லது நான்மடங்கு மதிப்பிடலாம் என்று குறிப்பிட்டுள்ளார்.

சிறிது காலத்துக்குப் பின்னர் சீனியர் ராணியாக இருந்த உமாம்பாபாயி சாகேப் அவர்கள் தங்கள் சொத்துக்களை கலெக்டர் சரிவர நிர்வகிப்பதில்லை என்றும், பல ஊழல்கள் இருந்து வருவதாகவும் தஞ்சை கோர்ட்டில் தாவா கொடுத்து அதன் பயனய் கலெக்டரிடமிருந்து ரிஸீவர் அதிகாரம் நீக்கப்பட்டது. அப்பொழுது தஞ்சையில் வக்கீலாக இருந்த ஐரோப்பியர் G. T. ஆலிவர் என்பவரை கோர்ட்டார் ரிஸீவராக நியமித்தனர்.

சிவாஜியின் மனைவியரில் எஞ்சியிருந்த கடைசி ராணி கி. பி. 1912-ல் இறந்தார். அவர் இறந்ததும் வாரிசுகளுக்கிடையே சொத்துக்களின் பாத்தியத்தைப் பற்றி விவாதம் ஏற்பட்டு நியாயமன்றத்தில் வியாஜ்ஜியம் செய்தனர்.

1912-ம் வருடத்திய அசல் வியாஜ்ஜியம் 26 எண்ணுள்ள அந்த வியாஜ்ஜியம் வருடக் கணக்கில் நடந்துகொண்டிருந்தது. தாவா சொத்துக்களில் சரசுவதி மகால் நூல் நிலையமும் சேர்க்கப்பட்டிருந்தது. தம் நாட்டினருக்கு மட்டுமல்லாது பாரிலுள்ளோர் அனைவருக்கும் பயன்படக்கூடிய இந்நூல் நிலையத்தைப் பொதுஜனங்களுக்கு வெகுமதியாக அளிக்கவேண்டுமென சில பெரியார்களுக்குத் தோன்றியது. அதற்காக தாவாவிலுள்ள முக்கிய பாகஸ்தர்களை இணங்கச்செய்தல் மகத்தான பொது நன்மை விளையுமென அக்காலத்திலிருந்த பேரறிஞரான ஜில்லா நீதிபதி Mr. வாலஸ் என்பவர், முதல் பாகஸ்தரான ஸ்ரீ சிவாஜி ராஜாவிடமும், அவருடைய இளைய சகோதரரும், இந்த நினைவு மலரின் முக்கிய புருஷருமான ஸ்ரீ பிரதாபசிம்ம ராஜாவிடமும் இதைப்பற்றிக் கூற இவர்கள் உலகம் போற்றக் கூடிய இப்பெருங்காரியத்தைச் செய்து முடிப்பதற்கு சம்மதித்தது மன்றி மற்ற பாகஸ்தர்களையும் இணங்கவைப்பதாக உறுதி மொழி கூறினர். அவ்விதமே தாவாவில் சேர்ந்த இதர பிரதிவாதிகளும் தாம் இதற்கு சம்மதப்படுவதாகக் கூறினர். கடைசி மன்னர் சிவாஜி மகாராஜாவின் பேரர்களும் முறையே 1, 2 பிரதிவாதிகளுமான ராஜஸ்ரீ சிவாஜி ராஜா சாகேப், ராஜஸ்ரீ பிரதாப சிம்ஹ ராஜா சாகேப் இருவரும் ஏனைய பாத்தியஸ்தர்களும் ஒன்றுபட்டு இப்புத்தகசாலையை பொதுமக்களுக்கு நன்கொடையாக அளிப்பதாக ஒப்பந்தம் செய்துகொண்டு இந்நூல் நிலையத்தின் போஷணைக்காக ஒருலக்ஷ ரூபாயும் நன்கொடையாகக் கொடுத்து அதை ஒரு பொது டிரஷ்டாகச் செய்து கவர்மெண்டாரிடம் ஒப்படைத்தார்கள்[1].

அச்சமயம் கவர்மெண்டார் இதை பொது தர்ம ஸ்தாபனம் என்ற முறையில் எடுத்துக்கொண்டு[2] அதற்கு கவர்மெண்டார் எல்லா பாத்தியஸ்தர்களின் விருப்பப்படி ஐந்து

---

1 கூட்டு ஒப்பந்தம் I A of O. S. 26 of 1912. 25—3—1918.

2 கவர்மெண்ண்ட் உத்தரவு No. 1306 (கல்வி) 5—10—1918.

அங்கத்தினர்களைக்கொண்ட ஓர் நிர்வாகக் கமிட்டியையும் நியமித்தார்கள். அரச குடும்பத்தினருக்கு இக்கமிட்டியில் நிரந்தர ஸ்தானத்தையும் அளித்தனர். அதன்படி சிவாஜி மன்னரின் மூத்த பேரனான ராஜஸ்ரீ சிவாஜி ராஜா சாகேப் சத்திரபதி முதல் ஆயுள் அங்கத்தினராக நியமிக்கப்பட்டார் அவர் 9 வருடம் இந்நூல்நிலையத்திற்குப் பெருந்தொண்டாற்றி 1927-ம் வருடம் செப்டம்பர் மாதம் 8-ம் தேதி காலமானார்.

அவருக்குப் பிறகு அவருடைய இளைய சகோதரரும் இந்நினைவு மலரின் முக்கிய புருஷருமான ராஜஸ்ரீ பிரதாப சிம்ஹராஜா சாகேப் சத்ரபதி ஆயுள் அங்கத்தினராக நியமிக்கப்பட்டு இன்று வரையில் இந்நூல் நிலையத்தின் மேம்பாட்டிற்கும், பெருமைக்கும் உழைத்து வருகிறார். பெருந்தன்மை, லோகோபகார சிந்தனை, வள்ளல் தன்மை முதலிய உயர்ந்த குணங்கள் படைத்த இவர் இந்நூல் நிலையத்தைப் பொதுமக்களுக்கு நன்கொடையாக ஈந்த பெருவள்ளல்களில் முக்கியமான ஒருவர் ஆவர். இன்று இப்பேர்பட்ட பெரியார்கள் இம்மகோன்னதமான காரியத்திற்கு இணங்காதிருப்பின் இந்நூல் நிலையத்தின் சரித்திரம் எவ்வித முடிவு எய்திருக்கும் என்று எண்ணும்போது நமக்கு அச்சமுண்டாகிறது. இப்பெரியோர்களில் ஓரிரண்டுபேர்களைத் தவிர மற்றவர் மறைந்துவிட்டனர். ஆயினும் அன்னாரின் ஞாபகம் வரும்போது அவர்களுக்குக் கைகூப்பி நம்முடைய வணக்கத்தைச் செலுத்தாமலிருக்க முடியாது. இவ்வித மாபெருந்தொண்டாற்றிய ஸ்ரீமந்த் பிரதாபசிம்ஹ ராஜாவின் 60-வது ஆண்டு நிறைவு விழாவைப்பற்றி இம்மலரினால் நினைவூட்டுவது மிகப்பொருத்தமானதாகும். இம்மலரின் முக்கிய காரணகர்த்தரான ஸ்ரீ பிரதாபசிம்ஹ ராஜாவின் வாழ்க்கைச் சரித்திரத்தை விவரிக்குமுன் இவருடைய பிதாவாகிய சரபோஜி ராஜா, பாட்டனாரான தஞ்சையின் கடைசி மன்னர் சிவாஜி ராஜா இவர்களின் சரித்திரங்களைச் சிறிது அறிந்துகொள்வது அவசியமாகிறது.

கி. பி. 1832 - ஹு மார்ச்சு - மீ 8 - ம் தேதி மாலை 4 மணிக்கு சரபோஜி மன்னர் இறந்த பிறகு, அவரது மைந்தர் சிவாஜி 21—3—1832-ல் சிங்காதனம் ஏறினர். சிவாஜி கி. பி. 1808-ல் பிறந்தவர். இருபத்தைந்து வயது உடைய மன்னர் சிவாஜியும் தன் தந்தையைப்போல் கலை ஆர்வம் மிகுந்தவர். அவரது ஆதரவில் பலகலைகளிலும் கற்றுத் தேர்ந்த வித்துவான்கள் இருந்து வந்தனர். வைத்தியம், சங்கீதம் போன்ற கலைகளில் மன்னர் சிவாஜிக்கு மிகுந்த பற்றுதல் உண்டு. தந்தையால் நிறுவப்பட்ட தன்வந்தரி மகால் சிவாஜியின் ஆட்சியில் பெரிதும் முன்னேற்றமடைந்தது.

சங்கீதமும், நாட்டியக் கலையும் உன்னத நிலை அடைந்தன. பிரசித்திபெற்ற வித்துவான்களான சுப்பராம தீக்ஷிதர், ஆதமூர்த்தி அய்யர், மகா வைத்யநாத அய்யர், அன்னருடைய சிஷ்யரான கிருஷ்ணசாமி ஜாதவ், செல்லக்கவி கிருஷ்ண அய்யர், அரசரின் நெருங்கிய உறவினரான நாகாசாமி மாடிக், வெங்கட்ராம சாஸ்திரி முதலானவர்கள் மன்னரின் சபையில் பாடியும், பாட்டுக்களை இயற்றியும் ஆதரவு பெற்றிருந்தனர். நாட்டியக்கலை வல்லுநர்களான அப்பாத்துரை அய்யர், சிவானந்தம், சின்னய்யா, தம்பியப்பன், பொன்னய்யா போன்றவர்களின் பெருமுயற்சியால் பரத நாட்டியம் உன்னத நிலையை அடைந்தது. மன்னர் சிவாஜி பாட்டுக்களை இசைத்துள்ளார். தவிர இரண்டு யக்ஷகானங்கள் செய்துள்ளார்.

தெலுங்கு பாஷையில் அன்னபூர்ணு பரிணயம் என்ற நாடகத்தையும், மகாராஷ்டிரத்தில் நடேச விலாசம் என்ற சிறந்த நாடகத்தையும் செய்துள்ளார். சிவராத்திரி உபாக்யானம், மார்க்கண்டேய சரித்திரம் போன்ற நிருபனங்களையும் எழுதியுள்ளார். அவர் சபையில் வெங்கோபா, காளேயாவ் அப்பா, பிரதாபராமர் என்ற மகாராஷ்டிரப்

புலவர்கள் இருந்தனர். சமஸ்கிருத பாஷையில் பண்டிதர்களான யக்ஞேஸ்வர தீக்ஷிதர், தந்த்ரசார என்று பெயர்பெற்ற வாசுதேவ தீக்ஷிதர் முதலியோரும், வெங்கட கிருஷ்ண கவி (சிவ பாரிஜாதமுலின் கர்த்தா) என்ற சிறந்த கல்விமானும் தமிழ்ப்புலவர்களான அருணாசலக் கவி, நாராயண கவி, கிருஷ்ணகவி போன்றவர்களும் அவருடைய ஆதரவில் இருந்தனர். இம்மூவர் முறையே பாரத அம்மானை, பாண்டி கேளி நாடகம், மதன சுந்தர சந்தான விலாஸம் என்ற நூல்களைச் செய்துள்ளனர்.

சிவாஜி மிகுந்த தெய்வபக்தியுள்ளவரும், மதக்கோட்பாடுகளைப் பெரிதும் பாதுகாத்து வந்தவருமாவர். விஜயேஸ்வரரே அவருடைய இஷ்ட தெய்வம். முக்கியமாக அவருக்கு சக்தி பூஜையில் விசேஷ பற்றுதல் உண்டு. கௌல ஞான முறைப்படி அவர் தன் தினசரி வாழ்க்கையை நடத்தி வந்தார். அம்முறையில் கூறப்பட்ட விதிகளை அனுசரித்து தஞ்சைக் கோட்டைக்கு அடுத்த பொந்திரிப்பாளையம் என்னுமிடத்தில் துர்க்கைக்கென தனித்ததோர் ஆலயத்தைக் கட்டி அக்கோயிலில் பிரம்மாண்டமான பல பெரும் விக்கிரகங்களையும் பிரதிஷ்டை செய்திருந்தார். அந்த விக்கிரகங்கள் யாவும் தற்சமயம் தஞ்சையிலுள்ள ஸ்ரீ ராஜகோபால சுவாமி ஆலயத்தில் மாற்றப்பட்டுள்ளன.

சரபோஜியின் ஜீவிய காலத்திலேயே சிவாஜிக்கு இரு மனைவியரை விவாகம் செய்யப்பட்டது. கி. பி. 1883-ல் மன்னர் சிவாஜி மூன்றாவது மனைவியை மணந்து கொண்டார். ஆயினும் அவருக்கு ஆண் சந்ததிகளே பிறக்கவில்லை. அவரது மூத்த ராணிக்கு மட்டில் கி. பி. 1827 லும் 1847 லும் இரு பெண்கள் பிறந்தனர். இதற்கிடையே 1846 மார்ச்சு மாதம் 16-ம் தேதியன்று கிழக்கிந்திய அரசாங்கத்தாரால் எல்லா சுதேச மன்னர்களுக்கும் ஓர் சுற்றறிக்கை அனுப்பப்

பட்டது. அதில் ஆண் சந்ததி இல்லாத காரணத்தால் சுவீகாரம் செய்து கொள்ள விரும்பும் அரசர்கள் 6 மாத காலத்திற்கு முன்னதாகவே அவர்களிடம் தெரிவித்து அனுமதி பெற வேண்டுமென்ற நிபந்தனை விதிக்கப்பட்டிருந்தது. வாரிசு இல்லாத சுதேச ராஜ்யங்களைத் தங்கள் ராஜ்யத்தோடு இணைத்துவிட வேண்டுமென்று கிழக்கிந்திய அரசாங்கத்தார் சுதேச மன்னர்கள் சுவீகாரம் எடுப்பதைக் கட்டுப்படுத்தவே இத்தகைய சுற்றறிக்கையை விடுத்தனர்.

மன்னர் சிவாஜி அச்சுற்றறிக்கையை ஆட்சேபித்து அப்போது ரெஸிடெண்டாக இருந்த மாண்ட்கோமரி என்பவர் மூலமாய் தன்னுடைய மறுப்பை எழுதி அனுப்பினார்.[3]

கிழக்கிந்திய அரசாங்கத்தாரின் துர்எண்ணத்தை நன்கு அறிந்த மன்னர் தன் சகோதரி சக்வார்பாய் சாகேபாவின் பேரனை ராஜாராம் என்பவரை சுவீகாரம் எடுத்துக்கொள்வது என்று தீர்மானித்தார். இச்சிறுவரே இந்நினைவு நூலின் பிரதான புருஷரான ராஜஸ்ரீ பிரதாபசிம்ஹ ராஜாசாகேப் அவர்களின் பிதா ராஜாராம் ஆவார். இவருக்கு மன்னர் இறந்தபிறகு சரபோஜி என்ற பெயர் சூட்டப்பட்டது.

கி. பி. 1854-ம் வருடம் மன்னர் சிவாஜி தான் சுவீகாரம் எடுத்துக்கொள்ள உத்தேசித்திருப்பதாக ரெஸி

---

3. மன்னருடைய மறுப்பு 20-ம் தேதி ஜூலை 1846, “மனுஷாள் வாழ்க்கை அநித்யம். மரணம் எந்த சமயத்திலும் நேரும். காலரா போன்ற கொடிய நோய் திடீரென்று உண்டாகும். வாழ்வு நிச்சயமில்லை. ஆகையால் சுவீகார பாத்தியத்தை இப்படிக் கட்டுப்படுத்துவது அநீதி, சட்ட விரோதம். ஒருவன் மனைவிக்கு சுவீகாரமெடுக்க உரிமை உண்டு என்றும் சாஸ்திரம் இடம் கொடுக்கிறது. ஆகையால் கவர்மெண்ட்டார் சுற்றறிக்கை மிகவும் கொடுமையானது. அதை வாபஸ் பெறுதல் யாவருக்கும் நலம்” என கண்டனத்தில் கூறியுள்ளார்.

டெண்டுக்கு அறிவித்து சென்னை அரசாங்கத்தின் அனுமதி பெறவேண்டி லோகண்டராவ் என்பவரை சென்னைக்கு அனுப்பினர்.[4]

கி. பி. 1855-ம் வருடம் அக்டோபர் மாதம் 16-ம் தேதி யன்று சென்னை கவர்னர் ஹாரிஸ் துரையவர்கள் தஞ்சைக்கு விஜயம் செய்தார்.

அதுசமயம் கவர்னர் ஹாரிஸைக்காண ரெஸிடெண்டின் பங்களாவிற்குச்சென்ற அரசர், சிறுவன் ராஜாராமை யும் உடன் அழைத்துச்சென்று, கவர்னரின் கையில் சிறுவனைக் கொடுத்து, தான் சுவீகாரம் எடுத்துக்கொள்ள விரும்பும் சிறுவன் இவனே என்று சொன்னார்.[5] சுவீகாரம் எடுக்கும் விஷயமாய் அனுமதி வேண்டி கவர்னருடன் அரசர் கடிதப் போக்கு வரத்து செய்துகொண்டிருந்தார். கவர்னர் விஜயத்தின் 8 நாட்களுக்குப் பிறகு விஜயதசமி தினத்தன்று மாலை அரசர் வழக்கம்போல் யானையின்மீது ஊர்வலம் வரும்போது திடீரென்று அவருக்கு ரத்தவாந்தி ஏற்பட்டது. உடனே அரசர் அரண்மனைக்கு கொண்டுவரப்பட்டார். மேனாட்டு வைத்திய நிபுணர்கள் அவரைப் பரிசோதித்துப் பார்த்தனர். இரத்த வாந்திக்கு காரணம் கண்டுபிடிக்க முடியவில்லை. சிகிச்சைகளும் பிரயோஜனப்படவில்லை, அன்றைய தினமே அரசர் இறந்தார்.

---

4 (a) No. A. 286 30--8--56 கடிதம்.

(b) ஷை 5-வது பக்கமும், 12-வது பக்கமும்.

(c) காமாட்சி ராணி சீமை அரசாங்கத்திற்கு எழுதிய யாதாஸ்து. No. 50. 11—10—1865.

5 (a) ஹாரிஸ் துரையின் மினிட்ஸ் செயின்ட் ஜார்ஜ்கோட்டை தேதி 16—10—55.

(b) மதராஸ் கவர்மெண்டின் ரிபோர்ட் இங்கிலாந்துபோர்ட் ஆப் டயரக்டர்களுக்கு நெ. 248, 249 தேதி 17—10—55.

(c) Ex. A 134, 229 in O. S. 26 of 1912.

(d) சாக்ஷி A 7 வாக்குமூலம் Do.

சிவாஜியின் பட்டராணியான காமாக்ஷியம்பா பாயி சாகேப் அவர்கள் தம் தாயாதிகள் உறவினர்கள் இவர்களுடைய சம்மதத்தின்பேரில் சாஸ்திர முறைப்படி சுவீகாரம் செய்துகொண்டு ஆங்கிலேய அரசாங்கத்தாருக்கும் விவரத்தைத் தெரியப்படுத்தினர். ஆனால் அப்போது கவர்னர் ஜெனரலாக இருந்த லார்ட் டல்ஹௌஸி பிரபு சுவீகாரம் அங்கீகரிக்கத்தக்கதல்லவென்று நிராகரித்து தஞ்சை சமஸ்தானத்தை ஆங்கிலேயர் வசமுள்ள தஞ்சையின் இதர பாகங்களோடு சேர்த்துக்கொண்டார். போர்ப்ஸ் (Forbes) என்பவர் தஞ்சைக்கு கமிஷனராக நியமிக்கப்பட்டு அரண்மனையிலிருந்த சகல நகைகள், ஆடைகள், வாகனங்கள், குதிரை, யானை முதலியன இருந்த இடங்கள், மற்ற சகல சமான்களும் இருந்த இடங்கள் எல்லாம் திருச்சியிலிருந்து கொண்டுவரப்பட்ட ஆங்கிலேயப் பட்டாளத்தின் உதவியால் சீல் வைக்கப்பட்டன. முக்கியமான ராஜாங்க நகைகளையும், ஆயுதங்கள், மிருகசாலை, புத்தகாலயம் முதலியவற்றையும் தஞ்சையிலிருந்து வெளியேற்றும் முறையில் கமிஷனர் ஈடுபட்டார். விலையுயர்ந்த நகைகள், ஆயுதங்கள் சிம்மாசனம் இவைகள் சென்னை, சீமை முதலான இடங்களுக்கு அனுப்பப்பட்டன. இதைக் கண்டித்து ராணிகள் ஆங்கிலேய அரசாங்கத்தாருக்குப் பல விண்ணப்பங்கள் செய்தும் அரசாங்கத்தார் செவி சாய்க்கவில்லை. ஆகையால் ஆங்கிலேய சர்க்காரின்பேரில் தாவா தொடருவதற்கான ஏற்பாடுகளை ராணிகள் செய்யலாயினர். சிவாஜி ராஜா இறந்த பிறகு கவர்னர் ஜெனரலுக்கும் சென்னை கவர்னருக்கும் அவசியமான பல கடிதப் போக்கு வரத்து செய்து தஞ்சை ராணிகளின் நியாயமான கக்ஷியை எடுத்துரைக்கும் வேலையில் பிரபல பாரிஸ்டரான ஜான்ப்ரூஸ் நார்டன் என்பவர் ஈடுபட்டார். அவரே ஸ்ரீமதி காமாக்ஷியம்பா பாயிசாகேபுக்காக சகல விவகாரங்களையும் நடத்தியவர். அவர் மூலமாக ஆங்கிலேய சர்க்காரின் பேரில் 18—11—1856-ல் சென்னை சுப்ரீம் கோர்ட்டில் தாவா தாக்கல் செய்யப்பட்டது தாவா தொடங்கியதும் நார்டன் துரை அவர்கள் அரண்மனையைச் சேர்ந்த எந்த

சொத்தையும் அப்புறப்படுத்தவோ பராதீனம் செய்யவோ கூடாது என்று தற்காலீக தடை உத்திரவையும் பெற்ருர். அதன் காரணமாக ஏற்கனவே வெளியேற்றப் பட்டதும் இடையில் கொள்ளையடிக்கப் பட்டதுமான சொத்துக்கள் போக எஞ்சிய சொத்துக்கள் தஞ்சையைவிட்டு வெளியேற வில்லை. அவைகளுள் விலை மதிக்க முடியாத நமது சரஸ்வதி மகால் நூல் நிலையமும் ஒன்று. இந்த நூல் நிலையம், தஞ்சையை ஆண்ட பல மன்னர்களாலும் முக்கியமாக மன்னர் சரபோஜியாலும் ஏராளமான பொருட் செலவில் நாளுக்கு நாள் வளர்ச்சிபெற்ற கலைப் பொக்கிஷமல்லவா! அரசர் காலத்திய அரண்மனைக் கணக்குகளை ஒருவர் பார்ப்பாராகில் சரபோஜியின் மைந்தன் சிவாஜி தனதரண் மனையில் பல மகால்களுக்குச் செலவழித்த மொத்தத் தொகையில் நாலிலொரு பங்கை சரசுவதி மகாலுக்காகச் செலவழித்தார் என்பது தெரியவரும்.

தஞ்சை ராணிகளின் தாவாவை விசாரித்த சென்னை சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் 11—2—1857-ல் தீர்ப்பளிக்கையில் ராஜ்யத்தை அபகரித்து அநீதம் என்றும், பட்டராணி தான் அரசரின் வாரிசு என்றும், கம்பெனி சர்க்கார் செய்தது படுமோசம் என்றும் தீர்ப்பளித்தனர். பின்னர் இந்தத் தீர்ப்பின்பேரில் ஆங்கிலேய அரசாங்கத்தார் இங்கிலாந்தில் மகாராணியின் உயர்நீதிமன்றத்தில் (Privy Council) அப்பில் செய்தனர். அந்த உயர் நீதிமன்றத்து நீதிபதிகள் 27—7—1859-ல் கம்பெனி சர்க்காரின் செய்கைகள் கண்டிக்கத்தக்கவையேயாகிலும் ராஜரீக முறையில் நடத்திய செய்கையைக் குறித்து விவாதிக்கவோ, தீர்ப்பளிக்கவோ எந்த உள்நாட்டு நியாய ஸ்தலத்திற்கும் அதிகாரமில்லையாதலால் சென்னைக் கோர்ட்டின் தீர்ப்பு செல்லத்தக்கதல்லவென்று தீர்ப்பளித்தனர், அந்தத் தீர்ப்பின்படி ஆங்கில அரசாங்கத்தார் மன்னரின் சொத்துக்களை சென்னை அரசாங்கத்துக்குச் சேர்த்துவிடும்

படிக்கும் ஜங்கம சொத்துக்களாகிய நகைகள், புத்தகாலயம், ஆயுதசாலை முதலியவைகளையும், வெள்ளி, தங்க ஆசனங்கள், வாகனங்கள் முதலியவற்றை உடைத்தும் உடைக்கக்கூடாதவைகளை அப்படியே சென்னைக்கு அனுப்பி வைக்கும்படியும் உத்திரவிட்டனர். ராணிகள் தங்கள் தங்கள் அறைகளைத்திறக்க மறுத்ததால் கதவுகளையும், பூட்டுக்களையும் உடைத்தார்கள். இப்படி அகற்றப் பட்ட சாமான்களில் தஞ்சையிலிருந்து வெகுமதியாக விக்டோரியா மகாராணிக்கு சீமைக்கு எடுத்துச் சென்றவைகளில் அரசரின் விலையுயர்ந்த நகைகள், கற்கள் பதிய வைத்த ஆயுதங்கள், சிம்மாசனம், தங்கத்தாலான அம்பாரி தேர் மற்றும் இதர அரச சின்னமுடைய தங்க வெள்ளி விருதுகள் முக்கியமானவையாகும். மேலும் சரசுவதி மகாலிலுள்ள நூல்களைச் சென்னையிலுள்ள லிடரரி சொஸைட்டிக்கு மாற்ற வேண்டுமெனவும் அங்கிருந்து முக்கியமான நூல்களைச் சீமைக்கு எடுத்துச் செல்லவேண்டுமெனவும் அவ்வுத்திரவில் கண்டிருந்தது. தஞ்சையிலிருந்த கமிஷனர் மேற்கண்ட உத்திரவுகளை வெகு துரிதமாக அமுலுக்குக் கொண்டுவந்தார். அரசரின் ஆயுதங்களை திருச்சியில் ஆர்டினன்ஸ் ஸ்தாபனத்திற்கு எடுத்துச் சென்றனர். தங்க நகாசு செய்தவைகளையும் கற்கள் பதியவைத்தவைகளையும் சென்னைக்கு அனுப்பினர். சிம்மாஸனம், தங்க வாகனம், ஆசனம் முதலியவைகளை உடைத்துச் சீமைக்கு அனுப்பினர்.

இதற்கிடையில் சொத்துக்களின் காவலுக்காக வைக்கப்பட்டிருந்த துருப்புகள் அறைகளின் பூட்டுகளை உடைத்து அநேக சாமான்களைக் கொள்ளையடித்து விட்டனர். இச்சம்பவத்தைப் பற்றி ராணியார்கள் சென்னை அரசாங்கத்தாரிடம் புகார் செய்து, பிற்காலத்தில் அதற்காக நஷ்டஈடும் பெற்றனர். அரண்மனையில் அரசருடைய சொந்த ரிகார்டுகளில் ராஜாராமின் வாரிசு பாத்தியதைக்குச் சாதகமானவைகளை எரித்துவிட்டனர். உபயோகமற்றவைகளை

ராணியிடம் அனுப்பினர். இந்த சம்பவங்களைப் பற்றியும் ராணி, கவர்ன்மெண்டாருக்கு Philips என்பவர் பேரில் நார்டன் மூலமாய் புகார் செய்யவே சென்னை அரசாங்கத்தார் Philipsஐ வேலையினின்றும் நீக்கிவிட்டனர்.

இங்கிலாந்தில் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பு ஏற்பட்ட பிறகும் நார்டன் துரை விடாமுயற்சிகள் செய்து பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் பலரின் ஆதரவைப் பெற்று, தஞ்சை சமஸ்தான விஷயங்களை பார்லிமெண்டில் மறுபடியும் விவாதிக்கச்செய்து, ஆங்கிலேய அரசாங்கத்தாரின் மனதை ஒருவாறு இளகவைத்தார். சிவாஜியின் சுவீகார புத்திரரான சரபோஜியும் அவரது அன்னை காமாட்சி பாயி சாகேபும் நார்டனுக்கு ஒத்தாசையாக தஞ்சையிலிருந்து பலரை அனுப்பியும், அங்குள்ள சில ஆங்கிலேய சீமான்களையும் தங்கள் சார்பில் வாதாடச் செய்தனர். அதன் பயனாய் ஆங்கிலேய சர்க்கார் தஞ்சை பட்டராணி காமாட்சி பாயி சாகேபுக்கு மன்னருடைய சொந்த சொத்துக்களை மட்டும் திருப்பிக் கொடுப்பதென முடிவு செய்ததால், சமஸ்தானத்தின் பொது சொத்துக்கள் தவிர மற்றெல்லா ஸ்தாவர ஜங்கம சொத்துக்களையும் காமாக்ஷிபாயி சாகேபிடம் திருப்பிக்கொடுத்தனர். இந்த சொத்துக்கள் பட்ட ராணியின் நிர்வாகத்தில் இருக்கவேண்டும் என்றும், அவற்றினின்று கிடைக்கும் வருமானங்களில் அரசரின் மற்ற மனைவியருக்கும் பாத்தியமுண்டு என்ற நிபந்தனையும் விதிக்கப்பட்டது.

இப்படிக் கிடைத்த சொத்துக்களில் நமது சரசுவதி மகால் நூல் நிலையத்தை மிகவும் முக்கியமானதாகக் கருதவேண்டும். காமாக்ஷிபாயி சாகேபிடம் புத்தகாலயம் ஒப்படைக்கப்பட்டது முதல் அதிலுள்ள சுவடிகளைப் பாதுகாப்பதிலும் நகல்கள் தயாரிப்பதிலும், விசேஷமான

அக்கறை காட்டப்பட்டது. நகல் செய்வதற்காகப் பல பண்டிதர்கள் நியமிக்கப்பட்டனர். நூல் நிலையத்தின் பராமரிப்பில் காமாக்ஷிபாயி சாகேப் எவ்வளவு அக்கறை கொண்டிருந்தாரென்பது கீழ்க்கண்ட காரணத்தினுல் நமக்குப் புலனுகிறது. அரசர் இறந்து இரண்டு வருஷங்களில் சரசுவதி மகாலிலுள்ள சுவடிகள் ஒவ்வொன்றையும் நன்ருகப் படித்துப் பார்த்து நூலைப்பற்றிய விவரத்தை அந்தந்த சுவடியின் தலைப்பில் எழுதிச் சேர்க்கப்பட்டது. இப்படி எழுதப்பட்ட ஓலைகளின் உதவியால் இன்று நாம் அந்தந்தச் சுவடிகளின் விவரங்களை எளிதில் தெரிந்து கொள்ளுகிருேம். ஒவ்வொரு ஓலையிலும் நள வருஷத்தில் (கி. பி. 1857-ல்) வரகப்பையர் உத்திரவுப்படி எழுதப்பட்டதென்ற விவரம் காணப்படுகிறது. பாயிசாகேப் அவர்கள் காலத்தில் அரண்மனையில் வேண்டும்போது சுவடிகள் கொடுக்கப் பட்டால் அதற்கென்று எழுதப்பட்ட குறிப்புகளில்சில இப்பொழுதும் கிடைக்கின்றன. அவைகளில் இன்னுருடைய அரண்மனையில் இருக்கின்றது இத்தனை நாட்களுக்காகக் இன்னுருக்காகக் கொடுக்கப்பட்டது. குறித்த கெடுவிற்குள் நூல் திரும்பி வந்ததா இல்லையா என்ற விவரமும் எழுதப் பட்டிருக்கிற எல்லா விவரங்களும் காமாக்ஷிபாயி சாகேப் காலத்தில் இந்த கிரந்தாலயம் எவ்வளவு கவலையோடு பராமரிக்கப்பட்டது என்பதைக் கூறுகின்றன. அநேகமாக ஆதிகாலம் முதல் சேர்க்கப்பட்ட எல்லா சுவடிகளும், ராஜா சரபோஜியால் சேர்க்கப்பட்டதும் ஐரோப்பிய பாஷையிலுள்ளதுமான எல்லா அச்சுப்புத்தகங்களும் நாளது தேதிவரையில் ஒழுங்காகக் காப்பாற்றப்பட்டிருக்கின்றன.

கடைசி மன்னர் சிவாஜியின் சுவீகார புத்திரரான ராஜாராம் என்கிற சரபோஜி கி. பி. 1843-ல் பிறந்தவர். மன்னர் இறந்த பிறகு பட்டத்தரசி காமாக்ஷியம்பாபாயி சாகேப் அவர்கள் இளவரசர் சரபோஜியை அரண்மனையின்

ஒரு பகுதியான சங்கரவிலாஸ் எனும் இடத்தில் வசிக்கச் செய்து அரச குமாரருக்கு வேண்டிய சகல சௌகரியங்களை யும் செய்தார். இளவரசருக்கான மரியாதைகள் அளிக்கப் பட்டு வந்தன. அவரிடத்தில் 12 ஹுஜுரோக்களும் (Personal attendants) சிப்பாய்களும், காவற்காரர்களும் வேலைக்குத் தனியாக அமர்த்தப்பட்டனர். வாகனங்களும் குதிரைகளும் அவருக்கென தனியாக ஒதுக்கப்பட்டிருந்தன.

Mr. Kohloff என்பவரும் குருபாதம்பிள்ளை என்பவ ரும் இளவரசருக்கு ஆங்கிலம் கற்றுக்கொடுத்தனர். புரா ணங்களைக் கற்றுக்கொடுக்க தேவசாமி புராணிகர் என்பவ ரையும் சங்கீதம் பயில மகாவித்வானன நாராயணசாமி அப்பா என்பவரையும் இராணியார் நியமித்தார். இளவரசருடன் விளையாட உயர் குடும்பச் சிறுவர் அவருட னேயே வசிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இத்தகைய ஏற்பாடுகள் செய்ததினால் இளவரசர் சரபோஜி பிற்காலத்தில் தெய்வ வழிபாடுகளில் சிறந்து சங்கீத ரசிகனாகத் திகழ்ந்தார். ஆயினும் அவரது உள்ளத் தில் தனக்கு அரசுரிமை மறுக்கப்பட்டதால் வருத்தமும் வைராக்கியமும் குடிகொண்டன. மேலும் அரசரின் சொந்த சொத்துக்களின் விஷயமாய்க் குடும்பத்தில் சச்சர வேற்பட்டு கி. பி. 1865-ல் அரச பரம்பரையினர் சிலர் ஆங்கில அரசாங்கத்தாரிடம் புகார் செய்தனர். அதன் பயனாய்த் தஞ்சை கலெக்டர் ரிஸீவராக நியமிக்கப்பட்டு அரசரின் சொந்த சொத்துக்கள் யாவையும் ரிஸீவரிடம் ஒப்படைக்கும்படி ராணி காமாக்ஷியம்பாபாயி சாகேபுக்கு உத்திரவிடப்பட்டது. இதைக் கேள்வியுற்று மேலும் மன முடைந்த இளவரசர் திருச்சிக்கு அடுத்துள்ள சமயபுரம் சென்று அங்கே மாரியம்மன் ஆலயத்தில் தங்கி அவ்வம்மனை அல்லும் பகலும் வழிபட்டு வந்தார், சமயபுரத்திற்கு

மஹாகாளிகுடி என்னும் பெயருண்டு. ராணியார் எவ்வளவு ஆறுதல் சொல்லியும் சரபோஜியின் மனம் தேறவில்லை. அவர் பல வருஷங்கள் அங்கேயே தங்கியிருந்தார். தான் சுவீகாரம் எடுத்துக்கொண்ட சரபோஜிக்கு வயது 40 ஆகிவிடவே அவருக்கு விவாஹம் செய்து வைக்காவிடில் அரச குடும்பம் அற்றுப்போவதோடு அரசரின் சொத்துக்களும் வீணாகிவிடும் என்று ஏங்கிய ராணிமார்கள் சரபோஜிக்குப் பலவாறு தேறுதல் சொல்லி தஞ்சைக்கு அழைத்து வந்தார்கள்.

பிறகு கி. பி. 1883-ல் அரச பரம்பரைக்கேற்ற இரு பெண்களைத் தேர்ந்தெடுத்து அவருக்கு விவாகம் செய்து வைத்தனர். மூத்த மனைவியான எமுனாம்பா பாயி சாகேப் அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தையும் மூன்று பெண் குழந்தைகளும் பிறந்தன. அந்த ஆண் குழந்தைக்கு சிவாஜி யெனவும் மூன்று பெண்களுக்கும் முறையே சகுணராஜே, காமாக்ஷீயம்பாராஜே, கிருஷ்ணராஜே, என்றும் நாமகரணம் செய்யப்பட்டது. (இரண்டாவது பெண்ணாகிய காமாக்ஷி அம்பா ராஜே என்பவர் இந்நூல் பதிப்பாசிரியரின் அன்னை ஆவார்). இளைய மனைவி அஹல்யாம்பா பாயிசாகேப்புக்கும் மூன்று பெண்களும் ஒரு ஆண் குழந்தையும் பிறந்தன. அவர்களுக்கு முறையே சிம்னயா பாயிராஜே, பத்மாபாயி ராஜே, தன்யாராஜே என்றும் பிரதாபசிம்ஹஜி ராஜே என ஆண் குழந்தைக்கும் பெயரிடப்பட்டது. அந்த பிரதாபசிம்ஹராஜா சாகேப் அவர்களின் 60-வது ஆண்டு நிறைவின் மலராக இன்று இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது.

சரபோஜி அவர்கள் தன் மூதாதையர்களைப் போல் கலை ஆர்வம் மிகுந்தவர். அவருக்கு சங்கீதத்திலும் நாட்டியத்திலும் விசேஷ ஆர்வம் இருந்தது. அவருடைய

ஆதரவில் மேற்கூறிய கலைகளில் சிறந்த பல வித்துவான்கள் இருந்தனர். 1. பிடில் வித்துவான் புதுக்கோட்டை நாராயணசாமி அய்யர் 2. கும்பகோணம் சிவக்கொழுந்து 3. செம்மனூர்கோவில் ராமசாமி பிள்ளை 4. மஹா வைத்யனாத அய்யர் (இவர் 73 மேளகர்த்தாக்களைப் பாடிப் புகழ் பெற்றவர்) 5. மிருதங்க வித்துவான் சேதுராம ராவ் 6. பட்டணம் சுப்பிரமணிய அய்யர் 7. கவாய் நன்னுமியான் 8. டோலக் சோடுமியான் (இவர் மஹா வைத்தியனாதய்யரின் ஆதரவு பெற்றவர்) 9. கியாஸ் தரானாக்களில் நிபுணரான பாவுசாமி கோஸாமி 10. மிருதங்க வித்துவான் தாஸ் சுவாமி 11. கிருஷ்ண பாகவதர் 12. புல்லாங்குழல் சரப சாஸ்திரி 13. கட வித்துவான் பழனி கிருஷ்ணய்யர் 14. திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யர் 15. தோடி சுந்தரராவ் 16. வீணை சேஷண்ணா 17. கோட்டு வாத்தியம் ஸ்ரீனிவாச ராவ் 18. பிடில் வெங்கோப ராவ் 19. நாகாசாமி மாடிக்ராவ் 20, சர்பத் சிட்டுசாமி முதலிய வித்துவான்களை சரபோஜி பெரிதும் ஆதரித்தார். நாட்டியத்தில் கீர்த்திபெற்ற தோலூர் சுப்புலெக்ஷ்மி, பாலாம்பாள், வட்வான்ராதாபாய் சரஸா முதலியவர்களும் நாட்டிய ஆசிரியர்களான மகாதேவ நட்டுவனார் பஞ்சநதம் பிள்ளை, வடிவேலு முதலியவர்களும் சரபோஜியின் ஆதரவிலேயே இருந்து வந்தனர். அவருடைய அரண்மனையில் முது போகியா யிருந்த சுப்பு பிள்ளை என்பவர் மிகவும் பிரசித்தி பெற்றவர். சாக்குருவி மஸ்தான் சாஹேபும், தெக்ஷிணாமூர்த்தி பிள்ளையும் சரபோஜியின் ஆஸ்தான வைத்தியர்கள்.

சரபோஜியின் காலத்தில் தஞ்சைக்கு விஜயம் செய்த கோலாப்பூர், பரோடா, பவநகர் மகாராஜாக்கள் தஞ்சையின் சங்கீத நாட்டியக் கலைகளைப் பார்த்து வியந்து அக்கலைகள் சம்பந்தமான நூல்களின் பிரதிகளைத் தங்கள் தங்கள் ராஜ்யத்துக்கு எடுத்துச் சென்று புத்தக ரூபமாய்

வெளியிட்டுள்ளார்கள். பரோடா மகாராஜாவான சயாஜிராவ் காயக்வாட் என்பவர் தஞ்சையில் நாட்டியத்தில் தேர்ச்சி பெற்ற காந்திமதி, கௌரி எனும் இரு பெண்மணிகளையும் பாக சாஸ்திரத்தில் சிறந்த சுப்புபிள்ளை என்பவரையும் தன் சமஸ்தானத்திற்கு அழைத்துச் சென்றார்.

இவ்வாறு பல மன்னர்களாலும், மற்றவர்களாலும் புகழக்கூடிய வகையில் சிறந்த அறிஞர்களையும், கலைஞர்களையும் ஆதரித்துவந்த இளவரசர் சரபோஜி கி. பி. 1901–ல் வட இந்தியாவிலுள்ள பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை சென்று ஆங்காங்கு தான தர்மங்கள் பல செய்தார். அவர் கி. பி. 1903 செப்டம்பர்மீ 7ம் தேதி யன்று இறைவன் திருவடியை அடைந்தார்.

அவருடைய இரு குமாரர்களில் இளையவரான சத்ரபதி ராஜேஸ்ரீ பிரதாபசிம்ம ராஜா சாகேப் அவர்கள் 21—12—1890-ல் பிறந்தார். கி. பி. 1891-ல் இவரது தாய் இறந்தார். குழந்தையாக இருந்த இவரை முதலில் உமாம்பா பாயி சாகேப் அவர்களும் அவருக்குப் பிறகு ஜீஜாம்பா பாயி சாகேப் அவர்களும் அரசகுமாரருக்கான சகல மரியாதைகளுடன் வளர்த்து வந்தார்கள். விளையும் பயிர் முளையிலே தெரியுமல்லவா! இளம் பிராயம் முதலே இவருக்கு தெய்வ பக்தி அதிகம். சிவபூஜையில் மிகுந்த ஊக்கமுடையவர். அன்று முதல் இன்று வரையில் யாசிப்பவருக்கு இல்லை என்று கூறாத வள்ளல் ஸ்ரீமான் N. P. சுப்ரமணிய ஐயர், ஸ்ரீமான் சாமிராவ் ஆகிய இருவரும் இவருடைய ஆங்கில ஆசிரியர்கள். இவருக்குத் தமிழும் மகாராஷ்டிரமும் கற்றுக்கொடுத்தவர் ஸ்ரீ வெங்கோபராவ் என்பவர். சிறு வயதிலேயே இவருக்கு குதிரையேற்றம், யானையேற்றம், வேட்டையாடுதல், சதுரங்கம் ஆடுதல்

முதலியவைகளுடன் ராஜ நீதியைப் புகட்டும் புராணங்களைப் படிப்பதிலும் பயிற்சி அளிக்கப்பட்டது. சங்கீதக்கலையில் ஆர்வம் மிகுந்த இவர் பிரசித்திபெற்ற தியாகையாவின் வழிவந்தோரான வித்துவான் வெங்கட தீக்ஷதரிடம் வீணை கற்றுக்கொண்டார்.

ராஜேஸ்ரீ பிரதாபசிம்மராஜா சாகேப் அவர்களுக்கு கி. பி. 1905-ல் ராஜேஸ்ரீ பூர்ணானந்த மாடிக் ராவ் சாகேப் அவர்களின் குமாரியான சுலோசனாபாயி சாகேப் அவர்களை விவாஹம் செய்து வைக்கப்பட்டது. இல்லறத்தைச் சற்றும் வழுவாது இனிது நடத்தி வருங்காலை ராஜேஸ்ரீ ராஜா சாகேப் அவர்களுக்கு இரு ஆண் குழந்தைகளும் இரு பெண் குழந்தைகளும் பிறந்தன. மேல் நாட்டு வைத்தியத்தில் நிபுணரான டாக்டர் ரங்காசாரி என்பவரும் டாக்டர் குருசாமி முதலியார் என்பவரும் ஆயுர்வேத முறையில் சிறந்தவரான நாராணசாமி பிள்ளையும் மிராகான் எனும் யுனானி வைத்தியரும் அவருடைய அரண்மனை வைத்தியர்களாக இருந்தனர். குவாலியர் கவாய் மியான்கான் சாகேபும், ஹைதராபாதைச் சேர்ந்த கவாய் யூசுப்கான் சாகேபும் தென்னாட்டு சங்கீத வித்வானான காஞ்சிபுரம் நாயினா பிள்ளையும் அவரால் மிகவும் பாராட்டப்பட்டனர். ராஜேஸ்ரீ ராஜா சாகேப் அவர்களுக்கு ஹரிகதைகளைக் கேட்பதில் மிகுந்த ஆர்வம் உண்டு. மகாராஷ்டிர ஹரிகதா கேசரிகளான காசிகர் பாவா, ஜனார்த்தனபாவா, ராஜுபைய்யா, விஷ்ணுதிகம்பர் முதலியோரும் தமிழ் ஹரிகதையில் பிரசித்திபெற்ற சூலமங்களம் சௌந்தரராஜபாகவதர், நாகராஜபாகவதர் தஞ்சை T. L. தியாகராஜ பாகவதர் முதலியோரும் அவருடைய ஆதரவில் ஹரிகதா காலக்ஷேபங்களைச் செய்து ஏராளமான சன்மானங்களையும், விருதுகளையும் பெற்றனர். மேலும் அவருடைய அரண்மனையிலே கிருஷ்ண விலாஸ் எனும் இடத்தில் வடநாட்டு நாடகக் குழுவினரான

சாங்கலீகர் நாடகக் கம்பெனியாரும், தென்னுட்டில் பிரசித்திப்பெற்ற C. கன்னையா கம்பெனியாரும் மராத்தியி லும் தமிழிலும் நாடகங்களை நடத்தி பெரும் நன்மதிப்பை பெற்றனர்.

சத்ரபதி பிரதாபசிம்ஹராஜா சாகேப் அவர்களின் இளவயதில் அவருள்ளத்தில் வேரூன்றிய தெய்வ பக்தியும் சமயத்தொண்டும் முதுமைப் பருவத்தில் கொழுந்து விட்டெரிய ஆரம்பிக்கவே அவர் காசி முதலான வடநாட்டு க்ஷேத்திரங்களுக்கும், பழனி ராமேஸ்வரம் முதலான தென் ணுட்டு க்ஷேத்திரங்களுக்கும் யாத்திரை சென்று வந்ததோடு தன் மூதாதை சத்ரபதி ஆதி சிவாஜி மகராஜ் அவர்களின் குரு ஸ்ரீ சமர்த்த ராமதாஸ் சுவாமியின் சமாதியிடமான சஜ்ஜனகட் சென்று குரு உபதேசமும் பெற்ருர். மேலும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளுக்கு தஞ்சை மேல வீதியிலுள்ள முகாசா எனும் கட்டிடத்தின் தன்னுடைய பகுதியைப் பாதகாணிக்கையாக அளித்து என்றும் அழியாப் புகழையும் பெற்றுள்ளார்.

1927-ம் வருடம் முதல் சரசுவதி மகால் நிர்வாகக் குழுவில் ஆயுள் அங்கத்தினராக பதவியேற்று நூல் நிலையத்தின் முன்னேற்றத்திற்காக விடாது உழைத்து வருகின்ருர். இந்நூல் நிலையத்தைப் பொது ஸ்தாபன மாகச் செய்ததினுல் தனது வள்ளற்றன்மையை நிலை நாட்டியதோடு நில்லாமல் அதைப் பேணி வளர்ப்பதினுல் அதிக பெருமையை அடைந்து வருகிருர். ‘தான பாலன யோர் மத்யே தானுத் ஸ்ரேயோ ஹி பாலனம்’ என்ற வாக்கியம் நமது தேசத்திய தான சாஸனங்கள் ஒவ்வொன் றிலும் காணப்படுகிறது. அதாவது ஓர் தர்மத்தை ஸ்தாபித்தவரைக் காட்டிலும் அதைப் பரிபாலனம்

செய்பவரே அதிகமான பொது நன்மையைச் செய்து அதிக புண்ணியத்தையும் அடைகிறுர் என்பது இதன் பொருள்.

தற்காலம் அரசாங்கத்தார் செய்யும் பொருளுதவியினுல் இந்த நூல் நிலையத்தில் பல வித்துவான்கள் நியமிக்கப்பட்டு இதிலுள்ள கலை விஞ்ஞான நூல்கள் செவ்வனே ஆராய்ச்சி செய்யப்பட்டு, நம் நாட்டவரும் பிறரும் பயன்பெற வேண்டி விளக்கமான முகவுரை, மொழிபெயர்ப்பு இவற்றுடன் வெளியிடப்பட்டு வருகின்றன. இன்னும் ஏராளமான நூல்கள் எதிர்காலத்தில் அச்சேறி வெளிவர இருக்கின்றன.

இந்த நூல் நிலையத்திலுள்ள சுவடிகள் யாவும் இது வரையில் வெகு ஜாக்கிரதையுடன் காப்பாற்றப்பட்டு வருவதினுலேயே, அரிய நூல்களைப் பதிப்பிக்கும் பணியை நிர்வாகக் குழுவினர் வெகு திறம்பட நடத்தி வருகின்றனர். மேற்கூறியவாறு சுவடிகள் யாவையும் காப்பாற்றுவதில் பெரும் பங்கு எடுத்துவரும் நமது சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப் அவர்களுக்கு நம் நாட்டுப் பொதுமக்கள் அனைவரும் என்றும் கடமைப்பட்டுள்ளோம். அவரது பெயரும் புகழும் என்றென்றும் நிலைத்திருக்குமாறு **'சரபேந்திர வைத்திய ரத்னுவளி'** எனும் இந்த அரிய நூலை சரசுவதி மகால் நூல் நிலையத்தின் நிர்வாகக் குழுவினர் அவரது 60-வது ஆண்டு நினைவு மலராக வெளியிட்டிருக்கிறுர்கள்.

இரண்டாம் சரபோஜி மகாராஜா அவர்களால் தனது தன்வந்தரி மகால் என்ற மருத்துவ ஆராய்ச்சி நிலையத்தில் நோயாளிகளுக்கு நம் நாட்டு வைத்திய முறைகளில் கண்ட

மருந்துகளைக் கொடுத்து, அதனால் ஏற்பட்ட குணங்களை மேனாட்டு வைத்தியர்களைக்கொண்டு எழுதி, அதை ஆதாரமாகக்கொண்டு, நம் நாட்டு மருத்துவ முறைகளில் கைகண்டவற்றைத் தெரிந்தெடுத்து, அவற்றைத் தேர்ந்த புலவர்களைக்கொண்டு தமிழில் செய்யுளாக இயற்றி பதினெட்டு சுவடிகளில் எழுதி வைத்திருக்கும் சுமார் 500 முறைகளுள் மிகவும் முக்கியமானவற்றை அரண்மனை உபயோகத்திற்காக மகாராஷ்டிர பாஷையில் மொழி பெயர்த்துள்ளார். அரச பரம்பரையினரின் தனித்ததோர் உபயோகத்திற்கென்று மகாராஷ்டிரத்தில் மொழி பெயர்க்கப்பட்ட முக்கியமான முறைகளின் பயனை நம் தமிழ்நாட்டு மக்களும் அடையவேண்டும் என்ற எண்ணத்துடன் அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்து இந்த நூலில் வெளியிட்டிருக்கிறோம். தமிழில் உள்ள 18 சுவடிகளும் அநேகமாக வெளியிடப்பட்டிருப்பினும் அவை ஒவ்வொன்றிலும் ஒன்றிரண்டு குறிப்பிட்ட வியாதிகளுக்கான முறைகளே அடங்கியிருப்பதால், எல்லா முறைகளையும் தொகுத்த நூல் ஒன்றை விரும்பி பொதுமக்கள் யாவரும் கேட்டு வருகிறார்கள். அக்குறையைப் போக்கவே இந்நூல் வெளியிடப்பட்டிருக்கிறது. இதில் கண்ட நம் நாட்டு வைத்திய முறைகளைப் பொதுமக்கள் அனைவரும் கையாண்டு பயனுறுவர் என்று நம்புகிறோம்.

இந்நூலைத் தமிழில் மொழிபெயர்த்து, சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப் அவர்களின் 60-வது ஆண்டு நிறைவு நினைவு மலராகப் பதிப்பிக்கும் பெருமையை எனக்களித்த தஞ்சை சரசுவதி மகால் நிர்வாகக் குழுவினருக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த நூலைப் பதிப்பிக்கும் பணியில் எனக்குப் பேருதவி புரிந்த சந்தானராம் மாடிக்ராவ் சாகேப் என்கிற

ஜீவாஜி மாடிக்ராவ் சாகேப் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். அவர் சத்ரபதி ராஜேஸ்ரீ பிரதாப சிம்ஹராஜா சாகேப் அவர்களின் மைத்துனர். சிறந்த ஆயுர்வேத வைத்தியர். அவர் தம் வசமுள்ளதும், இரண்டாம் சரபோஜி மன்னருக்காக அவருடைய உத்திரவின்படி கொட்டியம் மத்யஸ்தர் அய்யாக்கண்ணு பிள்ளை என்பவராலும் மராத்தியில் எழுதப்பட்டதுமான இரு மருத்துவ நூல்களினின்றும் சில சிறந்த முறைகளை இந்நூலில் தொகுத்து வெளியிட இசைந்ததுமன்றி இந் நினைவு மலரைப் பரிசோதித்துப் பார்த்து ஆங்காங்கு தோன்றிய சிற்சில பிழைகளைத் திருத்தியும் பல சந்தர்ப்பங்களில் எனக்கேற்பட்ட சந்தேகங்களை விளக்கியும் உதவி புரிந்துள்ளார். அவருக்கும் எனது நன்றியைச் செலுத்துகிறேன்.

சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப் அவர்கள் நீடூழி வாழ்க.

சரசுவதி மகால் என்றென்றும் வளர்ந்தோங்குக.

தஞ்சாவூர்,
26—3—57.

ஆ. கிருஷ்ணசாமி மாடிக்ராவ்,
பதிப்பாசிரியர்.



# பொருளடக்கம்

## சூரண வகைகள்

எண். பெயர் பக்கம்

சூரண வகைகள்—தொடர்ச்சி

| எண். | பெயர் | | பக்கம் |
|---|---|---|---|

## தைல வகைகள்

எண். பெயர் பக்கம்

பற்ப வகைகள்—தொடர்ச்சி

| எண். | பெயர் | பக்கம் |
|---|---|---|

பற்ப வகைகள்—தொடர்ச்சி



## சிந்தூரங்கள்

எண். பெயர் பக்கம்

விசேஷமான இரசவகை மருந்துகள்—தொடர்ச்சி

எண். பெயர் பக்கம்

கல்க வகைகள்—தொடர்ச்சி

| எண். | பெயர் | பக்கம் |
|---|---|---|

கல்க வகைகள்—தொடர்ச்சி

| எண். | பெயர் | பக்கம் |
|---|---|---|

பத்து, பிளாஸ்திரி வகைகள்—தொடர்ச்சி

| என். | பெயர் | | பக்கம் |
|---|---|---|---|

பற்கள், கூந்தல், காது இவைகள் சம்பந்தமான நோய்களுக்கு மருந்து—தொடர்ச்சி

## சுத்தி வகைகள்

### (மருந்துகளின் சுத்தி)

| எண். | பெயர் | | பக்கம் |
|---|---|---|---|
| | சுத்தி வகைகள்—தொடர்ச்சி | | |
| 974. | சங்கின் சுத்தி | ... | 524 |
| 975. | மிர்தார்சிங்கின் சுத்தி | ... | 525 |
| 976. | கல்மதத்தின் சுத்தி | ... | 525 |
| 977. | அஞ்சனக்கல் சுத்தி | ... | 525 |
| 978. | வீரச்சுத்தி | ... | 525 |
| 979. | பூரத்தின் சுத்தி | ... | 525 |
| 980. | தாளகச் சுத்தி | ... | 525 |
| 981. | சௌவீரச்சுத்தி | ... | 526 |
| 982. | மூவர்ணங்கொண்ட சந்திரோதயம் | ... | 526 |
| 983. | குரல் ஆனந்தமாகப் பாடுவதற்கு | ... | 527 |
| 984. | ரோஜாப்பூப் பங்கு | ... | 528 |
| | வியாதிகளின் அட்டவணை | ... | 529 |



# வேண்டுகோள்



கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவைகள், பல்வேறு இடங்களில் உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் எம்மிடம் அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவைகள் மக்களுக்குப் பயன்படும்.

எம்மிடம் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, எமது சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின், சுவடி தந்தார் பெயரும் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் 5 பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளை, எமது மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

T. R. **இராமசாமி,** I. A. S.,
*மாவட்ட ஆட்சியர் & இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*

*தஞ்சாவூர்,*
*19—7—85.*

ஶ்ரீ :

சரபேந்திர

# வைத்திய ரத்னவளி

## சூரண வகைகள்

### 1. சண்முக சூரணம்

கொத்தமல்லி சீரகம் இலவங்கப்பட்டை
மிளகு சுக்கு வகைக்கு 1 பலம்
சீனு கற்கண்டு 4 பலம்

இவைகளை ஒன்று கூட்டிச் சூரணிக்கவும். நாள் ஒன்றுக்குக் காலை மாலை இருவேளை வயதிற்குத் தகுந்த அளவுடன் உட்கொள்ளப் பித்தரோகம் தீரும்.

### 2. இருமலுக்குச் சூரணம்

மிளகு தோலா 2 அபின் தோலா $\frac{1}{2}$
வெண்மிளகு தோலா 2 குங்குமப்பூ தோலா 1
குரோசானி ஓமம் தோலா 2 பர்பியான் பால்
தேன் தோலா 22 [ 6 குன்றி மணி எடை

இவற்றைச் சேகரித்துத் தணலின்மீது தேனை வைத்துப் பொங்குகையில் நுரையை ஒதுக்கி, பிறகு மீதிச் சரக்குகளைப் பொடித்துத் தேனில் போட்டுக் கல்வத்திலிட்டரைத்து, சீசாவில் அவ்விழுதை அடைத்துப் பத்திரப்படுத்தவும். தினம் ஒருவேளை மூன்று தோலா தண்ணீரில் எட்டு குன்றிமணி எடை மருந்தைச் சேர்த்துக் கலக்கிச் சாப்பிட, இருமல் நோய் தீரும்.

### 3. அஷ்ட சூரணம்

| | | |
|---|---|---|
| சுக்கு | சீரகம் | இந்துப்பு |
| திப்பிலி | கருஞ்சீரகம் | பெருங்காயம் |
| மிளகு | ஓமம் | |

வகைக்கு $2\frac{1}{4}$ விராகனெடை ஒன்றுகூட்டிச் சேர்த்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயம் செய்யவும். வயதிற்குத் தகுந்த் அளவில் மருந்தை உபயோகிக்கவும். சூரணம் ஒரு பங்கும், வாலாஜாபேட்டை சீனி இருபங்கும் சேர்த்துச் சாப்பிடவும்.

### 4. மூத்திர தாகம் பிரமேகம் இவைகளுக்குச் சூரணம்

பொரித்த சினுக்காரம், கற்கண்டு நெல்லிவற்றல் இவைகளை ஒன்றுகூட்டி இடித்துச் சூரணித்து வஸ்திர காயம்செய்து வைத்துக்கொள்ளவும். வேளை ஒன்றுக்கு ஒரு வராகனெடை வீதம் எடுத்துப் பசுவின் மோரில் குழப்பி நாள் ஒன்றுக்கு மூன்றுவேளை வீதம் ஏழு நாள் சாப்பிட பலவிதமான பிரமியம், நீர் எரிவு குணமாகும்.

### 5. தலைவலிக்குச் சூரணம்

பூவரசு விதையிலுள்ள சதை. $\frac{1}{2}$ தோலா, வாகை மரத்தின் காயினுள்ளிருக்கும் சதை $\frac{1}{2}$ தோலா. அலரியின் பழுத்த இலை ஏழு. இவைகளைக் காயவைத்துக் கல்வத்திலிட்டு நன்றாக அரைத்துப் பொடித்து வைத்துக் கொள்ளவும். இப்பொடியை மூக்குப் பொடியைப் போல உபயோகித்தால் தலைவலி தீரும்.

### 6. கருங்கோழிச் சூரணம்

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த தாளகம் | கருஞ்சீரகம் | சுத்திசெய்த |
| கெந்தகம் | சிவதை வேர் | [நேர்வாளம் |
| ஓமம் | கடுகுரோகிணி | பெருங்காயம் |
| கடுகு | நெல்பொரி | சத்திச்சாரம் |
| கடுக்காய் | வெங்காரம் | (ஸர்ஜக்ஷாரம்) |

| | | |
|---|---|---|
| தான்றிக்காய் | குரோசானிஓமம் | யவச்சாரம் (யவக்ஷாரம்) |
| நெல்லிமுள்ளி | கல்மதம் | வெட்பாலை [அரிசி |
| ஜாதிப்பத்திரி | கல்நார் | |
| சுக்கு | கார்போக அரிசி | |
| மிளகு | கறியுப்பு | காந்தம் |
| திப்பிலி | கல்லுப்பு | கிராம்புப்பூ |
| ஏலம் | வளையலுப்பு | வெந்தயம் |
| ஜாதிக்காய் | காய்ச்சுப்பு | வாயுவிளங்கம் |
| சவுக்காரம் | நவச்சாரம் | கோதுமை |
| சீரகம் | வெடியுப்பு | சித்திரமூலம் |
| சுத்திசெய்தலிங்கம் | | (கொடிவேலி வேர்) |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ பலம்

உளுந்து 32 (எண்ணிக்கையில்), குப்பைமேனி, திருகுகள்ளி, பொடுதலை, தும்பை இவற்றின் சாறு, கோமூத்திரம், பச்சைமஞ்சள் சாறு, வேளை, சங்கங்குப்பி, வெள்ளாட்டு நீர், வகைக்கு படி 1. மேற்சொல்லிய கடைச்சரக்குகள் யாவற்றையும் சூரணித்து மற்ற சாறு வகைகளுடன் கலந்து வைத்துக்கொள்ளவும். கருங் கோழியியை அறுத்து உள்ளிருக்கும் குடல் முதலிய கல் மஷங்களை நீக்கிவிட்டு மேற்சொல்லிய மருந்தைக் கோழியின் வயிற்றில் நிரப்பித் தையல்போட்டு ஒரு பாத்திரத்தில்விட்டு வேடுகட்டி அடுப்பின்மேல் வைத்து வேகவைக்கவும். வேகவைக்கும்பொழுது ஆவி வெளி வராவண்ணம் சட்டி கவிழ்த்துச் சீலைமண் செய்யவும். பிறகு பக்குவமானதும் எடுத்து உலர்த்திப் பின் இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொள்ளவும்.

## 7. மதுமேகத்துக்குச் சூரணம்

முருங்கைப்பட்டை, கருஞ்செம்பைப்பட்டை, கோதுமை சத்து $\frac{1}{2}$ சேர். பட்டைகளைத் திருகிக் காய வைத்துச் சூரணிக்கவும். இவ்வித சூரணம் வகைக்கு $\frac{1}{2}$ சேர், கருவைப்பிசின் $\frac{1}{4}$ சேர், மருதாணி விதை $\frac{1}{4}$ சேர்,

மஞ்சள், சாலாமிசிரி வீசஞ்சேர். இவைகளை ஒன்ருகக் கலந்து இடித்து வைத்துக்கொள்ளவும். இம்மருந்தை உட்கொண்ட ஐந்தாம் நாளுக்குப்பின் கீழ்ச் சொல்லிய படி கோழி முட்டையைப் பக்குவம் செய்து காலையில் முட்டையை உட்கொண்டு பிறகு காலை மணி எட்டுக்கு மருந்தைச் சாப்பிடவும். இரவில் முட்டையை அவித்து, தோல் நீக்கி காடியில் ஊரவைத்துக் காலையில் சாப்பிடவும்.

இதற்குப் பத்தியம்:- வாயு பதார்த்தங்களை நீக்கவும். வியாதியின் பலத்தை அனுசரித்து மருந்து சாப்பிடவும். நாற்பத்தைந்து நாட்கள்வரை இவ்விதம் உட்கொண்டால் மதுமேகம் குணமாகும். புஷ்டியான ஆகாரம், சூப் முதலியவைகளை அவசியமாகச் சாப்பிட வேண்டும்.

## 8. மலச்சிக்கலுக்குச் சூரணம்

சூரத்து நிலாஆவாரை 5 பலம், சுக்கு 5 பலம், கசகசா $\frac{1}{2}$ பலம், திப்பிலி, மிளகு, ஜீரகம், கூகை நீர், ரோஜாமொட்டு, கடுக்காய்ப்பிஞ்சு, சித்தரத்தை, அதி மதுரம் வகைக்கு $\frac{1}{2}$ பலம், நெய் $1\frac{1}{4}$ சேர், பனங்கற்கண்டு $4\frac{1}{2}$ பலம், தேன் $\frac{1}{2}$ சேர். சூரத்து நிலா ஆவாரையைப் பாலில் வேகவைத்து, சுத்த தண்ணீரிலிட்டு, பிசையாமல் கழுவவும். பிறகு உலர்த்திக் கொள்ளவும். எல்லாச் சரக்குகளையும் வெதுப்பிக் கூகைநீர், கசகசா தவிர மற்றவைகளைச் சூரணித்துக் கொள்ளவும். நெய்யை உருக்கி, சூரணத்தைத் தூவிக் கிளறிப் பிறகு கூகை நீர் கசகசா இவைகளைச் சூரணத்தில் சேர்த்துப் பனங் கற்கண்டுப் பொடியையிட்டுத் தேனையும் ஊற்றிப் பிசைந்து வைத்துக்கொள்ளவும். குழந்தைகளுக்கு சுண்டைக்காய்ப் பிரமாணமும் பெரியவர்களுக்குக் கொட்டைப்பாக்குப் பிரமாணமும் கொடுக்கவும்.

## 9. பஞ்சசூதச் சூரணம்

| | | | |
|---|---|---|---|
| சுத்தி செய்த | பாதரசம் | 6 | விராகனெடை |
| ,, | பூரம் | 5 | ,, |
| ,, | வீரம் | 4 | ,, |
| ,, | லிங்கம் | 3 | ,, |
| ,, | இரசசிந்தூரம் | 2 | ,, |

இவைகளை நன்கு சூரணித்துக் கல்வத்திலிட்டு முலைப் பால்சேர்த்து மிருதுவாக அரைத்துப் பிறகு கைவிடாமல் அரைக்க அரைக்கப் பால் சுண்டி மருந்து உலர்ந்து பொடியாகும். அப்பொழுது பொடியை எடுத்துக் குப்பியில் பத்திரப்படுத்திக்கொள்ளவும்.

இதன் குணம்:- சாமான்ய வாயுவைக் கண்டிக்கும். மல சுத்தியாகும். வியாதியின் லக்ஷணத்திற்கேற்றவாறு இஞ்சிச்சாறு, தேன், நெய், திரிகடுசூரணம் முதலிய அனுபானங்களில் கொடுக்கவும். அளவு அரிசி எடை.

## 10. பஞ்ச சூதச் சூரணம்
### (மற்ருெரு விதம்)

மேலே கூறிய எல்லாச் சரக்குகளையும் இடித்துத் தூள்செய்து காடிவிட்டு அரைத்து வில்லைதட்டி வாலுகா யந்திரத்தில் வைத்து ஒரு புடம் எரித்து எடுத்து வைத்துக்கொள்ளவும். இதை விசேஷ அனுபவத்தில் கொடுக்க மிகுதியான பலனுண்டாம்.

## 11. அஜீரணத்திற்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| சுக்கு | அதிமதுரம் | மல்லி |
| மிளகு | சவ்வியம் | ஏலம் |
| ஜீரகம் | தாளீசபத்திரி | மகிழம்பூ |
| இலவங்கப்பட்டை | அரத்தை | சதகுப்பை |
| சிறுநாகப்பூ | திப்பிலி | ரோஜா மொட்டு |

வகைக்கு 4 பலம், இஞ்சிச்சாறு $5\frac{1}{2}$ சேர், சர்க்கரை 4 சேர், நெய் 2 சேர் இவைகளை நன்ருகச் சேர்த்து இடித்துச் சூரணித்து வைத்துக்கொள்ளவும்.

### 12. பேதியாவதற்குச் சூரணம்

சூரத்து ஆவாரை 8 பலம், ரோஜாமொட்டு 4 பலம், கடுக்காய்ப்பிஞ்சு 4 பலம், கடுக்காய் 2 பலம், சுக்கு 2 பலம் இவைகளை நன்ருக இடித்துச் சூரணித்து வைத்துக் கொள்ளவும். சரீரத்திற்குத் தகுந்தவாறு கொடுக்கவும்.

### 13. தலைவலி, பீனிசம் இவைகளுக்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| அகில் | மல்லி | அரத்தை |
| விளாமிச்சைவேர் | வால்மிளகு | சயந்திரா |
| கோஷ்டம் | சுக்கு | பச்சைக்கற்பூரம் |
| அதிமதுரம் | ஏலம் | பீதரோஹிணி |
| கதிர்பச்சை | ஜாதிக்காய் | கிராம்பு |
| பச்சிலை | ஜாதிப்பத்திரி | அக்கராகாரம் |
| சந்தனம் | சடாமாஞ்சி | செவந்திப்பூ |
| செஞ்சந்தனம் | புனுகு | பேய்ப்பீர்க்கின் விதை |

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயம் செய்து மூக்குப்பொடியைப்போல் உபயோகிக்கவும். இதனுல் குணமாகும் வியாதிகள் 40 வகை சிரோபித்தம், 40 வகை தலைவலி, காசரோகம், சுரம் மூக்கின் துர்நாற்றம் முதலியன. (இச்சாபத்தியம்)

### 14. சிருங்காதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| இலவங்கப்பட்டை | 1 | விராகனெடை |
| சிறுநாகப்பூ | 2 | ,, |
| ஏலம் | 4 | ,, |
| மிளகு | 8 | ,, |
| திப்பிலி | 16 | ,, |
| சுக்கு | 32 | ,, |

| | | |
|---|---|---|
| அசுவகந்தி | 64 | விராகனெடை |
| சர்க்கரை | 128 | ,, |

சர்க்கரையைத் தவிர இதர சரக்குகளை ஒன்றுகூட்டி இடித்து வஸ்திகாயம்செய்து சூரணமாக்கிக்கொள்ளவும் பிறகு சர்க்கரையைச் சூரணத்தில் சேர்த்துக் கிளறிப் புதுப்பானையில் போட்டுவைக்கவும். வேளைக்கு இரண்டு விராகனெடை வீதம் நாள் ஒன்றுக்கு இருவேளையும் தண்ணீருடன் இருபது நாட்கள் உட்கொண்டால், ஜிரணசுரம், அரோசிகம், அஸ்திசுரம், சரீரம் இளைத்துப் போதல் முதலான வியாதிகள் தீரும்.

## 15. வாயுவிளங்காதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| வாயுவிளங்கம் | சிற்றரத்தை | இந்துப்பு |
| சுக்கு | பெருங்காயம் | கண்டுபாரங்கி |

இவைகளைச் சமனிடை கொண்டு ஒன்றுகூட்டி யிடித்துச் சூரணம் செய்து, இச்சூரணத்தின் நான்கிலொரு பாகம் யவச்சாரத்தைப் பொடி செய்து சேர்த்துக்கொள்ளவும். வேளைக்கு இரண்டு விராகனிடை வீதம் இருவேளையும் தேனில் கலந்து உட்கொண்டால் இருமல், வீக்கம், அரோசிகம், சுரம், அக்னிமந்தம் இவைகள் குணம் ஆகும்.

## 16. ஏலாதிச் சூரணம் (சகல உஷ்ணத்திற்கும்)

| | | |
|---|---|---|
| ஏலம் | நெல்லிமுள்ளி | சந்தனத்தூள் |
| சீரகம் | இலவங்கப்பத்திரி | சடாமாஞ்சி |
| இலவங்கப்பட்டை | சிறுநாகப்பூ | சோம்பு |
| அதிமதுரம் | கருவேப்பிலைஈர்க்கு | |

வகைக்கு 1 பலம், மல்லி 12 பலம், கற்கண்டு 24 பலம்' கற்கண்டைத் தவிர மற்றவைகளை இடித்து வடிகட்டி, கற்கண்டைத் தூள்செய்து சூரணத்தில் சேர்த்துக்கிளறி, புதுப்பானையில் போட்டு வாயைத் துணியால் கட்டி வைக்கவும். வேளைக்கு இரண்டு விராகனிடை வீதம்

இருவேளையும் ஒரு மண்டலம் சாப்பிட்டால் சகலவித உஷ்ண ரோகங்களும், பித்த ரோகங்களும், அரோசிகம், மூத்திர தாகம், கைகால் எரிவு திரும். இது மிகவும் அனுபோகசித்தமான மருந்து.

### 17. அநேக பித்தங்களுக்கு ஏலாதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| ஏலம் | சிரகம் | வாயுவிளங்கம் |
| சுக்கு | சண்பகப்பூ | பேரீச்சம்பழம் |
| மிளகு | கூகைநீர் | திராக்ஷைப்பழம் |
| திப்பிலி | இலவங்கப்பத்திரி | இலுப்பைப்பூ |
| கடுக்காய் | இலவங்கப்பட்டை | வெட்டிவேர் |
| தான்றிக்காய் | சிறுநாகப்பூ | விளாமிச்சைவேர் |
| நெல்லிமுள்ளி | பெருநாகப்பூ | அதிமதுரம் |
| கண்டத்திப்பிலி | இந்துப்பு | நெற்பொரி |

இவை வகைக்கு $\frac{1}{2}$ பலம்

இவைகளை மண்சட்டியில் தனித்தனியாக வருத்துக் கொள்ளவும். பிறகு எல்லாவற்றையும் ஒன்ருகச் சேர்த்திடித்து வஸ்திரகாயம் செய்து சூரணத்தின் சம பங்கு சர்க்கரை சேர்த்துப் புதுப்பானையில் போட்டு வாயைத் துணியால் மூடிவைக்கவும்.

வேளைக்கு இருகூடிப் பிரமாணம். நெய், தண்ணீர் அல்லது தேனில் கலந்து இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொண்டால் திரும் நோய்கள்:— அநேக பித்தங்கள், உஷ்ண பித்தம், பல வெதுப்பு, இருமல், நெஞ்சுவலி, குன்மரோகம், பித்தபாண்டு, ரத்தபித்தம் முதலியவை கள். (இச்சா பத்தியம்)

### 18. அம்லபித்தம், மயக்கம், கிறுகிறுப்பு இவைகளுக்கு ஏலாதிச் சூரணம்

| | |
|---|---|
| ஏலம் | வேப்பம்ஈர்க்கு |
| சிற்றேலம் | மல்லி |
| அதிமதுரம் | தாமரை வளையம் |

| | |
|---|---|
| இலுப்பைப்பூ | ஓரிலைத்தாமரை |
| சீரகம் | சீவந்திவேர் |
| கருஞ்சீரகம் | கோஷ்டம் |
| திராக்ஷைப்பழம் | சந்தனம் |
| கிரந்திதகரம் | தக்கோலம் |
| வெள் நன்னாரி | சடாமாஞ்சி |
| சுக்கு | சிங்கிக்கிழங்கு |
| திப்பிலி | சாதிக்காய் |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | நெருஞ்சிற்காய் |
| நிலப்பனைக்கிழங்கு | பூனைக்காலி |
| அசுவகந்தி | இலவம்பிசின் |
| கோரைக்கிழங்கு | சிறுநாகப்பூ |
| வெட்டிவேர் | கல்மதம் |
| நெல்லிமுள்ளி | முசுமுசுக்கைவேர் |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ பலம். கஸ்தூரி 2 விராகனிடை, குங்குமப்பூ 2 விராகனிடை. இவைகளைத் தனித்தனியே இடித்து, பிறகு ஒன்று கூட்டி வஸ்திரகாயம் செய்து இச் சூரணத்தின் சம அளவு சர்க்கரையும் நன்றாக ஒன்று படக்கலந்து ஒரு புதுப்பானையில் பத்திரப்படுத்திக் கொள்ளவும். வேளைக்கு ஒருகடி வீதம் இரு வேளையும் ஒரு மண்டலம் நெய், தேன், வெந்நீர், இவைகள் ஏதேனும் ஒன்றில் உட்கொண்டால் அலறு பித்தம், அம்ல பித்தம், கிறுகிறுப்பு, மூக்கிலிருந்து ஓயாது நீர் வடிதல் முதலிய வியாதிகள் தீரும்.

## 19. அரோசகத்திற்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| தாளிசபத்திரி | 1 | விராகனெடை |
| மிளகு | 2 | ,, |
| சுக்கு | 4 | ,, |
| திப்பிலி | 8 | ,, |
| கூகைநீர் | 16 | ,, |
| இலவங்கம் | 1 | ,, |
| சர்க்கரை | 64 | ,, |

சர்க்கரையைத் தவிர மற்றவைகளை இடித்துத் தூளாக்கி வஸ்திரகாயம் செய்து சூரணம் செய்து கொள்ளவும். பிறகு சர்க்கரையை இச் சூரணத்தில் ஒன்றுபடக் கலந்து ஒரு புதுப் பானையில் போட்டு வாயை சீலையால் மூடிவைக்கவும். வேளைக்கு இரண்டு விராகனெடை பிரமாணம் இருவேளையும் அனுபானத்துடன் உட்கொண்டு வந்தால் அரோசகம் முதலிய சகலவித வியாதிகளும் தீரும்.

## 20. பித்த வாயு, அஜீரண சுரம், அக்கினிமந்தம், முதலியவைகளுக்கு மகாதாளிசபத்திரி சூரணம்

| | | |
|---|---|---|
| தாளிசபத்திரி | சிற்றரத்தை | இலவங்கம் |
| மிளகு | கிரந்திதகரம் | விளாமிச்சை வேர் |
| இலவங்கப்பட்டை | கொத்தமல்லி | தக்கோலம் |
| சிறுநாகப்பூ | பூலாங்கிழங்கு | அரேணுகம் |
| சுக்கு | கடுக்காய் | கோரைக்கிழங்கு |
| வாயுவிளங்கம் | தான்றிக்காய் | சடாமாஞ்சி |
| திப்பிலி | நெல்லிமுள்ளி | சந்தனம் |
| சவ்வியம் | கொடிவேலி | அகில் |

வகைக்கு 2 பலம். இவைகளை இடித்துப் பொடித்து வடிகட்டி வைத்துக்கொள்ளவும். சூரணத்துக்கு சம பாகம் சர்க்கரையைச் சேர்த்து ஒன்றுபடக் கலந்து வைக்கவும். வேளைக்கு இச்சூரணத்தில் ஒரு கடி எடுத்து ½ பணவிடை பூர்ண சந்திரோதயத்துடன் சேர்த்து இரு வேளை ஒரு மண்டலம் சாப்பிடவும்.

இதனால் தீரும் வியாதிகள் :— வாதம், பித்தம், சிலேட்டுமம், பாண்டு, அதிசாரம், சுவாசகாசம், சுரம், சீதம், சிரோப்பிரமை, மரஜுவஸ்தை, அக்கினிமந்தம், அன்னத்துவேஷம், அரோசகம், அஜீரணம், விக்கல், சர்வாங்க வாயு, அநேக சுரங்கள், தாது நஷ்டம், அசுரகாதி விரணம், ரத்தமேகம், மூர்ச்சை, ருது சூனியம், சித்தப்பிரமை, விலாவலி முதலிய வியாதிகள் தீரும். (அசுரகாதி—இரத்தம் முதலியன, அஸ்ருக்—இரத்தம்.)

## 21. அக்கினிமந்தம், அரோசகம், இவைகளுக்குப் பஞ்சகோலாதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| திப்பிலி | இந்துப்பூ | மிளகு |
| திப்பிலிமூலம் | சதகுப்பை | பெருங்காயம் |
| செவ்வியம் | சத்திக்ஷாரம் | சித்திரமூலம் |
| வளையலுப்பு | யவக்ஷாரம் | சுக்கு |

வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துக்கொண்டு இவைகளை இடித்து வடிகட்டிச் சூரணம் செய்து சூரணத்தின் சம அளவு சர்க்கரையைக் கலந்து வைக்கவும். துரிஞ்சிப் பழத்தின் சாறு அல்லது சர்க்கரை நாரத்தையின் சாற்றில் வேளைக்கு இரண்டு விராகனெடை சூரணத்தைக் கலந்து இருவேளை ஒரு மண்டலம் சாப்பிட்டு வந்தால் அக்கினிமந்தம், அரோசகம், சூலை, விக்கம், முதலியவைகள் தீரும்.

## 22. அக்கினி மந்தத்திற்கு அஷ்டாதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| சுக்கு | சீரகம் | இந்துப்பு |
| திப்பிலி | கருஞ்சீரகம் | ஓமம் |
| மிளகு. | | |

வகைக்கு 1 பலம், காயம் $\frac{1}{4}$ பலம் இவையாவற்றையும் இடித்து, வடிகட்டி, சூரணத்திற்குச் சம அளவு சர்க்கரையைச் சேர்த்துக் கொள்ளவும், வேளைக்கு இரண்டு விராகனெடை வீதம் இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள அக்கினிமந்தம், சர்வாங்கவாதம் இவைகள் தீரும்.

## 23. சுகவிரேசனத்திற்கு ஹைபதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| நெல்லிமுள்ளி | மிளகு | இலவங்கம் |
| கோரைக்கிழங்கு | சுக்கு | இலவங்கப்பட்டை |
| வாயுவிளங்கம் | திப்பிலி | இலவங்கப் பத்திரி |
| கடுக்காய். | | |

வகைக்கு 1 விராகனெடை, சுத்திசெய்த சிவதை வேர் 30 விராகனெடை, இவைகளை இடித்துச் சூரணம் செய்து வஸ்திரகாயம் செய்து சர்க்கரை 51 வீராகனெடையைச் சூரணத்துடன் கலந்து ஒரு புது மண்பானையில் போட்டுப் பத்திரப்படுத்தவும். அதிகாலையில் வேளைக்கு 1 விராகனெடை வீதம் வெந்நீரில் கலந்து சாப்பிட ஆறுதடவை சுக விரேசனமாகும். புளி சேர்த்து ரசம் சாதம் சாப்பிடலாம். இரவில் சுக்கு 1 விராகனெடையும், சீரகம் 1 விராகனெடையும் சேர்த்து கஷாயஞ் செய்து சாப்பிடவும். சரீரத்தை அனுசரித்து அதிக அளவு அல்லது குறைந்த அளவு கொடுக்கவும்.

## 24. மூலகுடாரி

மிளகு 1 பலம், திப்பிலி 2 பலம், சுக்கு 3 பலம், காட்டுக் கருணைக் கிழங்கு 16 பலம். இவைகளைச் சூரணம் செய்து கொள்ளவும். இத்துடன் சர்க்கரையும் சேர்த்து உட்கொண்டால் இருபதுவித மூல வியாதிகள் தீரும்.

## 25. அக்கினிமந்தாதிச் சூரணம்

இந்துப்பு 1 பலம், முன்னைவேர் 2 பலம், சீரகம் 3 பலம் ஓமம் 4 பலம். சுக்கு 5 பலம், திப்பிலி 6 பலம் இவ்வகைகளுக்குச் சம எடை கடுக்காய் சேர்த்துச் சூரணம் செய்து கொள்ளவும். இருகடி சூரணம் வெந்நீருடன் கலந்து சாப்பிட விரேசனமாகும். தீபனம் ஏற்படும். சரீரத்திற்கு சௌக்கியம் ஏற்படும். குன்மம், மூலவியாதி மலபந்தம் முதலியவற்றைப் போக்கும்.

## 26. இரத்த பித்தத்திற்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| வெண்ணெய் | நெற்பொறி | தேன் |
| சர்க்கரை | திராக்ஷை | கோரைக் கிழங்கு |

இவற்றைச் சம எடை எடுத்துப் பொடி செய்து கொள்ளவும். நெய்யுடன் கலந்து கொடுக்க இரத்த பித்தநோய் நீங்கும்.

## 27. விபக்திச் சூரணம்

| | | |
|---|---|---|
| நெல்லிமுள்ளி | இலவங்கம் | சுக்கு |
| வாயுவிளங்கம் | சிறுநாகப்பூ | மிளகு |
| ஏலம் | கோரைக்கிழங்கு | திப்பிலி |

வகைக்கு 1 பலம், சிவதைவேரின் சூரணம் 10 பலம், சர்க்கரை 20 பலம் இவைகளைக் கலந்து சூரணித்து வைத்துக்கொள்ளவும், இருகடி பிரமாணம் சூரணத்தை வெந்நீரில் சாப்பிட விரேசனமாகும். மந்தாக்கினி, சூலை, பவுத்திரம், மேகம், சீதம், வாயுவினுல் மூட்டுகளில் வலியுடன் ஏற்படும் நோய், மகோதரம், பாண்டு, மார்வலி இவைகள் குணமாகும்.

## 28. அண்டவாதத்திற்குச் சூரணம்

கருவளையல் 2 விராகனெடை, மிளகு 3 விராகனெடை இவ்விரண்டையும் கல்வத்திற்போட்டு மிருதுவாகப் பொடித்து இதனுடன் மனேசிலை 2 விராகனெடை, காயம் 2 விராகனெடை இவைகளின் பொடியைச் சேர்த்து 4 ஜாமம் அரைத்துப் பொடி செய்து ஒரு டப்பியில் அடைத்துக் கொள்ளவும். வேளைக்கு ஒரு பணஎடை வீதம் இரு வேளையும் இருபது நாட்களுக்கு உட்கொண்டால் அண்டவாய்வு தீரும். பீஜத்தில் வீக்கமிருந்தால் தீரும். ருதுகாலத்தில் உதிரச் சிக்கலிருந்தால் இம்மருந்தை மூன்று நாள் சாப்பிட குணமாகும். ஸ்திரீகளுக்குப் பிரசவத் திற்குப்பின் வயிற்றில் உதிரச்சிக்கல், கல்மஷம் முதலியவை களிருந்தால் இம் மருந்தை 3 அல்லது 5 நாள் கொடுத்தால் உதிரச்சிக்கல் தீரும்.

## 29. நானுவித வியாதிகளுக்குச் சிறந்த சூரணம்

முகம்மது பாதுஷாவால் நானூறு வைத்தியர்களைக் கலந்தாலோசித்து ஔடதத் தாவரங்களைக் கண்டு பிடித்து சூரணத்தைத் தயாரித்து தானே உட்கொண்டு அனுபவங் கண்டது. எத்தகைய நோயையும் தீர்க்க வல்லது.

இலவங்கம் 1, ஜாதிக்காய் 2, ஜாதிப்பத்திரி 2, காட்டு இலவங்கம் 2, காட்டு ஜாதிக்காய் 1, கலமி இலவங்கப்பட்டை 3, வால்மிளகு 2, மிளகு 2, சுக்கு 2, ஓமம் 2, திப்பிலி 1, திப்பிலி மூலம் 2, வெட்பாலை 2, ரூமிமஸ்தகி 2, தாளிச பத்திரி 4, வெள்ளை சாம்பிராணி 2, சர்மாசா ( Charmacha ) 1, குலஞ்ச் ( Kulanj ) 2, குலோஞ்சு ( Kulonj ) 2, அக்கிராகாரம் 1, துத்தி 1, வெள்ளைச் சாரணை 3, ரேதா 1, பருத்திக்கொட்டை 1, அரேணுகம் 1, முள்ளங்கி விதை 1, பக்தவான் விதை (Baktawan Seed ) 1, அக்ரோட் பருப்பு 7, வாதுமைப் பருப்பு 7, பிஸ்தாப் பருப்பு 7, சாரப் பருப்பு 7, ஏலம் 2, வெட்டி வேர் 3, விளாமிச்சை வேர் 3, நீர்முள்ளி விதை 3, பரங்கிப் பட்டை 3, தாஹாஜ் 1, பூலாங்கிழங்கு 1, செஞ்சந்தனம் 1, சாலாமிசிரி 1, லோகண்டி ( Lowgandi மரவாழைக் கிழங்கு ) 3, அமுக்கிராக் கிழங்கு 3, சித்திரமூலம் 2, நாய் வேளை வேர் 2, சாதாப்பு வேர் 2, பூனைக்காலி விதை 2, வாலுளுவை 2, நுணாவிதை 2, அப்சர் பம்ஸ் (Apsar Bums மூங்கிலுப்பு) 2, வெள்ளை மைதாலகடி 2, அன்னபேதி 3, காகோலி 2, அழிஞ்சில் வேர் 2, கழற்சிப் பருப்பு 1, கபூகாஹர் ( Kapukahar ) 2, கோரைக் கிழங்கு 2, கருவேலங்காய் 2, சிங்கிரிக் கிழங்கு 2, கஸ்தூரி 1, குங்குமப்பூ 4, சாம்பல் செய்த அம்பர் 1, தங்கபற்பம் 1, முத்துபற்பம் 1, தங்க ரேக்கு 1, இவைகள் மேலேகண்ட எடை விதப்படி சேர்க்கவும். மொத்த எடை $\frac{1}{2}$ பலம். வாலாஜாப்பேட்டை சர்க்கரை $\frac{1}{2}$ சேர், பசுவின் நெய் 1 சேர் இவைகளை எல்லாம் சேர்த்து முறைப்படி செய்யவும்.

## 30. சகலவித மேக ஊரல், படை முதலியவற்றிற்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| சித்திரமூலவேர் | தும்மட்டிவேர் | பரங்கிப்பட்டை |
| சங்கத்தாரிவேர் | மஞ்சள் | கருஞ்சீரகம் |
| சங்கம்வேர் | மலைவேம்பின்வேர் | காட்டுசீரகம் |
| புங்கம்வேர் | சிவனார்வேம்பின் | கடுக்காய் |
| மூக்கறட்டைவேர் | வேர் | தான்றிக்காய் |

| | | |
|---|---|---|
| தேஜபலத்தின்வேர் | உத்தாமணிவேர் | நெல்லிமுள்ளி |
| வெள்ளருக்கன்வேர் | கொள்ளுவேர் | கண்டத்திப்பிலி |
| சங்கங்குப்பிவேர் | எட்டிவேர் | கந்தகம் |
| நீலிவேர் | கழற்சிவேர் | மரமஞ்சள் |
| சண்பகமரப்பட்டை | | |

இவைகள் சமஎடை கொண்டு ஒன்றுகூட்டி இடித்துச் சூரணம் செய்துகொள்ளவும். வேளைக்கு இருகடி பிரமாணம் இருவேளையும் உட்கொள்ளவும்.

பத்தியம் :- பாதி உப்பு சேர்க்கவும், அரைக்கீரை, கீரைத்தண்டின் அடிப்பாகம், திருக்கைமீன்' விரால்மீன், பசுவின் பால், நெய் இவைகளைச் சேர்த்துக்கொள்ளவும். வாயு, சகலவித மேகஊறல், படை இவை தீரும்.

### 31. சுவாசம், விக்கல் இவைகளுக்குச் சூரணம்

தான்றிக்காய்ச் சூரணத்தை ஐந்து தோலா தேனில் கொடுக்க நிற்கும்.

### 32. வாயு உபத்திரவத்திற்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| சுக்கு | இந்துப்பு | கடுக்காய் |
| மிளகு | சீரகம் | பெருங்காயம் |
| திப்பிலி | கருஞ்சீரகம் | ஜாதிக்காய் |
| ஓமம் | | |

இவைகளைச் சமனெடை எடுத்துக்கொண்டு சூரணபக்குவம் செய்து வேளைக்குக் கழற்சிக்காய்ப் பிரமாணம் இருவேளை சாப்பிடவும். வாயு தீரும்.

### 33. சரீரத்திற்குச் சுகமுண்டாக்கச் சூரணம்

சங்கம்வேரின் மேல் தோலை மட்டும் எடுத்துக் கொண்டு சூரணித்து வைத்துக் கொள்ளவும். ஒரு தோலா எடை, தேன் அல்லது நெய்யில் சாப்பிட்டுவர சரீரத் திற்குச் சுகமேற்படும்.

## 34. சாத்யாம்ருதச் சூரணம்

குங்குமப்பூ 1, கோஷ்டம் 3, கஸ்தூரி 1, பேரறத்தை 3, கருவப்பட்டை 3, பரங்கிப்பட்டை 3, வில்வவேர் 9, அமுக்கரா வேர் 9, தாளிசபத்திரி 9, அதிமதுரம் 9. கடுக்காய் 3, தான்றிக்காய் 3, விளாமிச்சைவேர் 3, பேரீச்சங்காய் 3, வாதாம்பருப்பு 9, சாரப் பருப்பு 3, சாம்பிராணி 3, வலம்புரிக்காய் 2, வாலுளுவை 3, வாயுவிளங்கம் 3, முருங்கைக்காய் 9, மாவடு 9, இளவில்வம் 4, இலவம்பூ 3, அமுக்கரா 3, ஸ்ரீசந்தனம் 3, சுக்கு 9, ஏலம் 4, கிராம்பு 9, ஜாதிப்பத்திரி 4, மதனகாமப்பூ 4, வெள்ளைமிளகு 2, மிளகு 3, கண்டத்திப்பிலி 1, தேசாவரிசிரகம் 1, அரிசித்திப்பிலி 1, அக்கிராகாரம் 2, ஓமம் 3, நற்சிரகம் 3, வெந்தியம் 3, கடுகுரோகிணி 3, பெருங்காயம் 3, இந்துப்பு 3, இவைகளின் எடை மேலேகண்ட அளவு வீதம் எடுத்துக்கொண்டு சூரணம் செய்து வைத்துக்கொள்ளவும். சரீரத்தைப் பொறுத்தும் தாதுவுக்கு ஏற்றது போலும் இச்சூரணத்தை நெய், சர்க்கரை, தேன் அல்லது தயிரிலிருந்து வடிந்த தெளிவு இவைகளிலேதேனும் ஒன்றில் கலந்து உட்கொள்ளவும்.

## 35. விருத்தாருச் சூரணமோதகம்

விருத்ததாரு (பொத்திக்கிரை), சேராங்கொட்டை, சுக்கு, இம்மூன்றையும் சம எடை எடுத்துக்கொண்டு சூரணம் செய்து அதில் இரண்டுபாகம் வெல்லத்தைக் கலந்து உருண்டை செய்து உட்கொள்ளவும். ஆறு விதமான மூலரோகங்கள் குணமாகும்.

## 36. அரோசகத்திற்குச் சூரணம்

தாளிசபத்திரி 1 தோலா, மிளகு 2 தோலா, சுக்கு 3 தோலா, அரிசித்திப்பிலி 4 தோலா, மூங்கிலுப்பு 5 தோலா, ஏலம் $\frac{1}{2}$ தோலா, இலவங்கப்பட்டை $\frac{1}{2}$ தோலா, தாமிர பற்பம் 1 தோலா, வங்கபற்பம் 1 தோலா, சர்க்கரை 32 தோலா, பற்பங்கள் சர்க்கரை இவைகளைத் தவிர மற்றவைகளைப் பொடிசெய்து சூரணித்து வடிகட்டி இத்துடன்

பற்பம், சர்க்கரையைக் கலந்து தகுந்த அனுபானத்துடன் கொடுக்க அரோசகம், சுவாசகாசம், சுரம், வாந்தி, அதிசாரம், சோஷம், வயிற்றுப்பிசம், கவலு, சங்கிரகணி, பாண்டு இவ்வாருன ரோகங்கள் குணம் ஆகும்.

## 37. அஜீரணத்திற்குச் சூரணம்

(1) திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திரமூலம், இவைகளைச் சூரணம்செய்து உட்கொள்ளவும்.

இதனல் தீரும் வியாதிகள் :- அரோசகம், தீபனசக்தியில்லாமை, அஜீரணம், மலச்சிக்கல், கவலு, குன்மம், சூலை, கபோதரம்.

(2) ஏலம், இலவப்பட்டை, இலவங்கப்பத்திரி, இவைகளைச் சமனெடை கூட்டிச் சூரணஞ் செய்து உட்கொள்ளவும். அரோசகம், பித்தம் கப சம்பந்தமான நோய்கள் தீரும்.

## 38. கபத்தினுலுண்டான இருமலுக்கும், சாதாரண இருமலுக்கும் பஞ்ச சூரணம்

கொடிவேலி இரண்டுபாகம், பிஞ்சுக்கடுக்காய் ஒரு பாகம், நெல்லிக்காய் ஒரு பாகம், இந்துப்பு ஒரு பாகத்தில் பாதி, இவைகளை ஒன்றுசேர்த்திடித்து, சூரணம் செய்து வைத்துக்கொண்டு சாப்பிட்டுவர அரோசகம், வாயு, சுரம் முதலிய நோய்கள் திரும்.

## 39. குன்மத்திற்குச் சூரணம்

கருணைக்கிழங்கு 16 பலம், யவக்ஷாரம் 2 விராகன் எடை, திப்பிலி 2 விராகனெடை, சுத்திசெய்த சேராங்கொட்டை 8, இவைகளை ஒன்றுகூட்டி கல்லுரலில் போட்டிடித்து சூரணித்துக்கொண்டு சூரணத்திற்குச் சம எடை வெல்லத்தையும் கலந்துகொள்ளவும். ரோகபலம், தேக

பலம் இவைகளை அனுசரித்து வெந்நீரில் கொடுக்க குன்மம் தீரும்.

## 40. குன்மத்திற்குச் சூரணம்

சுத்திசெய்த சித்திர மூல வேர் 2 விராகனெடை, பொரித்த காயம் 2 விராகனெடை, சுக்கு, ஓமம், மிளகு, திப்பிலி, இந்துப்பு, கருஞ்சீரகம் வகைக்கு 1 பலம், இவைகளை ஒன்றுகூட்டிக் கல்லுரலிலிட்டு மெல்லியதாக இடித்து வடிகட்டி வைத்துக்கொள்ளவும். ஒரு புள்ளடி அளவு சூரணத்தை, சாப்பிடும் பொழுது சாதத்தில் போட்டுக் கிளரிச் சாப்பிடவும். குன்மம் தீரும்.

## 41. குன்மத்திற்குக் கருங்கோழிச் சூரணம்

பொரித்த காயம் 3 விராகனெடை, சுத்திசெய்த காந்தம் 3 விராகனெடை, வெங்காரம், சுக்கு, மிளகு வகைக்கு $\frac{1}{2}$ பலம், சுத்திசெய்த நேர்வாளம் எண்ணிக்கையில் 5, சதகுப்பை $\frac{1}{2}$ பலம், ஓமம் $\frac{1}{2}$ பலம், சீரகம் $\frac{1}{2}$ பலம், பிரண்டையின் சாறு 4 படி, தண்ணீர் 8 படி இவை எல்லாமென்றுகூட்டி அடுப்பின் மேலேற்றி 4 படி கஷாயமாகும்படி காய்ச்சி அதில் கழற்சிக் கொடியின் வேர், தும்பைவேர், மிளகரணை, வெள்ளைச்சாரணைவேர் வகைக்கு $\frac{1}{2}$ பலம் கலந்து காய்ச்சவும். பிறகு வேர்கள் வெந்ததும் அதேகஷாயத்தை விட்டு நைவாக அரைக்கவும். ஒரு கருங்கோழியை அறுத்து சுத்தம் செய்து எலும்பு முதலியவற்றை நீக்கிவிட்டு மாமிசத்தை மட்டும் எடுத்துக் கொண்டு அதனுடன் அரைத்து வைத்திருக்கும் விழுதைக் குழப்பி வேகவைக்கவும். மாமிசம் நன்ருக வெந்ததும் கீழிறக்கவும். பிறகு எல்லாவற்றையும் ஐந்து நாளைக்கு சூரியபுடத்தில் வைத்து நன்ருய் உலர்ந்ததும் இடித்து, சூரணம் செய்து பத்திரப்படுத்தவும். விடியற்காலையில் ஒரு சிட்டிகைப் பொடியைத் தேனுடன் கலந்து 9 நாள் உட்கொள்ளவும். பிறகு 9 நாள் மறு (உப) பத்தியம்

அனுஷ்டிக்கவும். புளி, வாயு பதார்த்தங்கள் இவைகளை விலக்கவும். குன்மம் திரும்.

## 42. குன்மம், விஷூசி, அஜீரணம் முதலியவைகளுக்குப் பெருங்காயச் சூரணம்

பொரித்த பெருங்காயம் 1 விராகனெடை, பொரித்த இந்துப்பு 2 விராகனெடை, சீரகம், வசம்பு, சுக்கு, கடுக்காய், சித்திரமூலவேரின் மேற்றோல், கோஷ்டம் இவைகள் சமஎடை கொணர்ந்து தனித்தனியே இடித்து வஸ்திர காயம் செய்து பிறகு யாவற்றையும் ஒன்று கூட்டிப் பத்திரப்படுத்தவும். மூவிரல்கொண்ட அளவு தினம் ஒரு வேளை வெந்நீரில் சாப்பிடவும்.

இதனால் தீரும் வியாதிகள் ;- விஷபேதி, குன்மம், அக்கினிமந்தம், அரோசகம், வாந்தி, அஜீரணம் நீரிழிவு.

## 43. பிரமியத்திற்குச் சந்தனாதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| சந்தனம் | சிறுநாகப்பூ | கோஷ்டம் |
| அதிமதுரம் | கோரைக்கிழங்கு | திப்பிலி |
| விளாமிச்சைவேர் | பேரீச்சங்காய் | இலுப்பைப்பூ |
| நெல்லிமுள்ளி | திராக்ஷைப்பழம் | |

வகைக்கு சம அளவு கொண்டு கல்லுரலிலிட்டு இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயம்செய்து இதற்குச் சமனெடை சர்க்கரையுங்கூட்டி கலந்து வைத்துக்கொள்ளவும். தினந் தோறும் ஒரு சிட்டிகை சூரணத்தைக் காலையில் குளிர்ந்த நீரிலும், மாலையில் வெந்நீரிலும் கலந்து உட்கொள்ள தாகம், மூத்திரத்துவார எரிவு, பிரமியம், கிறுகிறுப்பு' காமாலை, பித்தசுரம், முதலிய வியாதிகள் தீரும். இந்த மருந்து அனுபவத்தில் மிகவும் சிறந்தது.

## 44. ஞாபகசக்தியை அதிகப்படுத்த சூரணம்

| | | |
|---|---|---|
| சிந்தில்கொடி | கோஷ்டம் | வசம்பு |
| நாயுருவி | தண்ணீர் விட்டான் கிழங்கு | கடுக்காய் |
| வாயுவிளங்கம் | | சங்கங்குப்பி |

வகைக்கு சமனெடை கொண்டு மெல்லியதாய்ப் பொடித்து வஸ்திரகாயஞ்செய்து மூன்றுநாள் மூன்று வேளையாக உட்கொண்டால் ஞாபகசக்தி அதிகமாகும். ஆயிரக்கணக்கான சுலோகங்களை மனப்பாடம் செய்யச் சக்தி உண்டாகும்.

## 45. மாந்த சுரத்திற்குச் சூரணம்

| | |
|---|---|
| பேராமுட்டிவேர் | நாய்வேளைவேர் |
| பாவட்டைவேர் | காட்டுவெந்தியவேர் |
| பூனைக்காலிவேர் | சுட்ட வசம்பு |
| கருக்கிக் கரியாக்கிய ஆமை ஓடு | |

இவைகளைக் கொண்டு கஷாயமிறக்கி உள்ளுக்குக் கொடுக்க, குழந்தைகளின் மாந்தசுரம் தீரும்.

## 46. வாந்தியோடு கூடிய வயிற்றுப் போக்குச் சூரணம்

மாம்பருப்பை நன்றாக இடித்துச் சூரணித்து வஸ்திர காயஞ் செய்து அதற்குச் சமஎடை சர்க்கரையைக் கூட்டிக் கொடுக்க வாந்தியோடு கூடிய கழிச்சல், சீதம் ரத்தம் விழுதல் முதலியவைகள் தீரும்.

## 47. பிள்ளைகளுக்கு வரும் சுரத்திற்குச் சூரணம்

(1) அஞ்சனக்கல், அதிமதுரம், கூகைநீர், பேரீச்சங்காய் இவைகளை சமஎடை கொண்டு இடித்துத் தூளாக்கி வஸ்திரகாயஞ் செய்து அதனுடன் தேனும், சர்க்கரையுங் கூட்டிக்கொடுத்தால் உடம்பில் ஊறிய மாந்தம், உஷ்ணம், எரிவு, சுரம் உடம்பு இளைத்துப் போதல் முதலான நோய்கள் தீரும்.

(2) சுத்திசெய்த மான்கொம்பு, அதிவிடயம், திப்பிலி இவைகள் சமமாகக்கொண்டு கல்வத்திலிட்டுப் பொடித்துச் சூரணம் செய்துகொண்டு தேனில் குழப்பிக் கொடுக்க வாந்தி. சுரம் முதலானது தீரும்.

## 48. பல்வலிக்கும், தந்தவாயுவுக்கும் சூரணம்

சுக்கு, கடுக்காய்த்தோல், வால்மிளகு, திப்பிலி இவைகளைச் சூரணித்து வஸ்திரகாயம் செய்து இரு வேளையும் 10 நாட்கள் உட்கொள்ளத் தீரும்.

## 49. மேகத்திற்குச் சூரணம்

(1) கெட்டைக்கரந்தை, சிறு செருப்புள்ளடி வெள்ளெருக்கு இம்மூன்றையும் உலர்த்தி சமனெடை கொண்டு சூரணித்து, சூரணத்திற்குச் சமபாகம் சர்க்கரையை ஒன்றுகூட்டி நாள் ஒன்றுக்கு இருவேளையாக 20 நாள் உட்கொள்ள மேக வியாதி குணம் ஆகும்.

(2) பூலாங்கிழங்கு, கீழாநெல்லி, நிலத்தாமரை, கோரைக்கிழங்கு வகைக்கு 2 பலம் கொண்டுவந்து இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ்செய்து இதற்குச் சமனெடை சர்க்கரையைக் கலந்து வேளைக்கு காலேயரைக்கால் பலம் வீதம் இருவேளையுமாக இருபது நாள் சாப்பிடவும்.

(3) பரங்கிப்பட்டை 1 பலம், பூவரசம்பூ 2 பலம், கந்தகம் 1 விராகனெடை, பளிங்குச் சாம்பிராணி 2 விராகனெடை, சீனக்கற்கண்டு 2½ பலம். முதலில் பளிங்குச் சாம்பிராணியையும், சீனக் கற்கண்டையும் பக்குவமாய் வறுத்தெடுத்துக்கொண்டு பிறகு மற்ற சரக்குகளை இடித்துச் சூரணம் செய்து வறுத்த சரக்குகளுடன் கலந்து பொடி செய்து கொள்ளவும். இச்சூரணத்தில் வேளைக்கு மூவிரல் கொண்ட அளவு இருவேளையும் சாப்பிட மேகம், உஷ்ணம் முதலியவைகள் தீரும்.

## 50. அரோசகம், கவலு முதலிய நோய்களுக்குச் சூரணம்

தாளிசபத்திரி 4 தோலா, மிளகு 2 தோலா, சுக்கு 3 தோலா, திப்பிலி 4 தோலா, மூங்கிலுப்பு 5 தோலா,

ஏலம் ½ தோலா, இலவங்கப்பட்டை ½ தோலா, தாமிர பற்பம் 1 தோலா, வங்கபற்பம் 1 தோலா, சர்க்கரை 32 தோலா, பற்பங்கள சர்க்கரை இவைகளைத் தவிர மற்றவைகளைச் சூரணம் செய்துகொண்டு அவற்ருேடு சர்க்கரை பற்பங்கள் இவைகளைச் சேர்த்துப் பத்திரப் படுத்தி வைத்துக்கொண்டு உபயோகிக்கவும். இம் மருந்தினுல் அரோசகம், சுவாசகாசம், சுரம், குமட்டல், அதிசாரம், வறட்சி, வயிற்றுப்பிசம், கவலு, சங்கிரஹணி, பாண்டு, முதலிய வியாதிகள் குணமாகும்.

## 51. அஜீரணம், பசியின்மை முதலானவைகளுக்குச் சூரணம்

(1) திப்பிலி, செவ்வியம், சுக்கு, திப்பிலிமூலம், சித்திரமூலம், இவ்வைந்து சரக்குகளையும் சூரணம் செய்து சாப்பிட்டுவர வாய்க்கு உருசியுண்டாகும். அக்கினி உற்பத்தி ஆகும். ஆகாரம் ஜீரணமாகும், மலச்சிக்கல், கவலு, குன்மம், சூலகபோதரம் முதலான ரோகங்கள் நிவர்த்தி ஆகும்.

(2) ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, இவைகளைச் சமமெடுத்துச் சூரணம்செய்து சாப்பிட பித்தம், கபம், இவைகள் சம்பந்தப்பட்ட வியாதிகள் தீரும்.

## 52. சுதர்சனச் சூரணம்

| | | |
|---|---|---|
| கடுக்காய்த் தோல் | பற்பாடகம் | வெட்டிவேர் |
| தான்றிக்காய்த் தோல் | கோரைக் கிழங்கு | மலாக்கா சந்தனம் |
| நெல்லிமுள்ளி | விளாமிச்சை வேர் | அதிவிடயம் |
| கஸ்தூரி மஞ்சள் | வேம்பின் பட்டை | சிற்ருமுட்டிவேர் |
| மரமஞ்சள் | | பேராமுட்டிவேர் |
| | | வாயுவிளங்கம் |

| | | |
|---|---|---|
| கண்டங்கத்திரி வேர் | மிளகரணைவேர் | அக்கராகாரம் |
| | அதிமதுரம் | சித்திரமூலம் |
| முள்ளுக்கத்திரி வேர் | வெட்பாலை | தேவதாரு |
| | ஓமம் | செவ்வியம் |
| மஞ்சள் | கார்போக அரிசி | பேய்ப்புடல் |
| சுக்கு | சிறுதேக்கு | இலவங்கம் |
| மிளகு | முருங்கைவிதை | மூங்கிலுப்பு |
| கண்டந்திப்பிலி | வசம்பு | கோஷ்டம் |
| மருள்கிழங்கு | இலவங்கப் பட்டை | இலவங்கப் பத்திரி |
| சீந்தில் | | தாளிசபத்திரி |
| சிறுகாஞ்சோறி | கிரந்திதகரம் | ஜாதிப்பத்திரி |
| கடுகரோகிணி | மூக்குத்திப்பூண்டு | ஏலம் |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை, நிலவேம்பின் ஈர்க்கு 24 விராகனெடை, இவைகள் யாவற்றையும் நன்ருக உலர்த்தி, மெல்லியதாக இடித்து வடிகட்டி காற்றுப் புகாதபடி பத்திரப்படுத்தி வைக்கவும். இச் சூர்ணத்தில் 21 விராகனெடை வரையில் குளிர்ந்த நீரில் கலந்து கொடுக்கலாம்.

இம்மருந்தினுல் தீரும் நோய்கள் :- பித்தப்பிரகோபம் கபப்பிரகோபம், வாதப்பிரகோபம், வாதசுரம், பித்தசுரம், சன்னிபாதசுரம், அபிகாதசுரம், கபசுரம், வாதப்பித்தசுரம்‘ பித்தகபசுரம், பூதசுரம், சிதசுரம், அஸ்திசுரம், ஒருநாள் விட்டு வரும் சுரம், இரண்டுநாள் விட்டு வரும் சுரம், மூன்று நாளுக்கொருமுறை வரும் சுரம், நான்கு நாளைக்கொரு முறை வரும் சுரம், பதினைந்து நாளைக்கு ஒருமுறை வரும் சுரம், மாதமொருமுறை வரும் சுரம், திரும்பத் திரும்ப வரும் சுரம், மனைவியாதியால் வரும் சுரம், மூர்ச்சை, தாகம், இருமல், உடல் வெளுத்து இருத்தல், மார்புவலி, காமாலை, பிடரிவலி, முதுகுவலி, இடுப்புவலி, விலாவலி, முழங்கால்வலி முதலான வியாதிகள் தீரும். இம்மருந்து அநேக ஜனங்களுக்குக் கொடுக்கப்பட்டு, அனுபவங் கண்டது.

பத்தியம் :— உப்பு, புளி, நல்லெண்ணெய், நெய், பால், தயிர், கடுகு, மீன், உலர்ந்தமீன், உளுந்து இவைகளை நீக்கவும். சுரம் நின்றதும் பசுவின் மோரும் கால்பங்கு உப்பையும் கூட்டிக்கொள்ளவும்.

## 53. காயகல்பச் சூரணம்

வேப்பிலை, கையாந்தகரை, கரந்தை நொச்சி, ஓம இலை, இவ்வைந்தையுஞ் சமனெடுத்து நிழலிலுலர்த்தி, இடித்துச் சூரணஞ்செய்து, தினம் காலை, மாலை வெறுகடி பிரமாணம் உட்கொள்ளவும், பால் சாதம் சாப்பிடவும். தேகம் பொன் மேனியாகி நரை, திரை யாறும்.

## 54. குஷ்டம் 18-க்கும் சூரணம்

சுத்தி செய்த குங்கிலியம் 1 சேர், கந்தகம் 1 சேர், கார்போக அரிசி 2 சேர், இம்மூன்றையும் மெல்லியதாகப் பொடி செய்து சூரணஞ் செய்து கொள்ளவும். வேளைக்கு மூவிரல் கொண்ட அளவு சூர்ணத்தை இருவேளையும் உட்கொண்டுவர 18 விதமான குஷ்டங்கள் தீரும்.

## 55. இருமலுக்குச் சூரணம்

முக்காவேளை வேரை நிழலிலுலர்த்திச் சூரணஞ் செய்து தினமும் 3 தோலா அளவை தேன் அல்லது நெய்யில் சாப்பிட உஷ்ணம், இருமல் முதலானவைகள் தீரும். இம்மருந்தை 14 நாள் சாப்பிடவும்.

## 56. ஜலதோஷத்திற்குச் சூரணம்

கருஞ்சீரகம் 1 பலம், கழற்சிப்பருப்பு 2 பலம், மஞ்சள் 1 பலம், இவைகளை ஒன்றுகூட்டி இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து தினமும் இருவேளை சாப்பிட ஜலதோஷம் தீரும்.

## 57. இருமலுக்குக் கடுக்காய்ச் சூரணம்

சுக்கு, கடுக்காய்த்தோல், திப்பிலி இவைகளைச் சமமாகக் கொண்டிடித்துப் பொடிசெய்து வடிகட்டி வைக்கவும். வேண்டும்பொழுது சிறிதெடுத்து அம்மியில் வைத்து ஜலம் விட்டு ஒரு கொட்டைப்பாக்களவு நைவா யரைத்துத் தேனில் கலந்து சாப்பிட இருமல் குணமாகும்.

## 58. கபத்திற்குச் சூரணம்

கடுக்காய்த்தோல், அதிவிடயம், காசிக்கட்டி இவைகளைச் சமமெடுத்துச் சூரணஞ் செய்து, வஸ்திரகாயஞ் செய்து பத்திரப்படுத்தவும். ஒரு காசிடை தினமும் சாப்பிடக் கபத்தின் உபத்திரவம் தீரும்.

## 59. பாஸ்கர சூரணம். பித்த, கப ரோகங்களுக்கும், தீபனம் உண்டாவதற்கும்

| | | |
|---|---|---|
| கொத்தமல்லி | வாயுவிளங்கம் | தாளிசபத்திரி |
| திப்பிலிமூலம் | இந்துப்பு | சிறுநாகப்பூ |
| கருஞ்சீரகம் | | |

வகைக்கு $\frac{1}{4}$ சேர், கருஉப்பு, சீரகம், சுக்கு வகைக்கு 9 தோலா, சரக்கொன்றையின் காயின் உள்சதை 9 தோலா, கறியுப்பு $\frac{1}{2}$ சேர், ஏலம் 4 தோலா, இலவங்கப்பட்டை 4 தோலா, இவைகளைத் தனித்தனியாக சூரணம் செய்து பிறகு எல்லாவற்றையும் ஒன்றுகூட்டிக் கலந்துவைக்கவும். சரீரத்திற்குத் தகுந்தபடி அரை தோலா முதல் ஒருதோலா வரையில் மோரில் கலந்துகொடுக்கவும். எலுமிச்சஞ் சாற்றிலும் கொடுக்கலாம்.

## 60. கற்பூராதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| விளாமிச்சை வேர் | தாமரை வளையம் | நெருஞ்சில் வேர் |
| சீரகம் | அமுக்கராக் கிழங்கு | பூனைக்காலி விதை |
| | | தக்கோலம் |

| | | |
|---|---|---|
| ஜாதிக்காய் | நெற்பொறி | சண்பக மொட்டு |
| ஜாதிப்பத்திரி | சந்தனம் | அரேணுகம் |
| கோஷ்டம் | செஞ்சந்தனம் | கூகைநீர் |
| ஏலம் | சுக்கு | குங்குமப்பூ |
| நிலப்பனை | மிளகு | பச்சைக்கற்பூரம் |
| திராக்ஷை | திப்பிலி | சிறுநாகப்பூ |
| பேரீச்சங்காய் | அதிமதுரம் | தாமரைக்கிழங்கு |
| வெள்ளைச்சாரணை | | |

இவைகள் வகைக்கு 3 விராகனெடை, சீனக்கற்கண்டு வெல்லஞ்சர்க்கரை வேண்டிய அளவு இவைகளை ஒன்று கூட்டிச் சூரணம் செய்து கொள்ளவும். மூவிரல்கொண்ட அளவு சூடணத்தை தேன் அல்லது நெய்யில் கலந்து சாப்பிட தாதுநஷ்டம், க்ஷயம், ரத்த பித்தம், இருபது வகை மேகம், மூத்திரகிரிச்சரம் முதலான வியாதிகள் தீரும்.

இதற்குப் பத்தியம் :- கைப்பு, புளிப்பு தள்ளவும்.

## 61. சீத, இரத்தபேதிக்குச் சூரணம்

| | | |
|---|---|---|
| ஏலம் | இலவங்கப்பட்டை | கர்க்கடசிங்கி |
| கிராம்பு | அதிவிடயம் | சிறுநாகப்பூ |
| கசகசா | வட்டத்திருப்பி | |

வகைக்கு $2\frac{1}{2}$ விராகனெடை இவைகளை இலேசாக வறுத்துக்கொண்டு பொடி செய்து வடிகட்டியபின் இதனுடன் கற்கண்டு தேவையான அளவும், ஜாதிக்காய் 2 (எண்ணிக்கையில்) ம் கலந்து சூரணம் செய்துகொள்ளவும். கொட்டைப் பாக்களவு சூரணத்தைத் தேனுடன் குழப்பி இரு வேளையும் கொடுக்கச் சீத இரத்தம் நிற்கும்.

## 62. அஜீரணத்திற்குச் சூரணம்

சுக்கு, மிளகு, ஓமம், வகைக்கு $\frac{1}{4}$ படி, இவைகளைப் பிரண்டையின் சாற்றில் கலந்து உலர்த்திச் சூரணம்செய்து வஸ்திரகாயஞ்செய்து, ஐவிரல்கொண்ட அளவு சூரணத்தை

உட்கொள்ளவும் மெல்லிய சரீரத்திற்கு நெய்யிலும், பருத்த சரீரத்திற்குத் தேனிலும். இம்மருந்தை இருபது நாட்களுக்குக் கொடுக்கவும். கைப்பு, புளிப்பு நீக்கவும்.

## 63. ஊதுபாண்டு ரோகத்திற்குச் சூரணம்

கையாந்தகரை, சுத்திசெய்த சிவதை வேர், வெள்ளைச் சாறடை, இவைகளின் சூரணம் வகைக்கு ஒரு உழக்கு. சுத்திசெய்த அரப்பொடி 3 உழக்கு, புங்கங் கொழுந்துச் சூரணம் 3 உழக்கு இவைகளைக் காயவைத்துக் கல்லுரலி லிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து கொண்டு ஒரு விராக னெடை சூரணத்திற்கு ஒரு விராகனெடை மிளகுத்தூள் சேர்த்து உட்கொண்டுவரப் பாண்டுரோகம் தீரும்.

பத்தியம் :- நல்லெண்ணெய், மாமிச வகைகள், பிண் ணாக்கு, முதலியவைகளைச் சேர்த்துக் கொள்ளலாம்' சிவதை வேரின் மேல்தோலை நீக்கிவிட்டு பசுவின் பாலில் வேகவைத்துக் கொண்டால் சுத்தியாகும்.

## 64. சோகை முதலானதற்குக் காந்தாதிச் சூரணம்

சுத்திசெய்த காந்தம் 20 விராகனெடை, சுத்திசெய்த இரும்புத்தூள் 20 விராகனெடை, கிட்டம் 40 விராக னெடை, மிளகு 20 விராகனெடை இவைகளைக் கல்லுரலி லிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து, இவை முழுகும்படி கையாந்தகரைச் சாற்றைவிட்டு ஊறவைக்கவும். பின்பு இதையொரு கல்வத்திலிட்டு நன்ருக அரைத்துக் கொண்டு நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு, மோர் சாதம் சாப் பிட்ட பின்பு இச்சூரணத்தில் மூவிரல் கொள்ளுமளவு எடுத்து மோரிலேயே குழப்பிச் சாப்பிடவும்.

பத்தியம் :- கோழிக்கறி கூட்டிக் கொள்ளவும். புளிப்பு, கைப்பு, பதார்த்தங்களை நீக்கவும், சோகை, சூலை முதலிய வியாதிகள் தீரும்.

## 65. பாண்டு, சுவாச காசம் முதலானதற்குப் பஞ்சபாணச் சூரணம்

| | | |
|---|---|---|
| ஏலம் | தக்கோலம் | சுடுக்காய்த்தோல் |
| பச்சைக்கற்பூரம் | சந்தனம் | தான்றிக்காய்த்தோல் |
| திப்பிலி | கிராம்பு | அதிமதுரம் |
| சிறுநாகப்பூ | சுக்கு | யானைத்திப்பிலி |
| நெல்லிமுள்ளி | மிளகு | |

இவைகளைச் சமஎடை எடுத்துக் காயவைத்து கல்லுரலி லிட்டிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள் ளவும். கஞ்சாயிலையை எடுத்துச் சுத்திசெய்து சமஎடை எடுத்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து, பிறகு இவ் விருவகைச் சூரணங்களையு மொன்று கூட்டி சூரணத் திற்கு இருமடங்கு சர்க்கரையும் கூட்டிக்கொள்ளவும். இதில் மூவிரல்கொண்ட அளவு வீதம் தினம் ஒருவேளை சாப்பிட இரத்தபித்தம், பாண்டு, சுவாசகாசம் முதலிய ரோகங்கள் தீரும். கஞ்சாயிலையை பாலிலூறவைத்து 7 தடவை ஓடும் தண்ணீரில் கழுவினால் சுத்தியாகும்.

## 66. சோகை முதலானதற்கு நந்தியாவட்டைச் சூரணம்

அடுக்கு புஷ்பங்களை புஷ்பிக்கும் நந்தியாவட்டை வேரின் மேல்தோல், பாலில் வேகவைத்தெடுத்த தோல் நீக்கிய சிவதை வேர், கடுக்காய்த்தோல் இவைகளைச் சமமாக எடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

இச்சூரணத்தில் மூவிரல் கொள்ளுமளவு எடுத்து வெந் நீருடன் உட்கொள்ள காமாலை, பித்தாதிக்கம், பாண்டு, சோகை முதலிய நோய்கள் தீரும்.

## 67. இலவங்கப்பட்டைச் சூரணம்

| | | |
|---|---|---|
| சன்னலவங்கப்பட்டை | சாதிக்காய் | நன்னாரிவேர் |
| சிறுநாகப்பூ | வாயுவிளங்கம் | தக்கோலம் |

| | | |
|---|---|---|
| கோரைக்கிழங்கு | திப்பிலி | நெற்பொறி |
| ஏலக்காய் | அதிமதுரம் | செங்கழுநீர்க்கிழங்கு |
| சீரகம் | இலவங்கப்பத்திரி | சந்தனத்தூள் |
| கிராம்பு | கூகைநீர் | பேரீச்சங்காய் |
| நெல்லிமுள்ளி | திராக்ஷைப்பழம் | |

இச்சரக்குகளை வகைக்கு 1 விராகனெடை வீதமெடுத்துக் காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து இதற்குச் சமனெடை, சர்க்கரையைக் கலந்து தினமும் மூவிரல் கொள்ளுமளவு சூரணத்தை சாப்பிட்டுவர, உட்சுரம், காமாலை முதலான வியாதிகள் தீரும்.

## 68. அரித்திராதிச் சூரணம்

| | | |
|---|---|---|
| மஞ்சள் | இந்துப்பு | தான்றிக்காய்த்தோல் |
| நெல்லிமுள்ளி | கடுக்காய்த்தோல் | கடுகரோகிணி |

இவைகளைச் சமமெடுத்து காயவைத்துக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து, வேண்டும்பொழுது ஒரு வெறுகடித்தூளெடுத்து நெய்யுடன் குழைத்துச் சாப்பிட காமாலை தீரும்.

## 69. காமாலை, மகோதரம், க்ஷயம் முதலான ரோகங்களுக்குச் சூரணம்

| | |
|---|---|
| இலவங்கப்பட்டை | கடுக்காய்த்தோல் |
| ஓமம் | தான்றிக்காய்த்தோல் |
| சதிக்ஷாரம் | அதிவிடயம் |
| சிறுதேக்கு | இந்துப்பு |
| யானைத்திப்பிலி | உவர்மண்ணுப்பு |
| கோஷ்டம் | அட்டுப்பு |
| ஏலக்காய் | இலவங்கப்பத்திரி |
| மஞ்சள் | எவக்ஷாரம் |
| செவ்வியம் | நிலவேம்பு |
| முள்ளுக்கத்திரிவேர் | கொடிவேலிவேர்ப்பட்டை |
| கோரைக்கிழங்கு | செங்கழுநீர்க்கிழங்கு |

| | |
|---|---|
| சிரகம் | கிராம்பு |
| நன்னாரிவேர் | நெல்லிமுள்ளி |
| வாயுவிளங்கம் | பொரித்த பெருங்காயம் |
| சுத்திசெய்த சிவதை | கடலுப்பு |
| பொன்முசுட்டை [வேர் | வளையலுப்பு |
| கருஞ்சிரகம் | கடுகரோகிணி |

இச்சரக்குகளை வகைக்கு ஒரு விராகனெடை வீதமெடுத்து வெய்யிலில் உலர்த்திக் கல்லுரலிலிட்டிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

இச்சூரணத்தில் மூவிரல் கொண்ட அளவெடுத்து வெந்நீரிலோ அல்லது தேனிலோ உட்கொள்ளவும்.

இச்சூரணத்தினல் தீரும் வியாதிகள் :

சங்கிரஹணி, க்ஷயம், காமாலை, குன்மம், உருசியின்மை பித்தாதிக்கம், பாண்டு, அக்கினிமந்தம் முதலான பற்பல ரோகங்கள் தீரும்,

## 70. இருமலுக்குச் சூரணம்

திப்பிலி, விருக்ஷியிள் வேர், இவ்விரண்டையும் இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து, பசுவின் நெய்யிலோ அல்லது பசு வெண்ணெயிலோ வேளை ஒன்றுக்கு $1\frac{1}{2}$ விராகனெடை பிரமாணம் இரு வேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள, கபரோகம், மயக்கம், முதலான வியாதிகள் தீரும். ஸ்திரீகளும் புருஷர்களும் சாப்பிடலாம்.



சத்ரபதி ப்ரதாபசிம்ஹ ராஜா சாஹேப்
போன்ஸ்லே அவர்களின்

60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



**லேகியம், இரஸாயனம்,**
**வடகம், பாகு.**

# லேகியம், இரசாயனம், வடகம், பாகு.

## 71. பில்வாதி லேகியம்

வில்வவேர் 12 சேர், வெட்டிவேர் 1 சேர், விளாமிச்சை வேர்2 சேர். இவைகளை ஒரு பானையிலிட்டு 48 படி தண்ணீர் விட்டு அடுப்பின் மேலேற்றி மூன்றிலொரு பாகமாகக் கஷாயமிறக்கிக்கொண்டு அதில் பழம் வெல்லம் 12 சேர் சேர்த்துப் பாகு செய்து கொள்ளவும், பிறகு மிளகு $\frac{1}{4}$ சேர் திப்பிலி $\frac{1}{2}$ சேர், சுக்கு $\frac{1}{4}$ சேர், திப்பிலி மூலம் $\frac{1}{2}$ சேர், சிறுநாகப்பூ $\frac{1}{2}$ சேர், தாளிசபத்திரி $\frac{1}{4}$ சேர், ஜாதிக்காய் $\frac{1}{4}$ சேர், கருஞ்சிரகம் $\frac{1}{4}$ சேர், இலவங்கம் $\frac{1}{4}$ சேர், பூலாங் கிழங்கு $\frac{1}{4}$ சேர், செவ்வியம் $\frac{1}{4}$ சேர், சித்திரமூலம் $\frac{1}{4}$ சேர், மூங்கிலுப்பு $\frac{1}{4}$ சேர், ஏலம் $\frac{1}{4}$ சேர், சந்தனத்தூள் $\frac{1}{4}$ சேர், இலவங்கப்பட்டை $\frac{1}{4}$ சேர், நன்னுரி $\frac{1}{2}$ சேர், சீந்தில்பாலை $\frac{1}{4}$ சேர், அதிமதுரம்' $\frac{1}{4}$ சேர், இஞ்சி $\frac{1}{2}$ சேர், கருவேப்பிலை ஈர்க்கு $\frac{1}{4}$ சேர், பேரீச்சங்காய் $\frac{1}{4}$ சேர், கொத்தமல்லி $\frac{1}{4}$ சேர் களிப்பாக்கு $\frac{1}{4}$ சேர் இவைகளைச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து முன் சொன்ன பாகு பக்குவமானதும் அதில் சூரணத்தைப் போட்டுக் கிளரி லேகிய பக்குவமானதும் இரண்டு படி தேனைச் சேர்த்து ஒன்றுபடக் கலந்து இறக்கிக் கொள்ளவும். ஒரு கழற்சிக்காயளவு உட் கொள்ளவும். பித்தம், பிரமை, அரோசகம், கிராணி, சுவாசம், அக்கினிமந்தம் முதலான நோய்கள் தீரும்.

## 72. வாதரோகங்களுக்கு லேகியம்

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி, இந்துப்பு, ஏலம், கல்லுப்பு, சிரகம், கேழ்வரகு, ஓமம், காயம், வாயு விளங்கம், சுத்தி செய்த நேர்வாளம், வெட்பாலையரிசி, வெள்ளைச் சாறடை வேர். சித்திரமூல வேர், ஏரங்கிழங்கு மருள் கிழங்கு, புளி நரளைக் கிழங்கு, காட்டுக் கருணை இவைகளில் கடைச் சரக்குகளின் எடை வகைக்கு 5 விராகனெடை மற்ற சாமான்களின் எடை வகைக்கு

4 விராகனெடை. பிறகு யாவற்றையும் கல்லுரலிலிட்டு இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும். பிறகு இச்சூரணத்தைக் கையாந்தகரைச் சாற்றிலரைத்து ஒருசேர் தேனையும் குழப்பி, ஒருபடி பசுநெய்யுங் கூட்டி, அடுப்பின் மேலேற்றி லேகிய பக்குவமாகச் செய்து கொள்ளவும். ஒரு நெல்லிக்காயளவு தினமும் இரு வேளையுட்கொள்ள சகலவித வாத ரோகங்கள் தீரும்.

## 73. காசம், கபம் முதலானதற்குச் சண்டமாருத லேகியம்

சுத்தமான 100 கடுக்காயை (எண்ணிக்கையில்) மிகப் பழைய காடி 1 படியில் இரவு முழுதும் ஊறவைத்து மூன்று நாள் வெய்யிலில் உலர்த்தவும். இவ்வாறு மூன்று முறை காடியில் ஊறலிட்டு உலர்த்திக் கொள்ளவும் பிறகு கடுக்காயை உடைத்து தோலைமட்டும் எடுத்துக் கொண்டு அதன் எடையை நிறுத்து, அவ்வெடைக்குக் கால்பங்கு சௌவர்ச்சலவணம், கால்பங்கு பசுவின்மோர் இவைகளை ஒன்றுகூட்டி ஒரு பானையிலிட்டு அடுப்பின் மேலேற்றி மோர் சுண்டும் வரையில் காய்ச்சிப் பிறகு வெய்யிலில் உலர்த்தி இடித்துப் பொடி செய்து வடிகட்டி வைத்துக்கொள்ளவும். பிறகு மிளகு, இந்துப்பு வகைக்கு 1 பலம், திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சித்திரமூலம் வகைக்கு 5 பலம் எடுத்துக்கொண்டு சூரணம் செய்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு, மேற்சொன்ன சூரணத்தை இத்துடன் கலந்து எலுமிச்சம்பழ ரசத்தில் அரைத்துப் பின்பு லேகியம் செய்யும் முறைப்படி செய்து கொள்ளவும். ஒரு தான்றிக்காயளவு உருண்டை 40 நாட்கள் காலையில் மட்டிலும் உட்கொள்ளவும்.

இதற்குப் பத்தியம் :— புளி, கைப்பு, புகையிலை இவைகளை விலக்கவும். உப்பை வறுத்துக்கொண்டு கூட்டவும். பசும்பால், பசுநெய் வேண்டியமட்டும் சாப்பிடவும். பசும்பால், பசுநெய் வேண்டியமட்டும் சாப்பிடவும்.

முருங்கைப்பிஞ்சு. கத்திரிப்பிஞ்சு, துவரம்பருப்பு, அரைக்கீரை முதலியவைகளை சேர்த்துக்கொள்ளலாம்.

## 74. கபம், இருமல் இவைகளுக்குச் சண்டமாருத லேகியம்

கண்டங்கத்திரிவேர், தூதுவளை, நுணா, துளசி. மணத்தக்காளி, ஆடாதோடை, இவைகளின் சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி ஒரு பானையிலிட்டு அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி அதில் திப்பிலி, அரத்தை, கடுக்காய்த்தோல் வகைக்கு 25 விராகனெடை வீதம் எடுத்துப் பொடி செய்து வஸ்திரகாயஞ் செய்து ஷ சூரணத்தை அதில் கலந்து பக்குவமாகக் காய்ச்சி லேகிய பக்குவமானதும் $\frac{1}{8}$ படி தேனும் $\frac{1}{8}$ படி நெய்யுங் கூட்டி இறக்கிக் கொள்ளவும்.

அனுபானமும் பத்தியமும் :— முன் கூறிய சண்டமாருத லேகியத்திற்குச் சொல்லிய பிரகாரம் செய்யவும்.

## 75. கபம், இருமல், குன்மம், க்ஷயம், இரத்தபித்தம் முதலானதற்குக் கூஷ்பாண்ட (பூசணி) லேகியம்

திப்பிலிமூலம், ஜாதிக்காய், சண்பகப்பூ, சுக்கு. மிளகு கர்கடசிங்கி, நிலவேம்பு, கோஷ்டம், மல்லி, கருஞ்சீரகம், ஓமம், ஏலம், இலவங்கம், திப்பிலி. இந்துப்பு, செவ்வல்லிக் கிழங்கு, அதிமதுரம், சிறுதேக்கு, சிறுநாகப்பூ, தேவதாரம், இலவங்கப்பத்திரி, வகைக்கு 4 விராகனெடை கொண்டு வந்து வெய்யிலில் உலர்த்திக் கல்லுரலிலிட்டிடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து வைக்கவும்.

முற்றின பூசணிக்காய் ஒன்றை அறிந்து உள்ளிருக்கும் விதை முதலானவைகளை நீக்கிவிட்டு திருகு பலகையில் திருகி. பிறகு அதிலுள்ள நீரைப் பிழிந்தெடுத்துவிட்டு அடுப்பின் மேலேற்றி நெய்விட்டு பொன்னிறமாக வறுத்துக் கொண்டு கல்லுரலிலிட்டிடித்துப் பொடி செய்து முன்பு செய்துவைத்திருக்கும் சூரணத்தில் கலந்து அடுப்பின்மேல்

வாழுறுவை ஏற்றி இரண்டுபடி பசு நெய் விட்டு, சூரணம் அரைப்படி, சர்க்கரை, ஒருபடி தேன் இவைகளைக் கூட்டி லேகிய பக்குவமாகச் செய்து கொள்ளவும். ஒரு சிறிய எலுமிச்சம்பழ அளவு காலையில் மட்டும் உட்கொள்ள கபம் இருமல், எட்டுவித குன்மம், க்ஷயரோகம், இரத்த குன்மம் முதலான நோய்கள் தீரும்.

## 76. குன்மத்திற்கு வில்வாதி லேகியம்

மேற்றோல் நீக்கிய வில்வவேர் 30 பலத்தை இடித்து 16 படி தண்ணீர்விட்டு ஒருநாள் முழுதும் ஊறவைக்கவும். பிறகு இதை அடுப்பின்மேலேற்றி எட்டிலொரு பங்கு கஷாயம் செய்துகொள்ளவும். இக்கஷாயத்துடன் 30பலம் வெல்லத்தைக் கலந்து வடிகட்டி அடுப்பின்மேலேற்றி பாகு செய்யவும். செவ்வியம் 4 பலம், சுக்கு 3 பலம், மிளகு 2 பலம், சீரகம் 2 பலம், திப்பிலி 2 பலம், சித்திரமூலவேர் 1 பலம், அதிமதுரம் 1 பலம், திப்பிலி மூலம் 1 பலம், ஜாதிப் பத்திரி 1 பலம், இலவங்கப்பத்திரி $\frac{1}{2}$ பலம், ஏலம் $\frac{1}{2}$ பலம், இவைகளை பொன்னிறமாக வறுத்துக்கொண்டு கல்லுரலி லிட்டிடித்துப் பொடி செய்து வஸ்திரகாயஞ் செய்து முன்பு சொல்லப்பட்டிருக்கும் பாகுடன் கலந்து லேகிய பக்குவ மாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளவும். ஆறியதும் 1 படி தேனையும் கூட்டி வைத்துக் கொள்ளவும். தினந்தோறும் களர்ச்சிக்காய் பிரமாணம் சாப்பிட எட்டுவித குன்மம், கிராணி கிருமி, காசம், சுவாஸம், விஷபாண்டு, காமாலை, அரோசகம், முதலான ரோகங்கள் தீரும்.

## 77. நீரிழிவுக்கு லேகியம்

அத்திப்பட்டை, அரசம்பட்டை, தேரணிப்பட்டை, இலுப்பப்பட்டை, மாம்பட்டை, வதியின் (?) பட்டை, ஆவாரம்பட்டை. பலாசம்பட்டை, கிலுவைப்பட்டை, இவைகள் சமஎடை. கடுக்காய் 4 ( எண்ணிக்கையில் ), வாழைக்காய் 4 (எண்ணிக்கையில்), வாழைக்கச்சல் 20

(எண்ணிக்கையில்), மாதுளை 4 (எண்ணிக்கையில்), இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்து ஒரு கலயத்திலிட்டுத் தண்ணீர் ஊற்றி அடுப்பின்மேலேற்றிக் காய்ச்சவும். அரை பாகமாக கஷாயமிறக்கி வடிகட்டிக்கொண்டு, அக் கஷாயத்தில் மிளகு, திப்பிலி, வசம்பு வகைக்கு $4\frac{1}{2}$ விராகனெடை, ஜாதிக்காய் 4 (எண்ணிக்கையில்), இவைகளைச் சூரணித்து, யாவற்றையும் ஒன்றுகூட்டி லேகிய பதமாகக் கிண்டி எடுத்துக் கொள்ளவும். களர்ச்சிக்காய்ப் பிரமாணம் தேன், நெய் அல்லது தயிர் இவ்வித அனுபானத்தில் 40 நாள் உட்கொள்ளவும்.

பத்தியம் :- கைப்பு, புளிப்பு நீக்கவும்.

## 78. வஜ்ரபல்லஹரிதகி லேகியம்

பிரண்டை, புளிநரளை, மருள்வேர், காட்டுக்கருணை, கருணை, நாயுருவிவேர் வகைக்கு 10 பலம், கடுக்காய் 100 (எண்ணிக்கையில்) இவைகளை ஒன்றுகூட்டி ஓர்பானையிலிட்டு 8 படி தண்ணீர் ஊற்றி, எட்டிலொருபங்குக் கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டி வைக்கவும். அதினின்று கடுக்காய்களை எடுத்து உலர்த்திக்கொள்ளவும். மேற்சொன்ன கஷாயத்தில் :0 பலம் வெல்லத்தைப் போட்டு பாகு செய்யவும்.

பிறகு ஏலம், சுக்கு' கோஷ்டம், இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, வாயுவிளங்கம், ஜீரகம், கருஞ்சீரகம், வெட்பாலை, ஓமம், திப்பிலி, சதகுப்பை, இலவங்கம், நிலப்பனைக்கிழங்கு, யானைத்திப்பிலி வகைக்கு $\frac{1}{4}$ பலம் எடுத்திடித்துச் சூரணித்துக்கொள்ளவும். நான்கு பலம் சேராங்கொட்டையையும், நான்கு பலம் கருணைக் கிழங்குகளையும், நான்கு பலம் நெய்யில் வறுத்தெடுத்துச் சூரணித்துக்கொள்ளவும். பிறகு லோஹ (இரும்பு) பற்பம் 4 பலம், கோரைக்கிழங்கு 4 பலம், நீர்ப்பிரமி 4 பலம், இவைகளையும் இடித்துப் பொடிசெய்து சூரணங்கள் யாவற்றையும் ஒன்றுகூட்டி மேற்சொன்ன பாகில் கலந்து

நான்குபலம் நல்லெண்ணெயும் ஊற்றி, லேகிய பக்குவமாய் இறக்கி ஆறியபிறகு 24 பலம் தேனையுங் கலந்து கிண்டி வைக்கவும்.

வேளை ஒன்றுக்கு 2 விராகனெடை வீதம் தினம் ஒரு வேளை உட்கொள்ளவும். இந்த லேகியத்தில் பிரண்டை (வஜ்ரவல்லி), சேராங்கொட்டை (பல்லாதி), கடுக்காய் (ஹரிதகி) என்ற மூன்று விசேஷ சரக்குகள் சேர்த்து செய்யப்பட்டிருப்பதால் இதற்கு வஜ்ரபல்லஹரிதகிலேகியம் என்று பெயர் வழங்கப்பட்டது. இம்மருந்தினால் குன்மம், சூலை, மூலவியாதி, கைகால்களின் கணுக்களிலுண்டாகும் ரோகங்கள், வயிற்றுக்கட்டிகள், பாண்டுரோகம், மகோதரம் முதலானவைகள் தீரும். இம்மருந்து அநேகருக்கு கொடுக்கப்பட்டு அனுபவங்கண்டது.

## 79. பிரமியத்திற்கு விசேஷ லேகியம்

முற்றின நெல்லிக்காயின் சாறு 2 படி, எள் எண்ணெய், கருப்பஞ்சாறு, வெள்ளாட்டுப்பால், நெருஞ்சில் வேரின் சாறு, நாகப்பூவின் சாறு, பசுநெய், தண்ணீர் விட்டான் கிழங்கின் சாறு வகைக்கு 1 படி, இவைகளை ஒன்றுகூட்டி, இலுப்பைப்பூ 8 விராகனெடை, அதிமதுரம் 2 பலம் இவைகளைச் சேர்த்து அடுப்பின்மேலேற்றி பக்குவமாய்க் காய்ச்சி திராக்ஷைப்பழம் 4 பலம், சூரணித்த சுக்கு, மிளகு, திப்பிலி வகைக்கு 1 பலம் கலந்து, பிறகு ஒருபடி தேனும், 2 பலம் சர்க்கரையும் சேர்த்து நன்றாக மேலுங் கீழுமாகக் கிண்டிவைத்துக் கொள்ளவும். இம்மருந்தில் தினமும் ஒருவேளைக்கு 2 விராகனெடை வீதம் உட்கொள்ளவும்.

இதனால் தீரும் வியாதிகள் :- மார்புவலி, பிரமியம், விரணங்களால் உடம்பு இளைத்தல், இருமல், கபம், காக்காய் வலிப்பு, உன்மாதம் முதலானவை தீரும். வயதுக்குத் தகுந்தவாறும் காலத்திற்கு ஏற்றவாறும் மருந்தின் அளவை கூட்டியும் குறைத்தும் கொடுக்கவும்.

பாண்டு, காமாலை, தனுர்வாதம், அதிசாரம், தாதுநஷ்டம், வாந்தி முதலான வியாதிகள் குணமாகும். ஜாடராக்கினியின் பலத்தைப் பார்த்து ஸ்திரீகளுக்குக் கொடுக்க புத்திரசந்தானம், பொன்மேனி, நீண்ட ஆயுள் இவைகள் உண்டாகும்.

## 80. தும்மட்டிக்காய் லேகியம். அஷ்ட குன்மம், சுவாசரோகம் முதலானவைகளுக்கு

தும்மட்டிக்காய்ச் சாறு ½ படி. பிரண்டைச் சாறு 1படி, இவைகளை ஒன்றாகக் கலந்து ஒரு கலையத்திலிட்டு அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி பாகு பக்குவமாகும் பொழுது பஞ்சலவணம் வகைக்கு 4½ தோலா, கருஞ்சீரகம் ¼ பலம் இவ்வாறையும் கலந்து ½ சேர் தேனையுங் கூட்டிப் பக்குவம் செய்து கொள்ளவும். இம்மருந்தை வேளைக்கு அரை கொட்டைப்பாக்களவு இருவேளையும் பத்து நாட்களுட் கொண்டால் எட்டுவித குன்மம், குடலிலுள்ள வாயுவு, மகோதரம், பெருவயிறு, அக்கினிமந்தம், கபரோகம், சுவாசம் முதலான வியாதிகள் தீரும்.

## 81. ருமிமஸ்தகி பல்லாதி லேகியம்

சேராங்கொட்டை 34 விராகனெடை, தண்ணீர்விட்டான் கிழங்கு 28 விராகனெடை, நிலப்பனைக்கிழங்கு 28 விராகனெடை, ருமிமஸ்தகி 24 விராகனெடை, நாய்க்கடுகு, குரோசானி ஓமம், ஓம உமி, சீர்மானி ஓமம், வகைக்கு16 விராகனெடை, பாதரசம் 3 விராகனெடை, பனைவெல்லம் 32 விராகனெடை. இவைகளில் ஓம வகையும், நாய்க்கடுகையும் சட்டியிலிட்டு வறுத்துக்கொண்டு கல்லுரலிலிட்டிடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்யவும். பிறகு சேராங்கொட்டையைச் சாணிப்பாலில் வேகவைத்து உறித்து அதன் மூக்கையும் (மூளை) எடுத்தெறிந்து விட்டு, புளியிலையை இடித்து அதன் கஷாயம் செய்துகொண்டு, இக்கஷாயத்தில் சேராங்கொட்டைப் பருப்பை மூன்று

நாள் ஊறவைத்துப் பின்பு நான்காம் நாள் அதிலேயே வேகவைத்து, கல்லுரலிலிட்டிடித்துப் பொடிசெய்யவும். தண்ணீர்விட்டான் கிழங்கு, நிலப்பனைக்கிழங்கு இவைகளை உலரவைத்திடித்துச் சூரணம் செய்யவும்.

பிறகு பாதசரத்தைச் சேராங் கொட்டைத்தூளிலிட்டு கடப்பாறையால் நன்றாகத் தேய்த்துப் பிசைந்து கொஞ்சங் கொஞ்சமாக மற்ற எல்லா சூரணங்களையும் ஒன்றுசேர்த்து கல்லுரலில்போட்டு இடிக்க இடிக்க எல்லாம் ஒன்றாகும். அச்சமயத்தில் பனைவெல்லத்தையும் கொடுத்து இடித்து ஒன்றுபடச்செய்து, சீனா (பீங்கான்) பாத்திரத்தில் எடுத்து பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

இம்மருந்தினால் தீரும் வியாதிகள் :- அஜீரணம், வாயு, சூலை, வயிற்றுவலி, பொருமல், குடலிலுள்ள வாயு, இடுப்புவலி, மார்புவலி, கிராந்தி இவைகளுக்கு இம் மருந்தை மோரில் கலந்துகொடுக்க நோய் தீரும்.

தேற்றான் கொட்டைப் பிரமாணம் மருந்தைக் கொடுக்கவும்.

பத்தியம் :- நெய், பால், வெள்ளாட்டுக்கறி, கத்தரிக்காய், அவரைக்காய், முருங்கைக்காய், துவரம் பருப்பு, இவைகளைச் சேர்த்துக்கொள்ளவும். மஞ்சள், கடுகு, நல்லெண்ணெய், வாயுபதார்த்தங்கள், மீன், உலர்ந்த மீன், பழையசாதம், மாவு பதார்த்தம், பாகல், அகத்திக்கீரை இவைகளை விலக்கவும்.

## 82. அசுவகந்தி லேகியம்

அமுக்கிராக்கிழங்கு 20 பலம், குழவு சீனி 10 பலம், பால் 1 சேர், நெய் சேர் 1, சுக்கு, மிளகு, திப்பிலி, இல வங்கப்பத்திரி, தாளிசபத்திரி, நாககேசரம் (சிறுநாகப்பூ), திப்பிலிமூலம், அரத்தை வகைக்கு 1 பலம், தூதுவளைவேரின் மேல்தோல் 1 பலம், கண்டங்கத்திரி வேரின் மேற்றோல் 1 பலம். அமுக்கிராக்கிழங்கு, தூதுவளை, கண்டங்கத்திரி

இவைகளைத் தனித்தனியே இடித்து, மற்றவைகளைப் பொன்னிறமாக வறுத்தெடுத்து இத்துடன் மற்றவேர்களின் மேற்றோலையுங் கலந்து கல்லுரலிலிட்டிடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்துவைக்கவும். பிறகு பாலிட்டுச் சர்க்கரையைப் பாகு செய்து, பாகு ஆகும் பக்குவத்தில் சூரணங்களெல்லாவற்றையும் ஒன்றுகூட்டி, நெய்யுங்கூட்டி, லேகிய பக்குவமானதும் ஒரு சேர் தேனையுங் கலந்துகிண்டி எடுத்துக்கொள்ளவும். வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொண்டால் உட்சுரம், இருமல், அக்கினிமந்தம் முதலிய வியாதிகள் தீரும்.

பத்தியம் :- இச்சாபத்தியம்.

## 83. சிலேத்துமத்திற்கு அரத்தை லேகியம்

பேரரத்தை 25 பலம், சிற்றரத்தை 25 பலம், சித்திரமூலம் 50 பலம், செவ்வியம் 32 பலம், மிளகு, திப்பிலி, சிறுதேக்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, இலவங்கப்பட்டை, அகில்பட்டை, ஆடாதோடை வேர், நெரிஞ்சில் வேர், வெண்சங்கங்குப்பி, கருஞ்சங்கங்குப்பி, பிரண்டை, சிறுகாஞ்சி வேர், நீலி வேர், முட்காவேளை வேர், சாரணை வேர், நார்த்தயிலை இவைகள் வகைக்கு 16 பலம். யாவற்றையுமிடித்து, ஒரு பானையில் போட்டு 16 படி தண்ணீர்விட்டுக் காச்சி எட்டிலொன்று பாகமாய் கஷாயம் இறக்கி வடிகட்டிக்கொள்ளவும். இக் கஷாயத்தில் 80பலம் பழைய வெல்லத்தைப் போட்டு அடுப்பின் மேலேற்றிப் பாகு செய்து, பாகு பக்குவமானதும் கீழே குறிப்பிட்டுள்ள சாமான்களின் சூரணத்தையுஞ் சிந்தூரத்தையும் சேர்க்கவும். சுக்கு, மிளகு, திப்பிலி, யானைத்திப்பிலி, திப்பிலிமூலம், அதிவிடயம், சிறுநாகப்பூ, வாயுவிளங்கம், கிராம்பு, பூலாங்கிழங்கு, சிறுதேக்கு, தக்கோலம், கர்கடசிங்கி, மெருகன்கிழங்கு, கொத்தமல்லி, இரேணுகம், லோகசிந்தூரம், ரசசிந்தூரம் வகைக்கு 5 பலம். ரசசிந்தூரம், லோகசிந்தூரம் இவற்றைத்தவிர மற்றவைகளைச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து இச்சூரணத்துடன்

சிந்தூரங்களையும் கலந்து கொள்ளவும். 4 பலம் பொறித்த வெங்காரத்தையும் இத்துடன் கலந்து எல்லா சூர்ணங்களையும் மேல் குறிப்பிட்ட பாகில் சேர்த்து லேகியபக்குவம் செய்து எட்டு சேர் தேனையுமூற்றிக் கிண்டி எடுத்துக் கொள்ளவும். வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு இரு வேளையும் ஒரு மண்டலம் உட்கொண்டால் இருபது விதமான சிலேத்துமமும், பஞ்சகாசங்களும், சுவாசகாசமும், அக்கினி மந்தமும், மலச்சிக்கலும், அன்ன துவேஷமும், அரோசகமும், வாந்தியும், மார்புவலியும், தலைவலியும், பீனிசமும், வாயுரோகமும் தீரும்.

## 84. வாயு, க்ஷயம் முதலானதற்கு லேகியம்.

திப்பிலி 8 பலம், மிளகு, சுக்கு, வாயுவிளங்கம், அமுக்கிராக்கிழங்கு வகைக்கு 2 பலம், சித்திரமூலம், செவ்வியம், அரத்தை, உலர்ந்த கையாந்தகரையிலை வகைக்கு 1 பலம், லோகசிந்தூரம் 1 பலம். லோகசிந்தூரத்தைத் தவிர மற்ற வைகளை கல்லுரலிலிட்டிடித்துத் தூள்செய்து வஸ்திர காயஞ் செய்து, சர்க்கரை 5 பலம், தேன் 1 சேர் இவைகளைக் கூட்டியும் லேகியமாகச் செய்து இத்துடன் லோக சிந்தூரத்தைக் கலந்து ஒன்றுபடச் செய்துகொள்ளவும்.

வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு இருவேளையும் ஒரு மண்டலம் சாப்பிட்டுவர வாயு, க்ஷயம், சுவாசகாசம் முதலான நோய்கள் தீரும்.

## 85. இருபலுக்கு லேகியம்.

பொறித்த வெங்காரம், திப்பிலி, புழுங்கல் அரிசி, மிளகு, கிராம்பு, வகைக்கு 4½ தோலா. புழுங்கலரிசியை நெய்யில் வறுத்துப் பொடித்துக் கொள்ளவும். மற்றவைகளை இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து யாவற்றையும் ஒன்றுபடக் கலந்து நெய்விட்டு அரைத்து லேகிய பக்குவமாகச் செய்துகொள்ளவும். களர்ச்சிக்

காயளவு உருண்டை வேளைக்கு ஒன்றாக சாப்பிட்டுவர இருமல் குணமாகும்.

### 86. இருமலுக்குத் தேற்றான்கொட்டை லேகியம்.

தேற்றான்கொட்டை ½ சேர் கொண்டுவந்து 30 நாழிகை தண்ணீரில் வேகவைத்து பிறகு அதன் மேற்றோலை ஓட்டு வில்லையின் மேல் தேய்த்தெடுத்து சுத்த தண்ணீரில் கழுவி நிர்மலமான துணியினால் துடைத்து அம்மியின்மேல் வைத்துப் பசும்பாலூற்றி மிருதுவாக அரைத்து ஒரு பானையில் வைக்கவும். பிறகு சுக்கு, திப்பிலி, மிளகு, அரத்தை வகைக்கு 1 பலம் எடுத்து பால் சேர்த்து மெல்லியதாக அரைத்து தேற்றான் விழுதுடன் கலந்து ¼சேர் நெய்யை யூற்றி, ஒருசேர் பாலையுமூற்றி ஒன்றாகக் குழப்பி அடுப்பின் மேலேற்றி லேகியம் செய்யும் பக்குவப்படி செய்து கொள்ளவும். வேளைக்கு களர்ச்சிக்காய்ப் பிரமாணம் இரு வேளையும் கொடுக்க கபசுரம், கபத்தினாலேற்பட்ட இருமல் முதலானதுகள் குணமாகும். இது மிகவும் அனுபவங் கண்டது.

### 87. க்ஷயரோகத்திற்கு மகாக்ஷபாகாதி லேகியம்.

அத்திமுள்ளி 100 பலம், பாதரிவேர், பொன்முசுட்டை வேர், சிந்திற்கொடி, ஆடாதொடை, சின்றுமுட்டி, பெராமுட்டி, காட்டாமணக்குக் கிழங்கு, நிலத்தாமரை, தழுதாழை வில்வம், கொடிவேலி, பெரியாமணக்கு, நொச்சி, முதியார் கூந்தல், சிறுவழுதலை, தூதுவளை, குமிழ், சிறுதேக்கு, செவ்வியம். இவைகளில் வேர் தினுசுகள் வகைக்கு 20 பலம், சுக்கு 40 பலம், கடுக்காய் 100 பலம். இவைகளை ஒன்று சேர்த்திடித்து, ஆறுபானைகளில் சமமாக பங்கிட்டுப் போட்டு, பானை ஒன்றிற்கு 32 படி தண்ணீர் விட்டு, தினமும் 1 ஜாமம் பெரிய விறகால் தீயிட்டு எறிக்கவும், ஏழாம்நாள் ஒவ்வொரு பானையிலும் இரண்டுபடி கஷாய மிருக்கும்படி தீயிட்டு, 6 பானைகளிலுள்ள 12 படி

கஷாயத்தையும் ஒன்ருகக் கலந்து ஒரு பாத்திரத்திலூற்றி இரண்டுபடியாகும் வரை சுண்டக் காய்ச்சி, அதில் 100பலம் பழைய வெல்லத்தைக் கரைத்து வஸ்திரகாயஞ் செய்து, அடுப்பின்மேலேற்றி பாகு தயார் செய்யவும். இப்பாகுடன் சேர்க்கவேண்டிய சாமான்களின் விவரம் :-

| | | |
|---|---|---|
| நொச்சிவேர் | வெள்ளைச் சாரணை | தான்றிக்காய் |
| கையாந்தகரை | டரணைவேர் | நெல்லி முள்ளி |
| வசம்பு | கருஞ்சீரகம் | செவ்வியம் |
| மஞ்சள் | இந்துப்பு | கர்கடசிங்கி |
| இஞ்சி | வளையலுப்பு | சிறுதேக்கு |
| ஆடாதோடைவேர் | பொட்டிலுப்பு | தாமரைவளையம் |
| சிந்தில்சர்க்கரை | சுக்கு | அதிவிடயம் |
| வல்லாரை சமூலம் | சமுத்திர உப்பு | கடுகுரோகிணி |
| சீரகம் | பெருங்காயம் | சிற்றரத்தை |
| மரமஞ்சள் | கோஷ்டம் | பேரரத்தை |
| எருக்கமொட்டு | கடுக்காய் | திப்பிலி |

இவைகள் வகைக்கு 66 விராகனெடை.

இச்சரக்குகளை நன்ருக இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து மேற்சொன்ன பிரகாரம் செய்து வைத்திருக்கிற பாகில் போட்டு லேகிய பக்குவம் செய்து, பக்குவமாகும் சமயத்தில் 2 படி தேனையூற்றி கரண்டியினல் கிளறி லேகிய பதத்தில் எடுத்துக்கொள்ளவும். வேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்களவு வீதம் இரு வேளையும் ஒரு மண்டலம் சாப்பிட்டுவர பதினேருவித க்ஷயங்கள், கப சம்பந்தமான பல நோய்கள் தீரும்.

**பத்தியம் :—** இச்சா பத்தியம்.

## 88. இரத்த காசத்துக்கு உசிதமான லேகியம்.

கடுக்காய்த்தோல் 19 விராகனெடை தான்றிக்காய் 19 விராகனெடை, நெல்லிவிதை 19 விராகனெடை, வாலுளுவையரிசி 22 விராகனெடை, உலர்த்திய கையாந்தகரையின் பொடி 62 விலாகனெடை, நொச்சியிலையின் சூரணம் 62 விராகனெடை, கொடிவேலி 62 விராகனெடை, கருவப்பட்டை 62 விராகனெடை, தகர விதை 62 விராகனெடை, சிந்தில் கொடிச் சூரணம் 62 விராகனெடை. இவைகளை ஒன்றுகூட்டிச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு 80 விராகனெடை வெல்லத்தால் பாகு செய்து கொண்டு, அதில் இச்சூரணத்தைக் கலந்து பிசைந்து 300 உருண்டைகள் செய்துகொள்ளவும். வேளை ஒன்றுக்கு ஒரு உருண்டை விதம் பத்து மாதம் சாப்பிடவும். ஒரு மாதம் சாப்பிட்டால் சரீரத்திலுள்ள எல்லா வியாதிகளும் குணமாகும். இரண்டு மாதம் உட்கொண்டால் சரீரம் கெட்டியாகும். மூன்றும் மாதம் உடம்பின் வறட்சி திரும். நான்காம் மாதம் சரீரத்தில் பலம் ஏற்படும். ஐந்தாம் மாதம் சரீரத்திற்கு நிறங்கொடுக்கும். ஆறும் மாதம் சரீரத்தில் அதிகமான பலமேற்படும். ஏழாம் மாதம் கண்களில் ஒளி பிறக்கும். எட்டாம் மாதம் அதிக அறிவு உண்டாகும். ஒன்பதாம் மாதம் சித்தமானது சுத்தியடையும், பத்தாம் மாதம் சித்த சுத்தியின் பலன் கிடைக்கும்.

## 89. பித்தவாயுவுக்குக் கண்டாமலக லேகியம்.

நெல்லிக்காய்ச்சாறு 1 சேர், பால் 1 சேர், தாளிசபத்திரி, மிளகு, சிரகம், சுந்தவெடியுப்பு, கொடிவேலி, ஜாதிக்காய், இலவங்கம், ஜாதிப்பத்திரி, மூங்கிலுப்பு, கூகைநீர், திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், சுக்கு, கொத்தமல்லி, யானைத்திப்பிலி, திராக்ஷை, கண்டத்திப்பிலி, விலாமிச்சைவேர் வகைக்கு 2 விராகனெடை. சிவதை வேர் 2 பலம், சர்க்கரை 3 சேர், நெய் $\frac{1}{4}$ சேர், தேன் $\frac{3}{4}$ சேர், இவைகளைச் சேர்த்து லேகியம் செய்யும்

முறைப்படி செய்துகொள்ளவும். வேளைக்கு நெல்லிக்காய்ப் பிரமாணம் நாள் ஒன்றுக்கு இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள சகல பித்தவாயுவும் தீரும்.

## 90. மேக பித்த வாயுவுக்குப் பேரீச்சம்பழ லேகியம்.

பேரீச்சம்பழம், திராக்ஷைப்பழம், நெல்லிக்காய், இலுப்பைப்பருப்பு, சந்தனம், அதிமதுரம், நெருஞ்சிற்காய், பூச்சக்கரக்கிழங்கு, பூசணிக்காய் விதை, தண்ணீர்விட்டான் கிழங்கு, மல்லி, இலவங்கம், நீர்முள்ளிவிதை, இவைகள் சமமாக எடுத்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து இச் சூரணத்திற்கு சம எடை சர்க்கரையைச் சேர்த்து லேகியம் செய்யும் முறைப்படி செய்துகொண்டு காலையில் சாப்பிடு வதற்குமுன் தகுந்த அளவு ஒரு மண்டலம் சாப்பிட மூத்திர கிரிச்சரம், சகல மேகங்கள், உடம்பெரிச்சல், தலை எரிவு, கைகாலெரிவு, அரோசகம் முதலான பல வியாதிகள் தீரும்.

## 91. பித்தத்துக்கும், இரத்த வாந்திக்கும் பேரீச்சம்பழ லேகியம்.

பேரீச்சம்பழம் 32 பலம், திராக்ஷை 16 பலம், தண்ணீர் விட்டான் கிழங்கின் சூரணம் 4 பலம், மல்லி, பற்பாடகம், சதகுப்பை, கருவப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஏலம், சிறு நாகப்பூ, வெட்டிவேர், விலாமிச்சைவேர், கிராம்பு, திப்பிலி மூலம், சீரகம், ஓமம், பூலாங்கிழங்கு, பெருநாகப்பூ, வாயு விளங்கம், கோரைக்கிழங்கு, அதிமதுரம், கோஷ்டம், அதிவிடயம், சந்தனம், கோரோசனை, சடாமாஞ்சி, வகைக்கு 2 பலம். இவைகளை ஒன்று கூட்டி இடித்து வஸ்திர காயஞ் செய்துகொள்ளவும். பிறகு அறுகம்வேரின் சாறு, பசும்பால், தண்ணீர் விட்டான் கிழங்கின் சாறு, வகைக்கு 2 படி, சர்க்கரை 2 படி, இவைகளை மேற்கூறிய அறுகம் வேரின் சாற்றில் கலந்து பாகு செய்துகொண்டு எல்லாச் சூரணங்களையும் ஊற்றி லேகிய பக்குவமானதும் 1 சேர் தேனுங்கூட்டி லேகியம் கிண்டி. அத்துடன் 60 பணஎடை

ரசபஸ்பமும் சேர்த்துக்கிளறி வைக்கவும். வேளை ஒன்றிற்கு நெல்லிக்கனியளவு பிரமாணம் இருவேளையும் ஒரு மண்டல முட்கொண்டால் எந்தவிதமான பித்த வியாதிகளும் தீரும். பித்தத்தினல் ஏற்படும் 99 வியாதிகள், இரத்த வாந்தி பதினெருவகை வாதரோகங்களும் குணமாகும்.

## 92. பித்தத்துக்கு எலுமிச்சம் பழ லேகியம்

எலுமிச்சம்பழம், புளியிலை, முசுமுசுக்கை, வில்வவேர், துறிஞ்சிப்பழம் இவைகளின் சாறு வகைக்கு $\frac{3}{4}$ படி. ஏலம், கிராம்பு, சீரகம், அதிமதுரம், திப்பிலி, நெல்பொறி வகைக்கு 4 வராகனெடை, சர்க்கரை 4 பலம் தேன் $\frac{1}{2}$ சேர், இவைகளைச் சேர்த்து லேகியம் செய்யும் பக்குவப்படி லேகியம் செய்துகொள்ளவும். பித்தத்தினல் உண்டாகும் விக்கல், குன்மம், அரோசகம், முதலான நோய்கள் தீரும்.

## 93. சூதகவாய்வு, கிராணி, குன்மம், பொருமல் முதலானதற்கு ஹரிதகி லேகியம்

வட்டத்திருப்பி, பெருமரப்பட்டை, கறிவேப்பிலையின் ஈர்க்கு, முக்காவேளைவேர், கருவமரப்பட்டை, குடசப் பாலைப்பட்டை, வில்வவேர், மாதுளைவேர், சாரணைவேர், பிரண்டைக்கொடி வகைக்கு 5 பலம், சுக்கு, திப்பிலி, திப்பிலி மூலம், மிளகு, ஓமம், குரோசானி ஓமம், காட்டாத்திப்பூ, குடசப்பாலை விதை, வாலுளுவையரிசி, ஏலம், கிராம்பு, இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி பஞ்சலவணம், கோஷ்டம், அதிவிடயம், சீரகம், வில்வப் பழவோடு, மாதுளைப்பழவோடு, விளாம்பிசின், இலவம் பிசின், காசுக்கட்டி இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ பலம், கடுக்காய் 60 (எண்ணிக்கையில்) கடுக்காயை மாத்திரம் காடியில் 60 நாழிகை ஊறவைத்து பிறகு வெய்யிலில் உலர்த்தி உடைத்து விதைகளைப் போக்கி மேற்றோலை எடுத்துக் கொள்ளவும். எல்லாச் சாமான்களையும் தனித்தனியே வறுத்துக்கொள்ளவும்.

வேர்களையும், பட்டைகளையும். வெவ்வேருக இடித்துச் சூரணித்து ஒருபானையில் போட்டு 12 படி தண்ணீர்விட்டு 1படி கஷாயமாகச் சுண்டக்காய்ச்சிக் கொள்ளவும். வறுத் துச் சூரணித்து வைத்திருப்பதை அக்கஷாயத்தில் போட்டு 1 படி எருமைத்தயிரும், 1 சேர் சர்க்கரையுஞ் சேர்த்துக் கரைத்து வடிகட்டி பாகுசெய்து, பாகில் சூரணத்தைச் சிறிது சிறிதாகப் போட்டு தேவையான அளவு பசு நெய்யை யும், அரைச்சேர் நல்லெண்ணெயையுங் கூட்டி பக்குவமாய் லேகியம் செய்யவும். வேளை ஒன்றிற்கு கொட்டைப்பாக் களவு இரு வேளையும் ஒரு மண்டலம் சாப்பிட்டுவர பொரு மல், சூதகவாயு, கிராணி, குன்மம், உடம்பு, வயிறு இவற் றின் எரிவு முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம்** :— கைப்பு, புளிப்பு விலக்கவும்.

## 94. சூதகவாயுவுக்கு சௌபாக்கிய சுண்டி லேகியம்

சுக்கு 16 பலம், திப்பிலி 8 பலம், தகரம், வாயு விளங்கம் 4 பலம், மல்லி 3 பலம், கோஷ்டம் 2 பலம், ஓமம் 1 பலம். காட்டெருமைப்பால் 2 பலம், சிரகம் 2 பலம், உள்ளிப்பூண்டு 8 பலம், நவச்சாரம் 2 பலம், சதிச்சாரம் 2 பலம், பொறித்த வெங்காரம் 1 பலம், பஞ்சலவணம் ஐந்தும் பலம் 3, கார்கொள்ளி 1 பலம், மேதை 1 பலம், சர்க்கரை 16 பலம், ஏலம் 1 பலம், இந்தச் சரக்குகளில் சர்க்கரையைத் தவிர மற்றவைகளை தனித்தனியே வறுத்து, உப்பு வகைகளை கல்வத்திலிட்டு பொடித்துக் கொள்ளவும். இதரவைகளை இடித்து வஸ்திரகாயஞ் செய்து சூரணம் செய்துகொள்ளவும். உப்பு வகைகளின் பொடியும் சர்க் கரையையும் கலந்து சூரணத்தில் சேர்த்து ஒன்றரைப்படி தேனையுங்கூட்டி நன்ருக அரைத்து லேகியம் செய்துகொள்ள வும். வேளைக்கு 3 விராகனெடை பிரமாணம் இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொண்டால் சூதகவாயு, ஜன்னி, கிராணி, சுரம், முதலான நோய்கள் திரும்.

## 95. தீபனத்திற்கு மகாவில்வாதி லேகியம்

வில்வவேர் 50 பலம், விலாமிச்சைவேர், தூதுவளை, நன்னாரிவேர், முன்னைவேர், பெருவாகைவேர், கண்டங்கத்திரிவேர், குமிழம்வேர், சங்கம்வேர், வேலமரத்தின்வேர், பாதரிவேர், நெருஞ்சில்வேர், நாரத்தைவேர், முசுமுசுக்கை வேர், சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர், தேற்றான்வேர் வகைக்கு 10 பலம். இவைகளை ஒன்றுகூட்டிக் கல்லுரலி விட்டு இடித்துப் பொடிசெய்து பெரியதொரு பானையிற் போட்டு 16படி தண்ணீருமூற்றி அதை அடுப்பின்மேல் ஏற்றி 2 படி கஷாயம் இறக்கி வடிகட்டிக் கொள்ளவும். அக்கஷாயத்தில் துரிஞ்சிப்பழச்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நார்த்தம்பழச்சாறு, இஞ்சிச்சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி சேர்த்து 50 பலம் சர்க்கரையையும் கலந்து பாகு செய்யவும். பிறகு கோஷ்டம், சுக்கு, இலவங்கம், ஜாதிக்காய், அதிமதுரம், திராக்ஷை, கடுக்காய், திப்பிலி, மிளகு, கொத்தமல்லி, ஏலம், தான்றிக்காய், நெல்லிக்காய், ஜாதிப்பத்திரி, சிறுநாகப்பூ, தாளிசப்பத்திரி, சண்பகமொட்டு, சடாமாஞ்சி, மரமஞ்சள், தேவதாரு, பேரீச்சம்பழம், விளாம்பழம், திப்பிலிமூலம், செவ்வியம், சீரகம், இலுப்பைப்பூ, வெட்பாலைப்பட்டை, வெட்பாலைப்பொடி இவைகள் வகைக்கு $\frac{1}{2}$பலம். பழங்களைத் தவிர மற்றவைகளைச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து பழரசங்களையுங் கூட்டி நன்றாகப் பிசைந்து மேற்கூறிய பாகுடன் கலந்து தேவையான அளவு பசு நெய்யுங் கலந்து அடுப்பின்மேல் ஏற்றி லேகிய பக்குவமாகக் கிண்டி வேண்டிய தேனையும் கலந்து எடுத்து வைத்துக்கொள்ளவும். வேளைக்கு ஒரு களர்ச்சிக்காய்ப் பிரமாணம் இரு வேளையும் ஒரு மண்டலம் சாப்பிட்டுவர வாதம், பித்தம், கபம், பிண்டசூலை, உடம்பு எரிச்சல், அஸ்திசுரம், விக்கல், பிரமியம், பாண்டு, ஜலதோஷம், வயிற்றுவலி, சுவாசகாசம், அரோசகம், இதர சில்லரை உபத்திரவங்கள் தீரும்.

**பத்தியம் :—** இச்சா பத்தியம்.

## 96. உஷ்ணம், எரிவு, கிறுகிறுப்பு, பித்தம் முதலானதற்கு வில்வாதி லேகியம்

வில்வவேர் 30 பலம், சிற்றுமுட்டிவேர் 30 பலம், கருவேப்பிலை ஈர்க்கு 10 பலம், முக்காவேளைவேர் 10 பலம், இந் நான்கு வகைகளையும் இடித்து பெரியதொரு பானையிலிட்டு 16 படி நீர் வார்த்து எட்டிலொருபங்கு கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு 30 பலம் பழைய வெல்லத்தையும் கலந்து பாகுசெய்யவும். சுக்கு 1 பலம், திப்பிலி 2 பலம், திப்பிலிமூலம் 2 பலம், கொடிவேலி வேர், ஏலம், இலவங்கம், இந்துப்பு, மிளகு, இலவங்கப்பட்டை, சிறுநாகப்பூ, தாளிசபத்திரி இவைகள் வகைக்கு 1 பலம், தக்கோலம் ½ பலம், இலவங்கப்பத்திரி ½ பலம், இவைகள் யாவற்றையும் பொன்னிறமாக வறுத்துக் கல்லுரலிலிட்டு இடித்து வஸ்திரகாயஞ் செய்து சூரணம் செய்து கொள்ளவும். மேற்கூறிய பாகுடன் சூரணத்தையும் ஒன்று கூட்டி லேகிய பக்குவம் செய்து கால்படி தேனையுங் கலந்து கிண்டி எடுத்துக் கொள்ளவும். வேளைக்கு கொட்டைப் பாக்களவு பிரமாணம் இரு வேளையும் ஒரு மண்டலம் சாப்பிட்டுவர கைகால் எரிவு, கிறுகிறுப்பு, அலற்றல் புறட்டல், அக்கினிமந்தம், அன்னத்துவேஷம், வாந்தி முதலான வியாதிகள் தீரும்.

**பத்தியம் :-** பசும்பால், பசுநெய், பசுவின் தயிர், மோர் இவைகளைக் கூட்டவும். புளிப்பும், கைப்பும் விலக்கவும்.

## 97. உஷ்ண வாயு, பித்த வாயு முதலானதற்கு சரபுங்க வில்வாதி லேகியம்

வில்வவேர் 30 பலம், முக்காவேளைவேர் 30 பலம், சங்கம்வேர் 25 பலம், அசுவகந்திவேர் 7 பலம், அகிற்கட்டை 7 பலம், மூக்கிறட்டைவேர் 7 பலம், அத்திமுள்ளி வேர் 7 பலம், தூதுவளைவேர் 7 பலம், முசுமுசுக்கை வேர் 7 பலம், சிறுகாஞ்சொறிவேர் 7 பலம், முடக்கற்றான் 7 பலம்,

சிற்றுமுட்டிவேர் 7 பலம், பேராமுட்டிவேர் 7 பலம், இவைகளை இடித்து 32 படி தண்ணீர்விட்டு எட்டிலொருபங்கு கஷாயஞ் செய்து வடிகட்டி, அதில் 40 பலம் வெல்லத்தைக் கரைத்து, இஞ்சிச்சாறு 1 படி, எலுமிச்சம்பழச்சாறு $\frac{1}{2}$ படி, இவைகளையுமொன்றுகூட்டி பக்குவமாகப் பாகு தயார் செய்யவும். பிறகு அதில் ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, சிறுநாகப்பூ, தாளிசபத்திரி, கொத்தமல்லி, அரத்தை, கர்க்கடசிங்கி, இலவங்கம், சுக்கு, சீரகம், மிளகு, திப்பிலி, திப்பிலிமூலம், கருஞ்சீரகம், சித்ரமூலம், அதிமதுரம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், இவைகள் வகைக்கு 3 பலமெடுத்து இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து மேற்கூறிய பாகுடன் கலந்து லேகிய பக்குவஞ்செய்து இரண்டுபடி தேனையுங் கூட்டிக் கிண்டி எடுத்துக்கொள்ளவும். வேளைக்கு ஒரு கொட்டைப்பாக் களவு பிரமாணம் இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள உஷ்ணவாயு, பித்தவாயு முதலான வியாதிகள் தீரும்.

## 98. இடுப்புவலிக்கும், வீரிய விருத்திக்கும் லேகியம்

பூவரசுமரத்தின் பிசின் 2 விராகனெடை, ஜாதிக்காய் $\frac{1}{2}$ விராகனெடை, ஜாதிப்பத்திரி $\frac{1}{2}$ விராகனெடை, கிராம்பு $\frac{1}{2}$ விராகனெடை, பழைய வெல்லம் $2\frac{1}{4}$ பலம், நீர்முள்ளி விதை 2 பலம், எள்ளு 1 பலம், கொண்டைக்கடலை மாவு 1 பலம். வெல்லத்தைத் தவிர மற்றவைகளை ஒரு தேங்காயில் நிரப்பி, தேங்காயின் துவாரத்தை மூடி தேங்காயின் மேல் இரண்டு விரற்கடை கனத்தில் சாணியால் கவசம் செய்து உலர்த்தி, புடம் போடவும். தேங்காயின் ஓடு வெடித்ததும் அதை எடுத்து உள்ளிருக்கும் மருந்து, கொப்பரை முதலியவற்றை மட்டும் வைத்துகொண்டு அத்துடன் வெல்லத்தைக் கலந்து லேகியமாகச் செய்துகொள்ளவும். வேளைக்கு ஒரு சிறிய நெல்லிக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளையும் உட்கொள்ள இடுப்புவலி தீரும். வீரிய விருத்தியமுண்டாகும். மேற்சொன்ன வியாதியை தீர்க்க

முடியுமென்று பந்தயம் போட்டு இம்மருந்தைக் கொடுத்தால் நிச்சயமாக சொஸ்தம் செய்யமுடியும்.

## 99. தாது விருத்திக்கு மன்மத சிந்தாமணி லேகியம்

சாம்பிராணி 2 பலம், சன்ன இலவங்கப்பட்டை 2 பலம் சிறுநாகப்பூ 2 பலம், கஞ்சா ½ சேர். கஞ்சாவை ½ சேர் நெய்யுடன் தண்ணீரையுங் கலந்து வேகவைத்துத் தண்ணிர் சுண்டியதும் நெய்யை மட்டிலும் வடித்து எடுத்துக்கொள்ளவும். மற்ற சாமான்களைச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து கஞ்சாயிலையிலிருந்து வடித்துக்கொண்ட நெய்யுடன் கூட்டி லேகியமாகச் செய்துகொண்டு அரை களர்ச்சிக்காயளவு தினம் இருவேளையுமுட்கொண்டால் வீரிய விருத்தியாகும்.

## 100. வீரிய விருத்திக்கு லேகியம்

| | |
|---|---|
| அதிமதுரம் | தண்ணீர்விட்டான்கிழங்கு |
| நெருஞ்சில்விதை | முள்ளிலவம் பிசின் |
| பூனைக்காலிவிதை | சர்க்கரை |
| நிலப்பனங்கிழங்கு | தேன் |

இவைகளைச் சமனெடைகொண்டு லேகியம் செய்யும் முறைப்படி செய்து தினம் இருவேளையும் உட்கொள்ள வீரிய விருத்தி உண்டாகும்.

## 101. வீரிய விருத்திக்கு லேகியம்

| | |
|---|---|
| அசுவகந்தி | தண்ணீர்விட்டான்கிழங்கு |
| எள்ளு | சாட்டரணை |
| உளுந்து | சர்க்கரை, தேன் |

இவைகளைச் சமமெடுத்து லேகியம் செய்யுமுறைப்படி செய்து இருவேளையும் தகுந்த அளவுடன் சாப்பிட வீரிய விருத்தியாகும்.

## 102. தாதுவிருத்திக்கு உண்டே லேகியம்

| | |
|---|---|
| பேரிச்சங்காய் | ஜாதிப்பத்திரி |
| ஊமத்தைவிதை | ஏலம் |
| கோதுமைமாவு | கிராம்பு |
| பால் | கசகசா |
| சுத்திசெய்த பாதரசம் | பூனைக்காலிவிதை |
| ,, கெந்தகம் | நிலப்பனங்கிழங்கு |
| அபின் | பலகறை (சோழி)பற்பம் |
| கஞ்சா | இசுபுகோல் விதை |
| முருங்கைவேர் | முருங்கைப்பூ |
| குங்குமப்பூ | நீர்முள்ளிவிதை |
| பச்சைக்கற்பூரம் | யானைத்திப்பிலி |
| ஜாதிக்காய் | |

இவைகளை வகைக்கு ½ பலமெடுத்துக் கல்வத்திலிட்டுப் பால் வார்த்து எட்டு ஜாமம் அரைக்கவும். பிறகு அரைத்த மருந்திற்குச் சமனெடை கற்கண்டைச் சேர்த்து 4 ஜாமம் அரைத்து தாதுவளைப்பழப் பிரமாணம் உருண்டைகள் செய்து வைத்துக்கொள்ளவும். வேளை ஒன்றிற்கு ஒரு உருண்டை வீதம் தினம் இருவேளையும் உட்கொள்ள வீரிய விருத்தியுண்டாகும்.

## 103. தாது விருத்திக்கு உருண்டை லேகியம்

| | |
|---|---|
| கஞ்சாயிலை | பூனைக்காலி விதை |
| அபின் | நிலப்பனங்கிழங்கு |
| ஜாதிக்காய் | முருங்கை விதை |
| ஜாதிப்பத்திரி | ஜாதிலிங்கச் செந்தூரம் |
| கிராம்பு | சிறு நாகப்பூ |
| நீர்முள்ளி விதை | இலவங்கப்பட்டை |
| இசுபுகோல் விதை | வால்மிளகு |

இவைகள் வகைக்கு 3 விராகனெடை வீதம் எடுத்துக் கொண்டு பசும்பாலூற்றி நன்ருக அரைத்து முற்றிய தேங்காயில் சிறு துளையிட்டு அதில் அரைத்துவைத்திருக்கும்

மருந்தை நிரப்பி, துவாரத்தை மூடி, தேங்காயின் மேல் சாணியால் கவசம்செய்து உலர்த்திக்கொண்டு, தேங்கா யோடு கருகிப் போகாவண்ணம் புடம்வைத்து எடுத்துக் கொண்டு, தேங்காயை உடைத்து உள்ளிருக்கும் மருந்து, கொப்பரை முதலியவற்றை எடுத்து அதற்குச் சமனெடை சர்க்கரையுங் கூட்டி 4 யாமம் கல்வத்திலிட்டரைத்து ஒரு நெல்லிக்காயில் பாதியளவு மருந்தை சரீரத்திற்குத் தகுந்த படி கொடுத்து வரவும். வீரிய விருத்தியுண்டாகும்.

## 104. தாது விருத்திக்கு தேற்றான்கொட்டை லேகியம்

சீரகம் 1 படி. தேற்றான் விதை 4 பலம். தேற்றான் விதையை மெல்லியதாய்த் துண்டு செய்து சீரகத்துடன் கலந்து ஒரு பானையிலிட்டு 8 படி தண்ணீர்ஊற்றி அடுப்பின் மேலேற்றித் தினம் நான்கு நாழிகைப் பிரமாணமும், கஷாயம் $\frac{3}{4}$ படியாகச் சுண்டும் வரையிலும் எரித்து வடிகட்டி வைக்கவும். பிறகு,

| | |
|---|---|
| சன்ன இலவங்கப்பட்டை | நெல்லிக்காய் |
| இலவங்கப்பட்டை | வெட்பாலையரிசி |
| சுக்கு | குரோசானி ஓமம் |
| மிளகு | ஓமம் |
| திப்பிலி | சீரகம் |
| கடுக்காய் | கொத்தமல்லி |
| தான்றிக்காய் | |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ பலம்,

| | |
|---|---|
| சடாமஞ்சில் $\frac{1}{4}$ பலம் | அதிமதுரம் $\frac{1}{2}$ பலம் |
| அசுவகந்தி 2 பலம் | சிறுதேக்கு $\frac{1}{4}$ பலம் |
| பரங்கிப்பட்டை 4 பலம் | செவ்வியம் $\frac{1}{4}$ பலம் |
| கோஷ்டம் $\frac{1}{2}$ பலம் | நன்னாரிவேர் $\frac{1}{2}$ பலம் |

இவைகளை ஒன்றுகூட்டிக் கல்லுரலிலிட்டிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

| | |
|---|---|
| ஏலம் 2 விராகனெடை | கிராம்பு $\frac{1}{2}$ விராகனெடை |
| ஜாதிப்பத்திரி $\frac{1}{2}$ ,, | ஜாதிக்காய் 1 ,, |

இந்நான்கையும் இடித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும். இரண்டுசேர் சீனிசர்க்கரையை மேற்கூறிய கஷாயத்தில் கலந்து வடிகட்டி அடுப்பின் மேலேற்றி பாகு தயார் செய்து, அப்பாகில் முன்பு தயாரித்திருக்கும் சூரணத்தையும் போட்டுக்கிண்டி, லேகிய பக்குவமாகும் பொழுது $\frac{1}{2}$ சேர் நெய்யும், $\frac{3}{4}$ படி தேனையுங் கூட்டிக்கிளறி எடுத்துக்கொள்ளவும்.

ஒரு வேளைக்கு 1 விராகனெடைப் பிரமாணம் தினம் இருவேளையுமாக ஒரு மண்டலம் உட்கொள்ளவும்.

இம்மருந்தினல் தீரும் வியாதிகள் :— அரோசகம் தீரும். தீபனமேற்படும். சுரத்தை வெல்லும். இருபத்தோரு மேகங்கள் தீரும்.

இம்மருந்தை வேங்கடபதி அய்யா அவர்களால் ராஜஸ்ரீ துளஜா மகாராஜா சாஹேப் அவர்களுக்குச் செய்து கொடுக்கப்பட்டது. துளஜா மகாராஜா என்பவர் சரபோஜி மகாராஜாவின் தகப்பனர்.

## 105. சிதபேதி, வயிற்றுவலி முதலானதற்கு லேகியம்

| | |
|---|---|
| வரப்பூலா வேர் | காரை வேர் |
| மாதுளை வேர் | அருநெல்லி வேர் |
| மாம்பட்டை | வாழைப்பூ |
| கோரைக்கிழங்கு | தென்னம்பாளை |
| விச்சிப்பூ | வரலுச்சுண்டி வேர் |
| நாவற்பட்டை | ஆவாரம்வேர்பட்டை |
| நிலமாதளை வேர் | இலந்தை வேர் |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ சேர் கொண்டுவந்து ஒன்று கூட்டி டித்து ஓர் பானையிலிட்டு 32 படி தண்ணீர் விட்டு எட்டிலொரு பாகமாக கஷாயத்தைக் காய்ச்சி வடித்துக்கொண்டு அத்துடன்,

| | |
|---|---|
| எலுமிச்சம்பழச்சாறு | வில்வயிலைச்சாறு |
| கருவேலம்பழச்சாறு | முசுமுசுக்கைச்சாறு |
| துரிஞ்சிப்பழச்சாறு | கருப்பஞ்சாறு |
| மாதுளம்பழச்சாறு | |

இச்சாறுகளை வகைக்கு $\frac{1}{4}$ சேர் வீதம் கஷாயத்தில் கலந்து வடிகட்டிக் கொள்ளவும். பிறகு அதை அடுப்பின் மேலேற்றிப் பாகு செய்யவும்.

| | |
|---|---|
| கர்க்கடசிங்கி | புளியங்கொட்டையின் |
| இசுபுகோல் விதை | மேற்றோல் |
| குரோசானி ஓமம் | ஜாதிக்காய் |
| அதிவிடயம் | வில்வப்பிஞ்சு |
| கடுக்காய்ப்பிஞ்சு | மாதுளைவோடு |
| சிறுநாகப்பூ | கோரைக்கிழங்கு |
| சிரகம் | யானைத்திப்பிலி |
| மாம்பருப்பு | வெள்ளரி விதை |

வகைக்கு $\frac{1}{4}$ பலம் எடுத்துச் சூரணித்து, வஸ்திரகாயஞ் செய்து மேற்கூறிய பாகு பக்குவமாகும்பொழுது சூரணத்தையும் கலந்து லேகிய பக்குவத்தில் 1 சேர் பசு நெய் யூற்றிக் கிளறி வைத்துக்கொள்ளவும்.

வேளைக்கு கழற்சிக்காயளவு இம்மருந்தை தினம் இரு வேளையும் 20 நாட்களுக்குச் சாப்பிட்டு வர சகலவிதமான சீதபேதி, அதிசாரம் முதலான வியாதிகள் தீரும்.

## 106. வீரிய விருத்திக்கு லேகியம்

| | |
|---|---|
| ஜாதிக்காய் | வால்மிளகு |
| ஜாதிப்பத்திரி | சாலாமிசிரி |
| ஏலம் | ரூமிமஸ்தகி |
| கிராம்பு | |

இவைகள் வகைக்கு 1 பலம்.

| | |
|---|---|
| வாதாம்பருப்பு 5 பலம் | சாரப்பருப்பு ½ பலம் |
| நிலப்பூசணிக் கிழங்கு | சிறுநாகப் பூ |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | கோஷ்டம் |
| நீர்முள்ளிவிதை | சுக்கு |
| நிலத்தாவரையின் விதை | திப்பிலி |
| முருங்கைவிதை | மிளகு |
| அக்கிராகாரம் | கடுக்காய்த்தோல் |
| குரோசானி ஓமம் | தான்றிக்காய்த்தோல் |
| சோம்பு | நெல்லிமரப்பட்டை |
| இலவங்கப்பட்டை | தாளிசபத்திரி |
| ஆலம்விதை | அதிமதுரம் |
| அரசம்விதை | சிற்றரத்தை |
| மரவாழையின் விதை | |

இவைகள் வகைக்கு 1 பலம்.

| | |
|---|---|
| குங்குமப்பூ 1 விராகனெடை | பேரீச்சங்காய் 2 பலம் |
| திபதிராக்ஷை 2 பலம் | கசகசா 2 பலம் |
| பிஸ்தா 2 பலம் | சர்க்கரை 40 பலம் |
| நெய் 16 பலம் | பால் 40 பலம் |

இச்சரக்குகளை எல்லாம் சேர்த்து லேகியம் செய்யுமுறைப்படி லேகியம் தயார் செய்து கொள்ளவும்.

வயது, சரீரம் இவைகளை அனுசரித்து மருந்தைக் கூட்டியும் குறைத்துங் கொடுக்கவும்.

## 107. சங்கீத வித்துவான்கள் பாடும்பொழுது உபயோகிக்கும் லேகியம்

| | |
|---|---|
| வாதுமைப்பருப்பு 5 விராகனெடை | ஏலம் ½ விராகனெடை |
| கற்கண்டு 5 ,, ,, | சுக்கு ,, ,, |
| ஜாதிக்காய் ½ ,, ,, | அதிமதுரம் ,, ,, |
| ஜாதிப்பத்திரி ½ ,, | குங்குமப்பூ ¼ ,, |
| கிராம்பு ½ ,, | திராக்ஷை ½ ,, |

இவைகளை ஒன்றுகூட்டி வேண்டிய அளவு தேனையுங் கலந்து லேகியமாகச் செய்துகொண்டு பாடுமுன் இதைச் சாப்பிட்டுப் பாடினால் சாரீரம் சுகமாகவும், தொண்டைக்கு இதமாகவும் இருக்கும்.

## 108. சங்கீத வித்துவான்களுடைய சாரீரம் நன்ருக இருக்க லேகியம்

| | |
|---|---|
| தேவதாளிச்சாறு | பசுநெய் |
| நெல்லிக்காய்ச்சாறு | கற்கண்டு |

இவைகளைச் சமமெடுத்து நன்ருகக் கலந்து சாப்பிடவும். தினம் 3 தோலா பிரமாணம் 21 நாள் சாப்பிட்டு வர சாரீரம் கின்னரர்களுடைய சாரீரத்தைப் போலாகும்.

## 109. மிளகு லேகியம்

| | |
|---|---|
| மிளகு 1 பலம் | கசகசா |
| ஜாதிக்காய் | கண்டத்திப்பிலி |
| ஜாதிப்பத்திரி | பெருங்காயம் |
| கிராம்பு | இந்துப்பு |
| இலவங்கப்பட்டை | சிறுநாகப்பூ, அபின். |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை.

புளித்த தயிரை ஒரு துணியில் மூட்டையாகக் கட்டித் தொங்கவிட்டால் அதிலிருந்து நீர் பிரிந்து கீழேகொட்டி விடும். நீர் முழுதும் வடிந்தபின் துணியிலுள்ள தயிர்ச் சக்கையை எடுத்து அத்துடன் மேல் சொன்ன சரக்குகளைத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து சேர்த்து மிருதுவாக அரைத்து அடுப்பின் மேல் வாணலை ஏற்றி வேண்டிய அளவு நெய்யூற்றி அரைத்த விழுதையுங் கூட்டி லேகியமாக கிளறிக்கொள்ளவும். வேளை ஒன்றுக்கு ஒரு பெரிய குன்று மணி அளவு முதல் 1 புளியங் கொட்டை அளவுவரை மருந்தை தினம் இருவேளையும் ரோகத்தை அனுசரித்துக்

கொடுக்க அஜீர்ணம், மந்தம், பேதி, உஷ்ணவாயு முதலான நோய்கள் தீரும்.

**இச்சா பத்தியம்:** வாயு பதார்த்தங்களை நீக்கவும்.

## 110. மிளகு லேகியம்

| | |
|---|---|
| மிளகு 2 பலம் | கற்கண்டு 2 பலம் |
| பசுப்பால் ½ சேர் | சிற்றாமணக்கெண்ணெய் ½ சேர் |

பாலில் மிளகை ஒருநாள் ஊறவைத்துப் பிறகு வெய்யிலில் உலர்த்திக்கொண்டு மெல்லியதாய்ப் பொடித்து கற்கண்டையும் சேர்த்து அரைக்கவும். பிற்கு சிற்றாமணக்கெண்ணெயைக்கூட்டி இலந்தைப்பழ அளவில் உருண்டைகள் செய்து தினம் காலையிலும் மாலையிலும் சாப்பிட பித்த வாயு, கபம், வயிற்றுவலி முதலானவைகள் தீரும்.

**பத்தியம்:** இச்சா பத்தியம்.

## 111. சரீர புஷ்டிக்கு லேகியம்

| | |
|---|---|
| பசும்பால் 1 சேர் | பனங்கற்கண்டு ½ சேர் |
| வாலாஜாப்பேட்டை சினி 1 சேர் | பெருந்துத்தியிலையின் சாறு ½ சேர் |

இவைகளை ஒன்றுகூட்டி இளந்தீயிட்டு மெழுகு பதத்தில் காய்ச்சி லேகியம் செய்து கொள்ளவும். கழற்சிக்காயளவு காலை மாலை தினம் இருவேளையும் சாப்பிட்டுவர தேக புஷ்டியுண்டாகும்.

## 112. வீரிய விருத்தி லேகியம்

| | |
|---|---|
| ஜாதிக்காய் | பூனைக்காலி விதை |
| கிராம்பு | சாம்பிராணியிலுள்ள பால் (பால் சாம்பிராணி) |
| அக்கராகாரம் | |

இவைகள் வகைக்கு ℴ தோலா,

பழைய வெல்லம் 17 தோலா, சுக்கு 17 தோலா
பதினைந்து கோழி முட்டைகளின் வெள்ளைக்கரு

மேற்சொன்ன சரக்குகளைத் தூள்செய்து. அத்துடன் கோழி முட்டையின் வெள்ளைக் கருவைச்சேர்த்து மெல்லியதாக அரைத்து வேண்டியளவு பசுநெய் கூட்டி அடுப்பின் மேலேற்றி ஹல்வா பதமாகக்கிண்டி வைத்துக் கொண்டு காலையில் ஒருவேளைமட்டும் ஒன்றேமுக்கால் விராகனெடை அளவு வீதம் ஏழுநாட்கள் உட்கொள்ளவும். காலையில் மருந்து சாப்பிட்டதும் 1 சேர் பால் குடிக்கவும்.

மறு ஏழு நாட்களுக்கு இரவில் ஒரு வேளைமட்டிலும் அதேபோல் மருந்தையுட்கொண்டு பிறகு ஒருசேர் பாலையும் குடிக்கவும்.

இந்த பதினான்கு நாட்களிலும் ஸ்திரிசங்கமம் கூடாது.

## 113. ஸ்திரீகளின் சரீர புஷ்டிக்கும் இரத்த விருத்திக்கும் லேகியம்

| | |
|---|---|
| தண்ணீர்விட்டான்கிழங்கு | சிறுநெருஞ்சில்முள் |
| நிலப்பனங்கிழங்கு | கொத்தமல்லி |
| நீர்முள்ளி | பேதாணப் பருப்பு |
| இசுபுகோல் விதை | |

இவைகள் வகைக்கு 5 தோலா.

| | | | | |
|---|---|---|---|---|
| தனக்குமரப்பிசின் | 10 தோலா | குங்குமப்பூ | $\frac{1}{2}$ | தோலா |
| கருவேலம் பிசின் | 10 ,, | வாதுமைப் பருப்பு | 1 | சேர் |
| வாலுளுவையரிசி | 1 ,, | பிஸ்தாப் பருப்பு | $\frac{1}{2}$ | ,, |
| சுக்கு | $2\frac{1}{2}$ ,, | அக்ரோட் பருப்பு | $\frac{1}{2}$ | ,, |
| ஏலக்காய் | 2 ,, | கசகசா | $\frac{1}{2}$ | ,, |
| ஜாதிக்காய் | 2 ,, | | | |

பருப்பு வகைகளைத் தவிர மற்றதை யிடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்யவும் வெந்நீரில் தோலோடு கூடிய பருப்புகளைப் போட்டு தோலைப்போக்கி அதிலுள்ள

எண்ணெய் வெளிவராதபடி தூளாக்கிக்கொண்டு, இருபது சேர் பாலைக்காய்ச்சி கோவா செய்து கொண்டு அத்துடன் மகிழம்பட்டையின் பின்புறமுள்ள சோறு 5 தோலா, இலந்தைப்பட்டையின் பின்புறமுள்ள சோறு 5 தோலா, அத்திப்பட்டையின் பின்புறமுள்ள சோறு 5 தோலா, ஆலம்விழுதின் இள நுனிகள் 5 தோலா, பெருஞ்சீரகம் 5 தோலா, நன்னாரிவேர் 5 தோலா, சீரகம் 5 தோலா, இவ் ஏழு வகைகளில் 6 சேர் தண்ணீர் விட்டு 3 சேராகச் சுண்டக்காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும். அக்கஷாயத்தைக் கோவா செய்யும் பொழுது சேர்த்துச் சுண்டக்காய்ச்சி கோவா செய்யவும்.

பிறகு கற்றாழைச்சோறு 6 தோலாவை நெய்யில் சிவக்க வறுத்துக் கொள்ளவும். கற்கண்டு 1 சேர் சேர்த்து ஜீரா செய்து அத்துடன் சூரணம் செய்து வைத்திருக்கும் இதர சாமான்களையும், சிவக்க வறுத்த கற்றாழையையும், நான்கு சேர் பசு நெய்யையுங் கூட்டி லேகிய பக்குவம் செய்து கொள்ளவும்.

தினம் காலையில் $\frac{1}{2}$ தோலா, சாயங்காலம் $\frac{1}{2}$ தோலா பிரமாணம் 21 நாள் சாப்பிட்டு வரவும்.

**பத்தியம்:** இச்சா பத்தியம். மருந்துண்ணுங்கால் புருஷர்களுடன் கூடலாகாது. நெய், பால் நிறையக் கூட்டவும்.

## 114. இருமலுக்கு லேகியம்

மிளகு 2 தோலா
வெள்ளைமிளகு 2 தோலா
குரோசானி ஓமம் 2 தோலா
அபின் $\frac{1}{2}$ தோலா
பர்பியன் பால் 6 குன்றிமணியெடை
குங்குமப்பூ $\frac{1}{4}$ தோலா
அக்கராகாரம் 6 குன்றிமணி
சடாமஞ்சி 6 ,, [யெடை
தேன் 22 தோலா

( ஒரு வித கள்ளியின் உலர்ந்த பால் )

தேனை ஒரு பாத்திரத்திலிட்டு கரி நெருப்பின்மேல் வைத்தால் அதினின்று நுரை உண்டாகும். நுரையை எடுத்

தெறிந்துவிட்டு எஞ்சிய தேனில் மேற்கூறிய மருந்துகளைத் தூள்செய்து வஸ்திர காயஞ்செய்து போட்டு எல்லாம் ஒன்று படக் கலந்து நன்ருக அரைத்து ஆறியதும் குப்பியிலடைத்து வைக்கவும்.

வேளை ஒன்றிற்கு 3 தோலா தண்ணீரில் 8 குன்றிமணி எடை மருந்தைக் கலக்கிக் கொடுக்க இருமல் தீரும்.

### 115. கற்ருழை லேகியம்

கற்ருழைச் சோறு 5 சேரை பதினேரு சேர் பாலில் வேகவைத்துச் சிறிது நெய்யுஞ் சேர்த்துக் கோவா செய்ய வும். பிறகு சாலாமிசிரி 10 தோலா, தண்ணீர்விட்டான் கிழங்கு 10 தோலா, மாளவி தேசத்து நெருஞ்சில் 5 தோலா நீர்முள்ளி விதை 5 தோலா, கருப்பு நிலப்பனங்கிழங்கு 5 தோலா, போபரி (Bowfari - ஒருவித யுனனி மருந்து) 5 தோலா, படதான் (Badadhan - ஒருவித யுனனி மருந்து) 5 தோலா இவற்றை இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

இருபத்தைந்து சேர் பாலை பத்து சேராகச் சுண்டக் காய்ச்சிய பிறகு அதில் மேற்கூறிய சூரணத்தையுங் கலந்து கோவா செய்யவும். பிறகு குங்குமப்பூ 2 தோலா, ஜாதிக் காய் 2 தோலா, ஜாதிப்பத்திரி 2 தோலா, கிராம்பு $\frac{1}{2}$ தோலா இலவங்கப்பட்டை 2 தோலா, கஸ்தூரி $\frac{1}{2}$ விராகனெடை, அம்பர் $\frac{1}{2}$ விராகனெடை இவைகளையும் பாலிலரைத்து வைத்துக்கொண்டு 7 சேர் சர்க்கரையைப் பாகுசெய்து அப்பாகில் மேற்சொன்ன சூரணங்களையும், பாலிலரைத்த விழுதையும், கற்ருழை சேர்ந்த கோவாவையும் ஒன்றுபட நன்ருகக் கலந்து ஐந்து சேர் நெய்யையுங் கூட்டி லேகியம் செய்து கொள்ளவும்.

### 116. கட்வாதி லேகியம்

| | |
|---|---|
| சுக்கு | ஜாதிப்பத்திரி |
| மிளகு | திப்பிலி |

| | |
|---|---|
| கிராம்பு | சிறுநாகப்பு |
| வெட்டத்திருப்பிவேர் | கொம்பரக்கு |
| அதிவிடயம் | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை, கல்மதம் $\frac{1}{2}$ விராகனெடை.

கல்மதம், கொம்பரக்கு இவ்விரண்டைத்தவிர மற்றதைப் பொன்னிறமாக வறுத்துக் கொள்ளவும். இரண்டு விராகனெடை எடையுள்ள ஒரு ஜாதிக்காயை எடுத்து அதைக் குடைந்து அதனுள் 2 தோலா அபினை வைத்துத் துவாரத்தை ஜாதிக்காய்த் தூளால் மூடி, காலேயரைக்கால் சேர் விரலி மஞ்சளைத் தண்ணீரில் மெல்லியதாக அரைத்து ஜாதிக்காயின்மேல் கவசம் செய்து கொல்லன் உலையில் வைத்துக் கவசம் செய்த மஞ்சள் எரியுமளவும், உள்ளிருக்கும் ஜாதிக்காய் கறுகிப்போகா வண்ணமும் பார்த்தெடுத்துக்கொள்ளவும். பிறகு வறுத்து வைத்திருக்கும் மருந்துகளையும், வறுக்காமல் வைத்திருக்கும் மற்ற சரக்குகளையுங் கலந்து ஜாதிக்காயுடன் சேர்த்து வேண்டிய அளவு தேனை வார்த்து மெல்லியதாயரைத்து லேகியத்தைப் போல் கிளறி எடுத்துக்கொள்ளவும்.

வயது கிரமத்தைக் கவனித்து வேண்டிய அளவு மருந்தைக் கொடுக்கவும்.

**பத்தியம்:** இச்சா பத்தியம்.

## 117. பரங்கிப்பட்டை லேகியம்

| | |
|---|---|
| கடுக்காய் | வாயுவிளங்கம் |
| தான்றிக்காய் | சிற்றரத்தை |
| நெல்லிக்காய் | சிறுதேக்கு |
| சுக்கு | செவ்வியம் |
| திப்பிலி | கருஞ்சிரகம் |
| மிளகு | சடாமாஞ்சி |
| இலவங்கப்பட்டை | அதிமதுரம் |

| | |
|---|---|
| ஏலக்காய் | கர்க்கடசிங்கி |
| இலவங்கப்பத்திரி | நன்னாரிவேர் |
| ஓமம் | நிலப்பனங்கிழங்கு |
| குரோசானி ஓமம் | அசுவகந்தி |
| கொடிவேலி | |

இவைகள் வகைக்கு $2\frac{1}{2}$ விராகனெடை.

| | | | |
|---|---|---|---|
| பரங்கிப்பட்டை | 6 பலம் | தேன் | 12 பலம் |
| சர்க்கரை | 12 பலம் | நெய் | 12 பலம் |

மேற்சொல்லிய சாமான்களை இடித்துச் சூரணித்து வஸ்திர காயஞ் செய்து கொண்டு சர்க்கரையைப் பாகு செய்து அடுப்பிலிருந்து கீழிறக்கும் பொழுது நெய்யும் தேனுங் கூட்டிக் கிளறி எடுத்து வைக்கவும்.

மேகத்திற்குக் கொடுக்க மேகநோய் தீரும்.

### 118. வாயு, அஜீரணம் முதலானதற்கு லேகியம்

ஓமத்தைப் புளித்த மோரில் மூன்று நாட்கள் ஊற வைத்துப் பிறகு வெய்யிலில் உலர்த்தி வைத்துக் கொண்டு, பிறகு இடித்து உமியை நீக்கிவிட்டுச் சூரணம் செய்து வஸ்திரகாயஞ் செய்யவும். இவ்வாறு செய்த சூரணத்தின் எடை $\frac{1}{2}$ சேர். அரைச்சேர் சுக்கின்மேல் சுண்ணாம்பைத் தடவி நெருப்பில் வாட்டியபின், நீர்விட்டு அரைத்த உப்பை அதன்மேல் தடவி கவசஞ்செய்து மறுபடியும் நெருப்பில் வாட்டி எடுத்துத் தரையில் தட்டி உப்பெல்லாவற்றையும் உதிர்த்துச் சுத்தமாக்கி அதை இடித்துத் தூளாக்கி வஸ்திர காயஞ் செய்யவும். இவ்வாறு சூரணம் செய்த சுக்கின் எடை $\frac{1}{4}$ சேர். உரித்த மலை வெள்ளைப்பூண்டு சேர் அரை இதை அரைத்து வைக்கவும். ஒரு சேர் சீனிக்கற்கண்டைப் பாகு செய்து அதில் அரைத்து வைத்திருக்கும் வெள்ளைப் பூண்டின் விழுதையும், வஸ்திரகாயஞ் செய்த சூரணங்களை ஒன்றுகூட்டிப் பக்குவம் கெடாமல் லேகியம் செய்து இறக்கிக் கொள்ளவும்.

## 119. தேக புஷ்டிக்கும், இரத்தவிருத்திக்கும் லேகியம்.

| | |
|---|---|
| சுக்கு | கடுக்காய் |
| மிளகு | தான்றிக்காய் |
| திப்பிலி | நெல்லிக்காய் |

இவைகள் வகைக்கு 3 தோலா.

| | |
|---|---|
| ஜாதிக்காய் | கிராம்பு, குங்குமப்பூ |
| ஜாதிப்பத்திரி | பச்சைக் கற்பூரம் |

இவைகள் வகைக்கு 1 தோலா.

| | |
|---|---|
| உளுந்தின் சத்து $\frac{1}{2}$ சேர் | கோதுமையின் சத்து $\frac{1}{2}$ சேர் |
| சாலாமிசிரி 9 தோலா | அசுவகந்தி 9 தோலா |
| தண்ணீர்விட்டான் கிழங்கு $\frac{1}{4}$ சேர் | இலவங்கப்பட்டை 9 தோலா |
| | மூங்கிலுப்பு 4 தோலா |
| சிந்தில்சர்க்கரை 4 தோலா | ஹஜரத்ஹூஜூர் விதை (ஒருவித யுனானி மருந்து விதை) 9 தோலா |
| ஏலக்காய் 5 தோலா | |
| ஆலிவ் பழம் $\frac{1}{2}$ சேர் | |
| வாதுமைப்பருப்பு $\frac{1}{4}$ சேர் | கொட்டையில்லா திராக்ஷை $\frac{1}{4}$ சேர் |
| சிமை அத்திப்பழம் 7 தோலா | |
| அக்குரோட்டுப் பருப்பு 5 தோலா | கொப்பரை 5 தோலா |
| | பிஸ்தாப் பருப்பு 5 தோலா |
| பேரிச்சங்காய் 1 சேர் | சர்க்கரை 1 சேர் |
| நெய் 1 சேர் | தங்கரேக்கு $\frac{1}{2}$ தோலா |
| வெள்ளிரேக்கு 1 தோலா | பவள பற்பம் 1 தோலா |
| முத்து பஸ்பம் 1 தோலா | வங்க பற்பம் 1 தோலா |
| சுவர்ணமால்ய வசந்தம் 1 தோலா | வெள்ளி பற்பம் 1 தோலா |
| | நீர்முள்ளி விதை 3 தோலா |
| கருந்துளசி விதை 6 தோலா | கருவேலம் பிசின் 6 தோலா |
| | சபர் (?) 1 சேர் |
| சிறுநெருஞ்சில் 6 தோலா | |

இவற்றில் கருந்துளசி விதை, சுக்கு, திப்பிலி, இம் மூன்றையும் நெய் விட்டு வறுத்துக்கொள்ளவும். மற்றதை உலர்த்தி ஒன்றாகக் கூட்டியிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ்

செய்து கொள்ளவும். சர்க்கரையைப் பாகு செய்யவும். பிறகு அதில் உளுந்தை அரைத்து எடுத்த சத்தையும், கோதுமைச் சத்தையும், மற்ற சூரணத்தையுங் கலந்து லேகிய பக்குவமாகச் செய்து, அதில் பற்பங்களையும், ரேக்குகளையும் நன்ருகக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

தினம் ஒரு வேளைக்கு இரண்டு தோலா வீதம் லேகியத்தை ஒரு மண்டலம் வரை உட்கொள்ள சரீரம் புஷ்டியாகி, உடம்புலுள்ள உஷ்ணமும் தணியும், தீபன சக்தியும் உண்டாகும்.

## 120. சூதக வாயு, சீத இரத்தபேதிக்கு லேகியம்

கால் சேர் சுக்கை மெல்லியதாயரைத்து நீரில் கரைத்து 5 நாழிகை வரையில் வைத்து, தெளிவை இறுத்துக்கொண்டு அத்துடன் பாலையும் விட்டுக் காய்ச்சி அதில் சூரணித்த ஜாதிக்காய், கிராம்பு, ஏலக்காய், சிறுநாகப்பூ, மாம்பருப்பு, இவைகளைச் சேர்த்து, தேனையுங்கூட்டி லேகியம் செய்து, சாப்பிட்டுவர, சூதகவாயு, சீத இரத்தபேதி குணமாகும்.

## 121. வயிற்றுக்கட்டி, மகோதரம், குன்மம், சைத்திய குன்மம் முதலானதற்கு லேகியம்.

| | |
|---|---|
| சுக்கு | கடுக்காய் |
| மிளகு | பொரித்த பலகை வெங்காரம் |
| திப்பிலி | நெல்லிக்காய் கந்தகம் |

இவைகள் வகைக்கு 1 தோலா.

சுத்தி செய்த நேர்வாளப்பருப்பு 10 (எண்ணிக்கையில்) எடுத்து நிழலிலுலர்த்தி அவை பழுத்ததும் சாறு பிழிந்து கால்சேர் வெல்லத்தைக் கரைத்து வடிகட்டிக் கொள்ளவும். பிறகு மேற்கூறிய இதர சாமான்களை இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து அதில் சிறிது சிறிதாகக் கலந்து மெழுகு பக்குவமாக அரைத்துக்கொள்ளவும். பாசிப்பயறு

அளவு முதல் தேற்றான்விதை அளவு வரையில் வேளை ஒன்றுக்கு சரீரத்தை அனுசரித்துக் கொடுக்கவும்.

**இதற்கு அனுபானம்:** கரும்பு ரசம், இஞ்சிச்சாறு, சுக்கு திராக்ஷை, திப்பிலி, சர்க்கரை.

## 122. மூலவியாதிக்கு நத்தையின் லேகியம்

| | | | |
|---|---|---|---|
| பெருஞ்சீரகம் 5 | விராகனெடை | இலவங்கப்பட்டை 4 | விராகனெடை |
| கசகசா 8 | ,, | கிராம்பு 6 | ,, |
| அன்னுசிப்பூ 8 | ,, | கடுக்காய்ப்பூ 5 | ,, |
| கடுக்காய்ப்பிஞ்சு 5 | ,, | சிறுநாகப்பூ 3 | ,, |
| மாசிக்காய் 4 | ,, | அதிமதுரம் $1\frac{1}{2}$ | ,, |
| காசிக்கட்டி 3 | ,, | | |

கொட்டையில்லா திராக்ஷை 1 பலம்

இவைகளை கருகாமல் இலேசாக வறுத்த பிறகு சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துவைக்கவும்,

பிறகு 40 அல்லது 50 நத்தைகளை கொணர்ந்து மேலோட்டை நீக்கி, கல்மஷங்களைப் போக்கி மாமிசத்தை மட்டிலுமெடுத்துக்கொண்டு அதைப் பசும்பால் விட்டரைத்துத் தனியே வைக்கவும். ஒன்றரைச்சேர் பனைவெல்லத்தை பாகுசெய்து அதில் மேற்கூறிய சூரணத்தையும், நத்தையின் மாமிசத்தையும் சேர்த்து, ஒருசேர் நெய், ஒரு விராகனெடை குங்குமப்பூ இவைகளையும் ஒன்றுபடக்கூட்டி அம்மியின்மேல் வைத்து நைவாயரைத்து லேகிய பக்குவமாகச் செய்து கொள்ளவும்.

**குறிப்பு:** நத்தையின் மாமிசத்தை சுத்தம் செய்து பிறகு நெய்விட்டு பொன்னிறமாக வறுத்தபின் பால்விட்டு அரைத்து விழுதாக்கிக் கொள்ளவும்.

## 123. மலச்சிக்கலுக்கு லேகியம்

மெல்லிய ஓடுடைதாயும் நன்ருகப் பழுத்ததாயுமுள்ள வில்வப்பழங்கள் நான்கை எடுத்துடைத்து அதிலுள்ள

சோற்றை மட்டிலும் எடுத்துக்கொள்ளவும். பிறகு வில்வ ஓட்டைக் கஷாயம் செய்து, அக்கஷாயத்தில் வில்வச் சோற்றை நன்ருகப் பிசைந்து பிறகு துணியில் வடிகட்டி வைக்கவும்.

கடுக்காய்த்தூள் 1 பலம்
உமிநீக்கிய கொத்த மல்லித்தூள் $1\frac{1}{2}$ பலம்
பெருஞ்சீரகத்தூள் $\frac{1}{2}$ பலம்
விழுதியிலைத்தூள் 1 பலம்
ரோஜாமொட்டு 1 பலம்
கொன்றைப்பூவின் தூள் 1 பலம்
நெருஞ்சிற்காய்த்தூள் 1 பலம்
நெல்லிக்காய்த்தூள் $\frac{1}{2}$ பலம்
சூரத்து நிலாவாரைத்தூள் 1 பலம்
சுக்குத்தூள் $\frac{1}{2}$ பலம்
திராக்ஷை 1 பலம்
அதிமதுரத்தூள் $\frac{1}{4}$ பலம்

இத்தூள்களை வில்வ விழுதில் கலந்துகொண்டு தேவையான சர்க்கரைப்பாகு தயாரித்து அதில் சூரணங் கலந்த வில்வ விழுதையும் சிறிது சிறிதாகப்போட்டு வேண்டிய நெய்யுங் கூட்டி லேகியம் செய்துகொள்ளவும். இரவில் போஜனம் முடித்து படுக்கைக்குப் போகும்முன் ஒரு கொட்டைப் பாக் களவு லேகியத்தை சாப்பிடவும். காலையில் சுலபமாக மலங் கழியும்.

## 124. வாதுமைப்பருப்பு லேகியம்

சுக்கு 2 பலம்
‡சுரஞ்சனமஸீரி 1 பலம்
வாதுமைப்பருப்பு 5 சேர்
‡பாஹமன் சபேத் (Bahman Safeedh) 2 பலம்
தண்ணீர்விட்டான் கிழங்கு 3 பலம்
ரூமாமஸ்தகி 1 பலம்
நெய் 5 சேர்
*சாலாமிசிரி 1 பலம்
‡சாகாகுலமிஸ்ரி 1 பலம்
அக்ரோட் பருப்பு 4 பலம்
‡பாமன் சுரங் (Bahman Surang) 2 பலம்
கிராம்பு 1 பலம்
இலவங்கப்பட்டை 1 பலம்
வாலாஜிபேட்டை ஜீனி 12 பலம்
தேன் 1 சேர்
அதிமதுரம் 4 வராகனெடை

| | |
|---|---|
| ஏலக்காய் | ஜாதிப்பத்திரி 1 பலம் |
| 4 விராகனெடை | கசகசா 1 சேர் |

இவைகளைக்கொண்டு லேகியம் செய்யுமுறைப்படி லேகியம் செய்துகொள்ளவும்,

சரீரத்தையும் வியாதியைமனுசரித்து கூட்டியும் குறைத்துங் கொடுக்க சரீரத்திற்கு அதிக பலமும் புஷ்டியும் உண்டாகும்.

‡இவைகள் யுனனி மருந்துகள்.

### 125. இந்திரியத் தம்பன லேகியம்

| | |
|---|---|
| சுக்கு | பெருஞ்சீரகம் |
| அதிமதுரம் | கிராம்பு |
| மிளகு | வால்மிளகு |
| திப்பிலி | யானைத்திப்பிலி |
| சிறுநாகப்பூ | கடுக்காய் |
| ஏலக்காய் | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | கோஷ்டம் |
| கொத்தமல்லி | தாளிசபத்திரி |
| நெல்லிக்காய் | சீரகம் |
| அமுக்கிராக்கிழங்கு | சண்பகமொக்கு |
| கஸ்தூரிமஞ்சள் | பூலாங்கிழங்கு |
| தான்றிக்காய் | கசகசா |
| நீர்முள்ளிவிதை | உளுந்து |
| நிலப்பனங்கிழங்கு | திராக்ஷை |
| முருங்கைவிதை | தண்ணீர்விட்டான் |
| பிஸ்தாப்பருப்பு | [கிழங்கு |

இவைகள் வகைக்கு 2 பலம். வாதுமைப்பருப்பு 20 சேர், சுத்தி செய்த கஞ்சா இலை $\frac{1}{2}$ சேர், சர்க்கரை 30 சேர், தேன் 4 சேர், பால் 20 சேர், நெய் வேண்டிய அளவு. இவைகளைக் கொண்டு லேகியஞ் செய்யுமுறைப்படி லேகியம் செய்து கொள்ளவும்.

## 126. எட்டுவித குன்மத்திற்கு லேகியம்

| | |
|---|---|
| இஞ்சி 1 சேர் | கொத்தமல்லி 1சேர் |
| மிளகு 1 சேர் | சீரகம் 1 சேர் |
| எலுமிச்சம்பழம் 100 (எண்ணிக்கையில்) | இந்துப்பு 2 பலம் |
| | நெய் 2 சேர் |
| சர்க்கரை $2\frac{1}{2}$ சேர் | |

இவைகளைக்கொண்டு லேகியஞ்செய்யுமுறைப்படி லேகியம் தயார் செய்துகொள்ளவும்.

## 127. அயவீர லேகியம்

| | |
|---|---|
| சுக்கு, மிளகு | சீரகம் |
| பரங்கிப்பட்டை | திப்பிலி |

இவைகளின் சூரணம் வகைக்கு 1 பலம்.

| | |
|---|---|
| எலுமிச்சம்பழச்சாறு $\frac{1}{2}$ சேர் | பசுநெய் $\frac{1}{2}$ சேர் |
| அயவீரசிந்தூரம் $2\frac{1}{2}$ விராகனெடை | சௌவீரசிந்தூரம் $2\frac{1}{2}$ விராகனெடை |
| சர்க்கரை 5 சேர் | |

இவைகளைக் கொண்டு லேகியஞ் செய்யுமுறைப்படி லேகியம் செய்துகொள்ளவும்.

## 128. அயக்காந்த லேகியம்

மேற்கூறிய அயவீர லேகியத்தைப் போலவே லேகியம் செய்து அயவீர, சௌவீர சிந்தூரங்களுக்குப் பதிலாக அதே எடை அயச்சிந்தூரத்தையும் காந்த சிந்தூரத்தையும் கலந்து லேகியம் செய்துகொள்ளவும்.

## 129. தாதுபுஷ்டி லேகியம்

| | |
|---|---|
| நாயுருவி | நில ஆவாரை |
| முருங்கைவிதை | பூனைக்காலிவிதை |
| நிலப்பூசணி | கிராம்பு |

| | |
|---|---|
| ஜாதிக்காய் | ஏலக்காய் |
| மிளகு | ஜாதிப்பத்திரி |
| வால்மிளகு | இலவங்கப்பத்திரி |
| குரோசானி ஓமம் | கோஷ்டம் |
| சடாமாஞ்சி | வாலுளுவையரிசி |
| சிறுநாகப்பூ | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | சீரகம் |
| தாளிசபத்திரி | வெந்தயம் |
| நிலப்பனங்கிழங்கு | சிந்தில்சர்க்கரை |
| வெட்டிவேர் | விலாமிச்சைவேர் |
| திராக்ஷை | பூலாங்கிழங்கு, ஓமம் |

வகைக்கு 2 பலம். கசகசா 2 சேர், வாதுமைப் பருப்பு 10 சேர், நெய் 12 சேர் இவைகளைக் கொண்டு லேகியஞ் செய்யுமுறைப்படி லேகியம் செய்துகொள்ளவும்.

## 130. பாண்டு, மகோதரம் முதலானதற்குச் சிஞ்சாதி லேகியம்

புளியிலை 100 பலமும், துருப்பிடித்த இரும்புத்தூள் 50 பலமும் எடுத்து, தண்ணீர் 20 படி விட்டு அடுப்பின் மேல் ஏற்றி 2 படி கஷாயமாகும்வரை சுண்டக்காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். 50 பலம் பழைய வெல்லத்தை இக்கஷாயத்தில் கரைத்து மேல்புரணி நீக்கிய இஞ்சி 16 பலத்தையுங்கூட்டி மறுபடியும் அடுப்பின் மேலேற்றி பாகாக்கிக் கொள்ளவும்.

சீரகம், கருஞ்சீரகம், சுக்கு, மிளகு, திப்பிலி இவைகளை வகைக்கு 2 பலமெடுத்து நன்ருக இடித்து வஸ்திரகாயஞ் செய்து கொண்டு அதில் சுத்தி செய்த இரும்புத்தூள் ஒரு ஒரு பலமும், சுத்திசெய்த மண்டூரத்தூள் ஒரு பலமுங் கலந்து ஷ பாகில் போட்டுக் கிளறவும். லேகிய பதத்தி லிறக்கி ஆறிய பின்பு சுத்தமான தேன் ½ படி விட்டுக்

குழப்பிக்கொள்ளவும். இந்த லேகியத்தை காலை, மாலை இருவேளைகளும் உட்கொள்ள பாண்டு, காமாலை முதலிய ரோகங்கள் தீரும்.

**இதற்குப் பத்தியம் :—** புளி, உப்பு, கடுகு, நல்லெண்ணெய். வாயுபதார்த்தங்கள், இறைச்சி, முதலியவைகளை நீக்கவும்.

இரும்புத் தூளை முதல் நாள் நல்லெண்ணெயில் ஊறவைத்து மறுநாள் சட்டியில்போட்டு வறுக்க சுத்தி ஆகும். மண்டூரத்தை பசு மூத்திரத்தில் ஊறவைத்துக் கழுவிவிட சுத்தியாகும்.

## 131. கண்டாமலக லேகியம்

நெல்லிக்காய்ச்சாறு $\frac{1}{4}$ படியை எடுத்து அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சிக் கொதிக்கும் போது சர்க்கரை 25 பலம் போட்டு பாகு செய்துகொண்டு, அதில் சிரகம், சிறு நாகப்பூ. இலவங்கப்பத்திரி, ஏலக்காய், கிராம்பு, அதி மதுரம், கொடிவேலிவேர்ப் பட்டை, வாயுவிளங்கம், இந்துப்பு இச்சரக்குகளை வகைக்கு $\frac{1}{2}$ பலம் வீதம் எடுத்து சூரணித்து வடிகட்டி பாகிலிட்டு. பசுநெய், 1 படியும் விட்டு நன்ருகக் கிண்டி லேகியம் செய்யவும். ஆறியவுடன் $\frac{1}{2}$ படி தேன்விட்டுக் கிளறி வைத்துக் கொள்ளவும். தினமும் காலையில் 3 விராகனெடை வீதம் உட்கொள்ள இரத்த பித்தம், பித்தபாண்டு, சுவாசம், வீக்கம், காமாலை முதலிய நோய்கள் தீரும்.

## 132. பாண்டு முதலானதற்கு வில்வாதி லேகியம்

| | |
|---|---|
| மேற்றோல் நீக்கிய வில்வ வேர்த்தூள் 100 பலம் | கோவைத்தண்டு 100 பலம் |
| | நிலப்பனங்கிழங்கு 100 ,, |
| சீந்தில் சர்க்கரை | நிலவாகை |
| கண்டங்கத்திரி | நொச்சி |
| காஞ்சொறிவேர் | சிற்றுமுட்டி வேர் |

| | |
|---|---|
| சங்கம்வேர் | நாயுருவி |
| சங்கம்குப்பி | தூதுவளை |
| ஆடாதோடை | சிறுகுறிஞ்சான் |
| சங்கதாரிவேர் | அமுக்கராக்கிழங்கு |
| காட்டாமணக்கு | கோரைக்கிழங்கு |
| முக்காவேளை | காட்டுமல்லிகை |
| நன்னாரி | பேராமுட்டி |
| சிவனார்வேம்பு | |

இச்சரக்குகளின் வேர்கள் வகைக்கு 50 பலவிதமெடுத்துச் சிறு சிறு துண்டுகளாக வெட்டி, ஒரு பாத்திரத்திலிட்டு 24 படி தண்ணீர் விடவும். ஒருநாள் முழுதும் நன்ருக ஊறிய பின், இவைகளைச் சிறிது சிறிதாகக் கல்லுரலில் இட்டிடித்து ஊறவைத்த அத்தண்ணீரிலேயே கலக்கி, அடுப்பின் மேலேற்றி 2 படி கஷாயமாகும் வரை எரிக்கவும். பின்பு கஷாயத்தை வேறு ஒரு பாத்திரத்தில் இறுத்துக் கொண்டு மேலும் இத்துடன்

| | |
|---|---|
| கையாந்தகரைச்சாறு | பொடுதலைச்சாறு |
| முசுமுசுக்கைச்சாறு | மாதுளம்பழச்சாறு |
| கருப்பஞ்சாறு | பிரமிச்சாறு |
| நாரத்தம்பழச்சாறு | பூசணிக்காய்ச்சாறு |
| செருப்படிச்சாறு | இஞ்சிச்சாறு |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ படி சாறு. இச்சாறுகளை கஷாயத்துடன் சேர்த்துக்கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| மிளகு | கொத்தமல்லி |
| அதிமதுரம் | செவ்வியம் |
| சிற்றரத்தை | கண்டத்திப்பிலி |
| சுக்கு | ஓமம் |
| வாயுவிளங்கம் | சீரகம் |
| திப்பிலி | கோஷ்டம் |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ பலம்

| | |
|---|---|
| பேய்ப்புடல் | சுத்தி செய்த காந்தம் |
| நெல்லிமுள்ளிவேர் | முள்ளிவேர் |

வகைக்கு 2 விராகனெடை.

| | |
|---|---|
| சாதிக்காய் | சிறுநாகப்பூ |
| வசம்பு | சுத்திசெய்த இரும்புத் தூள் |
| குரோசானிஓமம் | கிராம்பு |

இவைகள் வகைக்கு ஒரு விராகனெடை

| | |
|---|---|
| கடுகரோகிணி | கடுக்காய்த்தோல் |
| தேசாவாரம் | |

இவைகள் வகைக்கு 3 விராகனெடை. கடைச்சரக்குகள் அனைத்தையும் உலரவைத்து கல்லுரலிலிட்டிடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

சாறு கூட்டிய கஷாயத்தை அடுப்பின் மேலேற்றிப் பழைய வெல்லம் 5 பலத்தைப் போட்டு பாகாக்கி அதில் சூரணங்களையும் கலந்து 1 படி பசு நெய்யுமிட்டுக் கிண்டி இறக்கவும். ஆறியபின் 1 படி தேனை விட்டுக் கலந்து கொள்ளவும். காலை, மாலை, இரு வேளையும், வேளைக்கு கழற்சிக் காயளவு வீதம் ஒரு மண்டலம் வரை சாப்பிட்டு வர வாயுகுன்மம், பாண்டு, கபம், விஷ ரோகங்கள், பித்தம் முதலிய வியாதிகள் தீரும்.

## 133. மற்றொருவித வில்வாதி லேகியம்

| | |
|---|---|
| மேற்றோலை நீக்கிய வில்வ வேர் 200 பலம் | நன்னாரிவேர் |
| | பெருவாகைவேர் |
| வெட்டிவேர் | விலாமிச்சைவேர் |
| பாதிரிவேர் | சிறுவாகைவேர் |
| பெருவிளாவேர் | தேற்றான்கொட்டைவேர் |
| சிறுவிளாவேர் | முசுமுசுக்கைவேர் |

இவைகள் வகைக்கு 1 பலமெடுத்துச் சிறு துண்டுகளாக வெட்டிக் கல்லுரலிலிட்டு ஒன்றிரண்டாக இடித்து ஒரு

பெரிய பாத்திரத்தில் போட்டு 48 படி தண்ணீர்விட்டு ஊற வைத்து அடுப்பின் மேலேற்றி 6 படி கஷாயமாகும் வரை சுண்டக் காய்ச்சவும். இதை வேறொரு பாத்திரத்தில் வடி கட்டிக் கொண்டு இத்துடன் கண்டங் கத்திரி, கொம்மட்டி மாதுளை, எலுமிச்சம்பழம், இஞ்சி இவைகளின் சாறுகள் வகைக்கு 1 படி விட்டு, சர்க்கரை 50 பலமும் போட்டுக் கரைத்து அடுப்பின் மேலேற்றிக் குழம்பாகும் வரை எரிக்கவும். பின்பு,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | தேவதாரம் |
| செவ்வியம் | மரமஞ்சள் |
| சடாமாஞ்சில் | எலுமிச்சைவிதை |
| செங்கழுநீர்க்கிழங்கு | இந்துப்பு |
| கோஷ்டம் | இலவங்கப்பட்டை |
| விளாம்பழவிதை | வில்வப்பழம் |
| கடுக்காய்த்தோல் | வாயுவிளங்கம் |
| நெல்லிமுள்ளி | தான்றிக்காய்த்தோல் |
| மிளகு | சுக்கு |
| திப்பிலி | ஏலக்காய் |
| சதகுப்பை | கொத்தமல்லி |
| கிராம்பு | சந்தனம் |
| ஜாதிப்பத்திரி | இலவங்கப்பத்திரி |
| சிறுதேக்கு | மராட்டி மொட்டு (மராடம்) |
| கொடிவேலிவேர்ப்பட்டை | |
| திராக்ஷைப்பழம் | காட்டுமிளகு |
| விழலரிசி | செண்பகப்பூ |
| சிறுநாகப்பூ | பருத்திவிதை |
| அதிமதுரம் | |

முதலிய இச்சரக்குகளை வகைக்கு $\frac{1}{2}$ பலமெடுத்துப் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்து கொண்டு, முன்பு கூறிய பாகில் போட்டுக் கிண்டி, பசுவின் நெய் ஒரு நாழியும் விட்டு கிளறிப் பதத்தில் இறக்கவும்.

இவ்வில்வாதி லேகியத்தைச் சாப்பிடச் சுவாசம், அரோசகம், க்ஷயம், விக்கல், மகோதரம், பாண்டு,

அதிசாரம், கிராணி, மருந்திடு, இரத்தநோய், கைகால் எரிவு, வெள்ளோக்காளம், வாந்தி, இருமல், பைத்தியம். சூலே, நாள்பட்ட அஸ்திசுரம், வீக்கம், அசதி முதலான அநேகவித ரோகங்கள் தீரும்.

## 134. கரிப்பானுதி லேகியம்

| | |
|---|---|
| கையாந்தகரை | குப்பைமேனி |
| நீர்முள்ளி | காட்டுமல்லிகை |
| காட்டாமணக்கு | பிரமி |
| ஆடாதோடை | பொடுதலே |
| முசுமுசுக்கை | நொச்சி |

இவைகளின் சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி, எலுமிச்சம்பழச்சாறு $\frac{1}{4}$ படி. இவைகளை ஒன்றுபடக் கலந்து ஒரு புதுச்சட்டியில் ஊற்றி அடுப்பின் மேலேற்றி எரித்துக் குழம்பாகும் போது திப்பிலி, சுக்கு, மிளகு, இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ பலம்,

| | |
|---|---|
| செவ்வியம் | சாதிக்காய் |
| கிராம்பு | குரோசானி ஓமம் |
| அதிமதுரம் | கோஷ்டம் |
| ஓமம் | கடுகரோகணி |
| பெருங்காயம் | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை

| | |
|---|---|
| சுத்திசெய்த இரும்புத் தூள் 1 பலம் | கடுக்காய்த்தோல் 2 பலம் |
| சுத்திசெய்த காந்தம் 4 விராகனெடை | நெல்லி முள்ளி 2 பலம் |
| பேய்ப்புடல் 1 பலம் | சுத்தி செய்த கிட்டம் 1 பலம் |

எல்லாவற்றையும் இடித்துத் தூளாக்கி வஸ்திரகாயஞ் செய்து மேற்கூறிய சாறுகளில் ஏதேனும் ஒரு சாற்றை விட்டு நன்ருக அரைத்துக் காய்ச்சி குழம்பாக்கிய சாற்றில் குழப்பி இளம்பதமாக இருக்கும்போது தேன் 1 படியும் விட்டுக் கிளறி, அதன் பின் சர்க்கரை 3 பலமும் போட்டு

லேகிய பதமாக்கி இறக்கவும். தினமும் காலேயிலும், மாலேயிலும் தேனுடன் ½ கொட்டைப்பாக்களவு பிரமாணம் உட்கொள்ள பித்தபாண்டு, காமாலே, குன்மம், பித்தம், விஷபாண்டு முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம் :—** சுசப்புப் பதார்த்தங்களேயும், புளிப்புப் பதார்த்தங்களேயும் நீக்கவும்.



## இரசாயனங்கள்

### 135. காசரோகத்திற்குப் பிப்பலாதி இராசயனம்

| | |
|---|---|
| திப்பிலி 4 பலம் | ஏலம் |
| கிராம்பு | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | |

வகைக்கு 1 பலம்.

| | |
|---|---|
| மிளகு | சுக்கு |
| ஓமம் | கொத்தமல்லி |
| திப்பிலிமூலம் | கொடிவேலி வேர் |
| தக்கோலம் | சிறுதேக்கு |
| சீரகம் | செவ்வியம் |
| தாளிசபத்திரி | சதகுப்பை |
| வாயுவிளங்கம் | உலர்ந்த கையாந்தகரையிலேச் சூரணம் |
| சர்க்கரை | |

வகைக்கு 2 பலம். இவைகளே வெய்யிலிலுலர்த்தி நன்ருக இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து ¼ படி தேனில் கலந்து நன்ருகப் பிசைந்து பின்பு அரைப் பலம் லோக பற்பத்தையும் ஒன்றுபடக் கூட்டி வைத்துக் கொள்ளவும். கழற்சிக்காய் பிரமாணம் தினம் இரு வேளேயும் சாப்பிட்டுவர பலமின்மை, காசம், பாண்டு, சரீர உஷ்ணம், மந்தம் முதலான ரோகங்கள் தீரும்.

## 136. காசத்திற்குப் பிப்பலாதி இராசயனம்

| | |
|---|---|
| திப்பிலி 8 பலம் | மிளகு |
| வாயுவிளங்கம் | சிறுதேக்கு |
| சீரகம் | சுக்கு |

வகைக்கு 4 பலம்

| | |
|---|---|
| கொடிவேலிவேர் | திப்பிலிமூலம் |
| உலர்ந்த கையாந்தகரை | செவ்வியம் |
| இலைச் சூரணம் | |

வகைக்கு 2 பலம். இவைகளை வெய்யிலிலுலர்த்தி இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து சர்க்கரை 1½ சேர், தேன் ½ சேர் இவைகளையுங்கூட்டி நன்ருகக்கலந்து பிறகு ஒன்ருகயிடித்து, இளகிய பக்குவமாய் எடுத்துக் கொண்டு 15 நாள்வரை இம்மருந்தை தானியபுடத்தில் வைத்து எடுத்துக்கொள்ளவும். வேளைக்கு ஒரு கழற்சிக் காய் பிரமாணம் தினம் இரு வேளையும் உட்கொள்ள காசம், சுவாசம், குன்மம், அரோசகம், வாந்தி முதலான நோய்கள் தீரும்.

## 137. குன்மத்திற்கு நரசிம்ம இரசாயனம்

| | |
|---|---|
| சுத்திசெய்த கொடிவேலிவேர் | சேராங்கொட்டை |
| வகைக்கு 16 பலம் | நெருஞ்சிற்காய் 8 பலம் |
| தண்ணீர்விட்டான் கிழங்கு | நிலப்பனங்கிழங்கு 20 பலம் |
| தேன் 16 பலம் [64 பலம் | பசுநெய் 8 பலம் |
| சர்க்கரை 25 பலம் | |

தேன், நெய், சர்க்கரை இவைகளைத் தவிர மற்றவைகளை இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து, பிறகு தேன், நெய், சர்க்கரை இவைகளையும் ஒன்றுபடக் கலந்து அதை உட்புறம் நெய் தடவிய பானையொன்றில் கொட்டி பத்திரப்படுத்திக் கொள்ளவும். வேளைக்கு 2 விராகனெடை பிரமாணம் தினம் இருவேளையும் சாப்பிட ஐந்து வித குன்மம், மகோதரம், பாண்டு, வாதம், பித்தம், கபம், 18 வித குட்டம், வயிற்றுக்கட்டி முதலான வியாதிகள் தீரும்.

## 138. அசுவகந்தி இரசாயனம்

| | |
|---|---|
| அசுவகந்திக்கிழங்கு | (அமுக்கராகிழங்கு) 26 பலம் |
| ஏலக்காய் | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | சிறுநாகப்பூ |
| கொத்தமல்லி | திராக்ஷை |
| சந்தனம் | சன்னலவங்கப்பட்டை |
| திப்பிலி | காட்டெருமைப்பால் |
| சுக்கு | மிளகு |
| கொடிவேலி | கிராம்பு |
| திப்பிலிமூலம் | செவ்வியம் |
| விலாமிச்சைவேர் | |

வகைக்கு 3 விராகனெடை, இவைகளை இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும். ஒரு பானையில் 4 படி பாலையும், 50 பலம் சர்க்கரையையும் போட்டு கலந்து வடிகட்டி அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி பாகு செய்து மேற்சொன்ன சூரணத்தையுங் கூட்டி 2 படிநெய்யும் 1 படி தேனையுஞ் சேர்த்து இரசாயன பக்குவமாக இறக்கிக் கொள்ளவும். வேளை ஒன்றிற்கு ஒரு கொட்டைப்பாக்களவு விதம் இரண்டு வேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொண்டால் மேக சுரம், இரத்த பித்தம், பித்தரோகம், அஸ்திசுரம், முதலான சகல ரோகங்களும் தீரும்.

## 139. பஞ்சகாசம், இருதயரோகம், சுரம் முதலானதற்குப் பிப்பலாதி இரசாயனம்

| | |
|---|---|
| திப்பிலி 16 பலம் | சர்க்கரை 8 பலம் |
| வாயுவிளங்கம் 4 பலம் | சிறுதேக்கு 4 பலம் |
| மிளகு 1 பலம் | சிரகம் 4 பலம் |
| திப்பிலிமூலம் 2 பலம் | செவ்வியம் 2 பலம் |
| சித்திரமூலம் 4 பலம் | சுக்கு 2 பலம் |
| உலோகசிந்தூரம் 2 பலம் | கையாந்தகரை இலைச்சூரணம் 2 பலம் |
| இலவங்கப்பட்டை 1 பலம் | ஏலக்காய் 1 பலம் |

| | |
|---|---|
| இலவங்கப்பத்திரி 1 பலம் | தான்றிக்காய் 1 பலம் |
| கடுக்காய் 1 பலம் | ஜாதிக்காய் ½ பலம் |
| நெல்லிமுள்ளி 1 பலம் | தேன் 8 சேர் |

மருந்துச் சரக்குகளை எடுத்து இடித்துச் சூரணஞ் செய்து வஸ்திரகாயஞ் செய்து பிறகு சர்க்கரை, தேன் இவைகளை யுங்கூட்டி நன்ருக அரைத்து ஒரு பாத்திரத்தில் வைத்துக் கொள்ளவும். வேளை ஒன்றிற்கு பெரிய கழற்சிக்காய் பிரமாணம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை சாப்பிட்டு வர பஞ்சகாசம், இருதயரோகம், பாண்டு, சுரம், வாயு, அக்கினிமந்தம், முதலான வியாதிகள் தீரும். இந்த மருந்து மிகவும் அனுபவங் கண்டது.

## 140. கர்ஜுராதி இரசாயனம்

| | |
|---|---|
| பேரீச்சம் பழம் 32 தோலா | சர்க்கரை 32 பலம் |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | ஏலக்காய் |
| சிற்ருமுட்டிவேர் | பேராமுட்டிவேர் |
| மெருகன் கிழங்கு | சதகுப்பை |
| பூலாங் கிழங்கு | சிறுநாகப்பூ |
| கோரைக் கிழங்கு | சந்தனம் |
| நன்னாரிவேர் | காட்டெருமைப் பால் |
| தக்கோலம் | அரேணுகம் |
| குடசப்பாலை | கிராம்பு |
| கருஞ்சீரகம் | சீரகம் |
| விலாமிச்சைவேர் | வெட்டி வேர் |
| கோஷ்டம் | விளாம்பழம் |
| திராக்ஷை | குங்குமப்பூ |
| பருத்திக்கொட்டை | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | கையாந்தகரை இலையின் சூரணம் |

இவைகள் வகைக்கு 1 பலம்; பசுவின்நெய் 1 படி, பசுவின் பால் 2 படி, தேன் 1 படி, இவைகளை ஒன்று கூட்டி

இரசாயனம் தயாரித்துக் கொள்ளவும். ராஜமிருகாங்கம் என்ற மருந்துடன் கலந்து இரு வேளையும் சாப்பிடவும்.

இதனுல் தீரும் வியாதிகள் :— இரத்தபித்தம், அம்ல பித்தம், சிரோபிரமை, மூர்ச்சை, 21 வகைப் பித்தங்கள், நாஞவித கரங்கள், க்ஷயம், உளமாந்தம், சூலே, சந்தாபம், அஜீரணம், அரோசகம், தாகம் முதலிய நோய்கள் தீரும்.

இந்த மருந்து மிகவும் அனுபவங் கண்டது.

---

## வடகம்

### 141. பிரமேகம் முதலான ரோகங்களுக்கு தாளிசபத்திரி வடகம்

| | |
|---|---|
| சிந்தில் சர்க்கரை 2 பலம் | சர்க்கரை 3 பலம் |
| நெல்லிமுள்ளி $\frac{1}{2}$ பலம் | தான்றிக்காய்த்தோல் $\frac{1}{2}$ பலம் |
| கடுக்காய்த்தோல் $\frac{1}{2}$ பலம் | |
| தாளிசபத்திரி 1 பலம் | |
| செவ்வியம் | வால்மிளகு |
| கிராம்பு | சன்ன இலவங்கப்பட்டை |
| மிளகு | அதிமதுரம் |
| கோஷ்டம் | திப்பிலிமூலம் |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ பலம்

| | |
|---|---|
| ஜாதிக்காய் 1 பலம் | ஏலக்காய் $\frac{1}{4}$ பலம் |
| திப்பிலி $\frac{1}{4}$ பலம் | |

இவைகளே நன்ருக உலர்த்திப் பிறகு இடித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும். இரண்டு படி பசும்பாலே அடுப்பின் மேலேற்றித் தண்ணீர் சுண்டியதும் அதில் சூரணித்து வைத்திருக்கும் சாமான்களேப் போட்டு 3 பலம் சர்க்கரை யையும் கலந்து இரும்புக் கரண்டியால் கிளறிக் கொடுத்து பக்குவமானதும் இறக்கி வைத்துக் கொள்ளவும்.

வேளை ஒன்றுக்கு நெல்லிக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளையுப் சாப்பிட்டுவர, கல்லடைப்பு, சீழ் விழுவது, துர்மாமிசம் வளர்வது, வயிற்றிலுள்ள விரணம், பிரமியம், ஜலபேதி, சிவந்திருக்கும் மூத்திரம் முதலான ரோகங்கள் தீரும்.

### 142. இருமல், கபம், முதலானதற்குச் சாரணை வடகம்

| | |
|---|---|
| வெள்ளைச்சாரணை வேர் | மிளகு |
| சுக்கு | தாளிசபத்திரி |
| திப்பிலி | பச்சிலை |
| கொடிவேலிவேர் | சுட்டு சாம்பலாக்கிய புளியம்பட்டை |
| சீரகம் | |
| ஏலக்காய் | கண்டங்கத்திரிவேர் |
| கிராம்பு | |

இவைகள் வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக் கொள்ளவும்.

வெல்லம் 60 பலத்தை வேண்டிய அளவு தண்ணீர் விட்டுப் பக்குவமாய்ப் பாகு காய்ச்சி, அப்பாகில் மேற் சொன்ன சூரணத்தைக் கொட்டி நன்ருகக் கிளறி கீழிறக்கிக் கொண்டு சூடு ஆறுவதற்கு முன் கொட்டைப் பாக்களவு உருண்டைகள் செய்து பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

விடியற்காலையில் ஒரு உருண்டையைத் தேனுடன் உரைத்து ஒரு மண்டலம் வரை சாப்பிட, கபம், இருமல் முதலான நோய்கள் தீரும்.

### 143. தாளிசபத்திரி வடகம்

சுரம், மார்புவலி, கபம், இருமல், அஸ்திசுரம், பெரும் பாடு, அரோசகம், உஷ்ணம், அதிசாரம், கிராணி, பாண்டு, அஜீரணம் முதலிய நோய்களுக்கு —:

| | |
|---|---|
| தாளிசபத்திரி | கூகைநீர் |
| சித்திரமூலம் | சிறுநாகப்பூ, கிராம்பு |

இவைகள் வகைக்கு 1 பலம்.

| | |
|---|---|
| மிளகு 2 பலம் | திப்பிலிமூலம் 2 பலம் |
| சுக்கு 3 பலம் | |

இவைகளை நன்ருக இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து 3 சேர் சர்க்கரையைக் கலந்து சிறிது பசுவின் நெய்யையுங் கூட்டி நன்ருகப் பிசைந்து வைக்கவும். பிறகு வாயகண்ட பெரியதொரு பானையை அடுப்பின் மேலேற்றிக் கொஞ்சம் பால் வார்த்துப் பானையின் வாய்க்குச் சீலை கட்டி அச்சீலையின் மேல் பிசைந்து வைத்திருக்கும் சூரணத்தை வைத்து ஆவியில் வேகவைத்து எடுத்துக் கொண்டு ஆறிய பின் வேண்டியளவு தேன் விட்டுப் பிசைந்து உருண்டைகளாகச் செய்து பத்திரப் படுத்திக் கொள்ளவும்.

தகுந்த அனுபானத்துடன் கொடுத்தால் மேற்கூறிய சகல வியாதிகளும் தீரும்.

## 144. சுவாசகாசத்திற்குத் தாளிசபத்திரி வடகம்

| | |
|---|---|
| தாளிசபத்திரி | செவ்வியம் |
| சுக்கு | திப்பிலி |

இவைகள் வகைக்கு 2 பலம்.

| | |
|---|---|
| நெல்லிக்காய் | மிளகு |
| சிறுநாகப்பூ | ஏலம் |
| தான்றிக்காய் | திப்பிலிமூலம் |
| பச்சிலை | கடுக்காய் |

இவைகளை வகைக்கு 1 பலம் பிரமாணமெடுத்துக் கொண்டு பொடித்துச் சூரணஞ்செய்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக் கொள்ளவும்.

பிறகு 110 பலம் வெல்லத்தை நீரில் கரைத்து வடி கட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாகக் காய்ச்சிப் பாகு செய்து, அதில் 10 பலம் புளியங்கொட்டையின் மேற்றோலைப் போட்டுக் காய்ச்சி, சூரணத்தையும் அதில் கலந்து பக்குவம் செய்து இறக்கிக்கொண்டு, சிறிது ஆறிய பிறகு 3 காசிடை உருண்டைகளாகச் செய்து கொள்ளவும்.

தினந்தோறும் காலையில் ஒரு உருண்டையைச் சாப்பிட சுவாசம், பாண்டு, காசம், காமாலை, மேல்மூச்சு, அக்கினி மந்தம் முதலான நோய்கள் தீரும்.

## 145. வஜ்ஜிரவல்லி வடகம்

பிரண்டை 1 தூக்கைக் கொண்டுவந்து, பிரண்டையி லுள்ள கணுக்களை வெட்டி எடுத்துவிட்டு, சிறு துண்டங் களாகச் செய்து மெல்லியதாக அரிந்து இரண்டு படி மோர் விட்டு, நன்றாக வேகவைத்துக் கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| இஞ்சி 2 பலம் | சீரகம் 2 பலம் |
| மிளகு 2 பலம் | சீனக்கற்கண்டு ½ பலம் |
| இந்துப்பு 1 பலம் | பெருங்காயம் 2 விராகனெடை |
| சர்க்கரை நார்த்தம் பழம் 30 | |

இவைகளை எல்லாம் ஒன்று கூட்டி, நார்த்தம் பழரசத்தால் மெழுகு பதமாக அரைத்து அத்துடன் சிறிது நெய்யுங் கலந்து மறுபடியும் நைவாக அரைத்து வில்லைகளாகத்தட்டி உலரவைக்கவும். உலர்ந்தபின் எடுத்துப் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

காலையில் ஒரு வில்லை, சாயந்திரமொரு வில்லை வீதம் தினம் சாப்பிட்டு வர வயிற்று வலி, பித்தம், வாயினின்று நீர் சுரத்தல், மார்பு வலி, வாயு முதலிய அநேக ரோகங்கள் தீரும்.

**பத்தியம்:** வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

**146. தாளிச வடகம், வாதம், சிலேத்துமம், அக்கினிமந்தம் இவைகளுக்கு உசிதமானது.**

| | |
|---|---|
| தாளிசபத்திரி | மிளகு |
| செவ்வியம் | கிராம்பு |
| சிறுநாகப்பூ | இலவங்கப்பட்டை |
| விலாமிச்சைவேர் | |

இவைகள் வகைக்கு 1 பலம்,

திப்பிலிமூலம் 2 பலம். திப்பிலி 2 பலம்
சுக்கு 3 பலம்

இவைகள் யாவற்றையும் ஒன்றுகூட்டி இடித்து வஸ்திர காயஞ் செய்து, வாலாஜிபேட்டை சினி 2 சேரைக் கலந்து, சிறிது பாலைத் தெளித்து சூரணத்தைப் பிசைந்து வைத்துக் கொள்ளவும்.

அகண்டதும் குட்டையாயுமுள்ள ஒரு பானையில் 2 படி பசுவின் பாலும், 2 படி தண்ணீரும் வார்த்துப் பானையின் வாயைச் சீலையால் கட்டி, அச்சீலையின் மேல் சூரணத்தை வைத்து ஆவி போகாவண்ணம் மற்றொரு பானையால் மூடி அடுப்பின் மேலேற்றிப் பானையிலுள்ள பால் முழுமையும் சுண்டும்வரை வேகவைத்து பின்பு சூரணத்தை எடுத்துக் கொண்டு அம்மியின் மேல்வைத்துச் சூடாக இருக்கும் போதே ஒரு சேர் நெய்யைக் கலந்து நன்றாகப் பிசைந்து கொட்டைப்பாக்களவு உருண்டைகளாகச் செய்து கொள்ளவும்.

வேளை ஒன்றுக்கு ஒரு உருண்டைப் பிரமாணம் இரு வேளையும் ஒரு மண்டலம் வரையில் உட்கொள்ள, வாதம், சிலேத்துமம், கிராணி, பாண்டுரோகம், மார்புவலி, சுரத்தினால் உண்டான பாண்டுரோகம், வாயுவினால் உண்டாகும் மூல வியாதிகள், குன்மம், கபம், பீனிசம், வயிற்று உப்பிசம், இருமல், நெஞ்சடைப்பு முதலான வியாதிகள் தீரும்.

## பாகு

### 147. குன்மத்திற்குத் தேங்காய்ப் பாகு

ஒரு முற்றின தேங்காயை எடுத்து அதில் ஒரு துவாரம் இட்டுத் தண்ணீரை ஊற்றிவிடவும். பிறகு அதில்

சௌவர்சலவணம் காந்தம் பெருங்காயம்

இவைகள் வகைக்கு ஒருபைசா எடை எடுத்துத் தேங்காயில் போட்டு, இரண்டு விராகனெடை கள்ளிப் பாலையும் உள்ளே விட்டு துவாரத்தை மூடி சாணத்தால் தேங்காயைக் கவசம் செய்து காட்டெருவில் புடம் போட்டுத் தேங்காயின் ஓடு கருகும்படி எரித்து, பிறகு அத்தேங்காயை எடுத்து உடைத்து உள்ளிருக்கும் யாவற்றையுமெடுத்து நன்ருக அரைத்து மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

இம்மாத்திரையைச் சாப்பிடு முன்பு நாக்கில் நல்லெண்ணெயைத் தடவி, கொஞ்சம் பனைவெல்லத்தையும் மென்று சாப்பிட்டு விட்டு, மூன்று கொட்டைப் பாக்களவு மருந்தை மூன்று நாள் சாப்பிடவும். இவ்வாறு உட்கொள்ள எட்டுவித குன்மங்களும் தீரும்.

### 148. வஜ்ஜிரவல்லிப் பாகு

பிரண்டைக் கொடியின் சாறு 2 படி
கடுக்காய் 50 ( எண்ணிக்கையில் )
சுக்கு மிளகு திப்பிலி

இவைகள் வகைக்கு 1 பலம்

சீரகம், பெருங்காயம், சவுக்காரம்
அதிவிடயம் பொரித்த வெங்காரம்

இவைகள் வகைக்கு ½ பலம்

| | |
|---|---|
| கடுகு $\frac{1}{8}$ படி | கடுகரோகணி 4 விராகனெடை |
| ஓமம் $\frac{1}{8}$ படி | மல்லி 4 விராகனெடை |
| கரியுப்பு $\frac{1}{2}$ படி | அதிமதுரம் 7 விராகனெடை |
| | உள்ளிப்பூண்டு 5 விராகனெடை |

இவைகளை நன்ருக அரைத்து, அடுப்பின் மேலேற்றி அடி பிடிக்காமல் காய்ச்சி, அதில் $\frac{1}{4}$ படி ஆமணக் கெண்ணெ யையுங் கூட்டிப் பக்குவஞ் செய்து கொள்ளவும்.

நாளொன்றுக்கு ஒரு கொட்டைப் பாக்களவு விதம் 45 நாட்கள் சாப்பிடவும்.

**பத்தியம்** :— புளிப்பு, கைப்பு இவைகளை நீக்கவும். இம் மருந்தினல் குன்மம், கிராணி, மகோதரம் முதலான வியாதிகள் தீரும்.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

௬0-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## கஷாயங்கள்

## கஷாயங்கள்

### 149. மாந்தத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| சங்கிலை | புழுங்கலரிசி |
| சுக்கு | திப்பிலி |
| சிற்றரத்தை | ஓமம் |

இவைகளைப் பொன்னிறமாக வறுத்துத் தண்ணீர் விட்டுக் கஷாயம் செய்து கொடுக்கவும்.

### 150. வயிற்றுவலி, கட்டி இவைகளுக்கு கஷாயம்

கொண்டக்கடலைக் கீரை 5 பிடி எடுத்து மண் பாத்திரத்திலிட்டு 2 படி தண்ணீரையுமிட்டு,

| | |
|---|---|
| மிளகு $\frac{1}{2}$ சேர் | திப்பிலி $\frac{1}{8}$ சேர் |
| சுக்கு $\frac{1}{8}$ சேர் | |

இவைகளையும் அத்துடன் போட்டு இரண்டு சேர் கஷாயமாகச் சுண்டக்காய்ச்சி வேளைக்கு 9 தோலா அளவு கஷாயத்தைக் குடிக்க வயிற்று வலி தீரும்.

### 151. உத்தாமணிக் கஷாயம்

| | | |
|---|---|---|
| (1) | உத்தாமணி வேர் | பூண்டு |
| | பேய்மருட்டி வேர் | கோழியாவரை |
| | வசம்பு | சாணக்கி கீரை |
| | ஓமம் | |

இவைகளைப பானையிலிட்டு நன்ருக வறுத்துக் கருக்கி தண்ணீர் விட்டுக் கஷாயம் செய்து அன்றே கொடுக்கவும்.

சுரமும், தாகமும் இருந்தால்

| | | |
|---|---|---|
| (2) | நுணாயிலை | வெந்தியம் |
| | வசம்பு | பூண்டு |

இவைகளைக் கருக்கிக் கஷாயமிட்டுக் கொடுக்க குழந்தைகளுக்கு ஏற்படும் மாந்தர், பொருமல், கழிச்சல் முதலான பிணிகள் தீரும்.

(3) பூண்டு வசம்பு
பனைவேர் உத்தாமணியிலை
ஆட்டாம்புழுக்கை

இவைகளைக் காடி வார்த்து அரைத்து வயிற்றின் மேல் பூசினல் வயிறு கழிந்து பொருமல் தீரும்.

இவ்விமுறையே காய்ச்சி வயிற்றின் மேல் தடவினல் வயிற்றுப்போக்கு நிற்கும். பொருமலும் தீரும்.

## 152. மாந்தத்திற்குக் கஷாயம்

ஓமம், கருஞ்சீரகம், உத்தாமணியிலை

இவைகளை வகைக்கு ஒருபிடி வீதம் எடுத்துக் கருக்கி $\frac{1}{8}$ சேர் தண்ணீர் விட்டு,

நிலத்துளசிவேர் சிக்குனம்பட்டை
சிறுகுறிஞ்சான்வேர் ஈசுவரமூலிகைவேர்
இண்டங்கொழுந்து

இவைகளையும் நீரில் போட்டுக் காய்ச்சி சிறு குழந்தைகளுக்கு ஒன்று அல்லது இரண்டு வேளை கொடுக்க மாந்தம் தீரும்.

## 153. குழந்தைகள் மாந்தத்திற்குக் கஷாயம்

(1) கீழாநெல்லியின் ஈர்க்கு பூவுடன் கூடிய மாதுளம்
வெந்தியம் பிஞ்சு

இம்மூன்றையுங் கூட்டி கஷாயமிறக்கி 5 வேளைக்குக் கொடுக்கப் பிணி தீரும்.

(2) வேம்பின் ஈர்க்கு முருங்கை ஈர்க்கு
நுணா ஈர்க்கு கழற்சி ஈர்க்கு

கருவேப்பிலை ஈர்க்கு

இவைகளைச் சமமாகக் கொண்டிடித்துக் கஷாயமிறக்கிக் கொடுக்க சகலவிதமான மாந்தங்களும் ஒழியும்.

| | | |
|---|---|---|
| (3) | நுணுப்பட்டை | 7 மிளகின் எடை |
| | வசம்பு | 1 மிளகின் எடை |
| | மஞ்சள் | 1 மிளகு பிரமாணம் |
| | ஓமம் | 1 காசெடை |

இவைகளை ஒன்று கூட்டி ஒரு துணியில் பொட்டணம் கட்டி ஒருபாத்திரத்தில் தண்ணீர் ஊற்றி இப்பொட்டணத்தைப் போட்டுச் சுண்டக் காய்ச்சி, பிறகு பொட்டணத்திலுள்ள மருந்தையுங் கலந்து நைவாக அரைத்துக் குழந்தைகளுக்கு உள்ளுக்குக் கொடுக்க மாந்தம் தீரும்.

| | | |
|---|---|---|
| (4) | ஆவாரம்பூ | ஆவாரயிலை |
| | ஆரஞ்சிப்பூ | ஆரஞ்சியிலை |
| | (நாரங்கம்) | நுணாப்பூ |
| | முருங்கையிலை | காராமணி இலையும், பூவும் |
| | நுணாயிலை | ஊகாயிலையும், பூவும் |
| | வேலிப்பருத்தியும் பூவும் | |

இவைகள் வகைக்கு ஒரு பிடி எடுத்து ஒரு பானையில் போட்டுக் கருக்கி, அதில்

வசம்பு 1 விராகனெடை மிளகு 1 காசெடை

ஓமத்தாள் ஒரு காசெடை

இவைகளையும் சிவக்க வறுத்து யாவற்றையும் ஒன்று கூட்டிப் பானையில் போட்டு, தண்ணீர் ஊற்றி $\frac{1}{8}$ படி கஷாயமாகக் காய்ச்சி இறக்கி வடிகட்டிக் கொண்டு மூன்று பாலடை (சங்கு) கஷாயத்தைக் குழந்தைகளுக்குக் கொடுத்தால் எந்தவிதமான மாந்தமாயிருந்தாலும் உடனே தீரும். கண்கண்டது.

### 154. வில்வக் கஷாயம் (மாந்த சுரத்திற்கு)

வில்வவேர் பாவட்டைவேர்
பூனைக்காலிவேர் காட்டுவெந்தியவேர்
நாய்வேளை வேர் கருகாமல் சுட்ட வசம்பு
சுட்டுக் கருக்கிய ஆமை ஓடு

இவைகளைச் சமமாகக் கொண்டு நன்றாக இடித்து ஒரு படி தண்ணீர் விட்டு அரைப்படியாக கஷாயம் இறக்கிக் கொள்ளவும்.

இதனால் பிள்ளைகளின் மாந்த சுரம் தீரும்.

### 155. மாந்தக் கழிச்சலுக்குக் கஷாயம்

(1) மாந்தப் புல், பாவட்டை வேர் இவைகளை ஒவ்வொரு விராகனெடை வீதம் எடுத்துக் கொண்டு, கொட்டைப் பாக்கில் பாதி, சுட்டுக் கரியாக்கிய புருஷ வசம்பு (?) 1 பணவிடை, வெள்ளைப்பூண்டு, இவைகளை ஒன்றிரண்டாக இடித்துத் தண்ணீர் விட்டுக் கஷாயம் இறக்கி உட்கொள்ள மாந்தத்தால் ஏற்படும் கழிச்சல், பொருமல், முதலானது தீரும்.

(2) வேளை, வெந்தியம், வசம்பு இவைகள் வகைக்கு 1 பலம். ஒரு பழகிய பானையில் போட்டு நன்றாக வறுத்துத் தண்ணீர் விட்டு சுயமான கஷாயத்தை இறக்கி ஒரு பாலடை கஷாயத்தைக் குழந்தைகளுக்குக் கொடுக்க மாந்தக் கழிச்சல் தீரும்.

### 156. சீத இரத்தபேதி, வயிற்றுக்கடுப்பு முதலானதற்குக் கஷாயம்

பசுவின் பால் $\frac{1}{4}$ படி, வெள்ளாட்டுப் பால் $\frac{1}{4}$ படி, இவைகளை ஒன்றுபடக் கலந்து அடுப்பின் மேலேற்றி நன்றாகக் கொதிக்கும் பொழுது $\frac{1}{4}$ படி அரசம்பட்டைச் சாற்றை அதிலூற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி இறக்கிக்

கொண்டு 3 வேளை உள்ளுக்குக் கொடுக்க வயிற்றுக் கடுப்பு, இரத்தசிதம் விழுவது முதலான வியாதிகள் தீரும்.

சிறு பிள்ளைகள் முதல் பெரியோர்கள் வரை இதை உபயோகிக்கலாம்.

## 157. பிள்ளைகள் வயிற்றுக் கழிச்சலுக்குக் கஷாயம்

(1) வெந்தியம் 1 பலத்தை ஒரு பானையில் போட்டுப் பொன்னிறமாக வறுத்து அதில் 2 சேர் தண்ணீரையூற்றிக் கஷாயமிறக்கிக் கொடுக்க வயிற்றுப்போக்கு தீரும்.

(2) வசம்பு, வெள்ளைப்பூண்டு, மிளகு, கருக்கிய ஆமை ஓடு, இவைகள் வகைக்கு $\frac{3}{4}$ பலம் வீதம் எடுத்து நன்றாகக் கருக்கி அதில் ஒரு படி தண்ணீரை விட்டு $\frac{1}{8}$ படி கஷாயமாகக்காய்ச்சி இறக்கி உள்ளுக்குக் கொடுக்க வாந்தியோடு கூடிய வயிற்றுப் போக்கு தீரும்.

## 158. பிள்ளைகளுக்கு அதிசாரம், சுரம், வாந்தி முதலானதற்குக் கஷாயம்

| | |
|---|---|
| மஞ்சள் | அதிமதுரம் |
| மரமஞ்சள் | வெட்பாலையரிசி |
| தூதுவளை வேரின்பட்டை | |

இவைகளைச் சமமாகக் கொண்டு சூரணித்துத் தண்ணீர் விட்டு கஷாயம் செய்து உள்ளுக்குக் கொடுக்க ஜலபேதி, அதிசாரம், வாந்தி, சுரம் முதலான நோய்கள் தீரும்.

## 159. பித்த சுரத்திற்குக் கஷாயம்

(1) கொத்தமல்லி 1 பிடி, சுக்கு 1 துண்டு, கடுக்காய் 4 (எண்ணிக்கையில்) இவைகளை இடித்துத் தண்ணீர் விட்டுக் கஷாயமிறக்கி வடிகட்டிக் கொடுத்தால் பித்த சுரம் தீரும்.

(2) மான்கொம்பு, உருத்திராக்ஷக் கொட்டை இவ்விரண்டையும் முலைப்பாலில் இழைத்துக் கொடுக்க பித்த சுரம் நிற்கும்.

*(3)* விஷ்ணுகிரந்தி, நெருஞ்சில், சாரணை இம்மூன்றையும் சமமாகக்கொண்டு இடித்துத் தூள்செய்து சிறிது கொத்தமல்லித் தூளையுங் கூட்டி 1 படி தண்ணீர் விட்டு $\frac{1}{8}$ படி கஷாயமிறக்கி தினம் இரு வேளையும் கொடுக்கப் பித்த சுரம் தீரும்.

### 160. குன்மத்துக்குக் கஷாயம்

சுரசம்பட்டை (பலாஷம்) திப்பிலி
சுக்கு பூண்டு
மிளகு

வகைக்கு 3 பலம்

இவைகளை நன்றாக இடித்துத் தண்ணீர் வார்த்துக் கஷாயம் இறக்கிக்கொண்டு, வடிகட்டிக்கொண்டு, எஞ்சிய மருந்துகளையும் நன்றாக அரைத்துக் கஷாயத்தில் குழப்பி உட்கொள்ள சகல குன்மங்களும் தீரும்.

### 161. வாய்கோணல், கபால சூலை முதலானதற்குக் கஷாயம்

ஆவாரம்பட்டை அகில்பட்டை
இலுப்பைப்பட்டை விழுதிவேர்ப்பட்டை
உகாப்பட்டை.

இவைகள் சமமாகக் கொண்டு இடித்து, 6 படி தண்ணீர் விட்டு 3 படி கஷாயமாக இறக்கி வடிகட்டிக்கொண்டு மறுபடி அந்தக் கஷாயத்தை அடுப்பின் மேலேற்றி 1 படி கஷாயமாகச் சுண்டவைத்துக் கொண்டு வேளை ஒன்றிற்கு 1 துட்டிடை விதம் காலை மாலை இருவேளையும் 20 நாள் சாப்பிட்டுவர வாய்கோணல், கபாலசூலை முதலானது தீரும்.

### 162. வெள்ளையோடு கூடிய பெரும்பாடுக்குக் கஷாயம்

நாயுருவிவேர் — நெருஞ்சில்
செம்பாத்தையின் பூ — சிறுகீரை வேர்
குட்டிவிளா — பழுத்த விளாம்பழத்தின்
களிப்பாக்கு — சதை (சோறு)

இவைகள் வகைக்கு 9 தோலா விதமெடுத்துத் தண்ணீர் விட்டு அடகஷாயம் செய்து 7 நாட்கள் உட்கொள்ளவும். அவ்வப்போது ½ தோலா காசிக் கட்டித் தூளையுங் கலந்து சாப்பிட சுவேத பங்கரம் என்னும் வெள்ளையோடு கூடிய பெரும் பாடு நோய் தீரும்.

பத்தியம் :— நல்லெண்ணெய், கூழ், கேழ்வரகு, இவைகளை விலக்கவும்.

### 163. தொண்டையிலுண்டாகும் விரணங்களுக்குக் கஷாயம்

சீமை அகத்திவிரை 1½ தோலா — திப்பிலி 1 தோலா
சுக்கு 1 தோலா — பெருஞ்சீரகம் 1 தோலா

இவைகளை ஒன்றுகூட்டித் தூள்செய்து வைத்துக் கொள்ளவும். வேண்டும் போது மூவிரல் கொண்ட அளவு சூரணத்தை 1 சேர் தண்ணீரில் போட்டு ⅛ சேராகக் காய்ச்சி வடிகட்டிச் சிறிது பனஞ்சர்க்கரையுடன் (பனங் கற்கண்டு) கலந்து குடிக்கக் குணமாகும்.

### 164. சுரத்திற்குக் கஷாயம்

வேப்பமரத்தின் மேல் படர்ந்திருக்கும் சீந்தில் கொடி 1½ தோலா
சுக்கு ½ தோலா — திராக்ஷை 2 தோலா
*காவுஸ்பான் (Gavusban) 1½ தோலா — மணத்தக்காளி விதை 1 தோலா

---

* யூனானி மருந்து.

பெருஞ்சீரகம் 1½ தோலா காசனிக்கீரை 2 தோலா
தண்ணீர் 4 சேர்

இவைகளையென்று கூட்டி எட்டிலொரு பங்கு கஷாயம் இறக்கிக்கொண்டு இக்கஷாயத்தை மூன்று பாகஞ் செய்து நாளென்றுக்கு மூன்று வேளையாகக் கொடுக்கவும். மறு நாட் காலையில் மருந்துள்ள அதே சட்டியில் 4 சேர் தண்ணீர்விட்டு முன்கூறிய விதமே அடகஷாயம் செய்து மூன்று வேளையுங் கொடுக்கவும். மூன்றும் நாளும் அவ் விதமே செய்யவும்.

**பத்தியம்:** இச்சா பத்தியம்.

## 165. மலேச்சுரத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| *காவுஸ்பான் (Gavusban) | நிலவேம்பு |
| கடுகரோகிணி | காசனிக்கீரை |
| *பனப்ஷா (Banbsha) | சத்ராஜ் (Satraj) |

வகைக்கு 1 தோலா வீதமெடுத்து இடித்துத் தூள் செய்து அதை மூன்று பாகங்களாகச் செய்து ஒரு பாகத்தூளில் 2 சேர் தண்ணீர் விட்டு 1 சேராகக் காய்ச்சி கஷாயம் இறக்கிக்கொண்டு அதை நாள் ஒன்றுக்கு 6 வேளையாகக் கொடுக்கவும் விரேசனமாக வேண்டியிருந்தால் சரீரத்தின் சுபாவம், வயதுக்கிரமம், இவைகளைத் தெரிந்து கொண்டு ½ தோலா முதல் தேவையான அளவு பரியந்தம் கூட்டியும் குறைத்தும் கொடுக்கவும்.

## 166. பிரமியத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| கரிவேப்பிலையின் ஈர்க்கு | பருத்திக் கொட்டைப் பருப்பு |
| மஞ்சள் | மரமஞ்சள் |

---

* யூனானி மருந்துகள்.

கடுக்காய் தான்றிக்காய்
நெல்லிமுள்ளி

வகைக்கு 1 பலம். கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி இவைகளின் தோலைமட்டிலும் எடுத்துக் கொள்ள வேண்டியது. எல்லாவற்றையும் கல்லுரலிலிட்டிடித்துத் தூள்செய்து ஒரு கலயத்தில் வைத்துக் கொள்ளவும். வேளை ஒன்றிற்கு 9 தோலா விதம் சூரணத்தை எடுத்து இலேசாக வறுத்துக்கொண்டு $\frac{1}{2}$ படி தண்ணீருடன் கலந்து $\frac{1}{4}$ சேர் கஷாயமாகச் சுண்டக்காய்ச்சி உட்கொள்ளவும். காலையிலும், மாலையிலும் புதிதாகவே கஷாயம் போட்டுச் சாப்பிடவும். இவ்விதமாக ஏழு நாட்கள் சாப்பிட்டால் எவ்விதமான மதுமேகமும், நீர்மேகமும் கால்பங்கு தீரும். மறுபடியும் அதேவிதமாக திரும்பத் திரும்ப செய்து சாப்பிடவும். இவ்விதமாகக் கஷாயத்தை உட்கொண்டு வந்தால் மதுமேகம் நீர்மேகம் குணமாகும். முதல் தடவை கஷாயத்தை உட்கொள்ளும்போது ஒரு மண்டலம் வரையில் பெண்சங்கமம் கூடாது. முழுமையும் வியாதி குணமடைந்ததும் புத்திரசந்தானம் ஏற்படும். கஷாயம் சாப்பிடும் பொழுது பித்தம் அதிகமானால் நான்கு நாட்களுக்கு மாத்திரம் கஷாயத்தை நிறுத்தி வைக்கவும். பிறகு மறுபடியும் சாப்பிடத் துவக்கவும். இவ்வாறு செய்தால் சகலவிதமான வியாதிகளும் தீரும். மதுமேகம், நீர்மேகம் இந்நோய்களிருந்தால் விடாமல் கஷாயத்தைச் சாப்பிடவும். ஏழு நாட்களில் குணமாகாவிடில் மறுபடியும் அவ்விதமே மூன்று முறை கொடுத்தால் நிச்சயமாக வியாதி தீரும்.

## 167. மதுமேகத்திற்குக் கஷாயம்

செம்மண் பூமியில் வளர்ந்துள்ள பனைமரத்தின் வேருக்கடியில் இடுப்பளவு ஆழம்பறித்து அடியிலுள்ள பனை வேரைக் கொணர்ந்து அவற்றின் மேற்றோலை நீக்கி பிறகு இடித்து கஷாயம் செய்து ஏழு நாளைக்கு இரு வேளையுமாகச் சாப்பிட மதுமேகம் தீரும். சத்துள்ள ஆகாரத்தைச் சாப்பிடவும்.

## 168. பலவித சுரங்களால் ஏற்படும் இருமலுக்குக் கஷாயம்

அதிமதுரம் — தாளிசபத்திரி
சிறுதேக்கு — சிற்றரத்தை
இலவங்கப்பத்திரி — மிளகு
சீரகம்

வகைக்கு $\frac{1}{4}$ தோலா இவற்றை நன்ருக இடித்துத் தூளாக்கி ஒரு சேர் தண்ணீர் விட்டுக் கால் சேர் ஆகும் வரையில் சுண்டவைத்துக் கஷாயம் செய்து வடிகட்டிச் சிறிது பனங் கற்கண்டைக் கூட்டி அந்தக் கால் சேர் கஷாயத்தையும் ஒரே தடவையில் உட்கொள்ளவும். இவ்வாறு 15 நாட்கள் அல்லது அரை மண்டலம் வரையில் தினமும் உட்கொள்ள இருமல் நோய் தீரும்.

## 169. புனர்நவாதிக் கஷாயம்

மூக்கரட்டை வேர் 5 பலம் — மரமஞ்சள் 5 பலம்
கடுக்காய் 5 பலம் — சீந்தில் கொடி 5 பலம்
சுக்கு 5 பலம் — கோமூத்திரம் 1 படி

இவற்றை ஒன்றுகூட்டி அடுப்பின் மேலேற்றிச் சிறிது அளவு மீதமாகும்படி நன்ருகச் சுண்டவைத்துக் கஷாயம் செய்யவும். அரையேயரைக்கால்சேர் கஷாயத்தில் சுட்டுத் தூள்செய்த 3 பணவிடை குங்கிலியத்தைச் சேர்த்து வேளை ஒன்றுக்குக் கொடுக்க வீக்கம், பாண்டு, உதராவர்த்தம் முதலிய நோய்கள் தீரும்.

## 170. கர்ப்பிணிக்கு ஏற்படும் சுரத்திற்குக் கஷாயம்

நன்னாரிவேர் — பெருநன்னாரி
கோரைக்கிழங்கு — வெட்டிவேர்
விளாமிச்சைவேர் — சுக்கு
அதிமதுரம் — பேராமுட்டி
சிற்றாமுட்டி — சீந்தில்

தேவதாரம் சந்தனம்
நிலப்பனங்கிழங்கு

இவைகளைச் சமஎடை எடுத்துக்கொண்டு தண்ணீரும் கூட்டிக் கஷாயம் செய்து கொள்ளவும். இந்தக் கஷாயத்தைச் சிறிது தேனுடன் சேர்த்துக் கொடுக்க கர்ப்பிணி ஸ்திரிகளுக்கு ஏற்படும் சகலவித சுரங்களும் தீரும்.

## 171. வாதசுரத்திற்குக் கஷாயம்

சண்பகப்பூ ஆமணக்குவேர்
சுக்கு தக்காளிவேர்
செருப்படைவேர்

இவற்றைச் சமஎடை எடுத்துக்கொண்டு 1 படி தண்ணீர் விட்டு எட்டிலொரு பங்காகக் காய்ச்சி தினம் இருவேளையுமாக மூன்று நாளைக்கு இவ்வாறே செய்து சாப்பிட ராவணனை சம்ஹாரம் செய்த ஸ்ரீ ராமனின் பாணத்தைப் போன்று வியாதியைத் தீர்க்கும்.

## 172. வாதசுரத்திற்கு வேறு கஷாயம்

ஆறைவேர் இலந்தைவேர்
சிற்றாமுட்டிவேர் தேள்கொடுக்கு இலை
சுக்கு கடுக்காய் [வேர்

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்து மூன்றுநாள் வரையில் இவ்வாறே செய்து கொடுக்க நோய் தீரும்.

## 173. அடிக்கடி வரும் சுரத்திற்குக் கஷாயம்

சிறுதேக்கு பற்பாடகம்
சுக்கு நிலவேம்பு
ஆடாதோடை திப்பிலி
கோஷ்டம் சிந்தில்

இவற்றைச் சம எடை கொண்டு 4 படி தண்ணீரில் எட்டி லொரு பங்கு கஷாயம் செய்யவும். இவ்வாறு செய்து மூன்று நாள் வரையில் தினம் இருவேளையிலும் திப்பிலிச் சூரணம் அல்லது தேனுடன் கொடுக்க அஜீரண சுரம். சிலேத்தும சுரம், சுரம், விஷசுரம், சந்தத சுரம், நாலு நாட்களொரு முறை வரும் சுரம் முதலியன தீரும்.

### 174. தாப சுரத்திற்குக் கஷாயம்

திப்பிலி
கண்டத்திப்பிலி
செவ்வியம்
சீந்தில்வேர்
சுக்கு

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்து கொள்ளவும். இவ்வாறே தினந்தோறும் இருவேளையும் செய்து 5 நாள் வரையில் சாப்பிட தாபசுரம், அக்கினிமந்தம், அஜீரண வாயு, வாதசுரம், குன்மம், மகோதரம், சூலை முதலான நோய்கள் தீரும்.

### 175. பித்த சுரத்திற்குக் கஷாயம்

கோரைக்கிழங்கு
பற்பாடகம்
வெட்டிவேர்
விலாமிச்சைவேர்
சந்தனம்
சுக்கு

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்யவும். இவ்வாறே தினமும் இருவேளையும் செய்து மூன்றுநாள் உட்கொள்ளப் பித்தசுரம், தாபசுரம், முதலியன தீரும்.

### 176. பித்த சுரத்திற்கு வேறுமுறை கஷாயம்

கோரைக்கிழங்கு
நன்னாரிவேர்
சந்தனம்
தண்ணீர்விட்டான் கிழங்கு
சிந்திற்கொடிவேர்
சுக்கு

| | |
|---|---|
| கோஷ்டம் | அதிமதுரம் |
| ஆலம் விதை | |

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்து கொள்ளவும். இவ்வாறே தினமும் இருவேளை கஷாயம் செய்து 3 நாள் சாப்பிட பித்தசுரம் திரும்.

## 177. மகாதாபசுரத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| மாவலிங்கப்பட்டை | யவக்ஷாரம் |
| எருக்கம்பட்டை | சீந்தில்கொடிவேரின் |
| இஞ்சி | பட்டை |
| கண்டத்திப்பிலி | |

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்து கொள்ளவும். இவ்வாறே தினமும் இருவேளை கஷாயம் தயாரித்து 3 நாள் சாப்பிட தாபசுரம், சன்னிதாபசுரம், மகாதாப சுரம். முதலியன திரும்.

## 178. அதிசாரம், தாபசுரம் முதலியவைகளுக்குக் கஷாயம்

| | |
|---|---|
| கொத்தமல்லி | சீரகம் |
| வெட்டிவேர் | விலாமிச்சைவேர் |
| சந்தனம் | கோரைக்கிழங்கு |
| சர்க்கரை | கற்பூரம் |
| கோஷ்டம் | அதிமதுரம் |
| தாமரைக்கிழங்கு | அத்திப்பட்டை |
| அரசம்பட்டை | ஆலம்பட்டை |
| இச்சிப்பட்டை | மாம்பட்டை |
| நெல்லிவிதை | |

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்குக் கஷாயம் செய்யவும். இவ்விதம்

தினமும் இருவேளை கஷாயம் செய்து கொடுக்க அதிசாரம், தாபசுரம் முதலியன பறந்துபோம்.

### 179. பிராண சுரத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| மணத்தக்காளிசமூலம் | பேராமுட்டிவேர் |
| துளசி | வசம்பு |
| மரமஞ்சள் | மஞ்சள் |

இவற்றைச் சமஎடை கொண்டு ஒரு படி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்து கொள்ளவும். தினமும் இருவேளை கஷாயம் செய்து 3 நாட்கள் கொடுக்க பிராணசுரம் நீங்கும்.

### 180. பிராண சுரத்திற்குக் கஷாயம் (வேறுவிதம்)

| | |
|---|---|
| திராட்சை | சீந்தில்கிழங்கு |
| நெய்ச்செட்டிவேர் | சிற்றுமுட்டிவேர் |
| திப்பிலி | சுக்கு |

இவற்றைச் சமஎடை கொண்டு ஒருபடி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் செய்து தினமும் இருவேளை செய்து 5 நாள் உட்கொள்ள பிராணசுரம் தீரும்.

### 181. இரத்த பித்தத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| மூங்கில் இலை | வெட்டிவேர் |
| விலாமிச்சைவேர் | கோரைக்கிழங்கு |
| மாதுளைப்பிஞ்சு | வெள்ளரிவேர் |
| பச்சைப்பயறுவேர் | சுக்கு |

இவற்றைச் சமஎடை கொண்டு ஒரு படி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் தினமும் இருவேளையாக 5 நாள் உட்கொள்ள இரத்த பித்தம் தீரும்.

### 182. மூர்ச்சைக்குக் கஷாயம்

| | |
|---|---|
| நெருஞ்சில்வேர் | அமுக்கராக்கிழங்கு |
| பூனைக்காலிவிதை | தண்ணீர்விட்டான் கிழங்கு |
| கோரைக் கிழங்கு | சுக்கு |
| சீரகம் | |

இவற்றைச் சூரணித்து ஒரு படி தண்ணீரில் எட்டிலொரு பங்கு கஷாயம் தினமும் செய்து 5 நாள் உட்கொள்ள மூர்ச்சை, பிரமை, சோஷம், முதலியவை தீரும்.

### 183. இரத்த அதிசாரத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| பெருமரப்பட்டை ஒரு பலம் | மாதுளைச்சாறு |
| வாழைப்பூச்சாறு | தென்னம்பாளைச் சாறு |

வகைக்கு விசப்படி வீதம் எடுத்துக்கொண்டு அதில் மேற் சொன்ன பட்டைகளை அரைத்து எஞ்சியுள்ள சாற்றையும் குழப்பிக் கொடுக்கவும். இம்மாதிரி 3 நாள் செய்து கொடுக்க இரத்தாதிசாரம் நின்றுவிடும்.

### 184. நீர்பிரமியத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| கடுக்காய் | தான்றிக்காய் |
| நெல்லிமுள்ளி | வெந்தயம் |
| தேன் | தேவதாரம் |

வகைக்கு 25 தோலா வீதம் எடுத்துக்கொண்டு இடித்து அதில் எட்டு பங்கு நீர்விட்டு ஒரு பங்காகச் சுண்டக்காய்ச்சி கஷாயமிறக்கி அத்துடன் 2 தோலா தேனையுங் கூட்டி உட்கொள்ள விக்கம், கடுப்பு இவைகள் தீரும்.

### 185. நீர் இறங்காமலிருப்பதற்குக் கஷாயம் (வேறுவிதம்)

முள்ளுக்கிரை (சிறுகீரை) வேர் அருகம்புல்லின் வேர்
நெருஞ்சில் வேர்

இவைகளை ஒன்றுகூட்டிக் கஷாயம் செய்து குடிக்க நீர் இறங்கும்.

## 186. பித்த சுரத்திற்குக் கஷாயம்

நீலிவேரைக் கொணர்ந்து துண்டுகளாகச் செய்து அதில் எட்டுபங்கு நீர்விட்டு ஒரு பங்காகக் காய்ச்சி கஷாயம் செய்து குடிக்கப் பித்தசுரம் நீங்கும்.

## 187. நெறிகட்டி சுரத்திற்குக் கஷாயம்

ஒரு புதுச் செங்கல்லை எடுத்து, ஐந்து வெற்றிலைக்கு சுண்ணும்பு தடவி அதை அச்செங்கல்லின் மேல் சுற்றி ஒரு பானையிலிட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து, வெற்றிலை சாம்பலானதும் அதன் மேல் 1 சேர் நீரை ஊற்றி ½ சேர் சுமாராகச் சுண்டக்காய்ச்சி அக்கஷாயத்தை வடிகட்டித் தினம் இரு வேளையும் சிறிது பனஞ்சர்க்கரையுடன் கூட்டி மூன்று நாட்கள் உட்கொள்ள வியாதி தீரும்.

## 188. நெறிகட்டி சுரத்திற்கு மற்றொருவகைக் கஷாயம்

மிகப்பழைய வேம்பின் பட்டையைக் கொணர்ந்து ½ சேர் தூள் செய்து ஓர் பானையில் போட்டு 1¼ சேர் தண்ணீரையூற்றி ஒரு துண்டு சுக்கையுந்தட்டி அதில் கலந்து ½ சேர் கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டித் தினம் இருவேளையாக மூன்று நாள் சாப்பிட அனுகூலமுண்டாகும்.

## 189. பேதி, வாந்தி, அஜீரணம், பித்தம், வாயு முதலானதற்குக் கஷாயம்

கால் சேர் இஞ்சியைக் கொணர்ந்து சிறு துண்டு களாக்கித் தேன், நெய் இவைகளைச் சமனெடை விட்டு நன்ருக வறுத்துக் கொள்ளவும். பிறகு மிளகு வேப்பங் கொழுந்து, நுணுயிலை, ஓமம் இவைகளை பானையில் போட்டு சாம்பலாக்கி அத்துடன் வறுத்து வைத்திருக்கும் இஞ்சி, பசுவின் புளித்த தயிர், கொத்தமல்லி, சீரகம், திராக்ஷை, ஏலக்காய் இவைகளைச் சேர்த்துத் தண்ணீர் விட்டு எட்டிலொரு பங்காகக் காய்ச்சி வேளை ஒன்றிற்கு

1 தோலா எடை விதம் சாப்பிட மேற்கூறிய நோய்கள் தீரும்.

குறிப்பு :- வாந்தியாய்க் கொண்டிருந்தால் மேற் சொன்ன சரக்குகளுடன் வேம்பின் ஈர்க்குகளையும் சேர்த்துக் கஷாயமிறக்கிக் கொடுக்கவும்.

## 190. கைகால் ஊதல், வீக்கம் முதலானதற்குக் கஷாயம்

ஆவாரம்பட்டை, சுக்கு இவ்விரண்டையும் சம எடை யெடுத்து அதில் 8 மடங்கு தண்ணீர் விட்டு எட்டிலொரு பங்காகக் காய்ச்சி வடிகட்டி சாப்பிடக் கைகால்களின் வீக்கம் தீரும்.

## 191. காமாலைக்குத் திரிபலாதிக் கஷாயம்

நெல்லிமுள்ளி கடுக்காய்த்தோல்
தான்றிக்காய்த் தோல்

இவைகளை வகைக்கு 3 கழஞ்சு விதமெடுத்து ஒன்றிரண் டாக இடித்து 2 படி சுத்த தண்ணீர்விட்டு அடுப்பின் மேலேற்றி ஒரு உழக்காகும்வரை காய்ச்சி இறுத்து சுத்தி செய்த சிவதைவேர்ச் சூரணம் 2 கழஞ்சு போட்டு, மூன்று நாளைக்குத் தினமும் காலைவேளைகளில் மாத்திரம் கொடுத்து வர (நன்ருகப் பேதியாகி) காமாலை தீரும்.

## 192. பயறுக் கஷாயம்

பச்சைப்பயறு ½ படியை ஒரு சட்டியில் போட்டு அத் துடன் 1 படி தண்ணீர் விட்டு, நெல்லிமுள்ளி ஒரு சிரங்கை யும் கூடப்போட்டு ஒருநாள் முழுதும் ஊறவைக்கவும். மறுநாள் அதில் ஊறிய நெல்லிமுள்ளிகளைப் பொறுக்கி எறிந்து விட்டு தண்ணீரை மட்டிலும் இறுத்துக் கொள்ளவும். பிறகு ஒரு பாக்களவு வெல்லமெடுத்து

மேலே சொன்ன பாசிப்பயறுக்கமு நீரில் கரைத்துக் குடித்து விட்டு, ஊறிய பயறையும் வெல்லத்துடன் கூட்டி உண்ணவும்.

**பத்தியம் :-** வெள்ளாட்டு உப்புக்கண்டம் ( உலர்த்திய வெள்ளாட்டுக் கறி ), மோர்சாதம் இவைகளைச் சாப்பிடவும். இதனால் மறட்காமாலை குணமாகும்.

## 193. பித்தவாயுவினால் ஏற்பட்ட வயிற்றுவலிக்குக் கஷாயம்

வெட்பாலையரிசி 4 விராகனெடை, சீரகம் 4 விராகன் எடை, செப்புநெருஞ்சில் ½ விராகனெடை இம்மூன்றையும் சேர்த்திடித்துக் கஷாயம் செய்து 3 நாளைக்குத் தினம் இரு வேளையாகச் சாப்பிட்டுவர வலி தீரும்.

## 194. பல சுரத்திற்குக் கஷாயம்

| | |
|---|---|
| நிலவேம்பு | சித்திரமூலம் |
| தாமரைவளையம் | முட்காவேளைவேர் |
| சிந்தில் தண்டு | விஷ்ணுகிரந்தி |
| பற்பாடகம் | |

இவைகளைச் சமமாகக்கொண்டு இரண்டு படி தண்ணீர் விட்டு ஒரு படியாகக் காய்ச்சிக் குடித்துவர சகல சுரங்களும் தீரும்.

## 195. திராக்ஷாதிக் கஷாயம்

| | |
|---|---|
| திராக்ஷை | பாற்பாடகம் |
| சிறுகாஞ்சொறி | கோரைக்கிழங்கு |
| கொத்தமல்லி | சுக்கு |
| சிந்தில் | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை வீதம் கொணர்ந்து அதில் 1 சேர் தண்ணீர்விட்டு எட்டிலொரு பங்காய்க் காய்ச்சி வடிகட்டி தேக பலத்தை அனுசரித்து அரைக் கால்சேர் முதல் கால்சேர் வரையில் 1 விராகனெடை தேனுடன் கூட்டிக்கொடுக்கவும்.

## 196. பஞ்சகோலாதிக் கஷாயம்

| | |
|---|---|
| திப்பிலி | திப்பிலிமூலம் |
| கொடிவேலிவேர்ப்பட்டை | சுக்கு |
| செவ்வியம் | |

இவைகள் வகைக்கு 2 விராகனெடை வீதம் கொணர்ந்து இடித்து அதில் 2 சேர் தண்ணீரையுங் கூட்டி எட்டிலொரு பங்காகக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு 1 விராகனெடை தேனையும் கலந்து கொடுக்கவும்.

## 197. மல்லிகை இலையின் கஷாயம்

| | |
|---|---|
| மல்லிகைப்பூவிலை | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| சிறுகாஞ்சொறி | மஞ்சள் |
| மரமஞ்சள் | கஸ்தூரிமஞ்சள் |
| நீபதிராக்ஷை | கொத்தமல்லி |
| வெட்டிவேர் | சிந்தில்கொடி |

இவைகளை ஒன்றுகூட்டி அடகஷாயம் வைத்து ஏழு நாள் கொடுக்கவும்.

## 198. நீரிழிவுக்குக் கஷாயம்

| | |
|---|---|
| கடலுறிஞ்சிப்பட்டை 2 விராகனெடை | |
| சந்தனத்தூள் | ஏலக்காய் |
| பரங்கிப்பட்டை | கொத்தமல்லி |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை வீதமெடுத்துக் கொண்டு எல்லாவற்றையும் ஒன்றுகூட்டி இரண்டு சேர் தண்ணீர் விட்டு சுண்டக் காய்ச்சி $\frac{1}{2}$ சேர் கஷாயமிறக்கிக் கொண்டு உட்கொள்ளவும். மூன்று நாள் சாப்பிடவும்.

## 199. கர்ப்ப வளர்ச்சிக்குக் கஷாயம்

| | |
|---|---|
| தேவதாரு | கொடிக்காகண வேர் |
| சிறுகீரைவிதை | |

இவைகளின் எடை $\frac{1}{2}$ சேர். அத்துடன் $2\frac{1}{2}$ சேர் தண்ணீர் விட்டு $\frac{1}{2}$ சேர் கஷாயமிறக்கிக்கொண்டு 7 நாள் உட்கொள்ள கர்ப்பம் வளரும்.

சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## தைல வகைகள்

## தைலங்கள்

### 200. மகாசந்தனாதித் தைலம்

| | |
|---|---|
| அதிமதுரம் | மிளகு |
| அக்கராகாரம் | கிராம்பு |
| ஜாதிக்காய் | ஜாதிப்பத்திரி |
| கொத்தமல்லி | சரளதேவதாரு |
| சண்பகமொட்டு | கஸ்தூரிமஞ்சள் |
| மஞ்சள் | மரமஞ்சள் |
| கோஷ்டம் | பேரத்தை |
| சந்தனம் | பூலாங்கிழங்கு |
| கர்கடசிங்கி | தாளிசபத்திரி |
| காசிக் கட்டி | சிறு தேக்கு |
| வால்மிளகு | வெட்டிவேர் |
| சமுத்திரப்பச்சை | முள்ளிலவம்பிசின் |
| சிறுநாகப்பூ | பூர்ணாங்கௌரப்பட்டை |
| இலவங்கப்பட்டை | கடுக்காய் |
| பூஞ்சாந்துப்பட்டை | |

இவைகள் வகைக்கு $3\frac{1}{2}$ தோலா

| | |
|---|---|
| நல்லெண்ணெய் 3 படி | பசும்பால் 3 படி |
| இளநீர் 5 சேர் | |

இவைகளை ஒன்று கூட்டிக் கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| முசுமுசுக்கைச்சாறு 4 சேர் | பொன்னாங்காணிச் சாறு 4 சேர் |
| தாழைவிழுதின் சாறு $\frac{1}{4}$ சேர் | |
| கற்பூரவல்லிச்சாறு $\frac{1}{4}$ சேர் | பலராக்ஷசக்கிழங்கின் சாறு $\frac{1}{2}$ சேர் |

இவைகளை ஓர் பானையில் போட்டு அடுப்பின் மேலேற்றித் துடுப்பால் அடிக்கடி கிண்டிக் கொடுத்து அடி பிடிக்காமல் எரிக்கவும். மேற்கூறிய இதர சரக்குகளை இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து 20 படி தண்ணீரில் கலந்து 2 படியாகக் காய்ச்சி கஷாயத்தைத் தயாரித்து தைலத்தில் கலக்கவும்.

| | |
|---|---|
| கிராம்பு | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | தாளிசபத்திரி |
| சண்பகமொட்டு | பூலாங்கிழங்கு |

முதலிய இச்சாமான்களை மட்டும் தனியாகச் சூரணஞ் செய்து எடுத்து வைத்திருக்கவும். இத்துடன் இரண்டு படித் தண்ணீரைக் கலந்து ½ படி கஷாயமாகக் காய்ச்சி மேற்கூறிய தைலத்தில் கூட்டி துடுப்பினால் அடிக்கடி கிளறிக்கொடுத்து மெழுகு பதமானதும் சிறிது எடுத்து சுவற்றில் எறிய அது சுவற்றில் ஒட்டாமலிருந்தால் பக்குவமாய்விட்டது என்றறிந்து கீழே இறக்கி வடித்துக் கொள்ளவும். இத் தைலத்தினால் தலைமுழுகி வர சகல உஷ்ணம், வாயு முதலான பற்பல நோய்கள் தீரும்.

## 201. நாரங்கித் தைலம்

ஆரஞ்சுப்பழம் 50. சர்க்கரை நார்த்தம்பழம் 50 இவைகளின் சாற்றைப் பிழிந்து வடிகட்டி.

இளநீர் (10) பத்தின் தண்ணீர்
தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு 1 சேர்
நிலப்பனங்கிழங்கின் சாறு 1 சேர்
பழம்பாசியின் சாறு 1 சேர்
பொன்னாங்காணிச் சாறு 1 சேர்
முசுமுசுக்கைச் சாறு 1 சேர்
சிறுகீரைச் சாறு 1 சேர்
நெய்ச்செட்டியின் சாறு 1 சேர்
நொச்சியிலைச் சாறு 1 சேர்
நாயுருவியின் சாறு ½ சேர்
பசுவின் பால் 5 சேர்

| | |
|---|---|
| மிளகு | வெட்டிவேர் |
| விலாமிச்சைவேர் | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | நன்னாரி வேர் |
| சரள தேவதாரம் | அம்மான் பச்சையரிசி |
| தான்றிக்காய் | கொத்தமல்லி |

| | |
|---|---|
| வில்வ வேர் | சிற்றுமுட்டி வேர் |
| பேராமுட்டி வேர் | சங்கவல்லி |
| வாயுவிளங்கம் | கருஞ்சீரகம் |
| நெல்லிமுள்ளி | பூலாங்கிழங்கு |

இவைகள் வகைக்கு 9 தோலா விதமெடுத்துக் கொண்டு யாவற்றையும் ஒன்றுகூட்டிடித்து ஒரு பானையில் போட்டு 20 சேர் தண்ணீர்விட்டு அடுப்பின் மேலேற்றி நான்கு சேர் கஷாயமாகச் சுண்டக் காய்ச்சி எடுத்துக்கொண்டு பத்து சேர் நல்லெண்ணெயில் பால், கஷாயம் இவைகளை எல்லாம் அப்பானையில் போட்டு ஒன்றுபடக் கலந்து அடுப்பிலேற்றிக் கிளறிக் கொடுக்கவும். பிறகு மெழுகு பதமானதும் வேறொரு பாத்திரத்திலூற்றி வடிகட்டிக் கொள்ளவும். பிறகு அதில்

| | |
|---|---|
| கோரோசனை | வால்மிளகு |
| குங்குமப்பூ | புனுகு |

வகைக்கு ½ விராகனெடை பிரமாணம் எடுத்து நன்றாகச் சூரணித்து எண்ணெயில் கலந்து வைத்துக்கொள்ளவும். இத்தைலத்தினால் தலைமுழுகி வர மேக வாயு, பித்தம் பிரமியம், தலைமயிர் உதிர்தல் முதலான நோய்கள் தீரும்.

## 202. சகலவித கிரந்திகளுக்குத் தைலம்

| | |
|---|---|
| சங்கம் குப்பியிலைச் சாறு | கழற்சியிலைச் சாறு |
| பலராக்ஷசக்கிழங்கின் சாறு | கடத்தொரத்தியிலைச் சாறு |
| அமுக்கிராக் கிழங்கின் சாறு | கொடைக்கிழங்குச் சாறு |
| வெண்சங்கேசுவரையிலைச் சாறு | கொல்லன்கோவைக் கிழங்கின் சாறு |
| கோழியவரையிலைச் சாறு | |
| பெருமரப்பட்டை | பூவரசம்பழச் சாறு |

இவைகளின் சாறு வகைக்கு 1 சேர்

| | |
|---|---|
| ஊசிக்காந்தம் | கருஞ்சீரகம் |
| கார்போகரிசி | கந்தகம் |
| கடுகரோகிணி | காட்டுச்சீரகம் |

வகைக்கு 5 விராகனெடை இவற்றை மேற்கூறிய சாற்றில் அரைத்து 3 சேர் ஆமணக்கெண்ணெயுடன் கூட்டி மெழுகுப் பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். சரீரத்தை அனுசரித்து வேளை ஒன்றுக்கு 3 விராகனெடை எண்ணெய் கொடுக்கவும். சகல கிரந்தி நோய்களைத் தவிர கிருமி முதலான சகல வியாதிகளும் தீரும்.

**பத்தியம் :** முருங்கப்பிஞ்சு, சுட்ட உப்பு, பசுவின் பால், பச்சைப்பயறு, முளைக்கிரை, புடலப்பிஞ்சு இவைகளைச் சேர்க்கவும். வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

## 203. நேத்திர ரோகத்திற்கும், நேத்திரவாயுவுக்கும் தைலம்

வெள்ளாட்டுப்பால் — பேய்ப்பீர்க்கிலைச்சாறு
கையாந்தகரைச்சாறு — நீலிச்சாறு

வகைக்கு 1 நாழி

நல்லெண்ணெய் — ஆமணக்கெண்ணெய்
நெய்

வகைக்கு $\frac{1}{2}$ படி

இலவங்கப்பத்திரி — ஏலம்
கடுக்காய் — தான்றிக்காய்
நெல்லிமுள்ளி — செங்கழுநீர்
கோஷ்டம் — அதிமதுரம்
நன்னாரிவேர் — சந்தனத்தூள்
சடாமாஞ்சில் — மஞ்சிஷ்டி
மரமஞ்சள் — தண்ணீர்விட்டான் கிழங்கு

வகைக்கு 1 விராகனெடை. இச்சரக்குகளை நன்றாக இடித்து பிறகு நைவாக அரைத்து விழுதாக்கி எண்ணெயில் குழப்பி மெழுகுப் பதத்தில் எண்ணெயைக் காய்ச்சி இறக்கிக் கொண்டு தலை முழுகிவர நேத்திர வியாதிகள், சிரோ

வியாதிகள் தீரும். எண்ணெயை நசியமும் செய்து கொள்ளலாம்.

## 204. காதுவலி, கண்வலி, பீனிசம் முதலானதற்குத் தைலம்

பேய்ப்பீர்க்கிலைச்சாறு $\frac{1}{4}$ படி ஈரமஞ்சளின் சாறு $\frac{1}{4}$ படி
நொச்சியிலைச்சாறு $\frac{1}{4}$ சேர் சவுரியின் சாறு $\frac{1}{4}$ சேர்
குறட்டையின் சாறு $\frac{1}{4}$ படி கஞ்சாயிலைச்சாறு $\frac{1}{4}$ படி

இச்சாறுகளை 3 சேர் நல்லெண்ணெயில் கலந்து கொள்ளவும். பிறகு,

அதிமதுரம் 9 தோலா மிளகு 9 தோலா
சீரகம் 9 தோலா

இம் மூன்றையும் பசும் பாலிலரைத்து ஷை எண்ணெயில் குழப்பி மெழுகு பதமாகக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொண்டு தலை முழுகிவர வேண்டியது. தலைமுழுகிய நாட்களில் வாயு பதார்த்தங்களை நீக்கவும்.

## 205. பீனிசத்திற்கு எண்ணெய்

மருள் கிழங்கின் சாறு 1 படி நல்லெண்ணெய் $\frac{1}{2}$ படி
மிளகு $\frac{1}{4}$ சேர் திப்பிலி $\frac{1}{4}$ சேர்

இவைகளை ஒன்றுகூட்டி மெழுகுப் பதமாகக் காய்ச்சி பக்குவம் செய்து வைத்துக்கொண்டு அத்தைலத்தில் 1 கரண்டி எண்ணெயில் 1 விராகனெடை வெம்பாடம் பட்டையை விழுதாக அரைத்து கரண்டியிலிட்டுக் காய்ச்சி, தலை முழுகுவதற்கென்று எடுத்து வைத்து இருக்கும் எண்ணெயில் இதைக் கலந்து நான்கு நாளைக்கொருமுறை தலை முழுகவும். எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு 1 ஜாமம் வரையில் உடம்பில் ஊறவைத்துக் கொண்டு பிறகு ஸ்நானம் செய்ய ஜலபீனிசம், சிரோவாயு, ஒருபக்கத்துத் தலைவலி, தந்தவாயு முதலானது தீரும்.

### 206. பீனிசத்திற்கு எண்ணெய் (வேறுவிதம்)

சர்க்கரை நார்த்தம் பழரசம் நொச்சியிலைச் சாறு
துளசியிலைச் சாறு கையாந்தகரைச் சாறு
வகைக்கு $2\frac{1}{2}$ படி, நல்லெண்ணெய் $2\frac{1}{2}$ படி,

| | |
|---|---|
| மிளகு | திப்பிலி |
| அரத்தை | சதகுப்பை |
| கஸ்தூரிமஞ்சள் | மரமஞ்சள் |
| சிறுதேக்கு | கருஞ்சீரகம் |
| வாயுவிளங்கம் | அதிமதுரம் |
| கொத்தமல்லி | வெட்பாலையரிசி |
| கருங்குங்கிலியம் | |

வகைக்கு $4\frac{1}{2}$ தோலா. இவைகளை அரைத்து ஷை சாறுகளில் சேர்த்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எண்ணெயைக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு வாரத்தில் இருமுறை தலைமுழுகிவர சகல பீனிச ரோகங்களும் தீரும்.

### 207. விரணங்களுக்குத் துவரெண்ணெய்

வெண்மருதம் பட்டையின் சாறு 1 சேர்
நல்லெண்ணெய் 1 சேர்
( தேன் ) மெழுகு 1 விராகனெடை
வெள்ளைக்குங்கிலியம் 1 விராகனெடை
கொம்பரக்கு 1 விராகனெடை

இவைகளை வெண்மருதம்பட்டையின் சாற்றில் அரைத்துப் பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும்.

### 208. முழங்கால் வலிக்கு எண்ணெய்

சிற்றாமணக்கு விதை கால் படி
அரைத்த கோவையிலை ஒரு எலுமிச்சங்காயளவு
அரைத்த எருக்கன் வேர் இரு எலுமிச்சங்காயளவு

இவைகளைச் சிற்றாமணக்கெண்ணெயில் சேர்த்து அரைத்து வெய்யிலில் வைத்தால் அதினின்று எண்ணெய்

பிரிந்து வரும். அதை வடித்துக்கொண்டு முழங்கால்களுக்குத் தடவ வலி தீரும்.

## 209. பவுத்திரம் (பகந்தரம்) கண்டமாலை முதலானதற்கு எண்ணெய்

| | |
|---|---|
| கொடிவேலிவேர் | ஆடுதீண்டாப்பாளையின் வேர் |
| சிந்தில்கொடி | முசுமுசுக்கையின் துளிர் |
| புங்கம் வேர் | சிற்றவரத்தைக்கிழங்கு |
| சிறுகுறட்டைவேர் | |

வகைக்கு 1 பிடி எடுத்து; ஒன்றிரண்டாக இடித்து 5 சேர் நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி விடியற்காலையில் 1 கரண்டி வீதம் 8 நாட்களுக்கு உட்கொள்ள பவுத்திரம் (பகந்தரம்), கண்டமாலை, துடைவாழை, அரையாப்புக்கட்டி, விப்புருதி முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம் :-** துவரம்பருப்பு, அரைக்கீரை, பசுவின் நெய், சுட்ட உப்பு இவைகளைக் கூட்டிக்கொள்ளவும்.

## 210. காதுவலிக்கு எண்ணெய்

| | |
|---|---|
| சுக்கு | இந்துப்பு |
| திப்பிலி | கோஷ்டம் |
| கோரைக்கிழங்கு | வசம்பு |

இவைகளைச் சம எடை கொண்டு எண்ணெயில் கலந்து காய்ச்சிக் காதில் சிறிதளவு போடவும். காதுவலி தீரும்.

## 211. காது மந்தத்திற்கும், காதுவலிக்கும் எண்ணெய்

| | |
|---|---|
| சுக்கு | கோரைக்கிழங்கு |
| வெள்ளைப்பூண்டு | கோஷ்டம் |
| செவ்வல்லிக்கிழங்கு | வசம்பு |
| இந்துப்பு | திப்பிலி |

இந்த எட்டு சாமான்களையும் சமனெடை கொண்டு எருக்கம் பால் வேண்டியளவு விட்டு நைவாக அரைத்து நல்லெண்ணெயில் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொண்டு காதில் சிறிது போடவும். ஒரு சேர் எண்ணெய்க்கு அரைத்த விழுது $\frac{1}{2}$ பல எடை கொண்டதாக இருக்கவேண்டும்.

## 212. காது மந்தத்திற்கும், காதிரைச்சலுக்கும் எண்ணெய்

கடுகெண்ணெய் $\frac{1}{2}$ படி ஊமத்தையிலைச் சாறு $\frac{1}{2}$ படி.

இவைகளை நன்றாகக் கலந்து கொள்ளவும்.

மஞ்சள் எள்ளு

இவ்விரண்டும் வகைக்கு 1 பலத்தை எடுத்து ஊமத்தை இலைச் சாற்றினாலரைத்து எண்ணெயில் குழப்பி அடுப்பின் மேல் ஏற்றி பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொள்ளவும். இரு காதுகளிலும் தினம் இருவேளை சிறிது போட காது மந்தம் காதுவலி முதலியவைகள் தீரும்.

## 213. காது மந்தத்திற்கு நெட்டித் தைலம்

நெட்டி கையாந்தகரை
பருத்தி வெள்ளைப்பூண்டு
எருக்கம்பழுப்பு வாழைக்கிழங்கு
துளசி பாகலிலை
நொச்சி முருங்கைப்பட்டை
இஞ்சி

இவைகளைத் தனித்தனியே அரைத்துச் சாறு பிழிந்து வகைக்கு $\frac{1}{8}$ படி சாறு வீதம் எடுத்துக்கொண்டு சுத்தமான நல்லெண்ணெயில் குழப்பிக் கொள்ளவும். பிறகு,

இந்துப்பு பெருங்காயம்
மஞ்சள் காட்டுச்சீரகம்
கடுகு

வகைக்கு 1 விராகனெடை வீதமெடுத்துக் கொண்டு யாவற்றையும் ஒன்றுகூட்டி மேற்சொன்ன சாறு வகைகளில் ஏதேனும் ஒருசாறு விட்டரைத்து எண்ணெயுடன் கலந்து அடுப்பின் மேலேற்றி மெழுகு பதமாய்க் காய்ச்சி இறக்கி வடித்துக் கொள்ளவும். தினம் நான்கு துளி எண்ணெய் வீதம் இரு காதுகளிலும் போட காதுவலி, குத்தல் முதலான ரோகங்கள் தீரும்.

## 214. காது மந்தத்திற்குக் கடுக்காய் எண்ணெய்

(1) கடுக்காய்த்தோல் வெல்லம்
பனைவெல்லம்

வகைக்கு 1 விராகனெடை வீதமெடுத்து ஒருசேர் நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய் எரித்து வடிகட்டிச் சிறிதளவு காதில் போட தீரும்.

(2) அமுக்கிராக்கிழங்கு வசம்பு
பூண்டு

இம்மூன்றையும் சமமாகக் கொண்டு அரைத்து நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய் எரித்து வடித்துக்கொண்டு தினமும் காலை, மாலை இருவேளைகளிலும் பத்து நாட்கள் காதுகளில் போட்டு வந்தால் மேற்கூறியநோய் குணமாகும். மிளகு கூட்டிய நல்லெண்ணெயை தலைக்குத் தடவிவர காதுமந்தம் தீரும்.

## 215. கடுகரோகிணி எண்ணெய்

(1) கடுகரோகிணி புங்கம்பட்டை
நிலவிலை கொன்றைப்பட்டை

வகைக்கு 1 விராகனெடை. நல்லெண்ணெய் 1 சேர். எண்ணெயை அடுப்பின் மேலேற்றி அதில் மேற்கூறியவைகளைப் பொடித்துப் போட்டுவர காது மந்தம் தீரும்.

(2) கருநொச்சியிலைச்சாறு சுத்தமான நல்லெண்ணெய் இவைகள் சமமாகக்கொண்டு பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு இரு காதுகளிலும் மூன்று துளிகள் விதம் போட்டுவர காதுமந்தம் தீரும்.

## 216. தசமூலாதித் தைலம்

தசமூலத்தின் கஷாயம் 2 படி, கடுகெண்ணெய் $\frac{1}{2}$ படி இவ்விரண்டையும் ஒன்று கூட்டி

பேரரத்தை சுக்கு
பெருங்காயம்

வகைக்கு 1 விராகனெடை விதமெடுத்து இடித்து மேற் சொல்லிய எண்ணெய், தசமூல கஷாயம் இவைகளில் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி இறக்கி வடித்துக்கொள்ளவும். காதுகளில் சிறிதளவு போட்டுவர காதின் இரைச்சல், வலி, சீழ்வடிதல் முதலான நோய்கள் தீரும்.

## 217. காதுவலிக்கு எண்ணெய்

(1) விளாம்பழச்சாறு மாதுளம்பழச்சாறு
கசப்புமொல்லாம்பழச்சாறு இஞ்சிச்சாறு

இவைகளை ஒன்றுகூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க்காய்ச்சி இறக்கி வடித்துக்கொண்டு நாள் ஒன்றிற்கு இருவேளையும் சிறிதளவு காதில்போட வலி, குத்தல் முதலியவைகள் தீரும்.

(2) சுக்கு கோரைக்கிழங்கு
இந்துப்பு பெருங்காயம்
செம்பு வெள்ளைப்பூண்டு

இவைகள் சமமாகக்கொண்டு பொடித்து நான்கு பங்கு எருக்கம்பழுப்பின் சாற்றையும் ஒரு பங்கு நல்லெண்ணெயுடன் கூட்டி பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொண்டு

தினம் இருவேளையும் பத்துநாட்கள் காதில் போட்டுவர காதிலுண்டாகும் உபத்திரவங்கள் தீரும்.

## 218. காதிரைச்சல், காதில் சீழ்வடிதல் முதலானதற்கு எண்ணெய்

(1) புளிக்கீரையின் சாறு $\frac{1}{8}$ படி சிறுகீரையின் சாறு $\frac{1}{8}$ படி
வேப்பெண்ணெய் $\frac{1}{2}$ படி

இத்துடன்

| | |
|---|---|
| முருங்கைப்பிசின் | வசம்பு |
| பூண்டு | |

வகைக்கு 1 விராகனெடை வீதம் எடுத்தரைத்து எண்ணெய் சாறு இவைகளுடன் அதைக்கூட்டிப் பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு, இரண்டல்லது மூன்று துளி எண்ணெயைக் காதில் போடவும். நோய்கள் தீரும்.

(2) எருக்கிலைச்சாறு $\frac{1}{4}$ சேர் வெள்ளாட்டு நீர் $\frac{1}{4}$ சேர்
நல்லெண்ணெய் 1 சேர்

இத்துடன்

| | |
|---|---|
| சுக்கு | மஞ்சள் |
| வசம்பு | சதகுப்பை |
| பெருங்காயம் | தேவதாரம் |
| இந்துப்பு | கொன்றைக்காய் |
| மிளகு | வெள்ளைப்பூண்டு |
| திரிசூலியிலை | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை வீதம் எடுத்துக் கொண்டு மேற்சொல்லிய எருக்கிலைச் சாற்றைவிட்டு அரைத்து எண்ணெயில் குழப்பி அடுப்பின்மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொண்டு மூன்று துளி எண்ணெய் வீதம் தினம் இருவேளையுமாகப் பத்து நாட்கள் காதில் போட்டும் மூக்கில் நசியம் செய்து கொள்ள வியாதிகள் தீரும்.

(3) குப்பைமேனிவேர் குப்பைமேனியிலைத்துளிர்
ஆடுதீண்டாப்பாளைவேரும் அதன் இலைத்துளிரும்

இவைகள் வகைக்கு ஒரு கழற்சிக்காயளவு எடுத்துக் கொண்டு நைவாக அரைத்து, அதனுடன் 1 விராகனெடை மிளகையுங்கூட்டி, பிறகு எல்லாவற்றையும் ஒன்றாக அரைத்து $\frac{1}{4}$ சேர் நல்லெண்ணெயுடன் குழப்பி பக்குவமாகக் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு பத்து நாட்கள் காதில் போடவும்.

(4) ஆலம்பட்டை சிற்றரத்தை
கம்பின்பிசின் எருக்கம்பட்டை
வசம்பு தேவதாரம்

இவைகள் வகைக்கு 2 விராகனெடை வீதமெடுத்தரைத்து $\frac{1}{2}$ சேர் நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு வேளைக்கு 3 துளி வீதம் பத்து நாட்கள் காதில் போடவும்.

(5) பெருங்காயம் வெள்ளைப்பூண்டு
வசம்பு

வகைக்கு 1 விராகனெடை வீதம் எடுத்துக்கொண்டு நைவாக அரைத்து $\frac{1}{4}$ சேர் வேப்பெண்ணெயில் குழப்பி பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொண்டு தினம் காதில் போட்டுவர காதிலிருந்து வரும் சீழ் தீரும்.

(6) ஆமணக்குவிதை 10 (எண்ணிக்கையில்)
குப்பைமேனி வெள்ளைப்பூண்டு

இவைகள் சமமாகக்கொண்டு நன்றாக அரைத்து $\frac{1}{4}$ சேர் நல்லெண்ணெயுடன் குழப்பி பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொண்டு சிறிதளவு காதில் போட்டுவர சீழ் வடிதல், காது மந்தம் முதலான நோய்கள் தீரும்.

(7) பருத்திக்காய் இலவம்விதை
மாம்பட்டை வலம்புரிக்காய்
பிசைப்புல் மஞ்சள்

இவைகளைச் சமமாகக் கொண்டரைத்து $\frac{1}{2}$ சேர் நல்லெண்ணெயுடன் கூட்டி ஒன்றுபடக் குழப்பி அடுப்பின்மேல் ஏற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு காதில் சிறிதளவு போட்டுவர காதில் சீழ்வடிதல் முதலான காது நோய்கள் தீரும்.

## 219. அசுவகந்தி எண்ணெய்

அசுவகந்தியிலை ஒரு பிடி　　சிவனார்வேம்பிலை 1 பிடி
உத்தாமணிச்சமூலம் ஒரு பிடி

இவைகளைக் கல்லுரலிலிட்டு இடித்துச் சாறு பிழிந்து $\frac{1}{8}$ படி நல்லெண்ணெயில் குழப்பி அத்துடன் பெருங்காயம் $\frac{1}{8}$ பலமுங் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொண்டு சிறிதளவு இரு காதுகளிலும் தினம் இருவேளையுமாகப் பத்து நாட்கள் போட காதுவலி, வாயு முதலான வியாதிகள் தீரும்.

## 220. அத்திப்பட்டை எண்ணெய்

அத்திமரப்பட்டை　　இச்சிப்பட்டை
அரசம்பட்டை　　ஆலம்பட்டை
மாம்பட்டை

இவைகள் வகைக்கு 20 பலம் வீதம் கொணர்ந்து ஷ்டி பட்டைகளை துண்டுகளாக்கி, கல்லுரலிலிட்டிடித்து ஒரு பானையில் போட்டு 10 படி தண்ணீரையூற்றி அடுப்பின் மேலேற்றி 1 படி கஷாயமாகும்படி சுண்டக்காய்ச்சி வடி கட்டி வைத்துக்கொள்ளவும்.

பிறகு அக்கஷாயத்தில்
நல்லெண்ணெய் 1 படி　　குமுதம் 1 பலம்
இந்துப்பு 1 பலம்

இவைகளைப் போட்டு, பின்பும்

நன்னாரிவேர்ப்பட்டை　　நெல்லிப்பருப்பு
பேரரத்தை　　கிராம்பு

| | |
|---|---|
| தான்றிக்காய் | கடுகரோகிணி |
| ஏலக்காய் | பச்சிலை |
| தேவதாரம் | குங்கிலியம் |
| சடாமாஞ்சில் | கோஷ்டம் |
| சீயக்காய் | அதிமதுரம் |
| சந்தனம் | கஸ்தூரிமஞ்சள் |
| கோரைக்கிழங்கு | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை விதமெடுத்து முன் தயாரித்திருக்கும் கஷாயத்தை விட்டரைத்து எஞ்சிய கஷாயத்தில் கலந்து எண்ணெயுடன் குழப்பி அடுப்பின் மேலேற்றி கிரமமாய் 4 நாள் இளந்தியிட்டு எரிக்கவும். பிறகு ஐந்தாவது நாள் ப்க்குவமாய் வடித்துக்கொண்டு தலை முழுகி வந்தால் தலைவலி, கண்ணுபத்திரவம், காதின் உபத்திரவம், தேக உபத்திரவம், ஜலபேதி, உஷ்ணம், காங்கை முதலான நோய்கள் தீரும்.

## 221. கருவேலம்பட்டை எண்ணெய்

கருவேலம்பட்டை 40 பலம், கற்ருழைச்சோறு 40 பலம் இவைகளை ஒரு பானையில் போட்டு 2படி தண்ணீரையும் ஊற்றி அடுப்பின் மேலேற்றி நன்ருகக் காய்ச்சி எட்டிலொன்ருய்க் கஷாயம் வடித்துக்கொண்டு, அதில் இளநீர் தண்ணீர் 1 படி, நல்லெண்ணெய் 1 படி, பசுவின் பால் 1 படி இவைகளையும் ஒன்று கூட்டிக் கலந்து கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| கோஷ்டம் | கொத்தமல்லி |
| முத்தக்காசு | சிறுமுள்ளங்கிவிதை |
| சிகப்புஆம்பல்கொடி | வாலுளுவையரிசி |
| சந்தனம் | அதிமதுரம் |
| விளாம்பிசின் | கிராம்பு |
| அகிற்கட்டை | ஏலக்காய் |
| நன்னரிவேர் | பச்சிலை |

| | |
|---|---|
| விளாவேர் | ஜாதிக்காய் |
| செஞ்சந்தனம் | |

இவைகள் வகைக்கு $1\frac{1}{4}$ விராகனெடை வீதமெடுத்துப் பால் விட்டரைத்து மேற்சொல்லிய கஷாயம், எண்ணெய் இவைகளில் கலந்து அடுப்பின் மேலேற்றி மூன்று நாள்வரை இளந்தீயிட்டு நான்காம் நாள் அடுப்பினின்று இறக்கி வடிகட்டிக்கொண்டு அதில் $1\frac{1}{4}$ விராகனெடை பச்சைக் கற்பூரத்தைச் சூரணித்துப் போட்டு ஒன்ருகக் கலந்து வைத்துக்கொண்டு தினந்தோறும் தலைமுழுகிவர தலை சம்பந்தமான சகல ரோகங்கள், கண் நோய்கள், காது மந்தம், அதிக உஷ்ணம், பேதி, காதுவலி, மண்டைக் குத்தல், சரீரம் வாடிப்போதல் முதலான நோய்கள் தீரும்.

## 222. திரிகுடாதித் தைலம்

| | |
|---|---|
| வஜ்ஜிரவல்லிக்கிழங்கு | பருத்தியிலை |
| மஞ்சள் | கொடிவேலிவேர் |
| கோஷ்டம் | செவ்வியம் |
| கர்கடசிங்கி | இந்துப்பு |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | முருங்கைப்பட்டை |
| தேவதாரம் | இஞ்சிச்சாறு |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ பலம் வீதமெடுத்துக்கொண்டு எல்லாவற்றையும் ஒன்று கூட்டி இடித்து $\frac{1}{2}$ படி நல்லெண்ணெயில் குழப்பி அடுப்பின்மேலேற்றிப் பக்குவமாய் எரித்துக்கொண்டு தினமும் இரு வேளை காதில் போட்டுவர காதுவலி, காதில் சீழ் வடிதல், காதுமந்தம் முதலான வியாதிகள் தீரும்.

## 223. காசரோகத்திற்கு எண்ணெய்

| | |
|---|---|
| சூரணித்த வெள்ளைக்குங்கிலியம் | வெள்ளைப் பூண்டு |
| சிறுசாட்டணைவேர் | வசம்பு |

வகைக்கு ½ பலம் விதமெடுத்து நன்ருக இடித்து வஸ்திர காயஞ்செய்து மூன்று சேர் நல்லெண்ணெயுடன் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாயெரித்து வடித்துக் கொள்ளவும். தினந்தோறும் தேக பலத்தையும் ரோக பலத்தையும் அனுசரித்து சாப்பிட்டுவர காசம், சுவாச காசம், பிரமியம் முதலான நோய்கள் தீரும்.

## 224. பழந்தின்னி வெளவால் தைலம்

பெரியதொரு பாத்திரத்தில் 25 பலம் நெய்யைவிட்டு அதில் ஒரு சிறிய துண்டு மஞ்சளைப் போடவும். பழந்தின்னி வெளவாலொன்றைக் கொணர்ந்து அதனுடைய வயிற்றைக் கீறி உள்ளிருக்கும் குடல் முதலிய கல்மஷங்களைப் போக்கி தண்ணீரினுல் கழுவிச் சுத்தம் செய்து மேற்சொன்ன பாத்திரத்திலிட்டு அதன் மேலொரு அகண்ட பாத்திரத்தால் மூடி காற்றுப் புகாவண்ணம் செய்து 40 நாள்வரை பூமியில் புதைத்துவைத்து, பிறகு எடுத்து ஒரு ஞாயிற்றுக்கிழமை முதல் ஆரம்பித்து ஒரு நாள் விட்டு ஒரு நாள் தலையில் தடவி 10 நாழிகை கழிந்து தலைமுழுகி வரவும். அவ்விதம் செய்தால் தலைமயிர் சீக்கிரமாயும் நீளமாயும் அடர்த்தியாயும் வளரும். நெய்க்குப் பதிலாக 4 சேர் நல்லெண்ணெயில் இதே முறைப்படி செய்து கொள்ளலாம்.

## 225. சிஞ்சாதித் தைலம்

| | |
|---|---|
| புளியிலைச்சாறு | சங்கிலைச்சாறு |
| நீலிச்சாறு | துளசியிலைச்சாறு |
| எலுமிச்சம்பழச்சாறு | தாமரையின் சாறு |

வகைக்கு ¼ படிச்சாறு, நல்லெண்ணெய் 1 படி. இவைகளை எல்லாம் ஒன்றுகூட்டி, அதில்

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | சிறுநாகப்பூ |
| ஜாதிக்காய் | வெட்டி வேர் |
| உத்பலக்கிழங்கு | அகிற்கட்டை |

| | |
|---|---|
| சண்பகப்பூ | சந்தனம் |
| அதிமதுரம் | தான்றிக்காய் |
| கோஷ்டம் | தாமரைவளையம் |
| அழிஞ்சில்விதை | நெல்லிவிதை |
| கிராம்பு | செவ்வல்லிக் கிழங்கு |
| தக்கோலம் | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை வீதம் எடுத்துக் கொண்டு எலுமிச்சம்பழ ரசத்தால் அரைத்து எண்ணெயுடன் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்துக் கீழிறக்கி வைத்து வடிகட்டிப் பத்திரப்படுத்திக்கொண்டு தினந்தோறும் இத்தைலத்தைக்கொண்டு தலைமுழுகிவர தலையின் அரிப்பு, பொடுகு, உஷ்ணம், விரணம், மயிர் உதிர்தல், பூச்சி அரித்தல் வழுக்கை விழுதல் முதலான வியாதிகள் தீரும்.

## 226. தலைவலி. தலைமயிர் பூச்சரித்தல் முதலானதற்கு எண்ணெய்

கையாந்தகரைச்சாறு 4 சேர் நல்லெண்ணெய் 1 சேர் இவ்விரண்டையும் ஒன்ருகக் கலந்து கொள்ளவும். குன்றிமணிப் பருப்பு 2 பலம் மேற்கூறிய சாற்றிலரைத்து எண்ணெயில் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொள்ளவும். தினமும் இத்தைலத்தை உபயோகித்துத் தலைமுழுகி எவ்விதமான தலைவலி, பூச்சரித்தல் முதலான பிணிகள் தீர்ந்து தலைமயிரும் அடர்த்தியாய் வளரும்.

## 227. தலைமயிர் வளர எண்ணெய்

| | |
|---|---|
| நெல்லிக்காய்ச்சாறு | எருமைப்பால் |

வகைக்கு 2 படி. நல்லெண்ணெய் 1 படி. இவைகளை ஒன்று கூட்டிப் பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும். இத்தைலத்தினல் தலையை வாரிக்கொண்டு வந்தாலும்

உடம்பிலுள்ள கரங்கை நிவர்த்தியாகும். தலைமயிரும் அடர்த்தியாய் வளரும்.

### 228. யானைத்தந்த எண்ணெய்

ஆலமரத்தின் (சிகப்புநிறமுள்ள) மொட்டுகள் சவரிக்கொத்தான்
கையாந்தகரை அலரிவேர்

வகைக்கு 1 பலம். இவைகளை மெல்லியதாக அரைத்து விழுதாக்கி அதற்குச் சம எடை யானைத் தந்தத்தின் தூளை எடுத்து ஒன்றாகச் சேர்த்து நல்லெண்ணெயில் குழப்பி ஒன்று பட நன்றாகக் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வஸ்திரகாயஞ் செய்து பத்திரப்படுத்திக்கொள்ள வும். இத்தைலத்தை தினம் தலைக்குத் தடவி வர செம்படை மயிர் கருநிறமாகி, சுருட்டைமயிர் நீங்கி அடர்த்தியாய் வளரும்.

### 229. ஜாதிப்பூத் தைலம்

ஜாதிப்பூ அதன் மொக்குகள் அலரி
கொடிவேலி புங்கவிதை

இவைகள் வகைக்கு ½ பலம் வீதமெடுத்து நன்றாக இடித்துச் சூரணம் செய்து 1 சேர் நல்லெண்ணெயில் கலந்து அடுப் பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு தலைக்குத் தடவிவர மயிர் சீக்கிரமாயும் அடர்த்தி யாயும் வளரும்.

### 230. தலைமயிர் உதிர்தலுக்கு எண்ணெய்

அத்திவேர் கொடிவேலிவேர்
பீர்க்கம்வேர்

இவைகள் சமஎடை, 1 சேர் நல்லெண்ணெயும், 1 சேர் சுத்தமான தண்ணீரையுங் கலந்து மேற்கூறிய வேர்களை ஒன்றிரண்டாக இடித்து எண்ணெய்க் கலவையில் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி இறக்கி

வடித்துக்கொள்ளவும். இத்தைலத்தைத் தலைக்குத் தடவி வர உதிர்ந்த மயிர் வளரும்.

## 231. தூமதிருஷ்டிக்கு மணத்தக்காளி எண்ணெய்

மணத்தக்காளி சமூலத்தை மழை காலத்தில் கொணர்ந்து சிறு துண்டுகளாகச் செய்து நல்லெண்ணெ யில் பேட்டு பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொண்டு தினமும் ஒரு மாதம் வரை தலைக்குத் தடவி தலை முழுகி வர தூம திருஷ்டி நீங்கி பருந்தின் பார்வை போல் கூர்மையடையும்.

## 232. வெள்ளெழுத்துப் பார்வைக்கு எண்ணெய்

முருங்கை விதை 100 மிளகு 100

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு மெழுகு போலரைத்து ஒரு வெங்கலத் தாம்பாளத்தினுள் தடவி வெய்யிலில் வைத்தால் தாம்பாளம் சூடேறியதும் அதினின்று எண் ணெய் கசியும். அதை எடுத்து வடிகட்டி பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவும். ஒரு கடுகளவு எண்ணெயைக் கண்ணிலிட வெள்ளெழுத்து, படலம், பூ முதலான கண் நோய்கள் தீரும்.

## 233. மாசிக்காய்த் தைலம் (பல்வலிக்கு)

மாசிக்காய் கஸ்தூரிமஞ்சள்

இவ்விரண்டையும் வகைக்கு $\frac{1}{2}$ பலமெடுத்துச் சூரணித்து 1 சேர் நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய் எரித்து வடிகட்டி வைத்துக்கொண்டு பல் வலிக்கும், பல் அசை வுக்கும் வாயிலும், பல்லிலும் தடவி வர பிணி தீரும்.

## 234. வாதரோகத்திற்குப் பிரசாரணித் தைலம்

அம்மையார் கூந்தல் சமூலத்தைக் கொணர்ந்து $12\frac{1}{2}$ சேர் நிறுத்து எடுத்துக் கொண்டு அதை பஞ்சு போல்

கல்லுரலிலிட்டிடித்து ஒரு பானையில் போட்டு அதில் 2 படி தண்ணீரையுமூற்றி நன்றாகக் காய்ச்சி $12\frac{1}{2}$ சேர் கஷாய மாக்கி உடனே அடுப்பிலிருந்து அதை எடுத்து வடிகட்டி எண்ணெய் காய்ச்சும் அகன்றதொரு பாத்திரத்தில் போட்டு அத்துடன் $12\frac{1}{2}$ சேர் நல்லெண்ணெயுங் கூட்டிக் கொள்ளவும். பிறகு 20 சேர் பாலைக்காய்ச்சி காய்ச்சும் பொழுதே அதை முறித்து உறக்கூற்றி அடுத்த நாள் காலையில் உறக்கூற்றிய தயிரை ஒருதுணியில் மூட்டையாகக் கட்டித் தொங்கவிடவும். அதினின்று கசிந்த நீரைமட்டிலும் $12\frac{1}{2}$ சேர் எடுத்து அளந்து மேஷி எண்ணெயில் கலந்து பிறகு அதில் $12\frac{1}{2}$ சேர் காடியையும் சேர்க்கவும். பின்பு

| | |
|---|---|
| கொடிவேலி | திப்பிலிமூலம் |
| அதிமதுரம் | இந்துப்பு |
| வசம்பு | சதகுப்பை |
| தேவதாரு | சிற்றரத்தை |
| யானைத்திப்பிலி | மூதியார் கூந்தல் (அம்மையார் கூந்தல்) வேர் |
| சடாமாஞ்சில் | |
| செஞ்சந்தனம் | ஆமணக்கு வேர் |
| சுக்கு | |

இவைகளைச் சமமாகக் கொண்டு ஒன்றாகச் சேர்த்து நன்றாக இடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கூறிய எண்ணெயி லிட்டு ஒருநாள் முழுவதும் ஊறவைத்து, மறுநாள் 50 சேர் பாலையும் கலந்து உடனே அடுப்பின் மேலேற்றி இளந் தீயிட்டு அடிக்கடி இரும்புக் கரண்டியால் கிளரிக்கொடுத்து பக்குவமாய் எரித்து இறக்கி வடித்துக் கொள்ளவும். இத் தைலத்தை சந்திவாத ரோகத்திற்கும் (கால் கைகளில் மூட்டுகளில் வரும் நோய்) அநேக வாத ரோகங்களுக்கும் மேல் பூசவும். இதைத் தடவி தலைமுழுகி வரலாம். கால் பலம் வரை சாப்பிடக் கொடுக்கலாம். இதனல் சகல விதமான வாத ரோகங்களும் தீரும்.

## 235. போர் மாந்தத்திற்கு எண்ணெய்

(1) கடுக்காய் 16ஐ உடைத்துத் தோலை மட்டிலும் எடுத்துத் தூள்செய்து தண்ணீரில் போட்டு ஒரு நாளிரவு முழுவதும் ஊறவிட்டு மறுநாள் நன்ருகப் பிசைந்து வடி கட்டி ½ படி சாறு எடுத்துக் கொள்ளவும். பிறகு,

பச்சிலைச்சாறு ½ படி ஈரவெங்காயச்சாறு ½ படி
கோஷ்டம் அதிமதுரம்

வகைக்கு 1 சேர்

செவ்வல்லி 2 காசிடை சண்பகமொட்டு ½ சேர்
கருஞ்சீரகம் ½ பலம்

இவைகளை முன்கூறிய கடுக்காய்ச் சாற்றிலரைத்து இரண்டு சேர் ஆமணக்கெண்ணெயில் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். தினம் ஒரு கரண்டி அளவு எடுத்து வெதுப்பிக் கொடுக்க மாந்தம், கணம், வறட்கணம், பேராமை, குற்றிருமல் இவைகள் உள்ள குழந்தைகளுக்குக் கொடுக்கத் திரும்.

(2) கள்ளிப்பால் 1 சொட்டு நாய்வேளைவேர்
வேலிப்பருத்திவேர் வசம்பு
சுக்கு தைவேளை
வெள்ளைப் பூண்டு

இவைகளைச் சம எடை கொண்டு அரைத்து ஒரு ஆழாக்கு நல்லெண்ணெயில் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவ மாய் எரித்து ஒரு காசிடை எண்ணெயுடன் சிறிது முலைப் பால் விட்டுக் கொடுக்க மாந்தம் திரும்.

## 236. கணமாந்தக் குடைச்சலுக்கு எண்ணெய்

நாதுவளையிலை 20, தேற்ருன்விதை 20, அரைத்த வெள்ளைப்பூண்டின் விழுது ஒரு விளாங்காயளவு, 20 கடுக் காயின் தூள், இவைகளை நன்ருக அரைத்து ஆமணக் கெண்ணெயில் ஊறவைத்து சூரிய புடமாக வைக்கவும்.

இரண்டு, மூன்று நாட்கள் சென்றபின் ஒரு காசிடை எண்ணெய் கொடுக்க கணமாந்தத்தினுல் குழந்தைகளுக் குண்டாகும் குடைச்சல் தீரும்.

### 237. கணத்திற்கு உத்தாமணி எண்ணெய்

உத்தாமணிச்சாறு  மணத்தக்காளிச்சாறு
குப்பைமேனிச்சாறு

இவைகள் 2 படி.

பசுவின் நெய் $\frac{1}{2}$ படி  நல்லெண்ணெய் $\frac{1}{4}$ படி
ஆமணக்கெண்ணெய் $\frac{1}{4}$ படி

இவைகளை மேற்படி சாறுகளில் ஒன்றுகூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டவும். தினம் சிறிது கொடுத்துவர குழந்தைகளுக் குண்டாகும் சகல மாந்தம், கணம் முதலானது தீரும்.

### 238. சகலவித கணத்திற்கும் எண்ணெய்

மருதம்பட்டை  வில்வப்பட்டை
கருவேலம்பட்டை  அரசம்பட்டை
மாம்பட்டை  செப்பு நெருஞ்சில் கொழுந்து
இண்டங்கொழுந்து  மாதுளங்கொழுந்து
வரப்பூலா  நீர்பூலாக்கொழுந்து
விடத்தேரைக்கொழுந்து  கருவேலங்கொழுந்து
கருஞ்சீரகம்  கம்பின்பிசின்
வசம்பு  ஏலக்காய்
சண்பகப்பூ  சதகுப்பை
சீரகம்  இலவங்கப்பட்டை
அதிமதுரம்

இவைகள் யாவும் சமமாகக் கொண்டு கால்படி நல்லெண் ணெயில் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பதமாக்க் காய்ச்சி இறக்கும்போது நாலுதுளி நெய்யைத் தெளித்து முருங்கை

இலையில் இரண்டை வாசனைக்குக்கூட்டி வடித்துக் கொள்ளவும். ஒரு காசிடை எண்ணெயை வயிற்றில் புகட்டி, உடம்பின் மேலும் பூசிவந்தால் குழந்தைகளுக்கு ஏற்படும் எவ்விதமான கணைச்சூடும் தீரும். கைகண்டது.

## 239. கணைச்சூட்டிற்கு எண்ணெய்

1) பேய்க்கும்மட்டிக்காய் மூன்றை எடுத்துக்கொண்டு அதன் விதையையும் மேற்றோலையும் நீக்கிச் சிறுதுண்டு களாக நறுக்கிக்கொள்ளவும். வெங்காயத்தை உரித்து மேற்றோலை நீக்கிவிட்டு சிறிதாக அரிந்து அம்மியிலிட்டு அரைத்து ஒரு விளாங்காயளவு அரைத்த வெங்காய விழுதை எடுத்துக்கொண்டு ஒரு பானையில் போட்டு அடுப்பின் மேலேற்றி துண்டுகளாக்கிய பேய்க்கும்மட்டிக் காய்களையும் போட்டு ஒரு படி ஆமணக்கெண்ணெயுங் கலந்து பக்குவமாக எரித்து, இறுதியில் இறக்கும் பொழுது ½ காசிடை கோரோசனை, ஒரு காசிடை ஏலக்காய்த் தூளையும் போட்டு வடிக்கவும். ஒரு சிறு கரண்டி அளவு குழந்தைகளுக்குக் கொடுக்க எவ்விதமான கணைச்சூட்டு வியாதிகளும் தீரும்.

2) ஜாதிப்பத்திரி — சீரகம்
கருஞ்சீரகம் — வெந்தயம்
ஜாதிக்காய் — இலவங்கப்பட்டை
சண்பகப்பூ — ஈரவெங்காயம்
கோஷ்டம் — முருங்கைப்பிசின்
திப்பிலி — திப்பிலிமூலம்
ஏலக்காய் — கிராம்பு
செங்கழுநீர்

இவைகளை சமஎடை கொண்டு தண்ணீர்விட்டு அரைத்து விழுதாக்கி நல்லெண்ணெயில் குழப்பி சூரிய புடமாக வைக்கவும். இதில் ஒரு சிறுகரண்டி வீதம் கணைச்சூட்டிற்குப் புகட்ட குழந்தைகளின் வியாதிகள் தீரும். அன்றைய தினம் வெந்நீரில் சாதம் சாப்பிடவும்.

3) எருமை மாட்டின் கொம்பை சிறுதுண்டுகளாகச் சீவி ஒரு சட்டியில் போட்டு அடுப்பின்மேல் ஏற்றி தீயெரிக்க அது பொரிந்து களி பக்குவமாகும். அப்பொழுது திருகுக் கள்ளியின் மேலுள்ள பொருக்கு 3 காசிடை கூடப்போட்டு ஒருபடி விளக்கெண்ணெயைச் சேர்த்து ஒன்றுகக் கிண்டி இரண்டு நாட்கள் சூரியபுடமாக வைத்து மூன்றும்நாள் கிளரி வைத்துக்கொண்டு ஒரு துட்டிடை வீதம் கொடுத்து வர 8 வகை கணமும் தீரும்.

4) கற்றுழைமடல் வட்டத்துத்திவேர்
கடுகரோகணி கடுக்காய்
சிரகம் கருஞ்சீரகம்
வெந்தயம் சாறடைவேர்
மிகப்பழைய வெல்லம் ஈரவெங்காயம்

இவைகளைத் துண்டுசெய்து நல்லெண்ணெயில் போட்டு அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டவும். இதை கணச்சூட்டிற்கு பிணி திரும் வரையில் தின்ம் கொடுக்கவும். கடும் பத்தியம் இருத்தல் வேண்டும். கைகண்ட மருந்து.

## 240. ஆமகணத்திற்கு ஈரவெங்காய எண்ணெய்

வெங்காயம் மிளகு
கடுகரோகணி கருஞ்சீரகம்
சீரகம் கடுக்காய்
மிளகுக்காயின் காம்பு
அல்லது செவ்வியம்

இவைகள் வகைக்கு 2 காசிடை எடுத்து இடித்துச் சூரணித்து அதில் ஈரவெங்காயச்சாறு 1 படியைக் கலந்து வைக்கவும். பிறகு

மூக்கிரட்டையின்வேர் வெள்ளைச்சாரணைவேர்
வெள்ளைப்பூண்டு

இவைகளை யிடித்து நன்ருக அரைத்து விழுதாக்கி எண்ணெயில் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டவும். இதை விடியற்காலையில் ஒரே அளவாக உள்ளுக்குக் கொடுத்திடவும். நன்ருக பேதியான பிறகு கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். இவ்வாறு கொடுக்க குழந்தைகளின் சகல வியாதிகளும் தீரும்.

## 241. குழந்தைகளின் இரத்த கணச்சூட்டிற்கு எண்ணெய்

| | |
|---|---|
| தகரைவேர் | பொன்னுங்காணிவேர் |
| நரிப்பயறுவேர் | வட்டக்கிலுகிலுப்பைவேர் |
| வல்லாரை | வெங்காயம் |

இவ்வாறும் வகைக்கு 4 விராகனெடை கொணர்ந்து இடித்து ஒரு பானையில் போட்டு அதில்,

| | |
|---|---|
| விலாமிச்சைவேர் | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | பேரீச்சங்காய் |
| கொத்தமல்லி | சிரகம் |
| சிறுநாகப்பூ | பெருநாகப்பூ |
| கோஷ்டம் | அதிமதுரம் |
| அக்கிராகாரம் | கற்கண்டு |
| ஏலக்காய் | திராக்ஷை |
| குரோசானி ஓமம் | |

இவைகள் வகைக்கு 4 விராகனெடை வீதமெடுத்து இடித்து அப்பானையில் போட்டு மேலும் 4 படி ஆமணக்கெண்ணெயை ஊற்றி ஒன்ருகக் கலந்து சூரிய புடமாக வைக்கவும். இந்த எண்ணெயில் தினம் சிறிது உள்ளுக்குக் கொடுத்துவர இரத்த கணம், ஆமகணம், அஸ்திசுரம், வறட்கணம் முதலிய பலவித கணங்களும் தீரும்.

**பத்தியம் :—** உப்பு, புளி விலக்கவும்.

## 242. ஊதுகணத்திற்கு எண்ணெய்.

(1) கழற்சிக்கொடியிலையை வாய்பேசாமல் ஒரு பிடி எடுத்து கசக்கி உழக்கு ஆமணக்கெண்ணெயில் போட்டு காலை வெய்யிலில் புடமாக வைத்து தினம் 2 துட்டிடை வீதம் சாப்பிடக் கொடுத்தால் ஊதுகணம் தீரும்.

(2) உத்தாமணியிலைக் கொழுந்து ஒரு பிடி,

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டு | வசம்பு |
| ஓமம் | கடுக்காய் |

இவைகளுடன் நல்லெண்ணெய் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி இறக்கி வடித்துக் கொண்டு கடுகுடன் ஒரு கரண்டி வீதம் தினந்தோறும் கொடுக்க வயிற்றுப் பொருமல், சுனம் முதலான வியாதிகள் தீரும்.

## 243. முலைப்பால் எண்ணெய்.
## (குழந்தையின் கணச்சூட்டிற்கு)

(1)

| | |
|---|---|
| இண்டு இலைச்சாறு | முலைப்பால் |
| வெங்காயச்சாறு | விளக்கெண்ணெய் |

இவைகளைச் சமமாக எடுத்துக் கொண்டு யாவற்றையும் ஒன்று கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாகக் காய்ச்சி வடித்து குழந்தைகளுக்குக் கொடுக்க கணச்சூட்டினாலுண்டான சகல உபத்திரவங்கள் தீரும்.

(2)

| | |
|---|---|
| மெருகங்கிழங்கு | இம்பூராவேர் |
| திப்பிலி | தேவதாரம் |

இவைகள் வகைக்கு 3 கழஞ்சு வீதமெடுத்து தண்ணீர் விட்டரைத்து இத்துடன் முலைப்பால் 1 சேர், ஆமணக்கெண்ணெய் 1 சேர் இவைகளையுங் கலந்து அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். இதை குழந்தைகளுக்குக் கொடுக்க சீதசுரம் தீரும்.

## 244. கனைத்திற்கு எண்ணெய்.

(1) ஆமணக்கெண்ணெய் $1\frac{1}{2}$ படி
கற்ருழைமடல் இருபதின் சோறு

இச்சோற்றின் பேரில் கடுக்காய்த்தூளைத் தூவி சிறிது நேரஞ்சென்று பிழிய சாறு வரும். அவ்வாறு எடுத்த சாறு $1\frac{1}{2}$படி,

| | |
|---|---|
| எலுமிச்சம்பழச்சாறு 3 சேர் | ஜாதிக்காய் 1 பலம் |
| குங்குமப்பூ $\frac{1}{4}$ பலம் | கிராம்பு $\frac{1}{2}$ பணவிடை |
| இலவங்கப்பத்திரி 2 காசிடை | கோரோசனை $\frac{1}{8}$ பணவிடை |
| கோஷ்டம் 1 காசிடை | சிறுநாகப்பூ 2 காசிடை |
| ஜாதிப்பத்திரி 1 பணவிடை | வசம்பு 1 காசிடை |
| அதிமதுரம் $\frac{1}{8}$ பணவிடை | வெள்ளைப்பூண்டு 2 காசிடை |
| குங்குமப்பூ 2 காசிடை | சண்பகப்பூ 1 காசிடை |
| அதிவிடயம் $\frac{1}{2}$ பணவிடை | தான்றிக்காய்தூள் 2 காசிடை |

இவைகளை எல்லாம் கல்லுரலிலிட்டிடித்துச் சூரணித்து எண்ணெயுடன் நன்ருய்க் கலந்து அடுப்பின் மேலேற்றி மெழுகுபதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். தினம் இருவேளையுமாகச் சிறிது கொடுக்க உஷ்ணம், கை கால் எரிவு, மேகவியாதி, உடல் இளைத்தல் முதலான பல நோய்கள் தீரும்.

**பத்தியம் :—** வாயு பதார்த்தங்களை விலக்கி உப்பு, புளிப்பு இவைகளைக் கூட்டவும்.

(2) வெந்தயம், கோஷ்டம், அதிவிடயம் இவைகள் வகைக்கு 2 காசிடை

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டு | வெங்காயம் |
| வசம்பு | கடுக்காய் |
| சண்பகவித்து | ஜாதிப்பத்திரி |
| தான்றிக்காய் | இலவங்கப்பட்டை |
| சிறுநாகப்பூ | |

இவைகள் வகைக்கு 1 காசிடை

இப்பதிமூன்று சரக்குகளையும் ஒன்றுகூட்டிச் சூரணித்து எண்ணெயுடன் கலந்து மெழுகுப்பதமாகக் காய்ச்சி வடிக்கவும். அதில்,

| | |
|---|---|
| ஜாதிக்காய் | ஏலக்காய் |
| கிராம்பு | குங்குமப்பூ |
| கோரோசனை | |

இவ்வைந்தையும் சூரணித்து எண்ணெயில் குழப்பி வைத்துக் கொண்டு உலர்ந்த குழந்தைகளுக்குச் சிறிது கொடுக்க உஷ்ணம் தீரும். இச்சா பத்தியம். ஸ்திரீகள் சாப்பிட்டால் கருங்கிரந்தி நீங்கும். கர்ப்பிணிகளுக்கு 5-ம் மாதம், 7-ம் மாதம், 9-ம் மாதத்தில் கொடுக்க மிகவும் குணந்தரும். மருந்து சாப்பிடும்போது பத்தியம் பிடிக்கவும். இது மிகவும் கைகண்ட மருந்து.

விலக்கவேண்டிய பதார்த்தங்கள் : சோளம், கம்பு, வரகு, வாழைக்காய், பாகல், கத்தரிக்காய், கருவாடு, கெழுத்திமீன் முதலியவை.

## 245. குழந்தைகள் கணைச்சூட்டுக்கு எண்ணெய்

| | | | |
|---|---|---|---|
| கடுக்காய்த்தோல் 2 காசிடை | சார்போகரிசி | 1 | காசிடை |
| சண்பகப்பூ 2 காசிடை | ஜாதிக்காய் | 5 | ,, |
| கடுகரோகணி $\frac{1}{4}$ பணவிடை | கருஞ்சீரகம் | 2 | ,, |
| கிராம்பு 2 காசிடை | ஏலக்காய் | 1 | ,, |
| வசம்பு $\frac{1}{2}$ காசிடை | வெள்ளைப்பூண்டு | 4 | ,, |
| நெல்லிமுள்ளி $\frac{1}{2}$ காசிடை | வலம்புரிக்காய் | 3 | ,, |
| சீரகம் 2 காசிடை | | | |

இப்பதிமூன்று சரக்குகளையும் கல்லுரலிலிட்டிடித்துத் தூள் செய்து ஒரு பானையில் போட்டு அத்துடன் 3 சேர் ஆமணக்கெண்ணெயுங் கலந்து மூடி வைக்கவும். பிறகு பீன்றிப் பட்டை, குட்டிவேலம்பட்டை இவ்விரண்டையும் துண்டுகளாக்கி எண்ணெயுடன் கலந்து நாலு அல்லது ஐந்து நாட்களுக்கொருதரம் சூரிய புடத்தில் வைத்து இறுத்து இஃத

ஒரு காசிடை வீதம் கணைச்சூட்டிற்குக் கொடுக்க குழந்தைகளின் பிணி தீரும்.

## 246. கிரந்தி கரப்பான் இவைகளுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| விழுதிவேர் | கையாந்தகரை இலை |
| விழுதியிலை | செருப்படி |
| கொட்டைப்பாசியிலை | வெள்ளைப்பூண்டு |
| சங்கன் இலை | வசம்பு |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை எடுத்து நன்றாகச் சூரணித்து, ஒருசேர் ஆமணக்கெண்ணெயில் கலந்து அடுப்பின் மேலேற்றி மெழுகுபதமாகக் காய்ச்சி கீழிறக்கிச் சூடாறுமுன் குங்கிலியத்தைத் தூள்செய்து போட்டுக் குழப்பி வைத்துக்கொள்ளவும். இதில் தினம் 2 காசிடை வீதம் மூன்று நாள் கொடுக்கக் கரப்பான், முதலான பிணிகள் தீரும்.

இந்நோய்கள் மறுபடியும் கிளைக்காது.

## 247. வாதக்கரப்பானுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| குருந்து | செங்கதாரிவேர் |
| பெருமருந்து | மிளகரணை |
| சிறுகுறிஞ்சி வேர் | சங்கம்குப்பி |
| தாதுவளையின் பெரியவேர் | கருணைக்கிழங்கு |
| முருங்கை | பீனாறிப்பட்டை |
| இண்டு | எருக்கம்வேர் |
| கொடிப்பாலை | நீலிவேர் |
| சிறுவழுதுணை | நன்னாரிவேர் |
| வட்டத்திருப்பி வேர் | வெள்ளைப்பூண்டு |
| ஆதொண்டை | வசம்பு |

இவைகள் வகைக்கு ஒரு தோலா எடை வீதமெடுத்து சிறு துண்டுகளாக்கி, யாவற்றையும் ஒன்று கூட்டி தண்ணீர் விட்டு அரைத்து விழுதாக்கி, அதில் நல்லெண்ணெய்,

ஆமணக்கெண்ணெய், வேப்பெண்ணெய் இவைகள் எல்லாம் 5 சேர் ஊற்றி ஒன்ருகக் கிளறி பக்குவமாய்க் காய்ச்சி வடிக்கவும்.

இத் தைலத்தை கரப்பானுள்ள குழந்தையின் தலே, மார்பு முதலிய இடங்களில் தடவி வர வாதக்கரப்பான் தீரும்.

## 248. கரப்பானுக்குக் கருஞ்சீரக எண்ணெய்.

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | பூதக்கரப்பான்பட்டை |
| பற்பாடகம் | வெங்காயம் |
| பெருங்காயம் | வசம்பு |
| சுத்திசெய்த கௌரி | சடைச்சி |
| பாஷாணம் | காட்டுமொச்சை |
| சிறுகாஞ்சொறி | மிளகரணே |
| வெட்டத்திருப்பி | பெருங்குரும்பை |
| புனலி | சாதிச்சாறணே |
| நன்ஞரிவேர் | பெருமருந்து |
| சிறுகுறட்டை | கொடிவேலிவேர் |
| சிற்றவரைக்கிழங்கு | குப்பைமேனிவேர் |

இவைகள் வகைக்கு 1 தோலா வீதமெடுத்துத் தண்ணீர் விட்டரைத்து ஒரு படி நெய் அல்லது ஆமணக்கெண் ணெயில் சேர்த்துக் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவ மாய்க் காய்ச்சி வடிகட்டவும். தினம் 1 காசிடை எண் ணெயைப் பாலுடன் கலந்து குழந்தைகளுக்குக் கொடுக்க கரப்பான் முதலியவைகள் தீரும்.

## 249. ஈர வெங்காய எண்ணெய்.

| | |
|---|---|
| ஈர வெங்காயச்சாறு | ஆமணக்கெண்ணெய் |
| சின்னியிலே [ 1 படி | சிவஞர் வேம்பு |
| சாறணே | தூதுவளே |
| கருநொச்சி | மணத்தக்காளி |

| | |
|---|---|
| கற்பூரவல்லி | சிறுகீரை |
| சேம்பு | செருப்படி |
| பருத்தி | பொன்னுங்காணி |
| நீர்முள்ளி | சங்கம்குப்பிஇலை |
| சங்கிலை | மெருகங்கிழங்கு |
| கண்டங்கத்திரி | |

இவைகளைக் கல்லுரலிலிட்டு நன்றாக இடித்துப் பிழிந்த சாறு கால் படி. பிறகு

| | |
|---|---|
| அதிமதுரம் | சீரகம் |
| கருஞ்சீரகம் | கடுக்காய் |
| ஏலக்காய் | ஓமம் |
| மிளகு | பரங்கிப்பட்டை |
| சதகுப்பை | மரமஞ்சள் |
| திப்பிலி | |

இவைகள் வகைக்கு 2 காசிடை வீதமெடுத்துக் கொண்டு பரங்கிப் பட்டையைத் தவிர மற்றதைக் கல்லுரலிலிட்டு இடித்துப் பொடித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கூறிய சாற்றில் எண்ணெய், பரங்கிப்பட்டை, சூரணம் முதலிய வற்றை நன்றாகக் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவ மாய் எரித்து வடித்துக் கொண்டு ஒரு சிறு கரண்டியளவு எண்ணெயைக் கொடுக்க 2 அல்லது மூன்று தடவை வயிறு கழியும்.

**பத்தியம் :—** பாசிப்பயறும் அரிசியுஞ் சேர்த்து கஞ்சி காய்ச்சிக் கொடுக்கவும். கரப்பான் ஒழியும்.

## 250. நாக்குப் பூச்சிக்குச் சாரணையின் எண்ணெய்

சாறணையிலை, வேளையிலை இவ்விரண்டும் ஒவ்வொரு பிடி வீதம் எடுத்து மெல்லியதாய் அரிந்து $\frac{1}{8}$ படி கள்ளிப் பாலும், $\frac{1}{2}$ படி ஆமணக்கெண்ணெயுங் கூட்டிக் காய்ச்சவும். காய்ச்சும் போது அதில் மிளகு, மஞ்சள் வகைக்கு 1 காசிடை தூள் செய்து போட்டு பக்குவமாய் இறக்கிச்

கொண்டு குழந்தைகளின் தேகபலத்தை அறிந்து தேவையான அளவு உள்ளுக்குக் கொடுக்க சகல கிருமிகள், நாக்குப் பூச்சி முதலானதுகள் ஒழியும். கைகண்ட மருந்து.

## 251. உலர்ந்துபோகிற பிள்ளைகளுக்குப் புஷ்டிக்கு எண்ணெய்

(1) நல்லெண்ணெய் 1 சேர், பசுவின் நெய் 1 சேர், பொடுதலைக் கொழுந்து, உத்தாமணிக் கொழுந்து, கருவேலங்கொழுந்து, பொன்னுங்காணியின் சமூலம், பேய்ப்பாற்சோற்றி இவைகள் வகைக்கு ஒருபிடி விதம் எடுத்து அம்மியின்மேல் வைத்து நைவாயரைத்து அதில் சீரகம், மிளகு, வெளிச்சைட்பிசின் வகைக்கு $\frac{1}{4}$ பலம் எடுததுப் பொடித்து நெய், எண்ணெய் இவற்றில் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி, வடிகட்டாமல் எடுத்து வைத்துக்கொண்டு ஆறியபின் அதில் 1 வராகனெடை பிரமாணம் இருவேளையுங் கொடுத்துவர மெலிந்த குழந்தை பெருக்கும். நல்லெண்ணெயும், வெண்ணெயும், ஆமணக்கெண்ணெயும் வகைக்கு 1 சேர் எடுத்துக்கொள்ளவும்.

(2) அதிமதுரம் 6 கழஞ்சு, கோரோசனை 4 கழஞ்சு, இவ்விரண்டையும் பொடித்து $\frac{1}{2}$ படி நல்லெண்ணெயில் போட்டுப் பக்குவமாய் எரித்து வைத்துக்கொண்டு உடம்பிலும் தலையிலும் தடவிவர இளைத்த பிள்ளை பெருக்கும்.

## 252. சிதசுரத்திற்கு எண்ணெய்

| | |
|---|---|
| மரமஞ்சள் | யானைத்திப்பிலி |
| சிறுதேக்கு | பெருகங்கிழங்கு |
| சுக்கு | சிறுமுகம் |
| திப்பிலி | தேவதாரம் |

இவைகள் வகைக்கு 3 கழஞ்சு விதமெடுத்துத் தண்ணீர் விட்டு அரைத்து எண்ணெயில் குழப்பி பக்குவமாய்க்காய்ச்சி பிள்ளைகளின் உடம்பில் துவளையிட சிதசுரம் தீரும்.

**குறிப்பு :—** மெருகங்கிழங்குச் சமூலத்தை நன்ருக இடித்து மரக்கால் காடி வார்த்து அடுப்பின்மேல் வைத்து படியாகச் சுண்டக் காய்ச்சி எண்ணெய் இரு நாழியும் வார்த்து பசுவின்பால் 1 குறுணியும் 4 நாழியும் வார்த்து தயாரித்துக்கொண்டு பிற்கு மேற்சொன்ன சூரணத்தைப் போட்டு எண்ணெயை பக்குவப்படுத்திக் கொள்ளவும்.

## 253. சுரத்திற்குச் சகதேவி எண்ணெய்

| | |
|---|---|
| சகதேவி இலை | வெட்டிவேர்த்துண்டு |
| (நெய்சட்டிப்பூண்டு) | சீந்தில்கொடி |

இம்மூன்றையுமிடித்து ½ படி சாறுபிழிந்து இச்சாற்றிற்குச் சமமாக முலைப்பாலையுங்கூட்டி, அதனுடன்

| | |
|---|---|
| கடுகரோகிணி | அதிமதுரம் |
| இழைத்த சந்தனம் | |

இவைகள் வகைக்கு கால் பலம் வீதமெடுத்து பால்விட்டு நைவாக அரைத்து ½ படி நல்லெண்ணெயுங் குழப்பி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொண்டு குழந்தையின் உடம்பிற்குச் சிறிது துவளையிட சுரம் தீரும்.

## 254. கடுப்புக்கும் கழிச்சலுக்கும் எண்ணெய் (குழந்தைகளுக்கு)

பருத்திவிதை ஒருநாழி எடுத்து ஒருநாள் முழுவதும் காடியில் ஊறவைத்து மறுநாள் அதை இடித்துப் பிழிந்த சாறு ஒரு ஆழாக்கு. பொடுதலையை கையினுல் கசக்கிப் பிழிந்த சாறு ½ ஆழாக்கு, சுத்தமான எள்ளெண்ணெய் ¼ ஆழாக்கு இவற்றை ஒன்ருகக் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடித்துக்கொள்ளவும். சிறிதளவு எண்ணெயை உள்ளுக்குக் கொடுக்கப் பிணிதீரும்.

## 255. வயிற்றுக்கழிச்சல் நிற்க மருந்தெண்ணெய்

ஒரு வாயகன்ற சட்டியில் ஒரு எலுமிச்சம்பழச்சாற்றை விட்டு அத்துடன் 1 சேர் விளக்கெண்ணெயை சேர்க்கவும்.

| | |
|---|---|
| மாதுளந்துளிர் | இலவங்கப்பத்திரி |
| இலந்தங்கொழுந்து | ஏலக்காய் |
| நாகக்கொழுந்து | சண்பகமொட்டு |
| சன்னலவங்கப்பட்டை | வெந்தயம் |

இவைகள் வகைக்கு 1 பலமெடுத்து மிருதுவாக அரைத்து விழுதாக்கி எண்ணெயில் கலந்து, வெங்காயத்தை மெல்லியதாக அரிந்து அதையுங் கூடப்போட்டு அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடித்துக் கொண்டு சிறிது கொடுக்க, நிற்காத பேதி, இரைந்துகொண்டு ஆகும் பேதி முதலியவை தீரும். வயிற்றின் இரைச்சலும் உடனே நிற்கும்.

## 256. கொதுக்குக் கொதுக்கென்று கழிகிறதற்கு எண்ணெய்

| | |
|---|---|
| விடத்தேரைக்கொழுந்து | பாற்சோற்றிலை |
| வரப்பூலாக்கொழுந்து | |

இவைகள் வகைக்கு 1 பிடி வீதமெடுத்துக்கொண்டு பொன்னிறமாக வதக்கி, ஓமம், சுக்கு, இவ்விரண்டையும் தண்ணீரில் அரைத்துக் கூடப்போட்டு நல்லெண்ணெயுங் கலந்து பதமாக எரித்துக் குழந்தைக்குக் கொடுத்துவர நுரைத்துப்போகும் கழிதல் தீரும்.

## 257. மாந்தத்திற்கு உத்தாமணி எண்ணெய்

| | |
|---|---|
| உத்தாமணி வேர் | காட்டாமணக்கு வேர் |
| முடக்கொற்றான் வேர் | மணித்தக்காளி வேர் |
| சாறணை வேர் | நாய்வேளை வேர் |

இவ்வேர்களின் மேற்ரேல் வகைக்கு 1 கொட்டைப் பாக்களவு விதமெடுத்துக் கொண்டு நைவாக அரைத்து, இத்துடன் 2 பூண்டும், கடுகரோகணியும், கருஞ்சீரகமும் அரைத்துக் கரைத்து ½ சேர் ஆமணக்கெண்ணெயில் குழப்பி கொதிக்கவைத்துக் காலையில் சூரியன் புறப்பட்ட பின் தாயார் தண்ணீர் தொடாமல் இருந்து குழந்தைக்கு 4 காசளவு எண்ணெயைக் கொடுக்கவும். 3 தடவை வயிறு கழியும். ஆமமும் போகும்.

## 258. ஆமவலிக்கு எண்ணெய் (குழந்தைகளுக்கு)

(1) சாறணை வேர் பாவட்டை வேர்
உத்தாமணி வேர் சுட்ட ஆமை ஓடு

இவைகள் வகைக்கு 1 கழஞ்சு விதமெடுத்து ½ படி சிற்றாமணக்கெண்ணெயில் குழப்பி உள்ளி, வசம்பு இவ்விரண்டும் வகைக்கு கழஞ்சு வீதம் கூட்டிப் பக்குவமாய்க் காய்ச்சி வடித்து குழந்தைகளின் தேக பலமறிந்து ½ காசு எடை முதல் ஒரு காசிடை வரை கொடுக்கவும்.

(2) நொச்சி வேலிப்பருத்தி
சாறணை பேய்க்குமட்டிக்காய்
விழி பொடுதலை

இவைகளின் சாறு வகைக்கு ஒரு உழக்கு, இவைகளை ஒரு படி சிற்றாமணக்கெண்ணெயில் கலந்து பக்குவமாய் எரித்து வடித்து 1 காசிடை வரை வலி வரும்போது கொடுக்க உடனே வலி நிற்கும். கைகண்டது.

## 259. மாந்தத்திற்குத் தூதுவளை எண்ணெய்

தூதுவளைவேர் சங்கிலை
பெருமருந்து சத்திச்சாறணைக் கிழங்கு
செங்கதாரிப்பட்டை புளிநரளைக் கிழங்கு
சிற்றாவரை சிறுகுறட்டை
குங்குலியமணத்தக்காளி வெள்ளைக் கொடி வேலி வேர்

| | |
|---|---|
| கொன்றைப்பட்டை | வெள்வேலம் பட்டை |
| பூதக்கரப்பான்பட்டை | சிற்றரத்தை |
| அப்பைக் கிழங்கு | கருஞ்சீரகம் |
| கம்பின்பிசின் | |

இவை வகைக்கு 1 வராகனெடை எடுத்துப் பால்விட்டு நன்றாக அரைத்துக் கொள்ளவும். இத்துடன் நல்லெண்ணெய் $1\frac{1}{2}$ சேர், பசுவின்நெய் $\frac{1}{2}$ படி, ஆமணக்கெண்ணெய் $\frac{1}{4}$ படி இவைகளையுங் கூட்டி ஒன்றுபடச் செய்து அடுப்பின் மேலேற்றி பதத்தில் எரித்து வடித்துக்கொள்ளவும். வேளை ஒன்றுக்கு இரண்டு காசிடை வீதம் உள்ளுக்குக் கொடுத்து மேலும் தடவிவர மாந்தம் குணமாகும்.

**பத்தியம்:-** உப்பு, புளி நீக்கவும்.

(2) ஆமணக்கெண்ணெய் $1\frac{1}{2}$ சேர், கார்போகரிசி, ஓமம், வெட்பாலையரிசி, நீரடிமுத்து வகைக்கு $\frac{1}{8}$ பலம், வெள்ளைப் பூண்டு 1 பலம், வசம்பு $\frac{1}{2}$ பலம், கொடிப்பாலைவேர் 1 பலம், பிரண்டைவேர் 1 பலம். இவற்றைச் சிறுக அரிந்து விளக்கெண்ணெயில் போட்டு அடுப்பின் மேலேற்றி வெள்ளைப் பூண்டு சிவக்குமளவு கொதிக்கவைத்து எண்ணெயும் சிவந்த பின்பு வடித்துக்கொண்டு தினந்தோறும் கடுகுடன் கூடிய எண்ணெயைக் கொடுக்கவும். பிணி தீரும்.

(3) முதியார்கூந்தல் சமூலம், சிறுபுள்ளடி, நல்வேளைச் சமூலம், விடத்தேரை வேர்ப்பட்டை, வெள்வேலம்பட்டை, நல்ல முருங்கைப்பட்டை, ஆமை ஓடு இவைகள் சமமாக எடுத்துக்கொண்டு மிகச்சிறிய துண்டுகளாக்கி ஒரு நாழி விளக்கெண்ணெயில் போட்டு அடுப்பின் மேலேற்றி எரிக்கவும். பிறகு பக்குவத்திலிறக்கிக் கொண்டு மாந்தமுள்ள குழந்தைகளுக்குச் சிறிது எண்ணெயை எடுத்து வெதுப்பிக் கொண்டு முலைப்பாலுடன் குழப்பிக் குழந்தைக்குப் புகட்ட பிணி தீரும்.

## 260. அண்ட வாதத்திற்கு எண்ணெய்

கழற்சியிலைச்சாறு 2 நாழி, சேம்பிலைச்சாறு 2 நாழி, கொட்டைக்கரந்தைச் சாறு 4 உழக்கு, முடக்கொற்ருன்சாறு 1 நாழி, பாவட்டையிலைச்சாறு 2 நாழி, விளக்கெண்ணெய் 2சேர், கொள்ளுக் கஷாயம் 2சேர். இவைகளை ஒன்று சேர்த்து, இத்துடன் கொட்டைக்கரந்தை வேர் 10 பலம், உத்தாமணி வேர் 20பலம் இவ்விரண்டையும் இடித்து 2 மரக்கால் தண்ணீர்விட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு, பிறகு சாறு கூட்டிய எண்ணெயில்விட்டு, ஒரு பலம் சுக்கை கால்படி பாலில் அரைத்து விழுதாக்கி அந்த எண்ணெயில் குழப்பி மெழுகுபதமாக வடித்து உபயோகித்துவர விரை வாதம் திரும்.

## 261. கக்குவானுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| கொன்றைப்பட்டை | ஆவாரம்பட்டை |
| தூதுவளை | ஈத்தின்னி வெளவால் |
| நாக்குப்புழு (மண்புழு) | |

இவைகளை எடுத்து நல்லெண்ணெயிலிட்டு பக்குவவாய் எரித்து ஒரு காசிடை எண்ணெய் வீதம் கொடுக்க "மூன்று பிறை கண்டது போதும், இன்றே அகல்வோம்" என்பது போலக் கக்குவான் நோய் உடனே தீரும்.

## 262. தேரைதோஷத்திற்குத் தேரையின் எண்ணெய்

| | |
|---|---|
| தேரை 2 | பொரிநண்டு 2 |
| ஈத்தின்னி வெளவால் 1 | நாக்குப்பூச்சி 1 |
| சிறுகிரை | வசம்பு |
| வெங்காயம் | வெண்சாறணைவேர் |
| பொன்னங்காணிவேர் | கருஞ்சீரகம் |

இவைகளை நல்லெண்ணெயிலிட்டுப் பக்குவமாய் எரித்து உள்ளுக்குக் கொடுத்தும், உடம்பிலும் பூசியும், தலையுச்சி, கால் முதலிய இடங்களிலும் தேய்க்கவும். வயிறு கழிதல் திரும். ஆரோக்கியமுண்டாகும்.

## 263. பாரிச வாயுவுக்குப் பூபுடத் தைலம்

| | |
|---|---|
| நொச்சிவேர் | கற்ருழைவேர் |
| எருக்கம்வேர் | தாழம்வேர் |
| வில்வவேர் | வேம்பின் வேர் |
| தழுதாளைவேர் | |

இவைகளைச் சமமாகக்கொண்டு

மகாகுங்கிலியம் (மகாகுக்குலம்) 2 பலம்
சாம்பிராணி 10 பலம்

இவைகளை ஒன்றுகலந்து பசும்பாலும், எருக்கிலைச் சாற்றையுஞ் சேர்த்திடிக்கக் கட்டிப்படும். பிறகு இதை வெய்யிலில் நன்ருக உலர்த்தி ஒரு பானையிலிட்டு பூபுடமாக வைத்து தைலத்தை இறக்கிக்கொண்டு பாரிச வாயுவினுல் பாதிக்கப்பட்ட உறுப்புகளின் மேல் தடவ பிணி தீரும். கைகண்டது.

## 264. அஸ்தி சுரத்திற்கு எண்ணெய்

| | |
|---|---|
| நாற்றக்கருங்காலி | பலாசமரத்தினிலை |
| கொன்றையிலை | ஆவாரையிலை |
| மருதயிலை | தும்பையிலை |
| கடம்பவித்து | நெல்லிக்காய் |
| விளாமர இலை | அதிமதுரம் |

இவைகள் சமமாகக்கொண்டு ஒருபடி நல்லெண்ணெயை அத்துடன் போட்டு பக்குவமாய் எரித்து வடித்துக்கொள்ளவும். தினம் காலையிலும் மாலையிலும் ஒரு காசிடை விதம் 20 நாட்கள் உட்கொள்ள அஸ்திசுரம் தீரும்.

## 265. க்ஷயரோகத்திற்கு எண்ணெய்

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| திப்பிலி மூலம் | மிளகு |
| சீரகம் | தாளிசபத்திரி |

| | |
|---|---|
| குரோசானி ஓமம் | அக்கிராகாரம் |
| ஏலக்காய் | சடாமாஞ்சில் |

வகைக்கு 2 விராகனெடை வீதமெடுத்து இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து 1 சேர் ஆமணக்கு எண்ணெயில் கலந்து கொள்ளவும். இத்துடன் பொடித்த 1 பலம் கற்கண்டையும் குழப்பி சூரிய புடத்தில் வைத்துக் கொண்டு தினமும் இரவில் போஜனத்திற்குப் பின் படுக்கைக்குப் போகுமுன் தினம் ஒரு விராகனெடை மருந்து வீதம் ஒரு மண்டலம் வரை உட்கொள்ள க்ஷயம் தீரும்.

## 266. இருமல், சுவாசம், பலவித சுரங்களுக்குக் கொம்பரக்குத் தைலம்

கொம்பரக்கு 10 பலத்தை ஒன்றிரண்டாக இடித்து ஒரு பானையில் போட்டு 4 படி தண்ணீர்விட்டு அரைப்படி கஷாயமாக எரித்துக்கொள்ளவும்.

| | |
|---|---|
| சிற்றரத்தை | தேவதாரம் |
| நெல்லிமுள்ளி | அகிற்கட்டை |
| சந்தனம் | விஷ்ணுகிரந்தி |
| சிந்தில்தண்டு | சிற்றுமுட்டி |
| பேராமுட்டி | நன்னாரி |
| கோரைக்கிழங்கு | அமுக்கிராக்கிழங்கு |
| விருவன்கிழங்கு | மருள்கிழங்கு |
| நெய்ச்சட்டிவேர் | தண்ணீர்விட்டான்கிழங்கு |
| தாமரைவளையம் | விலாமிச்சைவேர் |
| நிலப்பனங்கிழங்கு | குட்டிவிளாவேர் |

இவைகள் வகைக்கு 5 பலம் வீதமெடுத்து ஒன்று இரண்டாகத் தட்டி (இடித்து) ஒரு பானையில் போட்டு 8 படி தண்ணீரையும் ஊற்றி அடுப்பின் மேலேற்றி எரித்து 1 படி கஷாயமாகச் சுண்டவைத்துக் கொள்ளவும். அதில் 1 படி நல்லெண்ணெயும் தயாரித்திருக்கும் கொம்பரக்குக் கஷாயத்தையும் ஒன்றுபடக் கலந்துகொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| ஏலக்காய் | இலவங்கப்பத்திரி |
| சண்பகப்பூ | கடுகரோகிணி |
| அதிமதுரம் | கருஞ்சீரகம் |
| கஸ்தூரிமஞ்சள் | பெருஞ்சீரகம் |
| சிறுநாகப்பூ | செவ்வல்லிக்கொடி |
| பெருங்குரும்பை | சதகுப்பை |
| சடாமாஞ்சில் | சாம்பிராணி |
| தேவதாரம் | கற்பூரம் |
| பூலாங்கிழங்கு | |

வகைக்கு $\frac{1}{4}$ பலம்

| | |
|---|---|
| ஜாதிக்காய் | கிராம்பு |
| கோரோசனை | |

வகைக்கு 1 விராகனெடை வீதம் எடுத்துக்கொள்ளவும். ஒருபடி பசுவின் தயிரை மூட்டையாகக் கட்டி தொங்கவிட்டு அதிலிருந்து இறங்கும் தெளிவு நீரை மட்டிலும் எடுத்துக் கொள்ளவும். மேற்சொல்லிய சரக்குகளை அரைத்து கஷாயங்கலந்த எண்ணெயில் குழப்பி தயிரின் தெளிவையும் ஊற்றி அடுப்பின் மேலேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளவும். இத்தைலத்தைத் தேய்த்து தலை முழுகிவர இருமல், சுவாசம், அஸ்தி சுரம் அநேகவிதமான தேக உஷ்ணம் முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம் :** தலைமுழுகும் நாட்களில் கைப்பு, புளிப்பு இவைகளை நீக்கவும்.

## 267. நேத்திரரோகம் 96-க்கும் எண்ணெய்

| | |
|---|---|
| பொன்னாங்காணிச்சாறு | சிறுகீரைச்சாறு |
| கொடிவேலிச்சாறு | பால் |

சர்க்கரை நார்த்தையின் சாறு (நார்த்தஞ்சாறு)

இவைகள் வகைக்கு $\frac{1}{8}$ படி.

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | 2 விராகனெடை |
| கிராம்பு | 1 விராகனெடை |

சுத்தமான எள்ளெண்ணெய் 1 படி

மேற்கூறிய சரக்குகளைச் சாறுகளிலரைத்து எண்ணெயில் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். எட்டு நாட்களுக்கொருமுறை தலைமுழுகிவர 96 நேத்திர நோய்கள் தீரும்.

**பத்தியம்:** தலைமுழுகும் நாட்களில் புளி, மோர், பால் இவைகளை விலக்கவும்.

## 268. மூல வியாதிக்கு எண்ணெய்

சிறுகாஞ்சொறி வேர் 1பலம் கண்டங்கத்திரிவேர் [1 பலம்
இம்பூரால்வேரின் பட்டை 1பலம்

இம்பூரால்வேரின் பட்டையை நைவாக அரைத்து பழகிய ஓர் எண்ணெய் சட்டியிலிட்டு 1 சேர் ஆமணக்கெண்ணெயுடன் கலந்து வைக்கவும். பிறகு சிறுகாஞ்சொறி வேரையும் கண்டங்கத்திரிவேரையும் தனியாக பஞ்சு போல் இடித்து வேறொரு பானையில் போட்டு 2 படி தண்ணீரை யூற்றி எட்டிலொரு பங்காய்க் காய்ச்சி வடித்து எண்ணெயுடன் கலக்கவும். பிறகு 1 சேர் வெங்காயத்தை மெல்லியதாக அரிந்து எண்ணெயில் கலந்து $\frac{1}{4}$ பலம் வெட்பாலையரிசியையும் அதில் பொடித்துப் போட்டு பக்குவமாய்க் காய்ச்சவும். அறிந்துபோட்ட வெங்காயம் பொன்னிறமாக வறுபட்டு மேலே மிதக்க ஆரம்பித்ததும் எண்ணெயைக் கீழே இறக்கிக்கொள்ளவும். இந்த எண்ணெயை 5 அல்லது 6 நாள் கொடுக்க மூல வியாதி தீரும்.

**பத்தியம்:** தயிர், புதிய அன்னம், வெங்காயம், இவைகளைக் கூட்டவும்.

## 269. பீனிசத்திற்கும் சுவாசத்திற்கும் எண்ணெய்

நொச்சி — கருநொச்சி
எருக்கம்பழுப்பு — பேய்ப்பீர்க்கு
ஈரமஞ்சள் — பருத்தியிலை
அரதண்டம் (?)

இவைகளின் சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி

பேரரத்தை — சிறுதேக்கு
மிளகு — சுக்கு
செவ்வியம் — வெள்ளைப்பூண்டு

வகைக்கு 2 விராகனெடை, எள்ளெண்ணெய் 4 சேர். இச் சரக்குகளை மேற்சொல்லிய சாற்றிலரைத்து விழுதாக்கி பிறகு யாவற்றையும் ஒன்றாகக் கூட்டி மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக்கொண்டு தலைமுழுகிவர பீனிசம், தும்மல், பலவித சிரோ ரோகங்கள் முதலானது தீரும்.

**பத்தியம் :** வாயு பதார்த்தங்களையும் புளிப்பையும் நீக்கவும்.

## 270. காதிலிருந்து சீழ்வடி தலுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | 2 சேர் |
| கையாந்தகரைச்சாறு | 2 சேர் |
| நெல்லிக்காய் | 2 சேர் |
| பால் | 2 சேர் |
| அரைத்த அதிமதுரம் | 2 சேர் |

இவைகளை ஒன்றாகூட்டி பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு தலைமுழுகிவர மேற்கூறிய நோய் தீரும்.

## 271. காதில்சோ[illegible] எண்ணெய்

நல்லெண்ணெய் $\frac{1}{4}$ சேர்
வலம்புரிக்காய் 4 ([illegible])

வசம்பு $1\frac{1}{2}$ வராகனெடை
மிளகின்தோல் 5 (எண்ணிக்கையில்)

இவைகளை ஒன்றுகூட்டி பக்குவமாய்க் காய்ச்சி வடித்து வேளையொன்றிற்கு 3 சொட்டு வீதம் தினம் இருவேளையும் 3 நாட்களுக்கு காதில் போட காதுநோய் தீரும்.

## 272. சாமினாத எண்ணெய்

ஆமணக்கெண்ணெய் 1 சேர்
வேப்பெண்ணெய் 1 சேர்
பூவந்திமரப்பட்டை 1 பலம்
கழற்சிப்பருப்பு 3 (எண்ணிக்கையில்)

இவ்விரண்டையும் நன்ருயரைத்து எண்ணெயிலிட்டுக் குழப்பி மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். முதலில் இந்த எண்ணெயைக் கொண்டு பேதிக்குச் சாப்பிடவும். பிறகு இதில் தினம் சிறிதளவு பத்துநாட்கள் வரை சாப்பிட சொறி நோய் தீரும்.

## 273. கட்டி, சிரங்கு, சொறி முதலானதற்கு எண்ணெய்

ஆம்பல்கிழங்கு 1 பலம்
வெம்பாடம்பட்டை 1 பலம்
நீலிச்சாறு 1 படி
நெல் $4\frac{1}{4}$ படி
விழுதாகவரைத்த வேப்பங்கொழுந்து $\frac{1}{2}$ பலம்
கார்போக அரிசி $\frac{1}{2}$படி
நெய் $\frac{1}{4}$ பலம்
மயில்துத்தம் $\frac{1}{4}$ பலம்
அரைத்த வேப்பம்பருப்பு 1 பலம்

இவைகளை ஒன்ருக அரைத்து பிறகு வேண்டிய நல்லெண்ணெயில் சேர்த்து சூரிய புடம் வைத்து விடியற் காலையில் சொறி, சிரங்கு முதலானதற்குத் தடவி 9 நாழிகை

பொறுத்துப் பிறகு அரைப்பு அல்லது பாசிப் பயறை யரைத்து மேலே பூசித் தேய்த்துக் குளிக்கத் தீரும்.

## 274. கருப்பு எண்ணெய்

முந்திரி எண்ணெய் 3சேர் சேராங்கொட்டை 1சேர் சவுக்காரம் 1 சேர்.

சேராங்கொட்டையை இடித்துக்கொள்ளவும்.

இரசகற்பூரம் வீசஞ்சேர் கற்பூரம் 1சேர்

இவ்விரண்டையும் பொடித்து எண்ணெயில் கூட்டி அத்துடன் மற்றதையும் போட்டு ஒன்றுபடக் கலந்து மெழுகு பதமாய்க் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு ஓர் பழைய கலயத்திலாவது புட்டியிலாவது வைத்துக் கொள்ளவும். வாயுநோய் கைகால் பூட்டுகளிலுள்ள (முட்டுக்களின்) வாயு முதலானவைகளுக்கு இத் தைலத்தை மேலே இலேசாகப் பூசி அதன் மேல் சுண்ணும்பையும் தடவினுல் வலி, வீக்கம் முதலானது தீரும்.

## 275. கால்களில் ஏற்படும் பித்த வெடிப்புக்கு எண்ணெய்

| | |
|---|---|
| மெழுகு | இந்துப்பு |
| குங்கிலியம் | அதிமதுரம் |
| வெட்டி வேர் | பூலாங்கிழங்கு |

இவைகளைப் பொடித்துச் சூரணஞ் செய்து கொள்ளவும். இச்சூரணத்திற்கு நான்கு மடங்கு நெய்யை எடுத்துக் கொள்ளவும். பிறகு நெய்யில் மெழுகைப் போட்டு நெருப்பின்மேல் வைத்து நெய்யும் மெழுகும் ஒன்ருக உருகிக் கலந்ததும் அதில் சூரணத்தைப் போட்டு பக்குவமாய்க் கிளறி வைத்துக் கொள்ளவும். பித்த வெடிப்பின் மேல் தடவி வர பித்த வெடிப்பு தீரும்.

## 276. சூலக்கணத்திற்கும், வயிறு கழிவதற்கும் எண்ணெய்

| | |
|---|---|
| பால் 4 சேர் | சிற்றுமணக்கெண்ணெய் |
| வெங்காயம் 6படி | கடுக்காய் 6சேர் [4 சேர் |
| மிளகு 4 பலம் | கருஞ்சீரகம் 4 பலம் |
| கஸ்தூரிமஞ்சள் 1 சேர் | கார்போகரிசி 4 பலம் |
| பிசின் 2 பலம் | |

இவைகளை இடித்து எண்ணெயில் போட்டு பக்குவமாய்க் காய்ச்சி இறக்கிக் கொண்டு உபயோகப் படுத்தவும்.

## 277. அரக்கெண்ணெய்

நல்லெண்ணெய் 2சேர் கொம்பரக்கு $\frac{1}{2}$ சேர்

முதலில் அரக்கைச் சூரணித்து அதில் 2 சேர் தண்ணீர் விட்டுக்காய்ச்சி வடிகட்டிக்கொண்டு அந்தக் கஷாயத்தை எண்ணெயில் கலந்து அத்துடன்

காடி $\frac{1}{4}$ சேர் தயிர் 1 சேர்

இவைகளையுங் கூட்டிக்கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| பேரரத்தை | சிற்றரத்தை |
| சடாமாஞ்சில் | கோஷ்டம் |
| அதிமதுரம் | கஸ்தூரிமஞ்சள் |
| கருஞ்சிரகம் | கொத்தமல்லி |
| ஏலக்காய் | இலவங்கப்பத்திரி |
| சந்தனத்தூள் | அக்கிராகாரம் |
| வெம்பாடம்பட்டை | பூலாங்கிரங்கு |
| இலவங்கப்பட்டை | அமுக்கராக்கிழங்கு |
| சோம்பு | பலராக்ஷஸக்கிழங்கு |

இவைகள் வகைக்கு $2\frac{1}{4}$ தோலா வீதமெடுத்துக் கொள்ளவும். பிறகு இச் சரக்குகளை 1 சேர் பால்விட்டு நைவாக அரைத்து எண்ணெயில் குழப்பி மெழுகு பதமாகக் காய்ச்சி

இறக்கி வடிகட்டிக்கொண்டு தலை முழுகிவர அஸ்திசுரம் முதலான பிணிகள் தீரும்.

### 278. அண்டவாதத்திற்கு எண்ணெய்

மிளகு திப்பிலி
இந்துப்பு

இவைகளை நன்றாக அரைத்து விளக்கெண்ணெயில் குழப்பி பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டி மேல் தடவிவர அண்ட வாதம் தீரும்.

### 279. அண்டவாதம், குடல்வாதம் முதலானதற்கு எண்ணெய்

கழற்சிக்கொடியிலைச்சாறு வெங்காயச்சாறு
சிற்றாமணக்கெண்ணெய்

இவைகளைச் சமமாகக் கலந்து மூன்று நாட்கள் அப்படியே வைத்திருந்து நான்காவது நாளில் மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். பிறகு இரசகற்பூரம் 1 வராகனெடை எடுத்து அதை முலைப்பாலில் சுருக்குங் கொடுத்து சுத்தி செய்துகொண்டு எண்ணெயில் இழைத்து எண்ணெயுடன் ஒன்றுகூட்டி வைத்துக் கொள்ளவும். இரவில் படுக்கைக்குப் போகுமுன் ஒரு சிறு (பொட்டுக்) கரண்டியளவு சாப்பிட காலையில் வயிறு கழியும் விரையி லுள்ள வாயு குணமாகும். நன்றாக வயிறு கழிய வேண்டு மானால் இரு கரண்டியளவு உட்கொள்ள நான்கு தடவை வயிறு கழியும். வாயு தீரும்.

### 280. சுவாசகாசத்திற்கு எண்ணெய்

சங்குபாஷாணம் 1 தோலா லிங்கசெந்தூரம் 1 தோலா
நேர்வாளம் 1½ தோலா

முதலில் பாஷாணத்தையும் லிங்கசெந்தூரத்தையும் சேர்த்து நைவாக அரைத்துக் கொள்ளவும். பிறகு நேர்வாளத்தைச் சுத்திசெய்து அதையுங் கூடப்போட்டு எல்லாவற்றையும் நைவாக அரைத்துச் சிறு வில்லைகளாகச் செய்து தைல யந்திரத்தில் வைத்து முறைப்படி தைலத்தை இறக்கிக் கொள்ளவும். இத் தைலத்தில் ஈர்க்குச்சியை நனைத்து வெற்றிலையின் மேல் அக்குச்சியில் ஒட்டியிருக்குமளவு எண்ணெயை மட்டும் தடவி வெற்றிலையைச் சுருட்டி உட்கொள்ளவும். இதனுல் கபம் தீரும். ஆரோக்கியமுண்டாகும். தவிர வாயுவால் உண்டான வலி இருக்குமிடத்திலுஞ் சிறிது தடவி வழித்தால் வலி தீரும்.

## 281· வாயுவுக்கு உட்கொள்ள எண்ணெய்

சங்கபாஷாணம் 1 தோலா
இலிங்கம் 2 தோலா
பாதரசம் 3 தோலா
மெழுகு 10 தோலா
கருநாவி 5 தோலா
ஜாதிக்காய் 3 தோலா
கிராம்பு 2 தோலா
ஜாதிப்பத்திரி 2 தோலா

முதலில் மெழுகை உருக்கி மற்ற சாமான்களைப் பொடித்துச் சூரணித்துக் கொண்டு உருகிய மெழுகில் சேர்த்து அரைத்துக் கொண்டு அதைத் தைல இயந்திரத்தில் வைத்து முறைப்படி தைலத்தை இறக்கிக்கொள்ளவும். ஒரு எள் அளவு எண்ணெயை வெற்றிலையில் தடவி உள்ளுக்குக் கொடுக்கவும். இம்மருந்தினுல் சரீரத்திற்கு அதிகமான உஷ்ணமேற்படுமானுல் 5 தோலா நெய்யைச் சாப்பிடக் கொடுக்கவும். சிறிது தைலத்தை எடுத்து வாயுவால் பீடிக்கப்பட்ட இடத்தில் தடவி நன்ருகத் தேய்த்தால் எந்தவிதமான வாயு நோய்களும் தீரும்.

## 282. வாதநோய்க்குத் தடவ பிண்ட தைலம்

மஞ்சிஸ்டம் (மஞ்சிட்டி)
அதிமதுரம்
பால் சாம்பிராணி
நன்னாரிவேர்
தேன் மெழுகு

இவைகள் வகைக்கு 5 வராகனெடை...

சிற்றுமணக்கெண்ணெய் 2½ சேர்
தண்ணீர் 2½ சேர்

முதலில் மெழுகைத் தவிர மற்றதை மிருதுவாக இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து தண்ணீரில் போட்டு இரண்டிலொரு பங்கு கஷாயமிறக்கிக் கொண்டு அதை எண்ணெயுடன் கலந்து பக்குவமாய் எரித்து, பிறகு மெழுகையும் உருக்கி அதில் போட்டு தண்ணீர் முழுவதும் சுண்டிப்போகும்வரைக் காய்ச்சி எடுத்து வைத்துக்கொண்டு உபயோகிக்கவும்.

### 283. வாயு முதலானதற்குத் தடவ எண்ணெய்

| | | |
|---|---|---|
| கற்பூரம் | 2½ வராகனெடை | |
| குங்கிலியம் | ,, | ,, |
| வெள்ளைப்பூண்டு | ,, | ,, |
| வசம்பு | ,, | ,, |
| வேப்பம் பருப்பு | ,, | ,, |
| சிற்றுமணக்கெண்ணெய் | 2½ | சேர் |
| சீவிய குதிரைக்குளம்பு | ½ | சேர் |

குதிரைக் குளம்பைத் தவிர மற்றதை நன்றாக இடித்துத் தூள் செய்து கொள்ளவும். பிறகு சீவிய குதிரைக்குளம்பின் சீவலை ஒரு தவாசட்டியிலிட்டு அடுப்பின் மேலேற்றிக் கருகாமல் காய்ச்சினால் பிசுபிசுப்பான கூழ் போன்றாகும். அச்சமயம் அதில் எண்ணெயும் சூரணமும் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக் கொள்ளவும். வாயுவால் பீடிக்கப்பட்ட இடங்களின் மேல் சிறிது எண்ணெயைத் தடவி தணல் ஒற்றிடுதல் (ஒத்தடம் - Fomentation) கொடுக்க உடனே வலி தீரும்.

### 284. தலையிலுள்ள சிரங்குக்கு எண்ணெய்

மிளகு வசம்பு கழற்சிப்பருப்பு

இவைகள் வகைக்கு 2 வராகனெடை.

லோத்திரப்பட்டை 5வராகனெடை

இவைகளை எல்லாம் சேர்த்து இடித்துத் தூள் செய்து $1\frac{1}{4}$ சேர் தேங்காயெண்ணெயில் கலந்து ஏழுநாள் வரை சூரிய புடமாக வைத்துப் பிறகு அவ்வெண்ணெயை சிரங்கின் மேல் தடவவும்.

## 285. சகலவித சன்னிவாயு இவைகளுக்கு எண்ணெய்

| | |
|---|---|
| வேப்பெண்ணெய் | புங்க எண்ணெய் |
| குடியொட்டிவிதை எண்ணெய் | ஆமணக்கு எண்ணெய் |
| நல்லெண்ணெய் | மயில் எண்ணெய் |
| பிண்ட தைலம் (முட்டையின் தைலம்) | |

இவைகள் வகைக்கு 1 சேர்

| | |
|---|---|
| தும்பைச் சமூலத்தின் சாறு | $2\frac{1}{2}$ சேர் |
| கொடிவேலியின்சாறு | ,, |
| பால்சாம்பிராணி | 1 சேர் |
| கற்பூரம் | 1 சேர் |

முதலில் சாம்பிராணியையும் கற்பூரத்தையும் நுணுக்கிக் கொள்ளவும். சாறுகளை எண்ணெயில் போட்டுக் கலந்து கொண்டு அத்துடன் தூள்செய்த கற்பூரம், சாம்பிராணி இவைகளையும் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து, ஆறிய பின்பு வடிகட்டிக் குப்பியில் அடைத்துக் கொண்டு உபயோகப்படுத்தவும். கைகண்ட மருந்து.

## 286. நயன சஞ்சீவித் தைலம்

| | |
|---|---|
| ஏலக்காய் | கஸ்தூரி |
| கிராம்பு | கொடிக்காக்கணம் |
| வெட்டிவேர் | தேவதாரம் |
| விலாமிச்சைவேர் | அதிமதுரம் |
| சந்தனத்தூள் | சண்பகமொட்டு |
| சீரகம் | காட்டு இலவங்கம் |
| பேரரத்தை | விரலிமஞ்சள் |

| | |
|---|---|
| குங்குமப்பூ | வெட்பாலையரிசி |
| கோரோசனை | கஸ்தூரிமஞ்சள் |
| வாலுளுவையரிசி | தான்றிக்காய் |
| கொத்தமல்லி | குலவிந்தம் |
| மரமஞ்சள் | |

இவைகள் வகைக்கு $3\frac{3}{4}$ விராகனெடை வீதமெடுத்து எல்லா வற்றையும் இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து பசும்பால்விட்டு நைவாக அரைத்துக்கொள்ளவும்.

பிறகு,

| | |
|---|---|
| நல்லெண்ணெய் | பசுவின்பால் |
| இளநீரின் தண்ணீர் | கற்றாழைச்சாறு |
| தாழம்விழுதின் சாறு | கற்பூரவல்லிச்சாறு |
| முசுமுசுக்கைச்சாறு | |

இவைகளை வகைக்கு 5 சேர் வீதம் தயார் செய்து வைத்துக் கொண்டு, எண்ணெய், சாறுவகை, பால், தண்ணீர் இவைகளை ஒன்றாகக்கூட்டி அதில் அரைத்து வைத்திருக்கும் விழுதையுங் குழப்பி அடுப்பின் மேலேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும்.

இத்தைலத்தைக் கொண்டு தலை முழுகிவர சகலவித மான நேத்திர ரோகங்களும் தீரும்.

## 287. யானைத்தந்த எண்ணெய்

சீவிய யானைத் தந்தத் தூள் 25 பலத்தை 40 சேர் தண்ணீரில் போட்டு ஒருநாள் முழுவதும் ஊறவைத்துப் பிறகு அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி 5 சேர் கஷாயமாக செய்துகொண்டு வடிகட்டி வைத்துக் கொள்ளவும். சக்கையை எறிந்துவிடவும்.

பிறகு,

| | |
|---|---|
| சிகப்பு ஆலமுகிரியின் (?) சாறு | 11 சேர் |
| சவுரியின் சாறு | 11 சேர் |

| | |
|---|---|
| அவுரிச்சாறு | 11 சேர் |
| கையாந்தகரைச்சாறு | 11 சேர் |
| நல்லெண்ணெய் | 5 சேர் |

| | |
|---|---|
| சந்தனத்தூள் | வெட்டிவேர் |
| விலாமிச்சைவேர் | பூலாங்கிழங்கு |
| கோரைக்கிழங்கு | மஞ்சிஸ்டம் |
| நன்னாரிவேர் | சடாமாஞ்சில் |
| மகிழம்பு | பச்சிலை |
| கௌலா | வில்வவேர் |
| செஞ்சந்தனம் | ஏலக்காய் |
| கிராம்பு | சிறுநாகப்பூ |
| சன்னலவங்கப்பட்டை | அன்னாசிப்பூ |
| மருவா | கஸ்தூரிமஞ்சள் |
| மரமஞ்சள் | பெருநன்னாரி |
| இலவங்கப்பத்திரி | சிற்றரத்தை |
| கிழியூரம்பட்டை | |

இவைகளை வகைக்கு 2 விராகனெடை வீதமெடுத்து எல்லா வற்றையும் இடித்து மெல்லியதாகத் தூள்செய்து வஸ்திர காயஞ்செய்து 5 சேர் பசும்பால் விட்டு அரைத்து விழு தாக்கி அதைச் சாறுவகை, எண்ணெய் இவைகளுடன் ஒன்றுகூட்டி அடுப்பின் மேலேற்றி மெழுகுப் பக்குவமாய்க் காய்ச்சிக் குப்பியில் அடைத்து நாற்பது நாட்கள் வரை தானிய புடத்தில் வைத்து எடுத்துக் கொள்ளவும். இதை மங்கலக் குளியல் செய்வதற்கும், தினமும் தலைவாரிக் கொள்வதற்கும் உபயோகித்துவர தலைமயிரின் நிறம் கரு வண்டு போன்றும், கேசம் நீண்டும் அடர்த்தியாயும் வளரும். அனுபவங் கண்டது.

## 288. பேய்த்தும்மட்டிக்காய் எண்ணெய்

| | |
|---|---|
| பேய்த்தும்மட்டிக்காய்ச்சாறு | வெங்காயச்சாறு |
| எலுமிச்சம்பழச்சாறு | தேங்காய்ப்பால் |
| சிற்றாமணக்கெண்ணெய் | |

இவைகள் வகைக்கு 1 சேர் வீதமெடுத்து ஒன்ருகக் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளவும். இதில் ஒரு கரண்டியளவு உள்ளுக்குக் கொடுக்க கீழ்க்கண்ட பிணிகள் தீரும். ஸ்திரீகளுக்கு சூதக காலத்தில் ஏற்படும் வலிக்கு 3 நாள் கொடுத்து புளி இல்லாப் பத்தியம் வைக்க தீரும். கிரந்தி நோயும் தீரும்.

## 289. தென்னம்பாளை எண்ணெய்

தென்னம்பாளையின் சாறு
பசுவின்பால்
வல்லாரைச் சாறு
ஆவாரையிலைச் சாறு
வில்வயிலைச்சாறு
வெங்காயச்சாறு
எலுமிச்சம்பழச்சாறு
இளநீர்த்தண்ணீர்
சிற்ருமணக்கெண்ணெய்

இவைகள் வகைக்கு 2 சேர்.

வாதுமைப்பருப்பு 1பலம்
கசகசா ½ பலம்
வெந்தியம் ½ பலம்
சீரகம் ½ பலம்
சோம்பு ½ பலம்
கார்போக அரிசி ½ பலம்
கந்தகம் ½ பலம்
தேற்ருன் விதை
ஜாதிக்காய்
வால்மிளகு
மாசிக்காய்
ஏலக்காய்

வகைக்கு 2 வராகனெடை. கோரோசனை 1 வராகனெடை. இவைகள் எல்லாவற்றையுங் கூட்டித் தைலம் செய்யு முறைப்படி தைலத்தைக் காய்ச்சவும். இதைச் சிறிது உள்ளுக்குக் கொடுக்க பிரமியம், உஷ்ண ரோகங்கள், கர்ப்ப வெட்டை முதலானது தீரும்.

## 290. வீரமாமுனித் தைலம்

எருக்கம்பால்
சதுரக்கள்ளிப்பால்
எருக்கங்காய்ச்சாறு
எருக்கம்பழுப்புச்சாறு
எருக்கன்வேர்கஷாயம்
குப்பைமேனிச்சாறு

| | |
|---|---|
| நொச்சியின் சாறு | உத்தாமணிச்சாறு |
| முடக்கொற்றான்சாறு | கற்றாழைச்சோற்றின் சாறு |
| விழுதியிலைச்சாறு | வல்லாரைச்சாறு |
| ஈரமஞ்சளின் சாறு | வேளையின்சாறு |
| வாகையின் சாறு | சங்கங்குப்பிச்சாறு |

இவைகள் வகைக்கு 1 உழக்கு, வேப்பெண்ணெய் $\frac{1}{4}$ சேர்

| | |
|---|---|
| சிறுநாகப்பூ | சதகுப்பை |
| பரங்கிச்சாம்பிராணி | மிளகு |
| சுக்கு | கடுக்காய் |
| திப்பிலி | நெல்லிமுள்ளி |
| தான்றிக்காய் | அரத்தை |
| அதிமதுரம் | உள்ளிப்பூண்டு |
| மரமஞ்சள் | யானைத்திப்பிலி |
| அமுக்கராக்கிழங்கு | ஏலக்காய் |
| மஞ்சிஷ்டய் | சிறுதேக்கு |
| சீரகம் | தக்கோலம் |
| சண்பகமொட்டு | விளாம்பிசின் |
| வசம்பு | விழலரிசி |
| வாயுவிளங்கம் | வாலுளுவையரிசி |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ பலம். இச்சரக்குகளைக் கொண்டு தைலம் காய்ச்சும் முறைப்படி தைலத்தை எரித்துக்கொண்டு உபயோகப் படுத்தவும். தலைவலி அநேகவிதமான சூலை நோய்கள், கைகால்நடுக்கம், வாயு, சன்னி, உடம்பின்வீக்கம், சிரங்கு, நமைச்சலோடு கூடிய கிரந்தி, கிருமிகள், தலையின் புழுவெட்டு, விரணங்கள், காக்காய்வலிப்பு, வலிப்பு, குன்ம வாயு முதலியவைகள் மேற்சொன்ன எண்ணெயினால் தீரும். இந்த எண்ணெயை உள்ளுக்கும் கொடுக்கலாம். தலையும் முழுகிவரலாம். தேக பலத்தை யனுசரித்து 1 கரண்டிஅளவு வரை கொடுக்கலாம்.

**பத்தியம்:—** வெள்ளாட்டு மாமிசம், கத்தரிப்பிஞ்சு, அவரைப்பிஞ்சு, பாசிப்பயறு' துவரம்பருப்பு, நெய் இவை களைச் சேர்க்கவும்.

பால், மீன் கருவாடு, கோழி, நல்லெண்ணெய், கடுகு புளி இவைகளை நீக்கவும்.

## 291. வெண்குட்டத்திற்கு எண்ணெய்.

| | |
|---|---|
| சுத்தி செய்த ஆமணக்கெண்ணெய் | 2 சேர் |
| ,, சேராங்கொட்டை | ½ சேர் |
| நெல்லிக்காய் கந்தகம் | ¼ சேர் |
| பாதரஸம் | ¼ சேர் |

இவைகளை ஒன்று கலந்து காய்ச்சி வடித்து புட்டியில் அடைத்துக் கொள்ளவும்.

சேராங்கொட்டையை புளியிலைக் கஷாயத்தில் 3முறை வேகவைத்துப் பிறகு அதனுடைய தோல், மூக்கு முதலியவற்றை நீக்கிவிட்டு செங்கல் தூளுடன் கலந்து பல தடவை தண்ணீரில் கழுவி எடுக்க சுத்தியாகும். இந்த எண்ணெயில் ½ அவு எடை வரையில் கொடுக்கலாம்.

**பத்தியம் :—** மஞ்சள், நல்லெண்ணெய், கடுகு, மீன், கோழி, உலர்ந்த மீன் இவைகளை நீக்கவும். இவ்விதம் மூன்று மாதம் உட்கொள்ள குட்டம் அறவே தீரும்.

## 292. கந்தகத் தைலம்

நல்லெண்ணெய் 1 சேர், மிருதார்சிங்கி 1 வராகனெடை, தாளகம், மனோசிலை, லிங்கம் இவைகள் வகைக்கு 1 வராகனெடை, பரங்கிப்பட்டை ¼ பலம், பச்சைக் கொடிவேலி வேரின் மேற்றோல் ¼ பலம், வெள்ளருக்கின் வேர் ¼ பலம், கருஞ்சீரகம் ¼ பலம், சுத்தி செய்த கந்தகம் ¼ பலம் இவைகளை ஒன்றுகூட்டிப் பக்குவமாய் எண்ணெய் காய்ச்சி வடித்துக் கொண்டு உபயோகப்படுத்தவும்.

## 293. மேக சஞ்சீவிக் குழித்தைலம்

சிவனார்வேம்பு 12½ சேர், நூறு வருஷத்திய வேப்ப மரத்தின் பட்டை, முற்றின பூவரசம்பட்டை, வல்லாரைச்

சமூலம் வெள்ளாட்டுப் புழுக்கை வகைக்கு $3\frac{1}{8}$சேர். இவைகளை நிழலில்உலர்த்திக்கொண்டு குழித்தைலம் இறக்கும் முறைப்படி இறக்கிக் கொண்டு குப்பியிலடைத்து வைத்துக் கொள்ளவும்.

பச்சை அரிசியின் மிருதுவான உள் உமியில் 5 சொட்டு எண்ணெயைக் கலந்து உட்கொள்ளவும். ரோகங்களை அனுசரித்து அரை மண்டல முதல் 1 மண்டலம் வரை சாப்பிட 21 வகையான மேக வியாதிகள் தீரும்.

## 294. பிரமியத்திற்கு எண்ணெய்

வெங்காயச்சாறு 1 சேர் நல்லெண்ணெய் 1 சேர்

அரைத்த நுணுக்கொழுந்து ஒரு எலுமிச்சங்காயளவு இம்மூன்றையும் ஒன்றாகக் கலந்து ஒரு குப்பியில் அடைத்துக் கைவிடாமல் மேலுங்கீழுமாகக் குலுக்கிக் கொண்டிருந்தால் கூழ் போலாகும். அதை ரோக பலத்தையும், தேக பலத்தையும் அனுசரித்துத் தினம் இருவேளையும் 3 நாட்கள் கொடுத்து வரவும்.

உப்பில்லாமல் மோர் சாதத்துடன் வெங்காயத்தைச் சேர்த்துச் சாப்பிடவும், சுமார் $\frac{1}{2}$ சேர் மருந்து வரையில் கொடுக்கலாம். அன்றாடம் புதிதாக மருந்தைச் செய்து சாப்பிட உத்தமம். இவ்வாறு உட்கொள்ள எவ்வளவு நாட்களான நோய்களும் அறவே ஒழிந்து தீரும்.

சிலருக்கு இருமுறை மருந்து கொடுக்கும்படியும் ஏற்படும்.

## 295. மேகவியாதிக்குத் தலைமுழுக எண்ணெய்

சந்தனத்தூள் விலாமிச்சைவேர்
நிலாவாரைப்பட்டை

இவைகள் வகைக்கு $1\frac{1}{4}$ சேர் விதமெடுத்து 8 படி தண்ணீரில் கலந்து 1 படி கஷாயமிறக்கிக்கொண்டு வேண்டிய எண்ணெய் விட்டு, $\frac{1}{2}$ பலம் பரங்கிப்பட்டை, $\frac{1}{2}$ பலம் திராக்ஷைக்

கொடி வேரையும் அரைத்துக் குழப்பிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொண்டு தலைமுழுகி வரவும்.

### 296. சொறி, சிரங்கிற்கு எண்ணெய்

தாளகம் 4 பலம் மிருதார்சிங்கி 1 பலம்
இரசகற்பூரம் 4 பலம் தேங்காய் எண்ணெய் 8 சேர்
தேங்காய்ப்பால் 2 சேர்

இவைகளை ஒன்ருகக் கலந்து பக்குவமாய்க் காய்ச்சிக் கொண்டு உபயோகிக்கவும்.

### 297. வாயு ரோகங்களுக்குக் கை கால்களில் தடவ எண்ணெய்

பெருங்காயம் 1 பலம் கற்பூரம் 1 பலம்
சுக்கு 1 பலம் வேப்பெண்ணெய் 2 சேர்
பரங்கிப்பட்டை 1 பலம் எருக்கம் பழுப்பின் சாறு [1 சேர்
முருங்கப்பட்டையின் சாறு 1 சேர்

இவைகளை ஒன்று கலந்து பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு வலியுள்ள இடங்களின்மேல் தடவி நன்ருய்த் தேய்க்க வலி தீரும்.

### 298. ஆசன கண்டமாலைக்கு எண்ணெய்

குமிழம்வேர் நாய்வேளைவேர்
சங்கத்தாரிவேர் புளிநரளைக்கிழங்கு
ஆடுதீண்டாப்பாளைவேர் வெள்ளைப்பூண்டு
வசம்பு

இவைகளைச் சமமாகக் கொண்டு நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய் எரித்து வடித்துக் கொள்ளவும். ஒரு சிறு கரண்டியளவு உட்கொள்ளவும்.

பத்தியம்: புளி, வாயு பதார்த்தங்களை நீக்கவும்.

## 299. சுவாச காசத்திற்கு எண்ணெய்

பசுவின் நெய்  ஆடாதோடைச்சாறு
எருக்கம்பால்

இவைகள் வகைக்கு 2 தோலா

| | |
|---|---|
| கடுக்காய் | தான்றிக்காய் |
| நெல்லிமுள்ளி | தூதுவளை |
| செவ்வியம் | சடாமாஞ்சில் |
| தேவதாரம் | சிறுநெருஞ்சில் வேர் |
| திராக்ஷை | இந்துப்பு |
| அமுக்கிராக்கிழங்கு | கோஷ்டம் |
| இலவங்கப்பட்டை | |

இவைகள் வகைக்கு 1 விராகனெடை வீதமெடுத்துப் பசும் பால் விட்டரைத்து, நெய், சாறு, மற்ற சாமான்களையும் ஒன்ருய்க்கூட்டி மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக் கொள்ளவும்.

ஒரு சிறு கரண்டி அளவு உட்கொள்ள இருமல், சுவாச காசம், க்ஷயம் முதலானவைகள் தீரும்.

## 300. ஸ்திரீகளுக்குக் கர்ப்ப எண்ணெய்

நான்குமாதம், ஆறு மாதம், பத்து மாதங்களில் கர்ப்பம் சிதையுமென்று தெரியுங்கால் இந்த எண்ணெயைக் கொடுக்க கர்ப்பம் சிதையாது. கர்ப்பத்தை வளர்க்கும்.

| | |
|---|---|
| புங்கம்வேர் | காட்டுமல்லிகை வேர் |
| பாவட்டை வேர் | வெப்பாலை வேர் |

இவைகளின் சாறு வகைக்கு 1 பலம். ஆலிலைக் கொழுந்தை தண்ணீர் விட்டரைத்து 10 பலம் நல்லெண்ணெயில் குழப்பி மேற்கூறிய சாறுகளையும் கலந்து வெய்யிலில் வைத்து கடுகுடன் ஒரு சிறுகரண்டியளவு எண்ணெயைக் கொடுக்க கர்ப்பம் சிதையாது.

## 301. பீனிசத்திற்கு எண்ணெய்

| | |
|---|---|
| ஆடுதீண்டாப்பாலையின் சாறு | ஆதண்டையின் சாறு |
| வெற்றிலைச்சாறு | கருஞ்செம்பையின் சாறு |
| அஜெல்சாறு (?) | நொச்சியின்சாறு |
| ஈரமஞ்சள் | |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ சேர்

எள்ளெண்ணெய் 1 சேர் வெள்ளாட்டுப்பால் 1 சேர்
சாம்பிராணி 1 வராகனெடை
அபினி $\frac{1}{8}$ வராகனெடை

இவைகள் யாவற்றையும் ஒன்று கூட்டிப் பக்குவமாய்த் தைலம் எரித்துத் தலை முழுகி வர பீனிசம் தீரும்.

## 302. கபால சூலை, பீனிசம் முதலானதற்கு எண்ணெய்

| | |
|---|---|
| கையாந்தகரை | கழற்சி |
| நொச்சி | ஊமத்தை |

இவைகளின் சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி, நல்லெண்ணெய் $\frac{1}{2}$ படி

| | |
|---|---|
| கோஷ்டம் | அதிமதுரம் |
| கஸ்தூரி மஞ்சள் | மிளகு |
| வெள்ளைப்பூண்டு | திப்பிலி |
| அபினி | ஆட்டாம் புழுக்கை |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை. இவைகளை நன்றாய் உலர்த்திச் சூரணித்து எண்ணெயுடன் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி வடித்து தலை முழுகி வர கபால சூலை, பீனிசம், சிரோ பிரமை முதலான வியாதிகள் தீரும். இந்த எண்ணெயால் நசியமும் செய்யலாம்.

## 303. மேக வியாதி, விரணம் முதலானதற்கு எண்ணெய்

வேப்பம்பட்டை 5 தோலா நெல்லிக்காய் கந்தகம்
மயில் துத்தம் 5 தோலா [9 தோலா

இவைகளை ஒரு பானையிலிட்டு வாயை மூடி சீலமண்செய்து ஆட்டாம் புழுக்கை எருவையும் பாதாள யந்திரத்தையும் உபயோகித்துக் குழித் தைலத்தை இறக்கிக் கொண்டு ஒரு பண விடை எண்ணெயை வெற்றிலையில் தடவி உட்கொள்ள பித்தவெடி, கருங்குட்டம், உஷ்ணத்தினுலுண்டான சிரங்கு கஜ சருமம் (யானைத்தோல் வியாதி) முதலான நோய்கள் தீரும்.

## 304. மேக வியாதி, விரணம் முதலானதற்கு எண்ணெய் (மற்ரொரு விதம்)

சிவனுர் வேம்பு 1 பலம் நெல்லிக்காய் கந்தகம் 1 பலம்

இவைகளை ஒன்று கூட்டிக் குழித்தைலம் இறக்கிக் கொண்டு ஒரு வேளைக்கு ஒரு சிறு கரண்டியளவு உட்கொள்ள சகல விதமான மேக விரணங்கள் தீரும்.

## 305. குழந்தைகள் அஸ்தி கணத்திற்கு எண்ணெய்

வரப்பூலா வேரைத் துண்டுகளாக்கி 3 சேர் எடை நிறுத்துக்கொண்டு ஓர் பானையில் போட்டு அத்துடன் வெள்ளைச் சாறணை 1 சேரும், மிளகு, சுக்கு, அதிமதுரம் வகைக்கு 3 வராகனெடை வீதமும் போட்டு ஆமணக் கெண்ணெய் 2 சேரையும் ஊற்றிப் பக்குவமாய் எரித்து வடி கட்டிக்கொள்ளவும்.

## 306. மூல வியாதிக்கு எண்ணெய்

தேங்காய்ப்பால் 1 சேர் நல்லெண்ணெய் 1 சேர்
வெள்ளைப்பூண்டு ¼ சேர் வெங்காயம் 2 வராகனெடை
வெள்ளைச்சாறணை வேர் 9 தோலா

இவைகளையொன்றுகூட்டிப் பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக் கொண்டு 6 நாட்கள் அல்லது 12 நாட்கள் கொடுக்க மூல வியாதி தீரும்.

### 307. பவுத்திரம், கண்டமாலை முதலானதற்கு எண்ணெய்

| | |
|---|---|
| கொடிவேலி வேர் | கழுதைத்தும்பைவேர் |
| சீந்தில் சமூலம் | முசுமுசுக்கையிலைக் கொழுந்து |
| புங்கம் வேர் | தண்ணீர்விட்டான் கிழங்கு |

இவைகள் வகைக்கு 9 தோலா வீதமெடுத்து 5 சேர் நல்லெண்ணெயில் கலந்து மெழுகு பதமாகக் காய்ச்சி இரண்டு நாட்களுக்கு ஒருதரம் 1 வராகனெடை வீதம் உட்கொள்ள பவுத்திரம், கண்டமாலை, அரையாப்புக்கட்டி, துடைவாழை, விப்புருதி, வயிற்று வீக்கம் முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம்:** துவரம்பருப்பு, அரைக்கீரை, பசுவின் நெய், பால் இவைகளைக் கூட்டவும். உப்பைச் சுட்டு சேர்க்கவும்.

### 308. சகலவிதமான சிரங்குக்கு எண்ணெய்

| | |
|---|---|
| நல்லெண்ணெய் ½ சேர் | வேப்பெண்ணெய் ½ சேர் |
| பூவரசு மரப்பட்டை | கழுதைத்தும்பைவேர் |
| ஊமத்தை வேர் | புங்கம் வேர் |
| மருதம்வேர் | திப்பிலிமூலம் |
| உள்ளிப்பூண்டு | வசம்பு |

இவைகளைச் சமமாகக்கொண்டு பக்குவமாய் எண்ணெயைக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும்.

### 309. மேக வியாதிக்கு எண்ணெய்

ஆவாரம் இலையுடன் தேவையுள்ள அளவு ஆமணக்கு விதையை வேகவைத்துப் பிறகு அத்துடன் ¼ சேர் ஆவாரம் பட்டையைச் சேர்த்து, மேலும் 60 இளநீரின் தண்ணீரையுங்

கலந்து அக்கஷாயத்தில் ஆமணக்கு விதையை மறுபடியும் நன்றாக வேகவைத்தால் ஆமணக்கெண்ணெய் பிரியும். செக்கில் ஆட்டாது இவ்விதமாக எடுத்த ஆமணக்கெண்ணெய் 6 சேர், இத்துடன்

முசுமுசுக்கைச்சாறு $\frac{3}{4}$ சேர்
நுணாச்சாறு $\frac{1}{4}$ சேர்
அம்மான் பச்சையரிசிச் சாறு $\frac{1}{2}$ சேர்
பொடுதலைச்சாறு $\frac{1}{2}$ சேர்
வெங்காயச்சாறு $\frac{1}{4}$ சேர்
சங்கம் குப்பியின்சாறு $\frac{1}{4}$சேர்
உத்தாமணிச்சாறு $\frac{1}{4}$ சேர்
துத்தியிலைச்சாறு $\frac{1}{4}$ சேர்
வெண்நொச்சியின் சாறு $\frac{1}{4}$ சேர்
தழுதாழைச்சாறு $\frac{1}{2}$ சேர்
தாழம்விழுது 1 சேர்
பூலா $\frac{1}{4}$ சேர்
வரப்பூலா $\frac{1}{2}$ சேர்
சங்காதி (?) $\frac{1}{2}$ சேர்
வல்லாரை $\frac{1}{4}$ சேர்
கையாந்தகரை அரை சேர்
விஷ்ணுகிராந்தி அரை சேர்
ஓரிலைத்தாமரை கால் சேர்
விழுதியிலை கால் சேர்
குட்டிவிலா 9 தோலா
தவசுமுருங்கை அரை சேர்
மணத்தக்காளி கால் சேர்
குப்பைமேனி 2 தோலா
கண்டங்கத்திரி அரை சேர்
மரமஞ்சள் 5 தோலா
சீரகம் 1 பலம்

பேய்மருட்டியின் சாறு $\frac{1}{2}$ சேர்
கீழாநெல்லிச்சாறு $\frac{1}{4}$ சேர்
துளசியின்சாறு $\frac{1}{4}$ சேர்
தூதுவளைச்சாறு $\frac{1}{4}$ சேர்
நாய்வேளை வேரின் சாறு [$\frac{1}{4}$சேர்
சங்கிலைச்சாறு $\frac{1}{4}$ சேர்
கொடிவேலியின் சாறு $\frac{1}{4}$ சேர்
அசுவகந்தியின் சாறு $\frac{1}{4}$ சேர்
வெதுப்படைக்கியின் சாறு $\frac{1}{4}$ சேர்
நெருஞ்சில்சாறு $\frac{1}{4}$ சேர்
செம்பருத்தி $\frac{1}{4}$ சேர்
நீர்முள்ளி $\frac{1}{2}$ சேர்
மிளகப்பீணை $\frac{1}{4}$ சேர்
சிவனார்வேம்பு $\frac{1}{2}$ சேர்
கருநொச்சி $\frac{1}{4}$ சேர்
புளியாரை $\frac{1}{2}$ சேர்
பொற்றலைக்கையாந்தகரை 1 சேர்
பொன்னாங்காணி அரை சேர்
மெருகங்கிழங்கு கால் சேர்
வெள்ளெறுகு அரை சேர்
ஆடாதோடை அரை சேர்
செப்பு நெருஞ்சில் கால் சேர்
சிறுசெருப்படி கால் சேர்
நாயுருவி கால் சேர்
மிளகு 1 பலம்
சுக்கு 1 பலம்

| | |
|---|---|
| சிற்றரத்தை அரை பலம் | சன்னலவங்கப்பட்டை அரை பலம் |
| கருவாப்பட்டை அரை பலம் | கசக்சா 1 பலம் |
| ஏலக்காய் கால் பலம் | ஜாதிக்காய் கால் பலம் |
| ஜாதிப்பத்திரி அரை பலம் | தாளிசப்பத்திரி அரை பலம் |
| பரங்கிப்பட்டை அரை பலம் | இலவங்கப்பத்திரி அரை பலம் |
| கொத்தமல்லி அரை பலம் | கருஞ்சீரகம் கால் சேர் |
| வெள்ளரிவித்து கால் பலம் | விலாமிச்சைவேர் கால் பலம் |
| மூங்கிலரிசி கால் பலம் | சுரைவித்து கால் பலம் |
| சிறுநாகப்பூ கால் பலம் | பெருஞ்சீரகம் அரை பலம் |
| கடுக்காய்ப்பிஞ்சு அரை பலம் | கடுகரோகிணி கால் பலம் |
| நாட்டுசர்க்கரை 20 பலம் | கல்நார் 2 பலம் |
| கொடிவேலி 1 பலம் | சங்கம்வேர் 1 பலம் |
| கல்பாசி கால் பலம் | அன்னுசிப்பூ கால் பலம் |
| நன்னுரி 1 பலம் | அதிமதுரம் கால் பலம் |
| அரிசித்திப்பிலி அரை பலம் | சடாமாஞ்சில் கால் பலம் |
| யானைத்திப்பிலி கால் பலம் | கண்டத்திப்பிலி அரை பலம் |
| கோரோசனை அரை வராகனெடை | பச்சைக்கற்பூரம் 1 வராகனெடை |

கோரோசனை, பச்சைக்கற்பூரம் இவ்விரண்டைத்தவிர மேற் சொல்லிய மற்றவைகளை இடித்து வஸ்திரகாயஞ்செய்து எண்ணெய், சாறு இவைகளுடன் கூட்டி அடுப்பின் மேலேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு சர்க்கரையும் போட்டு, சிறிது எண்ணெயுடன் கலந்தரைத்த பச்சைக்கற்பூரம், கோரோசனை இவ்விரண்டின் விழுதையும் எல்லாவற்றுடன் ஒன்றுபடக் கலந்து நன்றுகக் கிளறி வைத்துக்கொண்டு சகல மேக நோய்களுக்கும் கொடுக்கத் தீரும்.

### 310. மேக எண்ணெய் மற்றொரு விதம்

| | |
|---|---|
| சின்னி இலை | உழலத்றி |
| வரப்பூலா | துத்தி |
| குப்பைமேனி | பொடுதலை |
| கையாந்தகரை | வேளை |

| | |
|---|---|
| ஊகாயிலே | பூவரசு இலே |
| பூவரசங்காய் | பூவரசம்பட்டை |
| வெங்காயம் | |

வகைக்கு ஒரு படி சாறு வீதமெடுத்துப் பெரியதொரு பாத்திரத்திலிட்டு நன்றாகக் கலந்து கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| வெள்ளைப்பூண்டு | கருஞ்சீரகம் |
| மரமஞ்சள் | திப்பிலி |
| திப்பிலிமூலம் | அரத்தை |
| பேரரத்தை | யானைத்திப்பிலி |
| அதிமதுரம் | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | கிராம்பு |
| செவ்வியம் | இலவங்கப்பத்திரி |
| குரோசாணி ஓமம் | ஓமம், ஏலம் |

முதலான இச்சரக்குகளை வகைக்கு 2½ விராகனெடை வீதம் எடுத்துப் பாலில் போட்டரைத்து விழுதாக்கி முன்பு கூறிய சாற்றில் கலக்கவும்.

பிறகு பாத்திரத்தை அடுப்பின் மேலேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சி இறக்கி வடிகட்டி அதில் பச்சைக் கற்பூரம், கோரோசனை வகைக்கு 1½ வராகனெடை வீதம் எடுத்துப் பொடித்துச் சிறிது எண்ணெயுடன் கூட்டி அரைத்து வடித்த எண்ணெயுடன் கலந்து வைத்துக் கொள்ளவும்.

கிரந்தி, அரையாப்பு முதலான சகலவிதமான மேக ரோகங்களுக்கும் இதில் வேளை ஒன்றிற்கு 9 தோலா வீதம் தினம் இரு வேளையும் 3 நாள் கொடுக்கவும்.

**பத்தியம்:** உப்பு இல்லா பத்தியம் காக்கவும். அதிக உஷ்ணமுண்டானல் பயறும் அரிசியும் சேர்த்துக் கஞ்சி செய்து சாப்பிடவும். ஏழுநாள் இந்த எண்ணெயால் தலை முழுகவும் அன்று புளியை வறுத்துச் சேர்த்துக் கொள்ளவும்.

## 311. மேகவியாதிக்கு எண்ணெய்

சிற்றுமணக்கெண்ணெய் 4 சேர்
குவலைப்பட்டைச்சாறு வில்வப்பட்டைச்சாறு
பூவரசம்பட்டைச்சாறு உழலற்றிப்பட்டைச்சாறு
சங்கங்குப்பி இலைச்சாறு கழுதைஇலத்திச்சாறு

இவைகள் வகைக்கு 2 சேர் வீதமெடுத்து ஒரு பாத்திரத்தில் யாவற்றையும் போட்டு நன்றாகக் கலந்து அடுப்பின் மேலேற்றி மெழுகு பக்குவமாய்க் காய்ச்சி இறக்கி வடிகட்டிக் கொள்ளவும்.

எண்ணெய் பக்குவமாக வரும்பொழுது இத்துடன் சேர்க்க வேண்டிய சாமான்களின் விபரம் :-

ரசகற்பூரம் நெல்லிக்காய் கந்தகம்

இவ்விரண்டையும் வகைக்கு 4 வராகனெடை வீதம் எடுத்து பொடித்துக் கலந்து கொள்ளவும். ஒரு துளி எண்ணெயை நெருப்பில்விட்டு நீர்ப்பசையில்லாத நிலையைத் தெரிந்து இறக்கிக் கொள்ளவும். காலையில் $\frac{1}{4}$ சேர் வீதம் 3 நாட்கள் உட்கொள்ளவும்.

**பத்தியம் :—** புளி, உப்பு இவ்விரண்டுமில்லா கடுமையான பத்தியம் மூன்று நாள் பிடித்து 4-வது நாளில் உப்பை மட்டும் சுட்டுக் கூட்டவும். இவ்விதமே மறு பத்தியம் 3 நாளிருக்கவும். பிறகு 7-வது நாள் முக்கூட்டு எண்ணெய் தேய்த்துத் தலை முழுகவும். எண்ணெய் தேய்த்து முழுகிய நாட்களில் புளியைச் சுட்டுக் கூட்டி முருங்கப் பிஞ்சு அல்லது கத்தரிப்பிஞ்சு சேர்ந்த குழம்பைக் கூட்டிக் கொள்ளவும்.

இந்த எண்ணெயினால் தீரும் வியாதிகள் :-

சகல மேகங்கள், ஸ்திரீ சம்பந்தமான சகல ரோகங்கள், கருங்குட்டம், செங்குட்டம் முதலியவை தீரும். தினம் ஒரு பணவிடை மருந்தை இரவில் படுக்கைக்குப் போகுமுன் உட்கொள்ளவும். மாமிச சூப்பு, நெய், பால், மோர் இவைகளை நிறையக் கூட்டி, வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

40 நாட்களுக்கு வாயு பதார்த்தங்களை விலக்கவும். தலையிலுள்ள சிரங்குகளுக்குத் தடவினால் கிருமிகள் செத்து சிரங்கு சீக்கிரம் குணமாகும். தேள் கொட்டினால் கொட்டிய வாயில் சிறிது எண்ணெயைத் தேய்க்க விஷமிறங்கும். மிகவும் கைகண்ட மருந்து.

## 312. குமரித் தைலம்

பசுவின் பால் — கற்றாழைச்சாறு
நல்லெண்ணெய்

இவைகள் வகைக்கு 3 சேர்

ஜாதிக்காய் — ஜாதிப்பத்திரி
கிராம்பு — வால்மிளகு

வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை,

சந்தனக்கட்டைச் சீவல் — உலர்ந்தசண்பகமொட்டு
பூலாங்கிழங்கு — விலாமிச்சைவேர்
வெட்டிவேர் — செங்கழுநீர்க் கிழங்கு
சீரகம் — கௌலா

இவைகள் வகைக்கு 1 பலம்.

அதிமதுரம் — கோஷ்டம்
கஸ்தூரிமஞ்சள் — இலவங்கப்பத்திரி
வலம்புரிக்காய் — இடம்புரிக்காய் (?)

இவைகள் வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை.
சடாமாஞ்சி 5 வராகனெடை ஏலக்காய் $1\frac{1}{2}$ வராகனெடை

செவ்வல்லிக்கொடி — சோம்பு
மஞ்சிஷ்டம் — கிழியூரம்பட்டை

இவைகள் வகைக்கு 5 வராகனெடை, இலவங்கப்பட்டை 2 வராகனெடை இவைகளை மெல்லியதாய் இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து மேற்கூறிய சாறுகள், பால், எண்ணெய் இவைகளுடன் நன்றாகக் கலந்து மெழுகு

பதமாகக் காய்ச்சி இறக்கிக் கொள்ளவும். ஆறிய பின்பு வடிகட்டி சீசாவில் அடைத்து 40 நாள் வரை தானிய புடத்தில் வைத்து எடுத்துக் கொள்ளவும். இத்தைலத்தைத் தேய்த்துத் தலை முழுகி வர கபாலசூலை, கபாலவாயு, நேத்திர உஷ்ணம் முதலான நோய்கள் தீரும். தேகத்திற்கு மிகவும் ஆரோக்கியமளிக்கும்.

## 313. சந்தனாதித் தைலம்

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| ஓமம் | ஜாதிக்காய் |
| தான்றிக்காய் | கடுக்காய் |

இவைகள் வகைக்கு 2 பலம்.

| | |
|---|---|
| அதிமதுரம் | பூஞ்சாந்துப் பட்டை |
| கிளியூரம்பட்டை | இலவங்கப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | மஞ்சிஷ்டம் |
| கஸ்தூரிமஞ்சள் | செவ்வல்லிக்கொடி |

இவைகள் வகைக்கு 1 பலம்.

| | |
|---|---|
| சோம்பு | சண்பகப்பூ |
| சீரகம் | கோஷ்டம் |

இவைகள் வகைக்கு 4 பலம்.

| | |
|---|---|
| ஏலக்காய் | அக்கராகாரம் |

வகைக்கு 5 வராகனெடை

| | |
|---|---|
| ஜாதிக்காய் | ஜாதிப்பத்திரி |
| கிராம்பு | வால்மிளகு |

இவைகள் வகைக்கு 2½ வராகனெடை.

இச்சரக்குகளை எல்லாம் நன்றாக இடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும்.
பிறகு,

| | |
|---|---|
| வெட்டிவேர் | விலாமிச்சைவேர் |
| கோரைக்கிழங்கு | சிற்றுமுட்டி |
| பேராமுட்டி | நன்னாரிவேர் |
| பற்பாடகம் | முத்தக்காசு |
| கௌலா | செங்கழுநீர்க்கிழங்கு |
| மகிழம்பூ | |

இவைகள் வகைக்கு 5 வராகனெடை. ஆற்றுத்தண்ணீர் $1\frac{1}{2}$ மணு.

| | |
|---|---|
| செவ்விளநீர்த்தண்ணீர் | கீழாநெல்லி |
| பொன்னாங்காணி | பொற்றலைக் கையாந்தகரை |
| வல்லாரை | முசுமுசுக்கை |
| ஆலம்விழுது | தாழம்விழுது |
| சாறக்கீரை | நெல்லிக்காய் |

இவைகளின் சாறு வகைக்கு 5 சேர். நல்லெண்ணெய் $\frac{1}{2}$சேர்.

கஷாயச் சாமான்களை ஒன்றிரண்டாக இடித்துத் தண்ணீரையும் ஊற்றிக் காய்ச்சி நாலிலொரு பங்கு கஷாயமாகத் தயாரித்து வடிகட்டிக் கொள்ளவும்.

பிறகு முன்பு தயாரித்த சூரணத்தைப் பசும்பால் விட்டு நைவாக அரைத்துக் கஷாயத்தில் குழப்பி, அதில் தயிரை நீத்து எடுத்த தயிரின் சத்து 5 சேரையும், சாறு நெய், இளநீர்த் தண்ணீர், எண்ணெய், 1 பலம் தாழம்பூ இதழ் இவைகளை எல்லாம் ஒன்றாகச் செய்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாக எரித்து வடிகட்டி வைத்து அதில்

| | |
|---|---|
| புனுகு | கோரோசனை |
| பச்சைக் கற்பூரம் | குங்குமப்பூ |

இவைகள் வகைக்கு $1\frac{1}{2}$ வராகனெடை வீதம் போட்டுக் கிளறி நன்றாக ஆறியபின் புட்டியிலடைத்துக் கொண்டு தலைமுழுகி வர சகல மேக ரோகங்கள் தீரும். இது அனுபவங்கண்ட மருந்து.

## 314. யோகிஸ்வருடைய எண்ணெய்

மேக உபத்திரவம், ஸ்திரீ சம்பந்தப்பட்ட வியாதி விரேசனம் முதலானதற்குக் கொடுக்க எண்ணெய்.

முற்றின பூவரச மரத்தின் பட்டையைக் கொணர்ந்து 5 சேர் சிற்றுமணக்கெண்ணெயில் 10 பலம் பூவரசம் பட்டைத் தூளைச் சேர்த்துப் பக்குவமாய்க் காய்ச்சி வடி கட்டி வைக்கவும். இந்த எண்ணெயில் $\frac{1}{8}$ சேர் முதல் காலேயரைக்கால் சேர் வரையில் தேக பலத்தை அனுசரித்து 3 நாள் கொடுக்கவும். மூன்று நாளும் பால் சாதம், சர்க்கரை இவ்விரண்டை மட்டிலும் சாப்பிடவும். மறுபடியும் 3 நாள் மறுபத்தியம் பிடித்து அம்மூன்று நாட்களில் சுட்ட உப்பு, அரைக்கீரை, துவரம்பருப்பு, கத்தரிப்பிஞ்சு, வாழைக் கச்சல் இவைகளைக் கூட்டிக் கொள்ளவும். இவ்விதமாக 6 நாட்களுக்குப் பின்பு ஏழாம் நாளில் ஆமணக்கெண்ணெயில் பசும்பால், மிளகு இவைகளைப் போட்டுக் காய்ச்சி அதை தேய்த்துத் தலை முழுகவும். அன்று புளியைச் சுட்டு கத்தரிப் பிஞ்சு அல்லது முருங்கப்பிஞ்சு போட்டு குழம்பு செய்து சாப்பிடவும்.

## 315. அருணகேராம்ருதத் தைலம்

| | |
|---|---|
| செவ்விளநீர்த்தண்ணீர் 4 படி | சீந்தில் தண்டின் சாறு 4 படி |
| முசுமுசுக்கை | பொன்னாங்காணி |
| சிறுகீரை | கையாந்தகரை |
| நெய்ச்சட்டி | நெல்லிக்காய் |
| தண்ணீர்விட்டான்கிழங்கு | துளசி |
| பேய்ப்பீர்க்கு | கற்றாழை |
| நொச்சி | எலுமிச்சம்பழம் |

| | |
|---|---|
| ஈரமஞ்சள் | சர்க்கரை நாரத்தை |
| ஆதண்டை | |

இவைகளின் சாறுகள் வகைக்கு ½ படி

| | |
|---|---|
| நல்லெண்ணெய் 4 படி | பசுவின்பால் 4 படி |
| சிற்ருமுட்டிவேர் | நெல்லிமுள்ளி |
| அதிமதுரம் | விலாமிச்சைவேர் |
| சந்தனத்தூள் | மிளகு |
| அகிற்கட்டை | கோரைக்கிழங்கு |
| வில்வவேர் | சிறுகீரை |
| பேராமுட்டிவேர் | மஞ்சள் |
| நன்னரிவேர் | மரமஞ்சள் |
| கஸ்தூரிமஞ்சள் | |

இவைகள் வகைக்கு 90 தோலா எடை விதமெடுத்துக் கொண்டு ஒரு பானையில் போட்டு அதில் 16 படி சுத்தமான தண்ணீரையும் ஊற்றி சுண்டக்காய்ச்சி 4 படி கஷாயமிறக்கி வடிகட்டிக்கொள்ளவும். பிறகு அதில்,

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| சிற்ருமுட்டி | பேராமுட்டி |
| நாகமுட்டி | சாறணை |
| வெள்ளைச்சாறணை | சத்திச்சாறணை |
| ஜாதிக்காய் | ஜாதிப்பத்திரி |
| கிராம்பு | நன்னரிவேர் |
| கோஷ்டம் | தண்ணீர்விட்டான்கிழங்கு |

| | |
|---|---|
| சண்பகப்பூ | அமுக்கிராக்கிழங்கு |
| கடுகரோகிணி | தேவதாரம் |
| பூலாங்கிழங்கு | சமுத்திரப்பச்சை |
| மகரம்பூ | பேரரத்தை |
| நாகஜாதி (தாளி?) | சாம்பிராணி |
| சிறுநாகப்பூ | இந்துப்பூ |
| விலாமிச்சைவேர் | மலைவெட்டிவேர் |
| கோரைக்கிழங்கு | செங்கழுநீர்க்கிழங்கு |
| தாமரைவளையம் | மருவா(தவணம்) |
| மகிழம்பூ | பாதரிப்பூ |
| தும்பைப்பூ | முருங்கப்பூ |
| மல்லிகைப்பூ | சவந்திப்பூ |
| நீலோத்பலம் | செங்கழுநீர்ப்பூ |
| வெண்டாமரைப்பூ | செந்தாமரைப்பூ |
| நந்தியாவட்டைப்பூ | இருவாக்ஷிப்பூ |
| தாழம்பூ | காக்கறட்டான்பூ |
| பவளமல்லி | வெள்ளலரிப்பூ |
| கஸ்தூரி அலரிப்பூ | குருக்கத்திப்பூ |
| புன்னைப்பூ | விஷ்ணுகிரந்திப்பூ |
| ஜாதிப்பூ | |

இவைகளைத் தனித்தனியே சூரணம் செய்து கொண்டு பிறகு யாவற்றையும் ஒன்றுகூட்டிப் பசும்பால் விட்டரைத்து விழுதாக்கி எண்ணெயில் குழப்பி மெழுகு பதமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு அத்துடன்,

| | |
|---|---|
| கோரோசனை | பச்சைக்கற்பூரம் |
| குங்குமப்பூ | புனுகுசட்டம் |

நெரியரிசிப்பால் கஸ்தூரி

இவைகளைச் சூரணித்து மேற்கூறிய எண்ணெயில் கலந்து பத்திரப்படுத்திக்கொள்ளவும். அதைத் தடவி தலை முழுகி வரவும். சீயக்காயை அவித்து அதைப் பிழிந்து சக்கையை நீக்கிவிட்டு எஞ்சிய விழுதைக் கொண்டு உடம்பைத் தேய்த்து ஸ்நானம் செய்யவும்.

இதனால் தீரும் வியாதிகள் :- சகலவிதமான நேத்திர ரோகங்கள், நயனப்பூ, சரீரத்திலுள்ள சிரங்கு, பூயரோகம், சந்தி (முண்டுகளில்) ரோகங்கள், சுக்கில ரோகங்கள், வாத ரோகங்கள், கப ரோகங்கள், விஷாதிக ரோகங்கள், மந்திர ரோகங்கள், தந்திர ரோகங்கள், மருந்தீட்டு ரோகங்கள், அனில ரோகங்கள், நானுவித கண் நோய்கள், தந்த ரோகங்கள், கிருமி நோய்கள், கேச ரோகங்கள், சிரோ ரோகங்கள், ரச பாஷாணுதிகளால் ஏற்படும் ரோகங்கள், செவி நோய்கள், சிரோ பிரமை, நடுக்கல் வியாதிகள், அக்கினிமந்த வியாதிகள், அரோசிகம், மூத்திர ரோகங்கள், மூல வியாதிகள், கைகால் எரிவு முதலான ரோகங்கள், பலவித சுரங்கள் சகலவித க்ஷய ரோகங்கள், சூல ரோகங்கள் உடம்பைக் கிருஷமாக்கும் (இளைக்கும்) வியாதிகள், இரத்த பித்த ரோகங்கள், ராஜக்ஷயாதி ஷோஷ ரோகங்கள், ஸ்தன ரோகங்கள், லிங்க ரோகங்கள், பைத்திய ஜாதி ரோகங்கள், புத்திமந்த வியாதிகள் இவ்வாருன பற்பல நோய்கள் தீரும்.

இதற்குப் பத்தியம் :- யோக்கியமான லகு பதார்த்தங்களை உண்ணவும். பகல் நித்திரை, புளி, மோர், குளிர்ந்த தண்ணீர், சந்தனம், கடும் வெய்யில், நெருப்பினருகில் இருப்பது, கடுங் காற்றிலிருப்பது, சீதளமான பொருள்கள், சீதளமான ஆகாராதிகள், ஸ்திரீ சங்கமம், சாகச கர்மம், மிகுந்த கோபம், மரமேறுதல், குதிரை ஏற்றம், மதுபானம், லாகிரி வஸ்துக்கள் இவைகளை நீக்கவும்.

பரமேஸ்வரனுடைய நெற்றிக் கண்ணால் எவ்வாறு மன்மதனை எரித்து ஒழித்தாரோ அவ்விதமே இந்த அருண. கேராம்ருதத் தைலத்தை உபயோகிக்கச் சகல விதமான வியாதிகளும் தீர்ந்து ஒழியும். இத்தைலம் மஹாராஜாக்களுக்கு மிகவும் யோக்கியமானது.

## 316. அம்ருதாமலகத் தைலம்

மேற்புரணியை நீக்கிச் சுத்தி செய்த

| | |
|---|---|
| சீந்தில் கொடியின் சாறு | முசுமுசுக்கையின் சாறு |
| நெல்லிக்காய்ச் சாறு | கற்றாழைச் சாறு |
| கையாந்தகரைச் சாறு | பசுவின் பால் |

வகைக்கு 1 படி. இத்துடன் 2 படி நல்லெண்ணெய் சேர்த்து அடுப்பின் மேலேற்றி 3 நாள் இளந்தீயிட்டு மிருதுவாகக் காய்ச்சவும். பிறகு,

| | |
|---|---|
| இலவங்கப்பட்டை | இலவங்கப்பத்திரி |
| ஜாதிப்பத்திரி | வெட்டி வேர் |
| கோஷ்டம் | ஏலம் |
| ஜாதிக்காய் | திராக்ஷை |
| சதகுப்பை | தான்றிப்பருப்பு |
| விலாமிச்சை வேர் | சந்தனம் |
| செஞ்சந்தனம் | அதிமதுரம் |

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை வீதமெடுத்து பால் விட்டரைத்து கொதிக்க வைத்த தைலத்தில் குழப்பிப் பதமாய்க் காய்ச்சி வடித்து தினமும் தலை முழுகி வர பலவித கண் நோய்கள், சிரசின் வியாதிகள், கிறுகிறுப்பு முதலானவைகள் தீரும்.

## 317. அஸனுவம்ருத பில்வாதித் தைலம்

| | |
|---|---|
| வேங்கைவேர் 100 பலம் | நாகமுட்டி 100 பலம் |
| சீந்தில்கொடி 100 பலம் | வில்வவேர் 100 பலம் |

இவைகளைத் துண்டுகளாக்கி இடித்து 16 படி தண்ணீர் விட்டு நாலிலொன்ருய்க் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு எள்ளெண்ணெய் 1 படியும், பசுவின் பால் 1 படியும் கலந்து கொண்டு அதில்,

| | |
|---|---|
| அமுக்கராக்கிழங்கு | தான்றிக்காய் |
| சந்தனத்தூள் | கறிமஞ்சள் |
| இலவங்கப்பத்திரி | சண்பகமொட்டு |
| நன்னரிவேர் | வால்மிளகு |
| விலாமிச்சைவேர் | கடுக்காய் |
| அகில் | பூலாங்கிழங்கு |
| மரமஞ்சள் | ஏலம் |
| அதிமதுரம் | வெட்டிவேர் |
| தேவதாரம் | தாமரைக் கிழங்கு |
| நெல்லிக்காய் | திராக்ஷை |
| கிராம்பு | சடாமாஞ்சில் |
| தக்கோலம் | சிற்றரத்தை |
| தாளிசபத்திரி | கஸ்தூரி மஞ்சள் |
| குங்குமப்பூ | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை விதமெடுத்து ஷை கஷாயத்தை விட்டரைத்து எண்ணெயில் குழப்பி பக்குவ மாய்க் காய்ச்சி வடித்துக்கொண்டு, அதில் 1 வராகனெடை பச்சைக் கற்பூரத்தைப் பொடித்துப்போடவும்.

ஒரு வாயகன்ற சட்டியில் எண்ணெயை விட்டு மேலே ஒரு வலைத் துணியைக் கட்டி, அதன்மீது தாழை மடலைப் பிரித்து துண்டுகளாகக் கத்தரித்து வைத்து மேலே மற்றொரு சட்டியினால் மூடிவிடவும். இவ்வாறு காற்றில்லாத அறைக்குள் மூன்று நாளைக்குக் குறையாமல் வைத்திருந் தெடுத்து தலை முழுகி வர செவி நோய், தலைவலி, விழியின் நோய், காது செவிடு, செவிச்சூலை, முகத்திலெழும் நோய்கள், வாத கபத்தினால் ஏற்படும் பீனிசம் முதலிய நோய்கள் தீரும்.

## 318. பிருங்காமலகத் தைலம்

நெல்லிக்காய்ச்சாறு பசுவின் பால்

கரிசலாங்கண்ணிச்சாறு சுத்தமான நல்லெண்ணெய் இவைகள் வகைக்கு 4 சேர் வீதமெடுத்து ஒன்றாகக் கலந்து இவைகளுடன்

| | |
|---|---|
| நெல்லிமுள்ளி | வெட்டிவேர் |
| பனைவேர் | தென்னைவேர் |
| கடுக்காய் | கோரைக்கிழங்கு |
| தேவதாரம் | விலாமிச்சை வேர் |
| தான்றிக்காய் | செம்புளிச்சை |
| சந்தனத்தூள் | வாசனைப்புல் |

இவைகள் வகைக்கு 1 பலமெடுத்து இடித்து 8 படி தண்ணீர் விட்டு 1 படியாகச் சுண்டக் காய்ச்சி (4 சேர் கஷாயமாக) இறுத்துக் கொள்ளவும். பிறகு அதில்

| | |
|---|---|
| சீரகம் | அதிமதுரம் |
| கிராம்பு | திப்பிலி |
| கருஞ்சீரகம் | சடாமாஞ்சில் |

| | |
|---|---|
| சுக்கு | கோஷ்டம் |
| ஜாதிக்காய் | மிளகு |

இவைகளை வகைக்கு 4 வராகனெடை எடுத்து நன்ருக அரைத்துச் சாறுகலந்த எண்ணெயில் குழப்பிப் பதமாகக் காய்ச்சி இறக்கி வடித்துக்கொண்டு தினமும் தலையில் வைத்து முழ்கிவர, வாதக்கரப்பான், நேத்திர ரோகம் முதலானது திரும். முழுகும் தினத்தில் புளியை நீக்கிப் பத்தியமாக இருத்தல் அவசியம்.

## 319. மாவலிங்கத் தைலம்

| | |
|---|---|
| மாவலிங்க சமூலம் | மிளகு |
| வசம்பு | உள்ளிப்பூண்டு |

இவைகளை கல்லுரலிலிட்டு நன்ருக இடித்து நல்லெண்ணெயில் குழப்பிக் கொண்டு $1\frac{1}{4}$ நாட்கள் வெய்யிலில் வைத்துப் பொன்னிறங் கண்ட பிறகு இதை உடம்பிலும் தலையிலும் தேய்த்து அறப்பிட்டு வெந்நீரில் தலை முழுகி வர கண்சொருகல், கண் வாயு, பிடரிக்குத்து, சிரநோய் 96 முதலிய நோய்கள் திரும்.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## நெய், மெழுகு வகைகள்

## நெய்

### 320. கக்குவானுக்கு நெய்

ஆடுதிண்டாப்பாளையின்சாறு ½ படி

தூதுவளைக்காயின்சாறு ½ படி

பசுவின் நெய் ½ படி

ஈத்தின்னி வெளவால் 10 (எண்ணிக்கையில்)

| | |
|---|---|
| கர்கடசிங்கி | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| கடுக்காய் | நெல்லிமுள்ளி |
| தான்றிக்காய் | இந்துப்பு |
| சிறுதேக்கு | |

இவைகளை வகைக்கு 1 காசிடை வீதமெடுத்துக் கண்டங்கத்திரி வேரையுங் கலந்தரைத்து விழுதாக்கி. பிறகு ஈத்தின்னி வெளவாலை அரிந்து குடல் முதலிய கல்மஷங்களைப் போக்கி விழுது கலந்த எண்ணெயில் போட்டு அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொண்டு தினமும் இருவேளையுமாகச் சிறிதளவு உள்ளுக்குக் கொடுக்கக் கக்குவான் நோய் பறந்து போகும்.

### 321. மாந்தத்துக்கு நெய்

உத்தாமணிக் கொழுந்து

மணத்தக்காளிக் கொழுந்து

கழற்சிஇலைக் கொழுந்து

வெள்ளைச்சாரணையின் கொழுந்து

நொச்சிலைக் கொழுந்து

ஆடாதோடைக் கொழுந்து

நுணாக்கொழுந்து
பொடுதலைக்காய்

இவைகள் ஒரு கழற்சிக்காயளவு எடுத்துக்கொண்டு நைவாயரைத்து அதில்,

| | |
|---|---|
| ஏலக்காய் | சாதிக்காய் |
| கிராம்பு | கடுக்காய் |
| நெல்லிமுள்ளி | தான்றிக்காய் |
| கருஞ்சீரகம் | சீரகம் |
| வசம்பு | சுக்கு |
| திப்பிலி | மிளகு |

இவைகள் வகைக்கு ஒரு காசிடை வீதமெடுத்துத் தூள் செய்து கால்படி பசு வெண்ணெயுடன் கூட்டி யாவற்றையும் ஒன்ருகக் கலந்து அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி நெய்யை மட்டிலும் வடித்துக்கொண்டு சிறிது உள்ளுக்குக் கொடுக்க குழந்தைகளின் மாந்தம் தீரும்.

## 322. குழந்தைகளின் ஆமதோடத்திற்கு நெய்

| | |
|---|---|
| பூனைக்காலி | முக்காளை |
| சிறுகோரைக்கிழங்கு | ஆடுதீண்டாப்பாளை |

இவைகளை இடித்து 6 படி பசு மூத்திரத்தில் கலந்து நாலி லொன்ருய்க் காய்ச்சி அதில் போட்டிருக்கும் சரக்குகளை நன்ருய்ப் பிசைந்து பிறகு வடிகட்டிக்கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| நெய் 1 படி | சுட்ட உப்பு $\frac{1}{8}$ படி |
| சுக்கு | அதிவிடயம் |
| கருஞ்சீரகம் | மிளகு |
| திப்பிலி | சீரகம் |
| ஓமம் | அகத்திப்பூ |
| வில்வச்சோறு | |

இவைகள் வகைக்கு 12 பணவிடை வீதமெடுத்துத் தண்ணீர் விட்டரைத்து நெய்யில் கலந்து அடுப்பின் மேலேற்றிப்

பக்குவமாய் எரித்து வடிகட்டிக்கொள்ளவும். இதில் சிறிதளவு கொடுக்க ஆமதோஷம், ஆந்தை தோஷம் முதலானவைகள் தீரும்.

## 323. புஷ்டிக்கு நெய்

| | |
|---|---|
| இலந்தை | நுணா |
| நாவல் | மாதுளை |

இவைகளின் கொழுந்திலை வகைக்கு 1 காசிடை, $\frac{1}{8}$ படி வெந்தயத்தைச் சிவப்பாக வறுத்துக்கொண்டு பொடித்து அத்துடன்

| | |
|---|---|
| ஏலம் | இலவங்கப்பத்திரி |
| சண்பகப்பூ | சீரகம் |

வகைக்கு 1 காசிடை வீதயெடுத்துத் தூள்செய்து இரு தூள்களையுமொன்று கூட்டிக்கொள்ளவும். பிறகு மேற்கூறிய கொழுந்திலைகளைத் தண்ணீர்விட்டரைத்துச் சூரணத்தில் கலந்து ஒருசேர் நெய்யில் குழப்பி பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு தினமும் $\frac{1}{2}$ காசிடை நெய்யைக் குழந்தைகளுக்குக் கொடுத்துவர இளைத்த பிள்ளைகள் பெருக்கும்.

## 324. வயிற்றுக்கிருமி, சுரம், கிராணி, புஷ்டி முதலானதற்கு நெய்

| | |
|---|---|
| தேவதாரம் | சரளதேவதாரம் |
| திப்பிலி | திப்பிலி மூலம் |
| சிற்றரத்தை | பேரரத்தை |
| பூத்திருக்கும் மாதுள மரப்பட்டை | பேய்ப்புடல் |
| | மிளகு |
| ஓமம் | ஆடுதீண்டாப்பாளை |
| கோஷ்டம் | கடுகரோகிணி |
| இலவங்கப்பத்திரி | யானைத்திப்பிலி |
| வெட்பாலையரிசி | வசம்பு |

| | |
|---|---|
| அதிவிடயம் | கொடிவேலிவேர் |
| இலந்தைப்பட்டை | இலவங்கப்பட்டை |
| மஞ்சள் | மரமஞ்சள் |

இவைகள் வகைக்கு 1 காசிடை வீதமெடுத்துப் பசும்பாலி லூறவைத்துக் கல்வத்திலிட்டு நைவாக மைபோல் அரைத்து 2 படி பசும்பாலும், 1 படி பசுநெய்யும் கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொள்ளவும்.

குழந்தைகளின் தேக பலத்தைப் பார்த்து ஒரு சங்கு (பாலடை) வரையில் கொடுக்கக் கிருமி, சுரம், கிராணி முதலான வியாதிகள் தீரும்.

## 325. கரப்பான், சொறி, சிரங்கு, கிரந்தி முதலானதற்கு நெய்

| | |
|---|---|
| காட்டுத்துளசி | தண்ணீர்விட்டான் கிழங்கு |
| சிறுசெருப்படி | புங்கம்பட்டை |

இவைகளைத் தனித்தனியே இடித்து வகைக்கு 1 படி சாறு பிழிந்து அத்துடன் ஒரு படி பாலையுங் கலந்து ஒரு நாள் முழுதும் ஊறவைத்து மறுநாள் எடுத்து இரு பாகமாகச் செய்து ஒரு பாகத்தில் ஒரு படி நெய்யைக் கலந்து பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொள்ளவும். மற்ற பாதியில் ஒரு படி நல்லெண்ணெய் கலந்து அவ்வாறே பக்குவமாய்க் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும். நெய்யை உள்ளுக்குக் கொடுக்கவும். எண்ணெயை உடம்பின்மேல் துவளையிடவும்.

## 326. கணச்சூட்டிற்கு நெய்

| | |
|---|---|
| ஈர வெங்காயம் | சீரகம் |
| அம்மான் பச்சரிசியின் சமூலம் | கருவேலங் கொழுந்து |

இவைகள் வகைக்கு ஒரு பிடி எடுத்துப் பசுவின் நெய்யி விட்டுப் பொன்னிறமாக வறுத்துக்கொண்டு நெய்யை மட்டிலும் வடித்து உபயோகிக்கவும். தினம் இருகாசிடை வீதம் மூன்று நாட்களுக்குக் கொடுக்கக் கணச்சூடு தீரும்.

பத்தியம் :- உப்பு, புளி இவைகளை நீக்கவும்.

### 327. சகல சிரோரோகங்களுக்கு நெய்

புனுகு $\frac{3}{4}$ வராகனெடை ஜவ்வாது $\frac{1}{2}$ வராகனெடை
புனுகுச்சட்டம் 1 வராகனெடை கஸ்தூரி $1\frac{1}{4}$ வராகனெடை
குங்குமப்பூ 1 வராகனெடை கோரோசனை 1 ,,

முதலில் ஒரு முற்றிய தேங்காயை எடுத்து அதை உடைத்துத் திருகி அத்துடன் கால்படி புளியங் கொட்டைத் தோலையுங் கலந்து உலர்த்தி, பிறகு நன்ருக இடித்து வஸ்திரகாயஞ் செய்து இந்தத் தூளை அகண்ட. பீங்கான் தட்டில் பரப்பி வெய்யிலில் வைத்தால் அதினின்று எண்ணெய் கசியும். அதைத் தனியாக வடித்துக்கொண்டு முன் கூறிய இதர சாமான்களையும் எண்ணெயில் கலந்து வைத்துக்கொண்டு வேளைக்கு 5 துளி வீதம் தினம் இருவேளையும் நெய்யை எடுத்து நசியம் செய்து வர சகலவித சிரோ ரோகங்கள் தீரும்.

### 328. சகல மேக ரோகங்களுக்கு நெய்

நெய் 1 மணங்கு (40 சேர்)
தாளிசபத்திரி சடாமாஞ்சில்
இரத்த உத்பலத்தின் விதை வால்மிளகு
ஆவாரம் விதை அத்தி விதை
ஆலம் விதை ஏலக்காய்

இவைகள் வகைக்கு 1 சேர்

ஈர மஞ்சள் 4 சேர் இஞ்சி 4 சேர்
எலுமிச்சம்பழம் 250 வெந்தியம் 1 சேர்
கூகை நீர் $4\frac{1}{2}$ தோலா

எலுமிச்சம்பழம், இஞ்சி இவைகளைப் பிழிந்து சாறு எடுத்து மற்றவைகளை இடித்துத் தூள் செய்து சாறு, நெய் இவற்றுடன் கலந்து மெழுகு பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக்

கொண்டு வேளைக்கு 2 தோலா வீதம் தினம் இருவேளையு மாக உட்கொள்ள பிரமியம், தந்தி பிரமியம், கைகால்எரிவு முதலான வியாதிகள் தீரும்.

வாயு பதார்த்தங்களைப் பத்தியத்திற்கு விலக்கவும்.

### 329. இருமலுக்கு ஆடாதோடையின் நெய்

| | |
|---|---|
| ஆடாதோடைச்சாறு $\frac{1}{2}$ படி | பசுவின் நெய் |
| ஜாதிக்காய் | ஜாதிப்பத்திரி |
| கிராம்பு | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| அரத்தை | சீரகம் |

இவைகளை வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்துப் பசு வின் பால் விட்டரைத்து நெய்யில் குழப்பி மெழுகு பத மாகக் காய்ச்சி இறக்கி வடித்துக்கொண்டு தினம் இரு வேளையுமாக நான்கு நாட்கள் கொடுக்க இருமல் தீரும். உப்பைச் சேர்த்துக் கொள்ளலாம்.

### 330. சரபேந்திரர் கிருதம் (நெய்)

| | |
|---|---|
| ஆமணக்கு வேர் | சிற்றுமுட்டிவேர் |
| நீர்முள்ளிச் சமூலம் | நன்னாரிவேர் |
| தகரை விதை | சுக்கு |
| வாயுவிளங்கம் | கொத்தமல்லி |
| கோஷ்டம் | சிற்றரத்தை |
| இந்துப்பு | அதிமதுரம் |

இவைகளை வகைக்கு $1\frac{1}{4}$ வராகனெடை வீதமெடுத்துக் கொள்ளவும்.

பசுவின் பால் 1 படி பசுவின் நெய் 1 படி

கையாந்தகரைச்சாறு 2 படி

கையாந்தகரைச் சாற்றைவிட்டு மேற்கூறிய சரக்குகளை எல்லாம் அரைத்துக்கொண்டு மற்ற யாவற்றையும் ஒன்றுபடக் கலந்து குழப்பிப் பக்குவமாய்க் காய்ச்சி நெய்யை வடிகட்டிக் கண்ணாடிப் புட்டியலடைத்து வேண்டியஅளவு நெய்யை வெந்நீரில் கலந்து நசியமிட அநேக நேத்திர ரோகங்கள் தலையின் வியாதிகள் தீரும். கைகண்ட முறை.

## 331. புருஷத்துவத்திற்கு நெய்

| | | |
|---|---|---|
| (1) | வெள்ளை அலரியின் வேர்ப்பட்டை | 1 சேர் |
| | ஊமத்தை விதை | 1 சேர் |
| | வெள்ளெருக்குப்பூ | 1 சேர் |
| | வெள்ளைக்குன்றிமணி | 1 காசிடை |
| | வாலுளுவையரிசி | 9 தோடை |
| | பசுவின்பால் | 8 சேர் |

மேற்சொன்னவைகளைப் பாலில் போட்டு நன்ருகக் காய்ச்சி வடிகட்டி இரவில் உறைக்குற்றிக் காலையில் அது தயிரானதும் கடைந்து வெண்ணெய் எடுத்து அதைப் பக்குவமாய் எரித்து வடித்து ஒரு சீசாவிலடைத்துக் கொள்ளவும். தக்க அனுபானத்தில் தேவையான அளவு கொடுக்க புருஷத்துவம் ஏற்படும்.

(2) 10 தோலா பாதரசத்தை அழுத்தமான துணியில் முடிந்து நான்குமுறை பிழிந்து சுத்தம் செய்யவும். பிறகு 19 பலம் நெய்யை ஒரு பாத்திரத்திலிட்டு அடுப்பின் மேலேற்றிப் பாதரசத்தை அதில் விட்டு இரண்டு நாழிகை பரியந்தம் மிருதுவாகத் தீ எரித்து அடிக்கடி ஓர் குச்சியினுல் கிளறிக் கொடுத்து கீழே இறக்கி ரசமில்லாமல் நெய்யை

மட்டிலும் வடித்துக்கொண்டு ஒரு சீசாவில் பத்திரப்பத்திக் கொள்ளவும்.

இதைத் தகுந்த அனுபான முறையுடன் உட்கொண்டு வந்தால் புருஷத்துவம் ஏற்படும்.

## 332. வீரிய விருத்திக்கு நெய்

பாலைக் காய்ச்சி அதில் அபினியைக் கலத்து பிறகு அதை உறைக்குற்றி தயிரானதும் கடைந்து வெண்ணெயை எடுத்துக் காய்ச்சி வடித்துப் பத்திரப்படுத்திக்கொள்ளவும்.

சரீரத்தின் பலாபலங்களை நன்றாகத் தெரிந்து கால் தோலா முதல் முக்கால் தோலா வரையில் உட்கொள்ள வீரிய விருத்தி உண்டாகும்.

## 333. சதுரக்கள்ளி நெய்

| | |
|---|---|
| பசுவின்நெய் | பசுவின் மோர் |
| கோமூத்திரம் | சதுரக்கள்ளியின் பால் |

இவைகள் வகைக்கு சின்ன படியில் முக்கால் படி வீதம் எடுத்துக் கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| ஓமம் | இந்துப்பு |
| சீரகம் | பெருங்காயம் |

இவைகள் வகைக்கு 4 வராகனெடை விதம் கொணர்ந்து இடித்துப் பொடி செய்து மற்ற திரவ பதார்த்தங்களுடன் சேர்த்துப் பக்குவமாய்க் காய்ச்சி நெய்யை வடித்துக் கொள்ளவும்.

## 334. பெரும்பாடு வியாதிக்கு நெய்

நாவல்பட்டை 25 பலத்தை எடுத்து கஷாயமிறக்கி வடிகட்டி அதில் ½ படி பசுவின் நெய்யைக் கலந்துகொண்டு, பிறகு

| | |
|---|---|
| ஏலக்காய் | இலவங்கப்பட்டை |
| கற்கடகசிங்கி | காட்டாத்திப்பூ |
| காசிக்கட்டி | மரமஞ்சள் |
| சீரகம் | சிறுநாகப்பூ |
| அதிமதுரம் | கோஷ்டம் |
| விளாம்பிசின் | |

இவைகள் வகைக்கு ½ பலம், அபின் 1 வராகனெடை. இவைகள் யாவற்றையும் நைவாயரைத்து மேற்கூறிய நெய் கலந்த கஷாயத்தில் போட்டு மெழுகு பதமாகக் காய்ச்சி வடித்துக்கொள்ளவும். வேளை ஒன்றுக்கு 2 வராகனெடை வீதம் தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொள்ளப் பெரும்பாடு, இராஜக்ஷயம், சகலவிதமான புருஷ மேகங்கள் தீரும். மிகவும் கைகண்டது.

## 335. சோஷம், இராஜக்ஷயம், மேகம் முதலிய நோய்களுக்குப் பூசணி நெய்

| | |
|---|---|
| பூசணியின் சாறு | தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு |
| வெள்ளரியின் சாறு | வாழைக்கிழங்கின் சாறு |

| | |
|---|---|
| நெல்லிக்காய்ச்சாறு | வாழைப்பூவின் சாறு |
| மாதுளஞ்சாறு | வெட்டிவேர்த்தண்டின் சாறு |
| நெருஞ்சிற் சாறு | கருப்பஞ்சாறு |
| இளநீரின் தண்ணீர் | பொன்னாங்காணிச் சாறு |
| சிறுகீரைச்சாறு | பசுவின் பால் |
| சீந்தில்தண்டின்சாறு | செவ்வல்லிக் கிழங்கின் சாறு |
| அமிர்தவல்லிக் கிழங்கின் சாறு | பசுவின் நெய் |

இவைகள் வகைக்கு ஒரு படி வீதமெடுத்து எல்லாவற்றையும் ஒன்றுகூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சி வடித்துக்கொண்டு கால்படி சர்க்கரையுங் கலந்து வைத்துக் கொள்ளவும். வேளை ஒன்றிற்கு ஒரு சிறு கரண்டியளவு தினம் 2 வேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொண்டு வர சோஷம், இராஜக்ஷயம், பிரமியம், பித்தம், சாதுவலி, கை கால் எரிவு, உடம்பின் எரிவு, இரத்தயேசம், சிரங்கு, கட்டி இவைகள் தீரும். தாது விருத்தியாகும்.

## 336. விக்கல், வாந்தி முதலானதற்கு நெய்

| | |
|---|---|
| பொன்னாங்காணிவேர் | சிறுகீரைவேர் |
| துத்திவேர் | நிலத்தாமரைக்கிழங்கு |
| கோரைக்கிழங்கு | நன்னாரிவேர் |
| நீர்பூலாவேர் | நிலாவாரை வேரின்பட்டை |
| குவளைவேர் | நெல்லி |
| சந்தனம் | |

இவைகள் வகைக்கு 4½ தோலா வீதமெடுத்துத் தனித் தனியே அரைத்துப் பிறகு யாவற்றையும் ஒரு பானையில் போட்டு வைக்கவும். பிறகு

| | |
|---|---|
| பெரிய ஜாதிக்காய் 2 | சண்பகமொட்டு |
| ஏலம் | கிராம்பு |
| அதிமதுரம் | கோஷ்டம், திப்பிலி |

இவைகள் வகைக்கு 4 வராகனெடை வீதமெடுத்துத் தனித் தனியே அரைத்து அதையும் மேற்கூறிய பானையில் போட்டு அத்துடன் 1 சேர் சிந்தில் தண்டின் சாறு, 2 படி பசுவின் நெய், 2 படி பசுவின்பால் இவைகளையும் ஒன்றுபடக் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி உபயோகப்படுத்தவும். உள்ளுக்கும் கொடுககலாம். தலைக்கும் நெஞ்சிற்கும் தடவலாம். நசியமும் செய்யலாம். இவ்வாறு செய்ய வாந்தி, வீக்கம் முதலானது தீரும்.

## 337. இரத்த காசத்திற்கு நெய்

| | |
|---|---|
| நன்னாரிவேர் | கண்டங்கத்திரிவேர் |
| ஆடுதிண்டாப்பாலைவேர் | தூதுவளை இலை |
| மாதுளஞ்சாறு | மாதுளம்பூவின்சாறு |
| வாழைக்கிழங்கின்சாறு | வாழைக்காய்ச்சாறு |
| சிறுகிரைவேர் | அத்திப்பட்டை |
| யாம்பருப்பு | ஆலம்பட்டை |
| அரசம்பட்டை | தண்ணீர்விட்டான் கிழங்கு |
| பூசணிக்காய் | |
| விலாமிச்சைவேரின்சாறு | வெட்டிவேரின் சாறு |
| குமுதங்கிழங்கு | சிந்தில் தண்டு |
| பொன்னாங்காணிவேர் | தாமரைவளையம் |
| முசுமுசுக்கைப்பழம் | முசுமுசுக்கைவேர் |
| கொட்டைக்கரந்தைச்சாறு | சங்குப் புஷ்பம் |
| கற்பூரவல்லிச்சாறு | வல்லாரை |
| கொத்தமல்லி | அதிமதுரம் |
| சந்தனம் | கோஷ்டம் |
| வெங்காயம் | திப்பிலி |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை

| | |
|---|---|
| பசுவின் நெய் 1 சேர் | பசுவின் பால் 1 சேர் |

இவைகளை நெய்யுடன் கூட்டி அடுப்பின்மேலேற்றி மெழுகு பதமாகக் காய்ச்சி இறக்கி வடிகட்டிக் கொள்ளவும்.

வேளைக்கு 1 கரண்டி விதம் உட்கொள்ள இரத்த வாந்தி முதலானது தீரும்.

**338. தலை நடுக்கம், கை நடுக்கம், இவ்வகைப் பித்த ரோகங்களுக்கு அதிமதுர நெய்**

| | |
|---|---|
| அதிமதுரம் 4 பலம் | சீரகம் |
| விலாமிச்சைவேர் | கொத்தமல்லி |
| ஏலக்காய் | கிராம்பு |
| இலவங்கப்பத்திரி | சிறுநாகப்பூ |
| கோஷ்டம் | சந்தனம் |
| செவ்வல்லிக் கிழங்கு | நன்னாரிவேர் |
| கூகைநீர் | நெல்லிக்காய் |
| திராக்ஷை | தாமரைவளையம் |
| வெட்டிவேர் | சிறுகீரைவேர் |
| பொன்னாங்காணி வேர் | நெருஞ்சில்வேர் |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ பலம், நெய் 4 சேர், இவைகளை ஒன்றுகூட்டி நெய்யைப் பக்குவமாய் எரித்து வடிகட்டிக் கொண்டு வேளை ஒன்றிற்கு இரண்டு வராகனெடை விதம் உட்கொள்ள மேற்கூறிய சகல ரோகங்களும் தீரும்.

## வெண்ணெய், மெழுகு வகை

**339. குழந்தைகள் கிருமி, கணை முதலானதற்கு வெண்ணெய்**

| | |
|---|---|
| நன்னாரிவேர் | 1 வராகனெடை |
| முருங்கைப்பிசின் | 1 வராகனெடை |
| வெண்ணெய் | 1 எலுமிச்சங்காயளவு |
| கடுக்காய் | இரண்டு |

இவைகளை ஒன்றுகூட்டிக் காய்ச்சி வடித்துக்கொடுக்க கணை முதலானவைகள் தீரும்.

**340. தலையின் பூச்சி, புழுவெட்டிற்கு வெண்ணெய்**

பொரித்த வெங்காரம் 1 வராகனெடை எடுத்து வெங்கலத் தாம்பாளத்தில் வைத்து கையாந்தகரைச் சாற்றை விட்டு உலக்கையால் 3 நாழிகை நன்ருக மத்தித்து பிறகு வெண்ணெயைக் கூட்டி சங்கினுல் 3 நாழிகை மத்தித்து ஒரு டப்பாவில் அடைத்து வைத்துக்கொண்டு மயிர் உதிர்ந்த இடத்திலும் புழுவெட்டிற்கும் 5 நாள் தடவினுல் ரோமம் வளரும்.

**341. பவுத்திரத்திற்கு (பகந்திரத்திற்கு) மேல்பூச வெண்ணெய்**

நாயின் பல் எலுமிச்சம்பழச்சாறு
வெண்ணெய்

இவைகளை இழைத்து ஒருமண்டலம் பூசத் தீரும்.

**பத்தியம்:** சிறிது உப்பைச் சேர்த்துக்கொள்ளவும். வாயு பதார்த்தங்களை நீக்கவும்.

**342. சொறி, சிரங்கு, மேகவிரணங்கள், தீயால் உண்டான விரணங்கள் முதலானதற்கு வெண்ணெய்**

மிருதார்சிங்கு 1 தோலா மரத்து வெள்ளை 1 தோலா
இரசகற்பூரம் 1 தோலா செங்காவி 1 தோலா
கற்பூரம் 10 தோலா பச்சைக்கற்பூரம் $\frac{1}{16}$ தோலா
வெண்ணெய் $2\frac{1}{2}$ சேர்

இவைகளை ஒன்றுகூட்டிப் பக்குவமாய் மத்தித்து வைத்துக்கொண்டு உபயோகிக்கவும்.

## 343. விரேசனத்திற்கு மெழுகு

பெரிய பேய்த்தும்மட்டிக்காய் ஒன்றைக் கொணர்ந்து அதில் துவாரமிட்டு அதில் 1 வராகனெடை இரச கற்பூரத்தை வைத்து வாயைமூடி நூலைச் சுற்றிலுங்கட்டி ஒரு அகலில் வைத்து இது முழுகும் வரை ஆட்டுப்பாலை யூற்றி அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி பாதிப்பால் சுண்டியதும் தும்மட்டிக் காயைப் புரட்டி வைத்து மறுபடியும் காய்ச்சி பால் முழுமையும் சுண்டும்படி செய்து பிறகு எடுத்து நூலையகற்றி எஞ்சிய பால் சக்கையும் வெந்த தும்மட்டிக்காயும் ஒன்ருகச் செய்து அத்துடன் சிறிது ஆமணக்கெண்ணெயுங் கலந்து மெழுகு பதமாகக் கிண்டி எடுத்துக்கொண்டு ஒரு பச்சைப்பயறு அல்லது இரண்டு பச்சைப் பயறு அளவு உள்ளுக்குக் கொடுக்கவும். நன்ருக வயிறு கழியும்.

## 344. நந்தி மெழுகு

40 சேராங்கொட்டையை எடுத்துச் சாணிப்பாலில் 50 நாழிகை ஊறவைத்துப் பிறகு நன்ருக வேகவைத்து அதன் மூக்கு முதலியவைகளை நீக்கிவிட்டு, அழுகிய நாவல் பட்டையின் சாற்றில் 30 நாழிகை ஊறவைத்துப் பிறகு சிறு துண்டுகளாக்கி இலுப்பெண்ணெய் விட்டுப் பக்குவமாய் வறுத்தெடுத்து அரைத்துக் கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| பரங்கிப்பட்டை ½ பலம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| ஏலம் | சிறுதேக்கு |
| தாளிசபத்திரி | குரோசாணி ஓமம் |
| வாயுவிளங்கம் | அதிவிடயம் |
| ஜாதிக்காய் | ஜாதிப்பத்திரி |
| கருஞ்சிரகம் | சீரகம் |
| கிராம்பு | செவ்வியம் |
| வால்மிளகு | கொடிவேலிவேர்ப்பட்டை |
| திப்பிலிமூலம் | கசகசா |

| | |
|---|---|
| ரோஜாமொட்டு | சிந்தூரத்தை |
| சடாமாஞ்சில் | அக்கராகாரம் |

இவைகள் வகைக்கு $1\frac{1}{4}$ பலம்

| | |
|---|---|
| சுத்திசெய்த நேர்வாளம் | $1\frac{1}{2}$ வராகனெடை, |
| சீனமயில்துத்தம் | நாட்டுமயில் துத்தம் |
| இரசகற்பூரம் | இரசசெளவீரம் |
| லிங்கம் | மனோசிலை |
| கந்தகம் | தாளகம் |
| குதிரைப்பல் | வெள்ளைப்பாஷாணம் |
| இரசசிந்தூரம் | கருநாவி |
| நிர்விஷம் | |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ வராகனெடை வீதம் எடுத்துத் தனித்தனியே சுத்திசெய்து பிறகு ஒன்றுகூட்டி நீலிச்சாற்றில் ஊறவைத்து அதே சாற்றில் மெழுகு பதமாக அரைத்து வில்லைகள் தட்டி வில்லையின்மேல் நிலியிலையைக் கவசம் செய்து சாணத்தின் நடுவில் வைத்து உமியில் புடம் போடவும். ஆறிய பிறகு எடுத்து கவசங்களை நீக்கி பனை வெல்லம் $\frac{1}{2}$ சேர், தேன் $\frac{1}{8}$ படி இவைகளை விட்டு மெழுகு பதமாக அரைத்து வைத்துக் கொண்டு சிறிதளவு கொடுக்கவும். குளிர்ந்த நீரில் நீராடவும். நான்கு நாட்களுக்கொரு முறை பிருங்காமலகத் தைலத்தைத் தலையில் வைத்து முழுகவும். சகல விதமான நோய்களும் தீரும்.

## 345. விரணங்களுக்கு மெழுகு

| | |
|---|---|
| இரசகற்பூரம் | 20 வராகனெடை |
| மிருதார்சிங்கு | 20 வராகனெடை |
| தாளகம் | 10 வராகனெடை |
| காசிக்கட்டி | 10 வராகனெடை |

| | |
|---|---|
| வெள்ளைக்குங்கிலியம் | 1 சேர் |
| வெள்ளைமிளகு | ½ சேர் |

இவைகளைப் பக்குவமாய்க் கூட்டி முறைப்படி மெழுகு செய்து கொள்ளவும்.

## 346. கிரந்தி, கருஞ்சிட்டைகள் முதலானதற்கு மேற்பூச மெழுகு

| | |
|---|---|
| இலந்தை வித்து | 2 வராகனெடை |
| திப்பிலி | 2 வராகனெடை |
| மஞ்சள் | 4 வராகனெடை |
| மெழுகு | 2 வராகனெடை |

இவைகளுடன் தேவையான தேனையுங்கூட்டி நைவா யரைத்து வைத்துக்கொண்டு பிணியின்மேல் பூசிவர தீரும்.

## 347. கைகால் எரிவுக்கு மெழுகு

| | |
|---|---|
| இலந்தையிலை | கருநெருஞ்சியிலை |
| சியக்காயிலை | நெல்லியிலை |
| முசுமுசுக்கையிலை | |

இந்த இலைகளை நன்ருக இடித்து ஒரு பானையிலிட்டுக் குளிர்ந்த தண்ணீருடன் கலந்து ஒரு நாளிரவு ஊறவைத்துக் காலையில் அதை மத்தினுல் கடைய பானையில் நுரையுடன் வெண்ணெய் போல் திரண்டு வரும். அதை எடுத்து கை கால் எரிவுக்குத் தடவவும். இவ்விதம் 3 நாட்கள் தடவினுல் எரிச்சல் தீரும்.

மேற்கூறிய ஐந்துவகை இலைகளின் சாற்றைப் பாலில் கலந்து காய்ச்சி உறைக்குற்றி காலையில் தயிரானதும் கடைந்து வெண்ணெய் எடுத்து கைகால்களில் தடவினுலும் எரிவு தீரும்.

பித்தத்தினல் அல்லது மேகத்தினல் ஏற்படும் கைகால் எரிவும் தீரும்.

### 348. அண்டவாதத்துக்கு மெழுகு

| | |
|---|---|
| கழற்சிப்பருப்பு | வெள்ளைக்குன்றிமணி |
| நாய்வேளை | எருக்கம்வித்து (?) |
| காட்டுக்கொள் | |

இவைகள் சமமாகக்கொண்டு கல்லுரலிலிட்டிடித்து மிருது வாக்கிக்கொண்டு பிறகு கல்வத்திலிட்டு வேண்டிய ஆமணக்கெண்ணெயைச் சிறிது சிறிதாக ஊற்றி 4 நாழிகை வரை மெழுகு பதமாக அரைத்து எடுத்துக் கொண்டு கொட்டைப்பாக்களவு உருண்டை செய்து 3 நாள் சாப்பிட அண்ட வாயு, விரைவீக்கம் முதலானது தீரும்.

**பத்தியம்:—** உப்பை விலக்கவும்.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



பற்பங்கள்

## பற்பங்கள்

### 349. தங்க பற்பம்

| | |
|---|---|
| தங்கஇரேக்கு | 5 வராகனெடை |
| இரசம் | 5 வராகனெடை |
| நெல்லிக்காய் கந்தகம் | 5 வராகனெடை |
| மனேசிலை | 5 வராகனெடை |

இவைகளைக் கல்வத்திலிட்டு தினம் 4 நாழிகை பிரமாணம் 5 நாட்களரைத்து மெல்லிய வில்லையாகத் தட்டி ஒரு பெரிய அகலில் வைத்து மேலே ஒரு அகலை மூடி சந்து தெரியாமல் நன்ருகப் பொருந்தும்படி செய்து 5 சீலமண் செய்து நன்ருக உலர்த்திக் கஜபுடமிட்டு ஆறியபின்பெடுத்து உடைத்து மறுபடியும் மருந்தைக் கல்வத்திலிட்டு முன்பு சொல்லியபடி தங்க ரேக்கைத் தவிர மற்ற மூன்று மருந்துகளையும் போட்டு எருக்கம் பால்விட்டு 5 நாழிகை அரைத்து வில்லைதட்டிக் கஜபுடம் போடவும். இவ்விதம் 5 புடங்களானதும் பற்பத்தை எடுத்துக்கொள்ளவும்.

ஒருக்கால் தங்கத்தின் தளுக்கு நின்ருல் மறுபடியும் முன்சொன்ன பிரகாரம் எருக்கம்பால் விட்டரைத்து ஒன்று அல்லது இரண்டு புடம் போடத் தளுக்கு இல்லாமல் சுத்தமான பற்பமாகும். தளுக்கு இல்லாமல் போனதும் அதை எடுத்து கற்ருழைச் சோற்றில் 5 நாழிகை அரைத்து மேற்கூறியபிரகாரம் மருந்துகளையுங் கூட்டியரைத்து வில்லை தட்டி இரண்டு புடம் போடவும். பிறகு மேற்சொன்ன மருந்துகளைக் கூட்டாமல் பற்பத்தை மட்டிலும் எலுமிச்சம் பழச்சாற்றில் 5 நாழிகை அரைத்து 5 புடங்கள் போட மிகவும் உயர்ந்த பற்பம் ஆகும். இது சிறிது சிவந்த நிறமாக இருக்கும்.

இந்த பற்பத்தினுல் தீரும் வியாதிகளும் அனுபானமும்:- வேளை ஒன்றிற்கு 2 குன்றிமணி எடையும். 2 பணவிடை மிளகுப் பொடியுங் கலந்து கொடுக்க க்ஷயம். அக்கினிமந்தம்

சுவாசரோகம், இருமல், கிராணி, பாண்டு, அதிசாரம் முதலான நோய்கள் முற்றிலும் தீரும். சரீரத்தில் விஷ தோஷங்களிருந்தாலும் தீரும். இதைத்தவன் புஷ்டியடை வான். சரீரத்தின் தேஜஸ், பலம், தாதுபுஷ்டி முதலானது கள் அதிகரிக்கும்.

இந்த பற்பத்தைச் சகல ரோகங்களுக்கும் கொடுக் கலாம். க்ஷயரோகம், ஜீர்ணசுரம், சுவாசகாசம், இருமல், சோர்வு, அக்கினிமந்தம், அரோசகம், கழிச்சல் முதலான நோய்களுக்கு அந்தந்த ரோகங்களுக்கான அனுபானங் களில், சரீர பலத்தையும், வியாதியின் பலத்தையும் நன்ருக அறிந்து வயதுக்குத் தகுந்தபடி ஒரு பணவிடை அளவு வரையில் கொடுக்கலாம். அந்தந்த ரோகத்தை யனு சரித்துப் பத்தியமிருக்கவும். கதலிபஞ்சகம், வில்வ சம்மந்த மான பொருள்கள் என்றும் இம்மருந்துக்கு ஏற்றதல்ல.

## 350. தங்க பற்பம்

தங்கச் சிந்தூரத்தை வேண்டிய அளவு எடுத்து அரைத்து வில்லைதட்டி நன்ருக உலர்த்தி பூவரசங்காயை அரைத்து வில்லைகளின்மேல் கவசம் செய்து ஒரு விரல் கனத்தில் அதன் மேல் சீலைமண் செய்து குக்குடபுடத்தில் எரித்து எடுத்துக்கொள்ளவும். இப்பற்பத்தைச் சகல ரோகங்களுக்கும் கொடுக்கலாம். இத்துடன் கீழ்க்கண்ட லேகியத்தையும் செய்து கொடுத்தால் மிகுந்த பயனளிக்கும்.

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | சீரகம் |
| ஏலம் | |

வகைக்கு 1 பலம், சர்க்கரை 1 சேர், தேன் ½ சேர், தேவை யுள்ள நெய் இவைகளைக் கொண்டு லேகியம் தயாரித்துக் கொண்டு இதில் 3 குன்றிமணி எடை தங்க பற்பத்தையும் 13 குன்றிமணி எடை லோக சிந்தூரத்தையும் போட்டு

நன்ருகக் கிளறி வைத்துக்கொண்டு வேளைக்கு ½ நெல்லிக் காய் பிரமாணம் தினம் இருவேளையும் ஒருமண்டலம் வரை உட்கொள்ள சகல விதமான குன்மம், மேகம், வாயு, ஸ்திரீ சம்மந்தரோகங்கள் திரும்.

**பத்தியம்:-** ரோகத்தை அனுசரித்துப் பத்தியம் இருக்கவும்.

## 351. சுவர்ண (தங்க) பற்பம்

அபரஞ்சித் தங்கம் (பத்தரை மாத்துத் தங்கம்) 1 வராகனெடை எடுத்து அகில் முள்ளுக் கீரைச் சாற்றை விட்டு 3 நாழிகை அரைத்து வில்லைதட்டி பிறகு உலர்த்தி புடம்போட்டு மறுபடியும் அதை எடுத்து அதே அளவு கந்தகமும், பாதரசத்தையுங் கூட்டி 1 சேர் அந்திமந்தாரைப் பூ, அம்மான்பச்சையரிசிப்பால் அல்லது அகத்திப் பூவின் சாற்றை விட்டரைத்து வில்லை தட்டி உலர்த்திப் பிறகு உமியில் புடம்போட பற்பமாகும். இதனுல் இரத்த விருத்தி யாகும். க்ஷயம் முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம் :—** இச்சா பத்தியம். நிறைய பால், நெய் மற்றும் சத்துள்ள உணவுப் பதார்த்தங்களைச் சாப்பிடவும். அனுபான பேதத்தில் மருந்தைக் கொடுக்க அநேக நோய் கள் திரும்.

## 352. சுவர்ண பற்பம்

சுத்திசெய்த 1 பலம் தங்கத்தை ஈசலிறகைப் போல் தட்டி, சிறு துண்டுகளாக வெட்டி, கிட்டத்தை எலுமிச்சம் பழ ரசத்தால் நையவரைத்து அவ்விழுதை தங்கத் தகட்டின்மேல் கவசம் செய்து அகலில் வைத்து மேலொரு அகலை மூடி சந்தைப் படியமைத்தும் சீலைமண் செய்து நன்ருக உலர்த்தி கஜபுடத்தில் எரித்து ஆறிய பின்பு பற்பத்தைச் எடுத்துக் கொள்ளவும்.

## 353. சுவர்ண பற்பம்

சுத்திசெய்த தங்கத்தை ஈசல் இறகுபோல் மெல்லிய தாய்த் தட்டி துண்டுகள் செய்து, இதற்குச் சமயெடை கந்தகத்தை எடுத்து கரும்பு ரசத்தில் அரைத்துத் தகட்டின் பேரில் கவசம் செய்து உலர்த்திக் கொள்ளவும். இவ்விதம் ஏழு தடவை கவசம் செய்து 7 தடவை உலரவைத்து பிறகு அகலில் வைத்து மேலொரு அகலைமூடி சீலைமண் செய்து கஜபுடத்தில் எரிக்க பற்பமாகும்.

இந்த பற்பத்தில் ஒரு பணவிடை தகுந்த அனுபானத்துடன் கொடுக்க இராஜக்ஷயம், இருமல் முதலான சகல ரோகங்களும் தீரும்.

## 354. அரைருபாய் நாணயத்தால் வெள்ளி பற்பம் செய்யும் முறை

பழைய வெள்ளி அரை ரூபாய் ஒன்றை எடுத்து அதை எருக்கம் பாலில் 3 நாள் ஊறவைத்துப் பிறகு குடியோட்டிப் பூண்டின் பாலில் 3 நாளும் ஊறவைக்கவும். பிறகு 20 வறட்டியில் புடம் போட்டு எடுத்துப்பார்க்க பற்பம் ஆகும். வியாதிக்கு அனுசரணையான அனுபானத்தில் கொடுக்க சகல ரோகங்களும் தீரும்.

## 355. வெள்ளி பற்பம்

வெள்ளிப் பொடியை எருக்கம்பாலில் நைவாய் அரைத்து வில்லை தட்டி உலர்த்தி அதை இரண்டு அகல்களின் நடுவில் வைத்துச் சீலைமண் செய்து உலர்த்தி வறட்டியில் புடம் போட்டு ஆறியபின் எடுத்து மறுபடியும் எருக்கம்பால் விட்டரைத்து முன்பு சொன்னபடி 6 புடங்கள் போட்டுப் பிறகு எடுத்து நேர்வாளத்தின் இலையை அரைத்து வில்லைகளின் மேல் கவசஞ் செய்து சீலைமண் செய்து ஒரு புடம் கொடுக்க பற்பமாகும்.

## 356. வெள்ளி பற்பம்

சிறுசெருப்படிச்சாறு வெள்ளைக்குன்றிமணியிலைச்சாறு
பொடுதலைச்சாறு

1 தோலா வெள்ளிப்பொடியை இச்சாறுகளில் தனித்தனியே அரைத்துக் கொள்ளவும். வெள்ளைப்பாஷாணம் 1 வராகனெடை எடுத்து வெள்ளருகின் சாற்றிலரைத்து அரைத்த வெள்ளியுடன் கூட்டி மறுபடியும் அரைத்து வில்லை செய்து உலர்த்தி அகலில் வைத்துச் சீலைமண் செய்து ஒரு கஜ குழி தோண்டி அதில் வைத்து புடம் போட்டு எரிக்க பற்பமாகும்.

அனுபானம்:- தேன், நெய், வெண்ணெய், இவைகளில் ஏதேனும் ஒன்றை சரீரத்தின் தாரதம்மியத்தை அறிந்து கொடுக்கவும். இந்த மருந்தினுல் உடம்பில் அதிகமான உஷ்ணமேற்பட்டால் வேளைக்கு மாதுளஞ்சாற்றை ½ சேர் விதம் இருவேளையும் கொடுக்கவும். நீர்ரோகத்திற்குப் பனங்கற்கண்டைச் சிறிது வறுத்துப் பொடிசெய்து இம்மருந்துடன் கலந்து கொடுக்கவும்.

## 357. வெள்ளி பற்பம்

| | |
|---|---|
| வெள்ளி | 7 கழஞ்சு |
| ரசம் | 1 கழஞ்சு |
| வெள்ளைப்பாஷாணம் | 1 கழஞ்சு |
| யவக்ஷாரம் | 1 கழஞ்சு |

இவைகளை வெள்ளைக் குன்றிமணியிலைச் சாற்றில் 4 நாழிகை வரை அரைத்து வில்லைதட்டி நன்ருக உலர்த்தி 6 வறட்டியில் புடம் போட பற்பமாகும்.

அனுபானம் :- நெய்யில் மத்தித்து ஐந்து நாள் கொடுக்கவும்.

## 358. வெள்ளை, வெட்டை முதலானதற்கு வெள்ளி பற்பம்

பழைய வெள்ளி கால்ரூபாயை எடுத்து அம்மான் பச்சையரிசியின் பாலை இருபுறமும் தடவி உலர்த்தி இவ்விதம் ஏழு தடவை செய்து உலர்த்திக் கொள்ளவும். பிறகு ஓட்டில் வைத்துச் சீலைமண் செய்து 5 அல்லது 6 வறட்டியில் புடம் போடச் சுத்தமான பற்பமாகும். இப்பற்பத்தினுல் பிரமியம், தந்திமேகம் (தந்திவெட்டை) இவைகள் தீரும். இரத்த விருத்திக்கும் இந்த பற்பத்தைக் கொடுக்கலாம்.

பத்தியம் :— இச்சாபத்தியம்




அனுபானம் :- நெய்.

## 359. வெள்ளி பற்பம்

சுத்திசெய்த வெள்ளியை ஈசலிறகுபோல் தட்டி, காககிட்டத்தை முலைப்பாலிலுரைத்துத் தகட்டின் மேல் தடவி உலரவைத்து, இவ்விதம் ஆறுதடவை செய்து ஆறு தடவை உலரவைத்துப் பிறகு அகலில் வைத்துச் சீலைமண் செய்து கஜபுடத்தில் எரிக்க பற்பமாகும்.

இதில் 1 பணவிடை வீதம் தகுந்த அனுபானத்துடன் கொடுக்க சகல ரோகங்களும் தீரும்.

## 360. தாமிர பற்பம்

தாமிரப்பொடியை நைவாக அரைத்து வில்லை தட்டி மயிர்மாணிக்கயிலைச் சாற்றினுல் மறுபடியுமரைத்து வில்லை செய்து அதேயிலையை அரைத்து அவ்வில்லைகளின் மேல் கவசஞ் செய்து ஓட்டில் வைத்து வேறொரு ஓட்டால் மூடிச் சீலைமண் செய்து வராகபுடத்தில் எரிக்கவும். இவ்விதம் மூன்று புடம் போட்டு எரிக்க சுத்தமான பற்பமாகும்.

## 361. தாமிர பற்பம்

தாமிர வில்லைகளை நெருப்பாகக் காய்ச்சி தில்லைப் பாலில் சுருக்கங் கொடுக்கவும். இவ்விதம் ஏழுதரம் காய்ச்சி ஏழுதரம் தில்லைப்பாலில் நனைத்து எடுத்துக் கொள்ளவும். நிலத்தாமரை இலையை அரைத்து நாரத்தங்காயளவு உருண்டை செய்து அதனுள் தாமிர வில்லையை வைத்து நன்றாக மூடி அதன் மேல் சீலைமண் செய்து அதை பூமியில் பள்ளம் வெட்டி அதில் வைத்து கஜபுடம் போட்டு எரித்து எடுத்துக் கொள்ளவும்.

அனுபானம்:- இதில் ஒருவருக்குக் கொடுக்க வேண்டுமானால் மருந்து சாப்பிடுபவரைக் கழுத்தளவு தண்ணீரில் நிற்கவைத்து ஒரு எள் அளவு மருந்தைத் தேன் அல்லது நெய்யில் மத்தித்துக் கொடுத்தால் அவருக்கு உடனே பசி ஏற்படும். பசி ஏற்பட்டதும் முதலில் தயிரைக் குடிக்கச் செய்யவும். பிறகு மோரைக் கொடுக்கவும். பிறகு சாயந்திரம் தண்ணீரை விட்டு வெளியே வரும்வரையில் வேண்டிய நெய்யைச் சாப்பிடக் கொடுக்கவும். தண்ணீரை விட்டு வெளியேறியதும் தயிர் சாதத்தைச் சாப்பிடக் கொடுக்கவும் ஒரு மண்டலம் வரையில் ஸ்திரீ சங்கமம் கூடாது. வாயு பதார்த்தங்களையும் விலக்கவும்.

இந்த முறை ஒரு பெரிய மகானுடையது.

## 362. தாமிர பற்பம்

வெள்ளைச்சாரணை சமூலத்தின் சாற்றில் ஒரு செல்லியை (சிறிய தாமிரக் காசு) ஒரு நாள் முழுவதும் ஊறவைத்துப் பிறகு ஒரு துணியில் அதைப் பந்துபோல் சுருட்டி 60 காட்டெருவில் புடம் வைத்து எரிக்க பற்பமாகும்.

## 363. தாமிர பற்பம்

சுத்திசெய்த தாமிரப்பொடி 9 பலம், வெண்சங்குத் தூள் 9 தோலா, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு

குப்பைமேனிச் சாற்றில் 22 நாழிகை அரைத்து வில்லை தட்டி உலர்த்திக் கொள்ளவும். பிறகு இதை ஒரு அகலில் வைத்து மேலொரு அகலை மூடிச் சீலைமண்செய்து 1½ கஜம் அகலம், 1½ கஜம் உயரத்தில் சக்ரவட்டமாக வறட்டிகளை அடுக்கி மத்திய பாகத்தில் அகலை வைத்து எரித்து தானுக ஆறிய பிறகு எடுத்து முன்பு சொல்லியபடி இவ்விதமே 10 தடவை புடம்போட்டு எரிக்க சுத்தமான பற்பமாகும். புடம் போடும்பொழுது குழிவெட்டிப் போடலாகாது. தரையின் மேல் தான் போடவேண்டும். பத்துப் புடங்களுக்கு முன்பே பற்பமானல் அத்துடன் நிறுத்திக் கொள்ளவும். அல்லது பத்து புடங்களுக்குப் பின்பும் பற்பம் கருநிறமாக இருப்பின் மறுபடியும் பற்பம் சுத்தமான வெண்ணிறமாகும் பரியத்தம் புடம் போட்டு எரிக்கவும்.

**அனுபானமும் தீரும் நோய்களும் :**

ஒரு பணவிடை மருந்தைத் தேனில் உட்கொண்டு அதன் மேல் சிற்றரத்தையை 1 சேர் தண்ணீரில் காய்ச்சி ¼ சேராகக் கஷாயமிறக்கிக் கொடுக்கவும். இவ்விதம் தினம் இரு வேளையும் ஒரு மண்டலம் வரையில் சாப்பிட நெடுநாளைய சுவாசகாசம் தீரும்.

சூலைமாந்தத்திற்கு இந்த பற்பத்தில் ஒரு பணவிடை எடுத்துத் தேனில் குழைத்துத் தினம் இரு வேளையும் 10 நாட்கள் வரை உட்கொள்ளத் தீரும்.

குழந்தைகளுக்கு 3 வயது முதல் 13 வயது வரையில் வரும் சூலைமாந்த நோய்க்கு ஒரு மண்டலம்வரை தேக பலத்தை அனுசரித்துக் கொடுக்கத் திரும்.

பெரியோர்களுக்கு ஈளை (கபம்) தந்திபோல் விழும் உபத்திரவத்திற்கு இந்த பற்பத்தில் ஒரு பணவிடை எடுத்துத் தேனில் கலந்து கொடுத்து, மேலும் சுக்கு, சிற்ற ரத்தை வகைக்கு இரு வராகனெடை எடுத்துச் சுரசம் செய்து தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை உள்ளுக் குக் கொடுக்க கபரோகம் திரும்.

கபம், வாயு இவைகள் சம்பந்தப்பட்ட இருமல் சுவாச காசம் முதலானதற்கு திப்பிலி, சுக்கு, மிளகு இவைகளைச் சூரணித்து 1 வராகனெடை தூளுடன் ஒரு பணவிடை பற்பத்தையுங் கலந்து தேனையுங் கூட்டி தினம் இருவேளையும் ஒரு மண்டலம்வரை உள்ளுக்குக் கொடுக்க நோய்தீரும். இம்மருந்து அனுபவங் கண்டது.

## 364. தாமிர பற்பம்

சுத்திசெய்த தாமிரத் தகட்டிற்குச் சமயெடை கந்தகத்தையுங் கூட்டி எருக்கம்பால், விட்டரைத்துக் கவசம் செய்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவும். இவ்விதம் ஏழு தடவை செய்து உலர்த்திக்கொண்டு பிறகு வஜ்ஜிர மூசையில் வைத்து வாயைமூடிச் சீலைமண்செய்து கஜ புடத்தில் எரித்துப் பின்பும் அதே மாதிரி ஏழு புடங்கள் கொடுக்க பற்பம் தும்பைப்பூவை விட வெண்மையாயிருக்கும்.

## 365. வெங்கல பற்பம்

சுத்திசெய்த வெங்கலத்தூள் வேண்டிய அளவு இதற்குச் சமயெடை கந்தகத்தை எடுத்துத் தூளுடன் சேர்த்து எருக்கம்பால் விட்டரைத்து வெய்யிலில் உலர்த்தவும். இவ்விதம் ஏழுதடவை செய்து உலர்த்திக்கொண்டு, வஜ்ஜிர மூசையில் வைத்துச் சீலைமண் செய்து ஏழுதடவை கஜபுடத்தில் எரிக்க பற்பம் தும்பைப்பூவை விட வெண்மையாயிருக்கும். இந்த பற்பத்தினால் வயிற்றுவலி, மார்புவலி, தீரும்.

## 366. காந்த பற்பம்

சுத்திசெய்த காந்தத்திற்கு நான்கு பங்கு கந்தகத்தைச் சேர்த்து எருக்கம்பால், கோரைக்கிழங்கின் வேர், பலாசம் பட்டை இவைகளைக் கொண்டு தயாரித்த கஷாயத்தில் ஒரு நாள் முழுவதும் நைவாக அரைத்து அகலில் வைத்து

மேலொரு அகலேயும் மூடிச் சீலேமண் செய்து உலர வைத்து கஜபுடத்தில் எரிக்க பற்பமாகும்.

## 367. லோக (இரும்பு) பற்பம்

வேண்டிய இரும்புத்தூளே ஒரு பானேயில் போட்டு கோ மூத்திரத்தை நிறையவிட்டு எட்டு நாழிகை வரையில் ஊறவைத்துப் பிறகு எடுத்துக் கற்ருழைச் சாற்றினுல் 4 நாழிகை அரைத்து ஒரு கலயத்தில் போட்டுத் தரையில் ஒரு கூடை வறட்டியை அடுக்கி அதனடுவில் கலயத்தை வாய் மூடிச் செய்து வைத்துப் பின்னும் அதன்மேல் ஒருகூடை வறட்டியை அடுக்கிப் புடம் போட்டுப் பிறகு அதை எடுத்து எருக்கஞ்சாறு, கள்ளிச்சாறு, தான்றிக்காய்ச்சாறு, கையாந் தகரைச்சாறு. நெல்லிக்காய்ச்சாறு, பசுவின் நெய், பசுவின் பால் இவைகளில் தனித்தனியே அரைத்து 15 புடம்போட பற்பமானது தும்பைப்பூவை விட வெண்மையாயிருக்கும். இப்பற்பத்தை நீரில்போட்டால் பற்பம் மிதக்கும். இவ்விதம் மிதக்காமல் தண்ணீரில் மூழ்கினுல் பற்பம் சரியான முறையிலில்லே என்றறிந்து முன்பு சொன்ன சாறுகளில் ஏதேனுமொரு சாற்றில் அரைத்துப் பற்பம் தண்ணீரில் மிதக்கும் நிலேயடையும் வரையில் எவ்வளவு புடங்கள் தேவையோ அவ்வளவு புடங்கள் போட்டு எரிக்கவும்.

**அனுபானமும் தீரும் நோய்களும் :**

உஷ்ண சரீரத்திற்குச் சீதளமான அனுபானத்துடனும், சீதள சரீரத்திற்கு உஷ்ணமான அனுபானத்துடன் கூட்டிக் கொடுக்க சகல ரோகங்களும் தீரும். இம்மருந்தை ஒரு மாதம் உட்கொள்ள நரைமயிர் கருத்துச் சரீரத்தில் உள்ள தோல் சுருக்கம் முதலிய சின்னங்கள் நீங்கி சரீரத்திற்கு என்றும் யௌவன பார்வையளிக்கும்.

## 368. லோக பற்பம்

சுத்திசெய்த இரும்பின் அரப்பொடியை முற்றியதும் புளிப்புள்ளதுமான மாமரத்தின் பாலில் 3 நாள் ஊறவைத்து

அதே பாலில் நைவாக அரைத்து கஜ புடம் போட பற்ப மாகும்.

## 369. வெள்வங்க பற்பம்

*(1)* வெள்வங்கம் 2 பலத்தை மெல்லிய தகடாகத் தட்டி அந்த தகட்டின்மேல் 1 பலம் தாளகத்தை பலாசம் பட்டைச் சாற்றில் அரைத்துக் கவசம் செய்து மூசையில் வைத்து வாயை மூடிச் சீலமண் செய்து கஜபுடம் போடப் பற்பமாகும்.

(2) வெள்வங்கம் 2 தோலா எடுத்துச் சிறுதுண்டு களாகச் செய்து கொள்ளவும் பிறகு ஒரு பிடி கஞ்சாயிலை, ஒரு பிடி ஓமம் இவைகளைச் சேர்த்திடித்துத் தூள் செய்து அரசம்பட்டையின் சோற்றை மட்டிலும் 3 சேர் எடுத் திடித்து அதில் பாதிப் பாகத்தை ஒரு வறட்டியின் மேல் பரப்பி அதன் மேல் இடித்து வைத்திருக்கும் ஓமம், கஞ்சா யிலைத்தூளையும் பரப்பி அதன் மேல் வெள்வங்கத் துண்டு களைப் பரப்பி மேலும் எஞ்சிய பாதி ஓமம் கஞ்சாயிலைத் தூளையும் பரப்பி அதன்மேல் மிஞ்சிய அரசம்பட்டைச் சோற்றின் தூளையும் பரப்பி மேல் ஒரு வறட்டியை மூடி அதைச் சுற்றியும் வறட்டியை அடுக்கி, புடம் போட்டு எரிக்கச் சுத்தமான பற்பமாகும்.

## 370. வெள்வங்க பற்பம்

பாதரசம் 2 தோலா, வெள்வங்கம் 2 தோலா, தரை யில் ஒரு குழி தோண்டி சுத்தர் செய்து அதில் பாதரசத் தையூற்றி அதன்மேல் வெள்வங்கத்தை ஒரு ஓட்டில்வைத்து உருக்கி ஊற்ற வெள்வங்கம் மிருதுவடையும். பிறகு அதை எடுத்து 4 வில்லைகளாகத் தட்டிக் கொள்ளவும். இதற்கு முன்பே ஒவ்வொரு வறட்டியும் 20 சேர் எடையுள்ளதான வறட்டிகளைத் தயார்செய்து தரையில் ஒரு வறட்டியை வைத்து அதன்மேல் பொன்னுவாரையிலை இரு பிடியை ஒன்று இரண்டாக இடித்து பாதியை வறட்டியின் மேல்

பரப்பி அதன்மேல் வெள்வங்க வில்லைகளைத் தனித்தனியே வைத்து மேலும் எஞ்சிய பொன்னுவரை இலையைப் பரப்பி மற்றொரு வறட்டியையும் அதன்மேல் வைத்து காற்றில்லாத இடத்தில் வைத்து புடத்தின் மேல் வைக்கோலினுல் மூடி நான்கு பக்கமும் ஒரே விதமாக எரியும்படி தீ வைக்கவும். புடம்எரிந்து ஆறிய பின் எடுத்துப் பார்க்க வெண்மையான பற்பமாகும். ஏதேனுமொரு பக்கத்தில் காற்றினுல் சுவாலை அதிகமாயிருந்தால் அப்பக்கத்திய பற்பம் சிறிது கருமையாயிருக்கும். அதையும் தனியே தூள் செய்துவைத்துக் கொள்ளவும். இந்த பற்பத்தை வியாதியின் நிலையை அனுசரித்துக் கூட்டியுங் குறைத்துங் கொடுக்கவும்.

**அனுபானம்:-** நெய், வெண்ணெய், தேன் இவைகளைச் சரீரத்தை அனுசரித்துக் கொடுக்கவும். இதில் ஒரு அரிசியெடை முதல் ஒரு குன்றுமணி எடை வரையில் தேவைக்குகந்தபடி கொடுக்கலாம். நோய்க்குத் தக்கவாறு பத்தியமிருத்தல் வேண்டும். சொல்ப வியாதிக்கு இச்சா பத்தியம், கடினமான வியாதிக்குக் கடின பத்தியம்.

## 371. கருவங்க பற்பம்

கருவங்கம் 1 தோலா எடுத்து ஒரு சட்டியில் போட்டு உருக்கி அதில் சிறிது சிறிதாகத் தூள் செய்த சீனக் காரத்தைப் போட்டு கற்ருழைவேரினுல் கிளறிக் கொடுக்கவும். இவ்விதம் செய்ய பற்பமாகும். அதை எடுத்துச் சமபாக சீனக்காரத்துடன் கூட்டி நன்ருக அரைத்து வில்லை தட்டி உலர்த்தி புடம் போட்டு எரிக்கச் சிறந்த பற்பமாகும்.

## 372. வங்க பற்பம்

| | |
|---|---|
| இலுப்பை அரைப்பு | 1 சேர் |
| ஈரமஞ்சள் | 1 சேர் |
| சடைக்கஞ்சாயிலை | $\frac{1}{4}$ சேர் |
| புளியங்கொட்டைத்தோலின் தூள் | $\frac{1}{2}$ சேர் |

| | |
|---|---|
| திப்பிலியின் தோல் | $\frac{1}{2}$ சேர் |
| கருவங்கம் | 1 சேர் |

வங்கத்தைத் துண்டுசெய்து இத்துடன் கலந்து கஜ புடத்தில் எரித்துக்கொள்ள பற்பமாகும்.

இதில் ஒரு பணவிடை தகுந்த அனுபானத்துடன் உள்ளுக்குக் கொடுக்க பிரமியம், அக்கினிமாந்தம், சூலைவாயு, மேகவியாதி முதலானதுகள் தீரும்.

## 373. இருமலுக்கு வங்க பற்பம்

வெள்வங்கம் $\frac{1}{2}$ சேர். பெரிய அகன்றதொரு இரும்பு தவா சட்டியை அடுப்பின் மேலேற்றி (ஒருசாண் அளவு வட்டமாக இருக்கும்படியான தவாசட்டி) அதில் ஈயத்தை உருக்கி மற்றொரு பாத்திரத்தில் இரண்டுசேர் நல்லெண்ணெயை ஊற்றி அப்பாத்திரத்தில் உருக்கிய வெள்வங்கத்தை ஊற்றவும். இவ்விதம் 21 தடவை நல்லெண்ணெயில் சுருக்கங்கொடுக்கவும். ஏழுதரத்திற்கொரு தடவை புதிதாக நல்லெண்ணெயை உபயோகிக்கவும். இவ்விதமே இலுப்பை எண்ணெயில் 21 தடவை சுருக்கங் கொடுக்கவும். ஆக 42 தடவை வெள்வங்கத்தை சுருக்கங் கொடுக்க வேண்டியது.

பிறகு 500 எலுமிச்சம்பழத்தின் ரசத்தை எடுத்து மூன்று பாகங்களாக்கி ஒரு பாகத்தை ஆழமான கல்வத்திலிட்டு அதில் ஈயத்தை உருக்கி ஊற்ற ஈயம் தூள் தூளாகப் பொடியாகும். அத்தூளைச் சேதம் செய்யாமல் எடுத்து மறுபடியும் 7 தடவை நல்லெண்ணெயுடன் கலந்து காய்ச்சி எலுமிச்சம்பழரசத்தில் சுருக்கங் கொடுக்கவும். பிறகு தனியே எடுத்து வைத்திருக்கும் மற்ற இரு பங்கு பழரசத்தில் முன்போல ஏழேழுதடவை சுருக்கங் கொடுக்கவும். ஆக பழரசத்தில் 21 தடவை சுருக்கங் கொடுக்கவேண்டியது இவ்விதமே கோமூத்திரத்தில் 21 தடவை சுருக்கங் கொடுக்கவும். ஆகமொத்தம் 126 தடவை சுருக்கங் கொடுத்து

பிறகு சிறிது நல்லெண்ணெயுடன் கலந்து உருக்கி வில்லை யாகத் தட்டவும். இவ்வில்லையை ஈசலின் இறகைப் போல மெல்லிய தகடாக்கி புளியிலையைப் போன்று சிறிய துண்டு களாகக் கத்தரித்துக் கொள்ளவும்.

நன்ருக உலர்த்திய வெண்நொச்சியிலையும், பூவும் ஒரு மணங்கு கொணர்ந்து நன்ருக இடித்துச் சூரணித்துக் கொண்டு, 2 முழம் அகலமும் 4 முழம் நீளமுமான ஒரு சவுக்கத்தை தரையில் விரித்து, அகலத்தில் இரு பக்கமும் நான்கு விரல் அகலத்தை விட்டு மற்ற இடங்களின் பேரில் இத்தூளை நன்ருகப் பரப்பிக் கத்தரித்து வைத்திருக்கும் ஈயத்தகட்டில் 9 தோலா வெடுத்து அத்தூளின்மேல் ஒன்றின் மேல் ஒன்றுபடாமல் தனித்தனியாகப் பரப்பி, பிறகு அத் துணியை வெகு ஜாக்கிரதையாகத் தீவர்த்தியைப்போல் சுருட்டி ஐந்து இடங்களில் கயிற்றிஞல் பிணைத்து, பிறகு பழந்துணியை நீண்ட பட்டிகளாகக் கிழித்து தீவர்த்திக்குச் சுற்றுவதுபோல் சுற்றவும். அந்தச் சுருள் ஒருசாண் அகல மாகும்படி உருண்டையாகச் சுற்றி, காற்றில்லாத ஒரு இடத்தில் வைத்துத் தீவர்த்தியின் இரு நுனிகளிலும் நெருப்பு வைத்துப் பற்றவைக்கவும். நன்ருக எரிந்த பிறகு தாஞக ஆறியபின் பார்த்தால் வங்கமெல்லாம் நெற்பொரி யைப் போல் பற்பமாயிருக்கும். இவைகளை சாம்பலி லிருந்து பிரித்துக் கொள்ளவும். இதைக் கல்வத்திலிட்டு அரைத்து வஸ்திரகாயஞ் செய்து சீசாவில் அடைத்துக் கொள்ளவும்.

**அனுபானம் :** சிரகம், கற்கண்டுத்தூள் இவைகள் வகைக்கு 9 தோலா பிரமாணமெடுத்துப் பொடித்துக் கொள்ளவும். இதில் ஒரு வேளைக்கு ஒரு வராகனெடை தூளுடன் $\frac{1}{2}$ பணவிடை பற்பத்தைக் கலந்து கொடுக்கவும். இவ்விதம் தினம் இருவேளையாக 10 நாட்கள் உட்கொள்ள சகல இருமலும் தீரும். கபமும் தீரும்.

**பத்தியம் :** மாமிசத்தின் சூப் அவசியமாகக் கூட்டவும். இம்மருந்தையுட்கொண்டு உபவாசம் இருக்கலாகாது.

சீரகம், கற்கண்டு. வெண்ணெய் இவைகளுடன் மருந்தைச் கலந்து கொடுத்தால் சிதரத்தம் தீரும். காந்த சிந்தூரம் $\frac{1}{4}$ பணவிடையும் இப்பற்பம் $\frac{1}{2}$ பணவிடையும் சீரகத்தூளில் கலந்து கொடுக்க அதிசாரம் கிராணி தீரும். வெள்ளைப் பிரமியத்திற்குக் கற்கண்டு. சீரகம், வெண்ணெய் அல்லது நெய்யில் $\frac{1}{2}$ பணவிடை பற்பத்தைச் சேர்த்துக் கொடுத்தால் மேகம் தீரும்.

இம்மருந்து மிகவும் பிரசித்தமானதும், கைகண்டது மாம்.

## 374. வங்க பற்பம்

சுத்தி செய்த வங்கம் 1 சேர். இதை சங்கிலைச் சாற்றில் 21 தடவை கருக்கம் கொடுத்துப் பிறகு இதை உருக்கி நீள மான கட்டிகளாக ஊற்றிக் கத்தியால் கொப்பரைச் சிவல் போல் சீவி வைத்துக்கொள்ளவும். அந்தச் சிவலை கல்வத்தி லிட்டு ஆகாசத்தாமரையின் சாற்றினல் நைவாயரைத்து வெய்யிலில் காயவைத்துக் கொள்ளவும். காய்ந்த துளை ஓர் புதிய சட்டியில் போட்டுச் சிறிது ஆகாசத் தாமரையின் சாற்றையுமிட்டு வறுக்க நுண்ணிய தூளாகும். இந்தத் தூளில் 25 வராகனெடை எடுத்துக்கொண்டு இத்துடன் குஞ்சு பொரித்த கோழிமுட்டையின் மேலோடு 25 வராக னெடை கூட்டி கல்வத்திலிட்டு அரைத்துப் புதிய மூசையில் நிரப்பி வாயை மூடிச் சீலைமண் செய்து உலர்த்திக் கொல்ல னுடைய உலையில் வைத்து மூசை உருகுந்தருணம் வரையில் துருத்தியால் ஊதி எடுத்துக் கொண்டு ஆறியபின்பு மூசையை உடைத்துப் பார்க்க. தும்பைப்பூவைப் போல் வெண்மையாய் இருக்கும்.

### அனுபானமும் தீரும் நோய்களும் :

இப்பற்பத்தில் ஒரு பணவெடை வரையில் நெய்யில் கலந்து கொடுக்கவும். ஏழு வேளைக்குக் கொடுக்க மூர்ச்சை, வாயு, பித்தபஸ்மாரம், பித்தப்பிரமை, பிரக்ஞையின்மை,

சகல பித்தம் முதலானது தீரும். நோய் மூன்று அல்லது நான்கு மாதங்களுக்கொரு தடவை வருமானல் 15 நாட்களுக்கு ஒருமுறை மூன்று நாட்களுக்கு இம்மருந்தை உட்கொண்டு பிறகு நிறுத்திக் கொள்ளவும். இவ்விதம் செய்ய இந்நோய்கள் பூரணமாக ஒழியும். தேனில் பக்குவப்படுத்தியுள்ள திராக்ஷைப்பழம் $\frac{1}{2}$ சேர், சர்க்கரை $\frac{3}{4}$ சேர், நாட்டுப் பசுவின் நெய் 1 சேர், இவைகளைக் கலந்து வைத்துக் கொண்டு அதில் காலையிலும், மாலையிலும் ஒரு எலுமிச்சம் பழ அளவு உட்கொள்ளவும். இவ்விதஞ் செய்ய பித்தத்திஞல் ஏற்படும் சகல நோய்கள் அபஸ்மாரம், பித்தப் பிரமை முதலானவைகள் தீரும். முக்கியமாக பித்தாபஸ்மாரத்தை ஒழிக்கும்.

## 375. சுவர்ண வங்காதிப் பற்பம்

| | |
|---|---|
| வெள்வங்கப்பற்பம் | கருவங்கப்பற்பம் |
| தங்கப்பற்பம் | வெள்ளிப்பற்பம் |

இவைகள் வகைக்கு 2 பலம்.

| | |
|---|---|
| காந்தப்பற்பம் | இரசபற்பம் |

வகைக்கு 1 பலம்

| | |
|---|---|
| பவள பற்பம் | முத்துப்பற்பம் |

வகைக்கு 4 பலம். இவைகளைக் கல்வத்திலிட்டு ஒன்றுகக் கலந்து பசும்பால் விட்டரைக்கவும். பிறகு கஸ்தூரி கரைத்த நீர், சந்தனத்தின் கஷாயம், கரும்பு ரசம், வெட்டி வேர்ச்சாறு, ஆடாதோடைச்சாறு இச்சாறுகளில் முறையே ஒவ்வொரு சாற்றிலும் ஒவ்வொரு நாள் அரைத்து மாத்திரைகள் அல்லது வில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும். 2 குன்றிமணி எடை மருந்தை சர்க்கரை அல்லது தேனுடன் கலந்து கொடுக்க 20 வகைப் பிரமியங்கள் தீரும்.

தகுந்த அனுபானங்களுடன் கொடுக்க சகல வியாதிகளும் தீரும். கைகண்ட மருந்து.

## 376. கருவங்கப் பற்பம்

பாதரசம் 3 வராகனெடை கருவங்கம் 3 வராகனெடை கருவங்கத்தில் பாதி எடுத்து உருக்கி இரசத்தில் கலந்து கொள்ளவும். குஞ்சு பொரித்த முட்டை ஓடு 3 வராகனெடை எடுத்து முன்பு கூட்டி வைத்திருக்கும் இரசம், கருவங்கம் இவைகளில் கூட்டிக் கல்வத்திலிட்டு 4 நாழிகை அரைத்து மைபோலானதும் ஒரு மூசையில் அடைத்து அதன் வாயை மூசை செய்யும் மண்ணாலடைத்துச் சீலைமண் செய்து உலர்த்தி, பிறகு கொல்லன் உலையில் வைத்து இரண்டு துருத்தியைக் கொண்டு ஊதி மூசை உருகுந்தருணத்தில் அதை எடுத்து ஆறவைக்கவும். இவ்விதமே ஏழுதடவை 7 புடங்கள் கொல்லன் உலையில் கொடுக்க சுண்ணாம்பைப் போல் வெண்ணிறப் பற்பம் ஆகும்.

**அனுபானமும் தீரும் வியாதிகளும்:**

இம்மருந்தை ஒரு வேளைக்கு 1 பணவெடை பிரமாணம் எடுத்து தேனில் மத்தித்து தினம் இருவேளையுமாக 10 நாள் கொடுக்க வயிற்றுவலி தீரும். அதிமதுரம் 1 வராகனெடை எடுத்து அதில் தண்ணீர் விட்டரைத்து உருண்டைகள் செய்து சாப்பிடவும். முள்ளங்கிச்சாறு ½ சேர். இதில் முன்கூறியபடி அதிமதுர விழுதையுங்கூட்டி 1 பணவெடை பற்பத்தையுங் கலந்து தினம் இருவேளையாக 1 மண்டலம் வரை உட்கொள்ள 21 வித மேகங்கள் தீரும்.

## 377. நாகபற்பம்

துத்த நாகம் 1 பலத்தை உருக்கிக் கொள்ளவும். பிறகு,

கோமூத்திரம் : எருக்கம்பால்
நல்லெண்ணெய்

இம்மூன்றில் தனித்தனியே சுருக்கம் கொடுத்துச் சுத்தி செய்து ஒரு கலயத்தில் போட்டு அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சவும். காய்ச்சும்போது அதில் புளியம்பட்டையின் மெல்லிய தோலின் தூளைச் சிறிது சிறிதாக அதின்மேல் போட்டுக் கிளறிக் கொண்டுவர நாகம் சூரணிக்கும். பிறகு அதை எடுத்து சுத்தி செய்த பாதரசத்துடன் கலந்து ஒரு அகலில் வைத்து மேலொரு அகலை மூடிச் சீலைமண் செய்து உலர்த்தி கஜபுடத்தில் வைத்து எரிக்கப் பற்பமாகும்.

இதில் உளுந்து பிரமாண மருந்தை எடுத்துச் சர்க்கரையுடன் கலந்து 3 நாட்கள் உட்கொள்ள இருமல், நீரிழிவு, பாண்டு, பிரமியம், குடல்வாதம், சுபரோகம், குட்டம் முதலானவைகள் தீரும்.

## 378. நாகச் சூரணம்

நாகத்தை உருக்கி 1 சேர் பசும்பாலில் 11 தடவை சுருக்கங் கொடுத்துச் சுத்தி செய்து கொண்டு பிறகு அதை உருக்கி அதற்குச் சமயெடை இரசத்தைக் கூட்டி வெண்ணெய் பதமாகச் செய்து கொண்டு மேலும் அத்துடன் 5 வராகனெடை எணகு(?)வை சேர்த்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழரசத்தில் 4 நாழிகை அரைத்து வில்லைகளாகத் தட்டி சிறிது வெய்யிலில் வைக்கவும். பிறகு காட்டெருவில் புடம் போட்டு எரிக்கச் சுண்ணமாகும்.

இதைச் சகல ரோகங்களுக்குந் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கத் தீரும்.

## 379. பவள பற்பம்

சுத்தி செய்த பவளத்தில் எருக்கம்பாலை விட்டு மூன்று நாள் முழுதும் ஊறவைத்துப் பிறகு எடுத்து அகலில் வைத்துச் சீலைமண் செய்து உலர்த்திக் கஜபுடத்தில் வைத்து எரிக்க பற்பமாகும். ஒரு பணவெடை பற்பத்தைத் தகுந்த

அனுபானத்துடன் கொடுக்க விக்கல், வாந்தி, சுவாசம், இருமல் இவைகள் தீரும்.

## 380. பவள பற்பம்

பவளம் 2 தோலா        தேன் 10 தோலா

இவ்விரண்டையும் ஓர் புதிய கலயத்திலிட்டு வாயை ஓட்டால் மூடி சந்து இல்லாமல் பொருத்தி சீலைமண் செய்து ஒரு முழம் நீளம், ஒரு முழம் அகலம் உயரத்தில் புடம் போட்டு எரிக்க பற்பமாகும்.

## 381. முத்துப் பற்பம்

முத்தை எடுத்து ஊமத்தைச் சாற்றில் போட்டு ஒரு நாள் முழுதும் ஊறவைத்துப் பிறகு நன்ருகக் கழுவி அடுத்த நாள் புளியிலைச் சாற்றில் ஒருநாள் முழுவதும் ஊறவைத்துக் கழுவி எடுத்துக் கொள்ள முத்து சுத்தி ஆகும். பிறகு ஒரு நாள் முழுதும் வெள்ளைச்சிறுவழுதுளைச் சாற்றில் ஊற வைத்து மூசையில் நிரப்பி வாயை மூடிச் சீலைமண் செய்து உலர வைத்துக் குழிதோண்டி கஜபுடத்தில் வைத்து எரிக்க பற்பமாகும்.

## 382. வஜ்ஜிரப் பற்பம்

சுத்திசெய்த வயிரத்தை (வஜ்ஜிரத்தை) பிரண்டையின் சாற்றில் மூன்று நாள் ஊறவைத்து, பிறகு வெய்யிலில் காய வைத்து வஜ்ஜிர மூசையில் அடைத்துச் சீலைமண் செய்து கஜபுடத்தில் வைத்து எரிக்க பற்பமாகும்.

## 383. மரகத பற்பம்

சுத்திசெய்த மரகதத்தை (பச்சை) சுண்டங்கத்திரிச் சாற்றில் 1 நாள் முழுவதும் அரைத்துப் பிறகு சிறுபூளைச் சாறுவிட்டு 1 நாள் அரைத்து எடுத்து ஒரு அகலில் வைத்துக் காயவைக்கவும். பிறகு சீலைமண் செய்து வராக புடத்தில்

வைத்தெரிக்கப் பற்பமாகும். அதில் 1 பணவிடை பற்பத்தை தக்க அனுபானத்துடன் கொடுக்க சகல ரோகங்களும்தீரும்.

## 384. நீலத்தின் பற்பம்

சுத்திசெய்த நீலத்தை தேள் கொடுக்கிலைச் சாற்றில் 3 நாள் அரைத்துப் பிறகு அதை உலர வைத்து மூசையில் அடைத்து வாயை மூடிச் சீலைமண் செய்து கொல்லனுடைய உலையில் வைத்துத் துருத்தியிட்டு ஊதவும். மூசை உருகும் சமயம் பார்த்து எடுத்துவிட்டு ஆறியதும் பார்க்க பற்பமாகும். இதைச் சூலவாயு முதலான நோய்களுக்குக் கொடுக்கவும்.

## 385. மாணிக்க பற்பம்

சுத்திசெய்த மாணிக்கத்தை எருக்கம்பால் விட்டு 3நாள் அரைத்து அகலில் வைத்துச் சீலைமண் செய்து புடம்போட்டு எரிக்கவும். இவ்விதம் 3 புடங்களில் எரிக்க பற்பமாகும். ஒரு பணவிடை பற்பத்தைத் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கச் சகல வாயு, வாதம், மார்புவலி முதலானவை தீரும்.

## 386. புஷ்பராக பற்பம்

சுத்தி செய்த புஷ்பராகத்தை வெழுதுளைச் சாற்றில் ஊறவைத்து 2 நாழிகை வெய்யிலில் வைத்து பிறகு குகையிலடைத்து வாயை ஓட்டால் மூடிச் சீலைமண் செய்து உலர்த்திக் கொல்லன் உலையில் வைத்து நிறைய கரிபோட்டு குகையை ஓட்டால் மூடி குகை உருகுந்தருணம் வரையில் துருத்தியால் ஊதி எடுத்துக்கொள்ளப் பற்பமாகும்.

ஒரு பணவிடை பற்பத்தைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க சுரம், விக்கல், தோஷம் முதலான சகல ரோகங்கள் தீரும்.

## 387. கோமேதக பற்பம்

சுத்தி செய்த கோமேதகத்தை கருஊமத்தையின் சாற்றில் ஒரு நாள் ஊறவைத்து அடுத்த நாள் குகையிலிட்டு வாயை ஓட்டால் மூடிச் சீலைமண் செய்து உலர்த்திக் கொல்லன் உலையில் வைத்து நிறைய சரிபோட்டு மூசை உருகும் தருணம் வரையில் துருத்தியால் ஊதி எடுக்கப் பற்பமாகும்.

இதில் ஒரு பணவிடை பற்பத்தை எடுத்துத் தகுந்த அனுபானத்துடன் கொடுக்க ஈரல் வலி, குடல்வாதம் முதலானவை தீரும்.

## 388. வைடூரியப் பற்பம்

வைடூரியத்தைச் சிறுபூளையின் சாற்றில் 3 நாள் ஊற வைத்து, பிறகு நன்றாக உலர வைத்து வச்சிர மூசையில் வைத்து வாயை ஓட்டு வில்லையால் மூடிச் சீலைமண் செய்து மூன்று புடங்கள் கஜபுடமாகப் போட்டு எரிக்கப் பற்பமாகும் அல்லது கொல்லன் உலையில் வைத்து மூசை உருகும் தருணம் வரையில் துருத்தியால் ஊதி எடுக்கப் பற்பமாகும்.

தக்க அனுபானத்துடன் இப்பற்பத்தைக் கொடுக்கச் சூலை, சுரம் முதலானவைகள் தீரும்.

## 389. கந்தக பற்பம்

1 பலம் சுத்தி செய்த கந்தகத்தை வாழைக்கிழங்கின் சாற்றில் 5 நாள் ஊற வைத்துப் பிறகு எடுத்து ஒரு ஓட்டில் வைத்து அதன் அடியில் இளந்தீயிட்டு வறுக்க அது வெண்மையாக சுண்ணாம்பைப் போலாகும். அத்துடன் விலாம்பிசினைக் கலந்தரைத்துக் குன்றிமணியளவு மாத்திரைகள் செய்த உலர்த்தி வைத்துக்கொண்டு சகல மேக ரோகங்களுக்குங் கொடுக்க மேகம் தீரும்.

**பத்தியம்:** புளியை நீக்கவும். சிறிது எலுமிச்சம்பழ ரசத்தைக் கூட்டிக் கொள்ளவும்.

## 390. தாளக பற்பம்

தாளகத்தைச் சுத்திசெய்து அத்துடன் அத்திமரப் பாலையும், சிறிது தேனையும் சேர்த்து 2 நாழிகைவரை அரைத்துப் பிறகு செம்மறியாட்டின் கால் நல்லி (புரணி) எலும்பைக் கொணர்ந்து அதிலுள்ள மூளையை நீக்கிவிட்டு எலும்புக் குழாயில் இம்மருந்தை நிரப்பி எலும்பின் வாயை யடைத்து 2 சீலைமண் செய்து புடத்தில் வைத்தெரிக்கப் பற்பமாகும்.

## 391. தாளக பற்பம்

ஒரு கட்டி தாளகத்தைப் பீங்கான் பாத்திரத்தில் வைத்து தாளகம் முழுகும் வரையில் எருக்கம்பால் விட்டு ஒருநாள் முழுதும் ஊறவைக்கவும். இவ்விதம் மறுநாளும் புதிய எருக்கம்பாலில் ஊறவைத்து எடுத்துக்கொள்ளவும். பிறகு கற்ருழைச்சாற்றில் இவ்விதமே ஊறவைத்து எடுத்துக் கொள்ளவும். பிறகு அத்திமரத்தின் கனமான ஒரு துண்டு கட்டையை எடுத்து அதில் தாளகக்கட்டி கொள்ளுமளவு துவாரமிட்டு மேற்சொல்லிய பாலும், சாற்றையும் சிறிது விட்டு தாளகத்தையும் உள்ளே வைத்து துவாரத்தை அதே ஜாதி மரத்தின் மற்ருெரு துண்டால் மூடிப் பிறகு அந்தக் கட்டைக்கு ஏழு சீலைமண் செய்து சிறிது காயவைத்துக் கஜ புடத்தில் எரிக்க வெண்மையான பற்பமாகும்.

இப்பற்பத்தைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க க்ஷயம், இருமல், கபரோகம் முதலான நோய்கள் தீரும். சரீரத்தை அனுசரித்து ஒரு அரிசி எடை வரை கொடுக்கவும்.

## 392. தாளக பற்பம்

ஒரு கலயத்தில் எருக்கம்பாலைவிட்டு அதில் வெள்ளைத் தாளகத்தைப்போட்டு மேலே மூடியால் மூடி ஒரு கஜ நீளத் தில் குழிதோண்டி அதில் நிறைய வறட்டியை அடுக்கி நடு வில் கலயத்தை வைத்து மேலும் வறட்டியைப் போட்டு

எரித்தால் வெண்மையான பற்பமாகும். இதில் ½ குன்றி மணியெடை எடுத்து அத்துடன் ½ வாகனெடை வறுத்துத் தூள்செய்த சிரகம், சிறிது தேன் இவைகளைக் கலந்து தினம் இருவேளையும் கொடுக்கவும்.

**பத்தியம் :** சுரத்திற்குக் கூறிய பத்தியத்தைப் பிடிக்கவும். சீதசுரம், அஹிகசுரம். நான்கு நாட்களுக்கொரு முறை வரும் சுரம் முதலான சகல சுரங்களும் ஒழியும்.

## 393. தாளக பற்பம்

அரைத்த பூவரசங்காயின் விழுதைத் தேங்காயளவு உருண்டைசெய்து அதன் நடுவில் ஒரு பலம் தாளகத்தை வைத்துக் கவசஞ் செய்து ஐந்து சீலமண் செய்து சிறிது உலர்த்திப் பூமியில் ஒரு முழம் ஆழம், நீளம் அகலமான குழிதோண்டி அதில் நிறைய வறட்டியை நிரப்பிச் சீலமண் செய்த தாளகத்தை நடுவில் வைத்து மேலும் வறட்டிகளை அடுக்கி புடம்போட்டு, புடம் எரியும்பொழுது வறட்டியின் மேல் நான்கு விரல் உயரம் மண்ணைப்போட்டு மூடி, புடம் எரிந்து தானை ஆறியதும் எடுத்துக் கொள்ளவும்.

## 394. பாதரச பற்பம்

இரசம் ஒரு தோலா　　　　ஓமம் 1 தோலா

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு கையாந்தகரைச் சாற்றை விட்டு நாள் ஒன்றுக்கு 4 நாழிகைப் பிரமாணம் அரைத்து எடுக்க சாம்பலைப் போல் விளங்கும். பிறகு கோழி முட்டை ஒன்றில் சிறு துளையிட்டு அதிலுள்ளதை நீக்கி விட்டு இரசத்துடன் அரைத்த ஓமத்தூளை நிரப்பி துவாரத்தை வேறொரு முட்டையின் ஓட்டால் மூடி அதன்மேல் கறு உப்பையும் ஆற்றுமணலையுங் கூட்டி அரைத்துக் கவசமிட்டு உலர்த்திக்கொண்டு ஒரு சிறிய பானையில் பாதி ஆற்றுமணலைப் போட்டு அதன்மேல் கவசமிட்ட முட்டையை வைத்து மேலும் மணலை நிரப்பி மணலின்மேல் காக்காய்ச்

சோளத்தை தெளித்து வைக்கவும். பிறகு பானையை அடுப்பின் மேலேற்றி ஒரேவிதமாக இளந்தீயால் எரிக்கவும்.

மணலின்மேற்றூவிய காக்காய்ச்சோளம் பொரிந்ததும் கீழிறக்கி ஆறிய பின்பு கவசத்தையும் முட்டை ஓட்டையும் நீக்கி பற்பத்தை எடுத்து பத்திரப்படுத்திக் கொண்டு உஷ்ண சரீரத்திற்கு வெண்ணெயிலும், வாத சரீரத்திற்கு வெற்றிலைச் சாற்றிலும் கொடுக்கவும்.

**பத்தியம் :-** இச்சாபத்தியம்.

## 395 இரச பற்பம்

இலிங்கத்திலிருந்து எடுத்த பாதரசம் 4 வராகனெடை கொணர்ந்து கல்வத்திலிட்டு நிர்விழியின் சாற்றினல் 32 நாழிகைவரை அரைத்து வில்லை தட்டி உலர்த்தி, அகலில் வைத்து மேலும் ஓர் அகலை மூடிச் சீலைமண் செய்து குக்குட புடத்தில் வைத்து எரிக்கப் பற்பமாகும்.

இருமலுக்கு $\frac{1}{4}$ பணவிடை மருந்தைத் தேனில் கலந்து கொடுக்கவும். இவ்விதம் தினம் இருவேளையும் 10 நாட்கள் உட்கொள்ள இருமல் தீரும்.

க்ஷயரோகத்திற்கு அசுவகந்திரசாயனம் அல்லது பில்வாதி லேகியம் அல்லது மகாதாளீசபத்திரிச் சூரணத்தில் ஒரு வேளைக்கு $\frac{1}{2}$ பணவெடை மருந்தைக் கலந்து தினம் இருவேளையும் ஒருமண்டலம் வரையில் கொடுக்க க்ஷயரோகம் தீரும். இம்மருந்தை அநேகருக்குக் கொடுத்து மிகுந்த அனுபவம் கண்டது.

## 396. குருபற்பம் (இரசபற்பம்)

| | |
|---|---|
| இரசம் 1 வாரகனெடை | உத்தாமணிச்சாறு 9 தோலா |
| துளசிச்சாறு $4\frac{1}{2}$ தோலா | முருங்கைப்பூச் சாறு $2\frac{1}{2}$ ,, |
| தும்பைப்பூச்சாறு $1\frac{1}{8}$ ,, | |

இவைகளை ஒன்றுபடக்கலந்து கல்வத்திலிட்டு அரைத்து வில்லை தட்டி அகலில் வைத்து மேலுமோர் அகலைவைத்து சீலைமண் செய்து கஜபுடத்தில் எரிக்கப் பற்பமாகும்.

ஒரு பணவிடை பற்பத்தை தினம் இருவேளையும் இஞ்சிச்சாறு அல்லது தேனில் கலந்து கொடுக்க 66 வகை வாயுவு, 84 வகை வாதங்கள், 8 வகை குன்மங்கள், சன்னி பாதங்கள் முதலான நோய்கள் திரும்.

**பத்தியம் :-- புளிப்பை நீக்கவும்.**

## 397. பாதரச பற்பம்

இரசம் ½ பலம். கோழிமுட்டை ஒன்றில் சிறுதுளை யிட்டு மஞ்சட்கரு மட்டிலும் அதினின்று நீக்கிவிட்டு இரசத்தை துவாரத்தின் வழியாக ஊற்றி மேலும் சிறு கிரைச்சாற்றையும் அதனுள் நிரப்பி துளையை முட்டை யோட்டால் மூடிச் சிறுகீரையையரைத்து முட்டை மேல் கவசஞ்செய்து உலர்த்தி மூன்று சீலைமண் செய்து மறுபடியு முலர்த்தி ¾ முழப் புடத்தில் வைத்து எரிக்கப் பற்பமாகும்.

சகல ரோகங்களுக்கும் கொடுக்கலாம்.

## 398. கபம், இருமல், சுரம், முதலானதற்குத் தாளகப் பற்பம்

சுத்திசெய்த தாளகம் 1 பலத்தைக் கல்வத்திலிட்டு கரு நொச்சியிலைச் சாற்றால் 4 நாழிகையும் பிறகு செம்பருத்தி யிலைச் சாற்றால் 3 நாட்களும் அரைத்துக் குகையில் அடைத்து குகையின் வாயை முருங்கையிலைச் சாற்றில் ஊறவைத்து உலர்த்திக் கொண்ட துணியால் 6 சீலைமண் செய்து வெய் யிலில் நன்றாக உலர்த்திப் பூமியில் குழித்தோண்டிக் கஜ புடத்தில் வைத்து எரித்துக்கொண்டு ஆறிய பின்பு பார்த்தால் வெண்மையான பற்பமாயிருக்கும். இதில் ஒரு

பாசிப்பயறு அளவு வெற்றிலைச் சாற்றில் உட்கொள்ள இருமல், கபம் முதலான ரோகங்கள் தீரும்.

**அனுபானம் :—** இருமலுக்கு வெங்காயச் சாற்றில் 4 நாள் கொடுக்கவும். மேல்மூச்சிற்கு மஞ்சள் தூளுடன் கலந்து 4 நாள் கொடுக்கவும். இருமலுக்கு திப்பிலிச் சூரணத்திலும், விஷசுரம், சிலேத்தும சுரத்திற்கு நொச்சி யிலைச் சூரணத்தில் அல்லது வாழைப்பழத்தில் கொடுக்கவும். பேதி கண்டால் மோரில் கலந்து கொடுக்கவும். வாந்தி, விக்கல் இவைகளுக்கு வெண்ணெயிலும், நான்கு நாட் களுக்கொருமுறை வரும் சுரத்திற்கு உத்தாமணிச் சாற் றிலும், ஜலபேதிக்கு மருதம்பட்டைச் சாற்றிலும், நீரி ழிவுக்குப் பருத்திக்கொட்டைப் பாலிலும் இப்பற்பத்தைக் கொடுக்கவும். கைகண்ட மருந்து.

## 399. குன்மத்துக்குக் குமரிப்பற்பம்

| | |
|---|---|
| சுத்தி செய்த இரசம் | 5 வராகனெடை |
| காந்தம் | 10 வராகனெடை |
| கந்தகம் | 10 வராகனெடை |
| இரும்புத்தூள் | 10 வராகனெடை |

இவைகளில் கந்தகம், இரும்புத்தூள், காந்தம் இம்மூன்றை யும் நன்றாக இடித்துக் கல்வத்திலிட்டு இரசத்தையும் கூட்டி வெள்ளெருக்குச் சாற்றினால் மைபோலரைத்து வெய்யிலில் உலர்த்திப் பொடித்துக் கொள்ளவும். இம்மருந்தில் தினம் 3 குன்றிமணியெடை வீதம் எடுத்து வெல்லத்துடன் கலந்து கொடுக்கவும்.

**பத்தியம் :** புளிப்பு, கைப்பு இவைகளை நீக்கவும். இம் மருந்தினால் சகல குன்ம வியாதிகள் பவுத்திரம், (பகந்திரம்) சூலை வியாதிகள், கிராணி, குன்மம், பாண்டு முதலானது தீரும்.

## 400. குன்மம், வயிற்றுவலி முதலானதற்குப் பற்பம்

கரிஉப்பு $1\frac{1}{2}$ படி — வெள்ளைப்பாஷாணம் $1\frac{1}{2}$ வராகனெடை

பாஷாணத்தை எடுத்து ஒரு கத்தரிக்காயில் துவாரமிட்டு அதில் வைத்து சாணத்தால் கவசம் செய்து இரண்டு வறட்டியில் புடம் வைத்துப் பிறகு இப்பாஷாணத்தையும் உப்பையுங் கலந்து எருக்கம்பால்விட்டு 3 நாழிகை வரையில் அரைத்து ஈரமாகவே இருக்கும்போது குகையில் வைத்து வாயை மூடி சீலைமண் செய்து 1 முழம் புடத்தில் வைத்து எரித்துக் கொள்ளவும். உப்பு கட்டுப்பட்டிருக்கும்.

**அனுபானம்:** ஓமம் அல்லது வெள்ளைப்பூண்டுடன் கொடுக்கவும். இந்த உப்பில் 1 வராகனெடை முதல் 2 வராகனெடை வரையில் கொடுக்கவும்.

**பத்தியம்:** புளிப்பை நீக்கவும்.

## 401. அப்பிரகப் பற்பம் (சுலப முறை)

சாதிமல்லிகைச் சாற்றில் கிருஷ்ணப்பிரகத்தை 3 நாள் கைவிடாமலரைத்து வில்லைதட்டி உலர்த்திக் கொண்டு காட்டெருவில் புடம்போட்டு மறுநாட்காலை எடுத்துப் பார்க்கப் பற்பமாகும். இதை அக்கினிமந்தம், சன்னி, குளிர்சுரம் முதலானதற்குக் கொடுக்கவும்.

**பத்தியம்:** மிளகாய், புளி, மீன் இவைகளை விலக்கவும்.

## 402. இரசசௌவீர பற்பம்

இரசசௌவீரம் 1 வராகனெடை கொணர்ந்து அதை 5 வராகனெடை வெள்ளெருக்கம் பாலால் சுருக்குங் கொடுத்து பிறகு குப்பைமேனிச் சாற்றினாலரைத்து வில்லை தட்டி உலர வைத்து மேற்சொல்லிய குப்பைமேனி இலையை அரைத்துக் கவசஞ்செய்து கமுதையின் உலர்ந்த இலத்தியால் மூடி ஒரு ஜாண் புடம் போடவும்.

## 403. வெங்காரப் பற்பம்

வேண்டிய அளவு வெங்காரத்தை எடுத்து ஒரு ஓட்டில் வைத்து அதில் கறுப்பு வகையைச் சேர்ந்த காட்டாமணக்கு விதையின் பாலை விட்டு வெய்யிலில் வைத்து உலர்த்தி மறு படியும் அதே பாலைக்கொண்டு வெங்காரம் பற்பமாகும் வரையில் சுருக்கங்கொடுக்கவும். இந்தப் பற்பத்தை அனு பான பேதங்களில் கொடுக்க நீரடைப்பு முதலான ரோகங் கள் தீரும்.

## 404. மூலவியாதிக்குப் பற்பம்

வேண்டிய அளவு அபினியைக் கொணர்ந்து கல்வத் திலிட்டுக் கற்ருழைச் சோற்றையும் போட்டு அரைத்து ஒரு அகலில் வைத்து மேலொரு அகலையும் மூடி சீலைமண் செய்து காடைபுடத்தில் எரித்துக்கொள்ள பற்பமாகும்.

**அனுபானம் :—** இதை நெய் அல்லது வெண்ணெயில் கொடுக்கவும்.

## 405. பிரமியத்திற்குக் குங்கிலியப் பற்பம்

வெள்ளைக் குங்கிலியம் 1 பலத்தை எடுத்து ஓட்டில் உருக்கி இரண்டு வராகனெடை கந்தகத்தையும் ஒன்ருகக் கூட்டிப் புடம்போட்டு பற்பம் செய்யவும். ஒரு வேளைக்கு ½ பலம் வீதமெடுத்துத் தூள்செய்த கற்கண்டைச் சேர்த்து உட்கொள்ளவும்.

**பத்தியம் :—** வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

## 406. கற்பூரசிலாசித்துப் பற்பம் (தீபனத்திற்கு)

| | |
|---|---|
| சீனக்காரம் | 4 வராகனெடை |
| கற்பூரசிலாசித்து | 16 வராகனெடை |
| வெடியுப்பு | 4 வராகனெடை |

| | |
|---|---|
| வெங்காரம் | 4 வராகனெடை |
| இந்துப்பு | 4 வராகனெடை |

இவைகள் யாவற்றையுங் கல்வத்திலிட்டுக் குப்பைமேனிச் சாற்றில் 4 நாழிகைவரை அரைத்து வில்லைதட்டி உலர்த்திக் கொள்ளவும்.

இதைப் பொடித்துச் சீசாவில் அடைத்து வைத்துக் கொண்டு ஒரு வேளைக்கு 2 பணவிடை பிரமாணம் தேனில் உட்கொள்ள தீபனமதிகமாகும்.

## 407. கற்பூரசிலாத்துப் பற்பம்

கற்பூரசிலாசித்து பொரித்த வெங்காரம்

இவ்விரண்டையும் வகைக்கு 1 பலம் வீதமெடுத்துக் கல்வத்திலிடவும். 5 சேர் வெண்துத்தியின் வேரைக்கொண்டு எட்டிலொரு பங்காய் காய்ச்சி இறக்கிய கஷாயத்தினல் 4 நாழிகை வரை அரைத்து வில்லைகளாகத் தட்டி நன்ருயுலர்த்தி ஒரு அகலில் வைத்து வேருெரு அகலை மூடிச் சீலைமண் செய்து 10 ஹெட்டியில் வைத்துப்புடம் போட்டு எடுத்து அத்துடன் கோழி முட்டையின் வெள்ளைக்கருவைப் போட்டு 4 நாழிகை வரை அரைத்து வில்லைகளாகச் செய்து முன்பு கூறியபடி கோழி முட்டையின் வெள்ளைக்கருவில் அரைத்து 5 புடங்கள் போட்டு எரிக்கப் பற்பமாகும்.

வெடியுப்பு 10 பலம், உவர் மண்ணினில் உண்டாகும் உப்பு 10 பலம். இவ்விரண்டையும் எலுமிச்சம் பழச் சாற்றினல் 4 நாழிகை அரைத்து அதை ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு நெருப்பின் மேல் வைத்து எரிக்க அது சுண்ணமாகும். பிறகு இச்சுண்ணத்தை ஒரு பீங்கான் பாத்திரத்தில் போட்டு பனியில் வைக்க சுண்ணமானது திரவமாகும்.

இத்திரவத்தை எடுத்துக் கல்வத்திலிட்டு முன்பு தயாரித்திருக்கும் பற்பத்தையும் அதில் போட்டு 4 நாழிகை

வரை அரைத்து வில்லைகளாகத் தட்டி கோழிமுட்டையின் வெண்கருவில் முன்பு கூறியவிதமே ஒரு புடத்தில் எரித்துக் கொள்ள உயர்ந்த வகையான பற்பமாகும்.

**அனுபானமும் தீரும் வியாதிகளும் :**

ஒரு வேளைக்கு 2 பணவெடை மருந்தும், சர்க்கரை 2 வராகனெடையும் சேர்த்துத் தினம் இருவேளையும் 10 நாட்கள் உட்கொள்ள நீரடைப்பு, மூத்திரத்தலத்தில் கல்லடைப்பு முதலானவைகள் தீரும். இம்மருந்துடன் காலகண்ட மருந்தையுஞ் சேர்த்துச் சாப்பிட்டால் அதிக பயனளிக்கும். காலகண்டத்திற்கு எவ்விதமான அனுபானஞ் சொல்லப்பட்டிருக்கிறதோ அதே அனுபானத்தில் இதையும் கொடுக்கவும். மிகவும் அனுபவங்கண்ட மருந்து.

## 408. கற்பூர சிலாசித்தின் பற்பம்

கற்பூரசிலாசித்து 1வராகனெடை எடுத்து அதை எலுமிச்சம்பழத்தின் சாற்றில் ஊறவைத்துப் பிறகு இவ்விரண்டையும் பிரண்டையின் சாற்றில் அரைத்து ஒரு அகலில் வைத்து மேலுமோர் அகலைமூடிச் சீலைமண் செய்து புடம் போட்டு எரிக்கப் பற்பமாகும்.

## 409. சுவாசகாசத்திற்கு உப்பு பற்பம்

4 மக்காச்சோளத் தட்டையைக் கொணர்ந்து அதன் நடுவில் அபினை வைத்து மேலும் உப்பைப் போட்டு நடுவில் அபினை வைத்து மேலும் உப்பைப்போட்டு 4 வறட்டியில் புடம் போட்டு எரித்துக் கொள்ளவும்.

**அனுபானம் :** வெற்றிலைச்சாறு.

## 410. தீபனத்திற்கு அப்பளாக்கார பற்பம்

அரைசேர் அப்பளாக்காரக் கட்டிகளை ஒரு வறட்டியின் பேரில் பரப்பி கஜபுடம் போட பற்பமாகும். பற்பத்தைச்

சாம்பலுடன் கலக்காமல் வெகு ஜாக்கிரதையாய் எடுத்து ஒரு குப்பியிலடைத்துக் கொள்ளவும்.

இப்பற்பத்தில் 2 பணவெடை எடுத்து எலுமிச்சம்பழச் சாற்றுடன் கூட்டி உட்கொள்ள தீபனம் ஏற்படும். பித்த வாயு முதலான நோய்கள் தீரும். இம்மருந்தை தினம் இரு வேளையுமாகப் பத்து தினங்களுக்கு உட்கொள்ளவும்.

பத்தியம்: இச்சாபத்தியம். கைகண்ட மருந்து.

## 411. வீரிய விருத்திக்குப் பற்பம்

| | |
|---|---|
| மூசுதங்க இரேக்கு (சொக்கத்தங்க ரேக்கு) | ½ வராகனெடை |
| தாளகம் | 5 வராகனெடை |
| நெல்லிக்காய் கந்தகம் | 1 வராகனெடை |

இவைகளை ஒன்றுகூட்டிக் கல்வத்திலிட்டு மைபோல் அரைத்துச் சிறு கலயத்தில் போட்டுக் கலயத்தின் வாயை மூடிச் சீலைமண் செய்து, கொல்லன் உலையில் வைத்துக் கலயத்தைத் தணல்போல் சிவக்கக் காய்ச்சி எடுத்து ஆறிய பின்பு பார்க்க பற்பமாகும்.

அனுபானம்: நெய்.

## 412. வயிற்று நோய்க்குப் பற்பம்

நாகூர் செல்லிக்காசைச் சிறு துண்டுகளாக்கி அதற்குச் சம எடை தாளகத்தைக் கூட்டிப் பொடித்துக் கல்வத்தி லிட்டுப் பிரண்டைச் சாற்றினுல் மைபோல் அரைக்கவும். பிறகு பிரண்டையை விழுதாக அரைத்து தேங்காயளவு விழுதை எடுத்து அதன் நடுவில் அரைத்த மருந்தை வைத்து மூடி அதன்மேல் 7 சீலைமண் செய்து 15 வறட்டிப் புடத்தில் எரிக்கப் பற்பமாகும்.

## 413. ரஸ்தாளி வாழைப்பழப் பற்பம்

ரஸ்தாளி வாழைப்பழத்தை நேர்வாக்கில் நான்கு பாகமாகப் பிளந்து அதனடுவில் பிரண்டையிலையை நிறையச் சொருகி பிளவை ஒன்ருகச் சேர்த்து ஒரு வெள்ளைத் துணியால் மூன்று சுற்று சுற்றி அதன்மேல் சீலமண்ணுஞ் செய்து 10 வறட்டிப் புடத்தில் எரிக்க பற்பமாகும்.

இப்பற்பத்தில் ½ பணவெடை எடுத்து நெய்யில் கலந்து கொடுக்கக் கிரந்தி முதலான பிணிகள் தீரும்.

**பத்தியம் :—** எள்ளெண்ணெய், கடுகு, புளி, பாகல், அகத்தி முதலான வாயு பதார்த்தங்களை விலக்கவும். புளி தேவையானுல்,புளியைச் சுட்டு சிறிதளவு சேர்க்கவும்.

## 414. தொண்டையிலேற்படும் புண்களுக்குப் பற்பம்

இரசகற்பூரத்தைப் பழம்பாசிலைச் சாறுவிட்டு அரைத்து வில்லைதட்டி நன்ருக உலர்த்தி 7 வறட்டியில் புடம்போட்டு எரிக்கப் பற்பமாகும்.

**அனுபானம்:-** நெய் அல்லது பனைவெல்லம்.

## 415. தந்தவாயுவுக்கு உப்பு பற்பம்

பிரண்டையை அரைத்து ஒரு தேங்காயளவு விழுதை எடுத்துக்கொள்ளவும். குப்பைமேனியிலையையும் அவ்வாறே செய்யவும். வெடியுப்பு 9 தோலாவை எடுத்து அதை பிரண்டையின் விழுதால் முதலில் கவசஞ் செய்து அதன் மேல் குப்பைமேனியின் விழுதால் கவசமிட்டு குழிதோண்டி வறட்டியை அடுக்கி சிறு புடமாக எரித்துக்கொள்ள சுண்ணமாகும்.

இதை வெற்றிலையில் தடவி தாம்பூலம் போடவும். சூலைக்கு தேனில் கொடுக்கவும்.

வயிறு கழிந்தால் மிளகை வறுத்துப் பொடிசெய்து கூடச் சிறிது இஞ்சியும் தட்டிப்போட்டு கஷாயமிறக்கித் தேனுடன் கூட்டி மூன்று வேளை கொடுக்கவும்.

### 416. நந்தவாயுவுக்குப் பற்பம்

சங்கு ஒன்றை எடுத்துப் பொடித்து கலயத்திலிட்டு அதில் நாயுருவிச் சாற்றையும் ஊற்றி வாயை மூடிச் சீலை மண் செய்து புடம்போட்டு எரிக்கச் சுண்ணமாகும்,

இதைத் தத்தவாயுவுக்குத் தடவ தீரும்.

### 417. வாயின் துர்நாற்றத்திற்குப் பற்பம்

கால் சேர் எடையுள்ள கல்நார் கட்டி ஒன்றை எடுத்துக் கொள்ளவும். தென்னங்குரும்பையின் மிருதுவான பின் பாகத்தை மட்டும் இடித்து $\frac{1}{8}$ சேர் சாற்றை எடுத்துக் கொள்ளவும். காட்டாமணக்கு விதையின் பால் $\frac{1}{8}$ சேர். இவைகளை ஒன்றுகூட்டி கல்நாரின் மேல் 3 தடவை கவசஞ் செய்து 3 தடவை வெய்யிலில் உலர்த்திப் பிறகு அதை நைவாயரைத்து வில்லைகள் தட்டிச் சீலைமண் செய்து 5 வறட்டியில் புடம்போட பற்பமாகும்.

**அனுபானம் :-** பற்பம் 1 வராகனெடை, தேன் 5பலம் இவ்விரண்டையும் நன்றாகக் கலந்து அதில் இஞ்சியும் நெல்லிக்கனியும் போட்டு ஐந்துநாள் வரை வெய்யிலில் வைத்து உபயோகப்படுத்தவும். வாயின் துர்நாற்றந் தீரும்.

### 418. கோமூத்திர சிலாசித்துப் பற்பம்

கடுக்காய் நெல்லிக்காய்

தான்றிக்காய்

இவைகள் வகைக்கு $\frac{1}{8}$ சேர் வீதமெடுத்து அதில் 4 சேர் தண்ணீர் விட்டுக் காய்ச்சி எட்டிலொரு பங்காய் கஷாய மிறக்கி வேண்டிய கோமூத்திர சிலாசித்தைக் கல்வத்தி லிட்டுக் கஷாயத்தை விட்டு நன்ருக அரைத்து வில்லைகள் தட்டி ஓட்டில் வைத்துச் சீலைமண் செய்து வராக புடத்தில் எரிக்கப் பற்பமாகும்.

**அனுபானமும் தீரும் நோய்களும் :**

இப்பற்பத்தால் சகலவித மேகம், மூத்திர கிருச்சரம், மூத்திர தாகம், ஜீரண சுரம் முதலானது தீரும். மேகாதி சர்வ ரோகங்களும் தீரும். சங்கவல்லியின் கஷாயத்தில் கொடுக்க ஜீரண சுரம் தீரும். நெய்யில் கொடுக்க கர்ப் பிணியின் நோய் தீர்ந்து கர்ப்பம் வளரும். திப்பிலி, தேன் இவைகளில் கொடுக்க க்ஷயரோகந் தீரும். நெய்யில் கொடுக்க இளைத்த சரீரம் பெருக்கும்.

கோமூத்திரசிலாசித்து பற்பம் 2 பாகம், இலிங்கச் சிந்தூரம் 1 பாகம், அப்பிரக பற்பம் 1 பாகம், இவ்வாறு இம்மூன்றையுங் கலந்து வேளை ஒன்றுக்கு இதில் 2 குன்றி மணி எடை எடுத்து ஐந்து மிளகின் பொடி, தேன் இவை களுடன் கூட்டி உட்கொள்ள க்ஷயரோகந் தீரும்.

மேக விகாரங்களைத் தீர்க்க வல்லது, சரீரத்தின் மேலுள்ள கிரந்தியின் சிட்டைகளுக்கு இம் மருந்தை தேனுடன் கூட்டி உட்கொள்ள சிட்டைகள் தீரும்.

### 419. வெள்ளை, வெட்டை முதலானதற்கு வெள்ளைக் குங்கிலியப் பற்பம்

கடுக்காய்த்தோல் தான்றிக்காய்த்தோல்
நெல்லிமுள்ளித்தோல்

இவைகள் வகைக்கு 1 பலம் வீதம் எடுத்து ஒன்றிரண்டாக இடித்து ஒரு புது சட்டியிலிட்டு 3 சேர் தண்ணீரையும்

ஊற்றி அடுப்பின் மேலேற்றி எரிக்கவும். சட்டியில் வெள்ளைக்குங்கிலியக் கட்டியை தோலாயத்திர முறைப் படி தொங்கவிட்டு எரிக்கவும். தண்ணீர் சுண்டியதும் யாவற்றையும் எடுத்து நன்ருக உலர்த்திக் கல்வத்தில் இட்டுப் பொடித்து மறுபடியும் தண்ணீர் விட்டரைத்துத் தண்ணீரைக் கையால் லாகவமாக இறுத்துவிட்டு விழுதை மட்டிலும் எடுத்து நன்ருக நிழலிலுர்த்திக் கொண்டு பிறகு சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து பத்திரப்படுத்திக் கொள்ளவும். இந்த சூரணத்தில் நான்கிலொரு பாகம் சிணுக்கற்கண்டுத் தூளைக் கலந்து கொள்ளவும்.

வேளை ஒன்றிற்கு $\frac{1}{4}$ தோலா பிரமாணம் எடுத்து வெண்ணெயில் கலந்து கொடுக்க வெட்டை, பிரமியம் முதலானது தீரும். கைகண்டது.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்
60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## சிந்தூரங்கள்

# சிந்தூரங்கள்

## 420. தங்க சிந்தூரம்

தங்க ரேக்கு 1 வராகனெடை எடுத்து மெல்லியதாய் தட்டிக்கொண்டு அத்துடன் வெள்ளைப்பூண்டு சமூலத்தின் சாற்றைவிட்டு மைபோலரைத்து அதில் மேலும் $\frac{1}{4}$ வராகனெடை பாதரசத்தையும் போட்டு மறுபடியும் அதே சாற்ருல் அரைத்து, மறுநாள் எலுமிச்சம்பழச் சாற்றை விட்டரைத்து வில்லை தட்டி புடம் போட்டு எரித்து ஆறிய பின்பு எடுத்து மறுபடியும் 2 நாழிகைவரை எலுமிச்சம் பழச் சாற்றிலரைத்து புடம் போடவும். இவ்விதம் மூன்று புடங்களாஞல் சிந்தூரமாகும்.

## 421. தங்க சிந்தூரம்

தங்கப்பொடி $\frac{1}{4}$ தோலாவுடன் 40 தோலா இஞ்சிச் சாற்றை சிறிது சிறிதாகக் கலந்து மைபோல் அரைக்க கட்டிப்படும். அதுவரையில் அரைக்கவும். பிறகு அதை வில்லைகளாகச் செய்து உலர்த்தி இரு அகலில் வைத்து மூடி, சீலைமண்செய்து உலரவைத்து பூமியில் குழிவெட்டி கஜ புடத்தில் எரிக்கவும். சிந்தூரம் சிவந்த நிறமாகும்.

இதைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க சகல ரோகங்களும் தீரும்.

## 422. அய சிந்தூரம்

| | |
|---|---|
| உயர்ந்த இரும்பின் தூள் | 1 பலம் |
| நாவல்பட்டை | 10 சேர் |
| ஒதியம்பட்டை | 10 பலம் |
| நவச்சாரம் | $\frac{1}{2}$ பலம் |

பட்டைகளை நன்ருக இடித்து ஒரு பானையில் போட்டு 3 படி தண்ணீரையூற்றி $1\frac{1}{2}$ படி கஷாயமாக்கிக் கொள்ளவும். அரப்பொடியை எலுமிச்சம்பழச்சாற்றில் 3 நாள் ஊற

வைத்த பிறகு நன்ருகக் கழுவி கல்வத்திலிட்டு முன்பு செய்து வைத்திருக்கும் கஷாயத்தை விட்டரைக்க அரைக்க மை போல் மிருதுவாகும். பிறகு அதை ஒரு ஓட்டில் வைத்து அடுப்பின் மேலேற்றி பொடித்த நவச்சாரத்தை சிறிது சிறிதாக அதன்மேல் போட்டு எரித்து வந்தால் சிந்தூரமாகும்.

**மருந்தின் பரிமாணம் :** இரண்டு பச்சைப்பயறின் அளவு.

**அனுபானம் :** நெய், தேன் இவைகளில் கொடுக்க பாண்டு, பித்தம், வாயு முதலானது தீரும்.

## 423. பைகம்பரி நவச்சார சிந்தூரம்

வேண்டியளவு நவச்சாரத்தைக் கொணர்ந்து கையாந்தகரைச்சாற்றில் 2 நாழிகை வரை நைவாய் அரைத்து வில்லைகளாகத் தட்டி உலர்த்தி இரு அகலில் வைத்து நன்ருக மூடி 7 சீலைமண் செய்து உலர வைத்து குக்குடபுடத்தில் எரிக்க சிறிது வெண்ணிறமுடைய சிந்தூரமாகும். இச்சிந்தூரத்தை சகல நோய்களுக்கும் தக்க அனுபானத்துடன் கொடுக்க சந்தேகமில்லாமல் தீரும்,

**அனுபானம் :** வெண்ணெய் அல்லது நெய்யில் கொடுக்கவும்.

## 424. காடிகாரச் சிந்தூரம் (நெறிகட்டி சுரத்திற்கு)

| | |
|---|---|
| இரச சிந்தூரம் | $\frac{1}{2}$ வராகனெடை |
| லிங்கம் | 4 வராகனெடை |
| காடிகாரம் | $\frac{1}{2}$ வராகனெடை |

இவைகளைக் கல்வத்திலிட்டு 3 நாழிகை வரை அரைத்துக் குப்பியில் அடைத்து 40 நாள் தானிய புடத்தில் வைத்து எடுத்துக் கொள்ளவும். நெறிகட்டிசுரத்திற்கு மிகவும் உசிதமானது.

**பத்தியம் :** பத்தியத்திற்கு புளியை நீக்கவும்.

## 425. காந்த சிந்தூரம்

ஊசிக்காந்தம் 1 சேர். இதை கரி நெருப்பில் வைத்து நன்ருகப் பழுக்கக் காய்ச்சி 21 தடவை கோமூத்திரத்தில் சுருக்கங் கொடுக்கவும். பிறகு அதை நன்ருய்க் கழுவி கல்லுரலிலிட்டிடித்துப் பொடி செய்து கல்வத்திலிட்டு கொள்ளுக்கட்டை (கொள்ளு ரசம்) விட்டு இரண்டு நாட்களரைத்து வில்லை தட்டி ஓட்டை மூடி, சீலை மண் செய்து ஒரு முழ புடத்தில் வைத்து எரிக்கவும். இவ்விதம் மூன்று புடங்களில் எரித்துக்கொள்ள சிந்தூரமாகும்.

தகுந்த அனுபானத்தில் கொடுக்க இரத்த விருத்தியாகும். பாண்டு முதலான பிணிகள் திரும்.

## 426. இரசசெளவீர சிந்தூரம்

இரசசெளவீரம் 1 தோலா எடுத்து பவளமல்லிப் பூவையரைத்துக் கவசஞ் செய்து துணியால் சுற்றி பூமியில் ஒரு ஜாண் குழிதோண்டி அதில் வைத்து மேலும் மணலைப் போட்டு பரப்பி அதன்மேல் இரண்டு வறட்டியை துண்டுகளாக்கிப் போட்டு எரித்து பிறகு சாயந்திரம் புடத்தைப் பிரித்து மருந்தின் கீழ்பாகத்தை மேல்புறமாக இருக்கும்படி புரட்டிவைத்து முன்சொன்னபடியே மற்றுமொரு புடத்தில் வைத்து எரிக்கவும். இவ்விதமாக 6 புடங்களில் எரித்துக் கொள்ளவும்.

1 பலம் லிங்கத்தின்மேல் அரைத்த வேப்பிலையால் கவசஞ் செய்து ஓட்டில் வைத்துச் சீலைமண் செய்து கஜ புடத்தில் வைத்து எரித்துக்கொள்ளவும். பிறகு 1 பலம் மிளகை நன்ருகத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து தயாரித்து வைத்திருக்கும் இரசசெளவீரச் சிந்தூரத்தையும் லிங்க சிந்தூரத்தையும், மிளகுத்தூளுடன் ஒன்றுபடக் கலந்து வைத்துக்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதிகளும் :**

வேளை ஒன்றிற்கு ஒரு நெல் எடை வீதம் நெய் அல்லது தேனில் மத்தித்துக் கொடுக்க சன்னி, சூலை, கிரந்தி, மூக்கின் விரணம், வாத உபத்திரவம், சுரம் முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம் :** இச்சா பத்தியம். வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

## 427. லோக சிந்தூரம்

இரும்புத்தூள் 1 சேர். இதைப் பொற்றலைக் கையாந் தகரைச் சாற்றில் 3 நாழிகை வரை அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஓட்டில் வைத்து மேலொரு ஓட்டை மூடி 7 சீலைமண் செய்து நன்றாக உலர்த்திப் புடம் போடவும். இவ்வாறு 10 புடங்கள் போட்டு எரிக்கவும். பிறகு 2 தோலா தாளகத்தை அத்துடன் கலந்தரைத்து 10 புடங்கள் போடவும். இவ்விதம் மூன்று முறை தாளகத்தைச் (6 தோலா) சேர்த்துப் புடம் போட 40 புடமாகும். அதற்குப் பிறகு எடுத்துப்பார்க்க சிந்தூரமாகும்.

**அனுபானம் :-** சீதரத்தத்திற்கு தயிர் அல்லது வெண்ணெயில் 1 வராகனெடை குங்கிலியத்தைப் பொடித்து இம் மருந்துடன் கலந்து கொடுக்க சீதரத்தக் கழிச்சல் தீரும்.

## 428. கல்நார் சிந்தூரம்

கல்நார் 1 பலத்தை முற்றின நெல்லிக்காயின் சாற்றில் அரைத்து வில்லை தட்டி உலர்த்திப் புடம்போட சிந்தூர மாகும்.

பெரும்பாடு, வெட்டை, உஷ்ணம் முதலான நோய்கள் தீரும். தாதுபுஷ்டி உண்டாகும்.

## 429. லோக சிந்தூரம்

எலுமிச்சம்பழரசத்தில் இரும்புத்தூளைச் சுத்தி செய்து கொண்டு அதை இடித்து வைத்துக்கொள்ளவும். பிறகு காந்தத்தைப் பழுக்கக் காய்ச்சி 7 தடவை காடியிலும், 7 தடவை பசு மூத்திரத்திலும் சுருக்குங்கொடுத்து இரும்புத் தூளுக்கும் சமஎடை காந்தத்தையும் சேர்த்து 1 நாழிகை வரை எருக்கம் பால்விட்டு அரைத்து அதை உலரவைத்துப் புடம் போடவும். பிறகு,

நிலவேம்பின்சாறு
முள்ளிலவம்பட்டைச்சாறு
கற்றாழைச்சாறு
நாவல்பட்டைச்சாறு
நெல்லிப்பட்டைச்சாறு
வேலம்பட்டைச்சாறு
இலந்தப்பட்டைச்சாறு
கீழாநெல்லிச்சாறு
நாய்வேளைச்சாறு
முசுமுசுக்கைச்சாறு
எலுமிச்சம்பழச்சாறு
பசுவின்பால்

இவ்விதமான 12 வகை சாறுகளில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாழிகையாகத் தனித்தனியே அரைத்து ஒவ்வொரு சாற்றுடன் (பசுவின் பாலைத் தவிர) இரண்டு எலுமிச்சம் பழரசத்தையுங் கூட்டி அரைத்து வில்லை செய்து வெய்யிலில் உலர்த்தி தனித்தனியே புடம் போடவும். இவ்விதம் 13 புடங்கள் போட்டுஎரிக்க உயர்ந்த முறையில் சிந்தூரமாகும்.

**அனுபானம் :-** தக்க அனுபானத்துடன் சகல வியாதிகளுக்கும் கொடுக்கலாம். சிறுவர்கள் முதல் பெரியோர்கள் வரையில் இம்மருந்தை உட்கொள்ளலாம். மூச்சு, இரத்தவிருத்தி, பித்தம், வாதம், குன்மம் முதலானதற்குக் கொடுக்கவும். ஒரு மண்டலம் அல்லது அரை மண்டலம் வரை உட்கொள்ளவும். சரீரம் பலஹீனமாயிருந்தால்

மிளகு, சீரகம், ஜாதிக்காய், சுக்கு இவைகளைச் சமமாகக் கொண்டு கால் சேர் வெண்ணெயில் பொரித்து சூரணித்து வைத்துக்கொண்டு மருந்துடன் சிறிது கலந்து கொடுக்கவும்.

**பத்தியம்** — வாயு பதார்த்தங்களை நீக்கவும்.

## 430. உப்பு சிந்தூரம்

ஆகாசத்தாமரையின் சாற்றில் $\frac{1}{4}$ படி உப்பை 10 நாள் ஊறவிட்டு அதை அரைத்து வில்லை தட்டி ஓட்டில் வைத்து சீலமண் செய்து ஒரு முழப் புடத்தில் வைத்து எரிக்கவும். இவ்விதமே 20 புடம் போட சிந்தூரமாகும்.

**அனுபானம்:** $\frac{1}{4}$ வராகனெடை உப்பை $\frac{1}{4}$ சேர் தேனில் கொடுக்கவும். காடியில் கலந்து கொடுக்க வயிற்று வலியும், சுக்குக் கஷாயத்தில் கொடுக்க நீர் அடைப்பும், தேனில் கொடுக்க சூதகவாயு, கிராணி, அக்கினிமந்தம், சுரம் முதலான சகல பிணிகளும் தீரும்.

## 431. இரசசௌவீரச் சிந்தூரம்

| | |
|---|---|
| இரசசௌவீரம் | 1 வராகனெடை |
| இரசகற்பூரம் | 2 வராகனெடை |
| இலிங்கம் | 2 வராகனெடை |
| இரசசிந்தூரம் | 2 வராகனெடை |

இவைகளைக் கல்வத்திலிட்டு மைபோல அரைத்துச் சீசாவில் அடைத்து வைத்துக்கொண்டு சுரம், சீதசுரம் இவைகளுக்குச் சுக்குக் கஷாயத்திலும், கபவாதத்திற்கு சிற்றரத்தையிலும், பிரமிய சுரத்திற்கு பனைவெல்லத்திலும் கலந்து கொடுக்கவும்.

**குறிப்பு:-** வயிறு கழிந்தால் தேனில் கொடுக்கவும்.

## 432. இரச சிந்தூரம்

பாதரசம் 1 பலம் கந்தகம் 1 பலம்

இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு நாளும், கற்றாழைச் சாற்றில் ஒரு நாளும், கொடிவேலியின் சாற்றில் ஒரு நாளும், தான்றிக்காய் கஷாயத்தில் ஒரு நாளும் கிருஷ்ண துளசியின் சாற்றில் ஒரு நாளும், இலுப்பையிலைச்சாற்றில் ஒரு நாளும், நெய்சட்டியின் சாற்றில் ஒரு நாளும், வேப்பிலைக் கஷாயத்தில் ஒரு நாளும், வேலிப்பருத்தியின் சாற்றில் ஒரு நாளும், இவ்விதமாக 9 வகைச் சாற்றிலும் தனித்தனியே ஒவ்வொரு நாளரைத்துப் பிறகு காசிக்குப்பியில் நிரப்பி குப்பியின் வாயை மாவுக்கல்லினுல் மூடிச் சீலமண் செய்து ஒரு சட்டியில் 6 விரல் உயரம் மணலைப்பரப்பி அதன்மேல் இக்குப்பியை வைத்து மேலும் மணலைப்பரப்பி அதன் மேல் வேறொரு சட்டியால் மூடி அடுப்பின் மேலேற்றிக் காடாக்கினியால் மூன்று நாள் எரித்து, ஆறிய பிறகு உடைத்துப் பார்க்க சிந்துரமாகும்.

**அனுபானம்:-** தகுந்த அனுபானத்துடன் இம்மருந்தைக் கொடுக்க சகல பிணிகளும் தீரும்.

## 433. காந்த சிந்தூரம் (பெரும்பாடுக்கு)

உயர்ந்த ஊசிக்காந்தம் 4 பலம். இதை 2 படி கையாந்தகரைச் சாற்றில் 21 தடவை பழுக்கக் காய்ச்சி 21 தடவை சுருக்கங் கொடுத்து, பிறகு நன்றுகக் கழுவி வைத்துக் கொள்ளவும். ஏழுதடவைக்கொருதரம் புதிதாக கையாந்தகரைச் சாற்றை உபயோகிக்கவும். ஆக 21 தடவை சுருக்கங் கொடுத்த பின்பு அதைக் கல்வத்திலிட்டு கையாந்தகரைச் சாற்றில் 21 நாழிகை அரைத்து வில்லை தட்டி சட்டியில் வைத்து உலர்த்திக் கொள்ளவும். பிறகு அதன் மேல் மற்றொரு சட்டியை மூடிச் சீலமண் செய்து அடுப்பின் மேலேற்றிக் காட்டுத் தீயிட்டு 12 நாழிகை எரிக்கவும். பிறகு ஆறியதும் எடுத்து பொடிசெய்து சீசாவில் அடைத்துக் கொள்ளவும்.

**அனுபானம் :-** சாதிக்காய் 1, கிராம்பு 4 வராகனெடை இவைகளை எடுத்து பழைய தாப்தா துணி (Satin Silk)யில் பொட்டணங்கட்டி தீ வைக்க அது எரிந்து பற்பமாகும். இதைப் பொடித்துக் கொள்ளவும். இத்தூளில் 1 பணவிடை எடுத்து ½ பணவிடை காந்த சிந்தூரத்தில் கலந்து பசுவின் நெய் அல்லது தேனில் மத்தித்து தினம் இருவேளையும் அரைமண்டலம் வரை உட்கொள்ள பெரும்பாடு தீரும்.

வெண்ணெய் ½ வராகனெடை, காந்தசிந்தூரம் 1பணவிடை இவ்விரண்டையும் மத்தித்து தினம் இரு வேளையுமாக அரை மண்டலம் வரை சாப்பிட பெரும்பாடு முதலான ஸ்திரீகளின் நோய் தீரும்.

பெரும்பாட்டுக்கு இம்மருந்தை அநேக ஜனங்களுக்குக் கொடுத்து அனுபவங் கண்டது.

இம்மருந்தைத் தினம் இருவேளையும் தேனில்கலந்து ஒரு மண்டலமுட்கொள்ள இரத்த விருத்தியாகும். சரீரம் இளைத்தும் வெளுத்துமிருந்தால் இவைகளும் தீரும். உஷ்ண ரோகங்களுக்குக் கொடுக்கும் ஏலாதிச் சூரணத்துடன் ½ பணவிடை காந்த சிந்தூரத்தைக் கலந்து தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொள்ள வயிற்றிலுள்ள எரிவு, பித்தவாயு முதலானதுகள் தீரும். இம் மருந்தினால் உடம்பில் உஷ்ணமோ காங்கையோ ஏற்படாது.

## 434. திரிமூர்த்திக்காந்த சிந்தூரம்

| | |
|---|---|
| உயர்ந்த ஊசிக்காந்தம் | ½ சேர் |
| நெல்லிக்காய் கந்தகம் | ½ சேர் |
| நூறு வருடங்களுக்கு முந்திய இரும்பின் தூள் | ½ சேர் |

இம்மூன்றையும் பெரியதொரு கல்வத்திலிட்டு நாள் ஒன்றுக்கு 4 நாழிகை விதம் 12 நாட்களுக்கு அரைத்து 13-ம் நாள் விடியற்காலையில் ஒரு முழம் அகலம், ஒரு முழம் உயரமுள்ள சிந்தூரம் தயாரிக்கும் சட்டியை எடுத்து, இம்

மருந்தை ஒரு சாண் நான்கு விரல் அகலத்தில் வட்டமான வில்லையாகத்தட்டி சட்டியின் மத்தியில் வைத்து வாயை துணியால் மூடி மூன்றுநாள் வெய்யிலில் உலரவைத்துப் பிறகு வேறொரு சட்டியை அதன்மேல் மூடி சீலைமண் செய்து உலர்த்தி சிந்தூரஞ் செய்யும் அகன்ற வாயுடைய அடுப்பின் மேலேற்றி நான்கு நாழிகை கமலாக்கினியால் எரித்துப் பிறகு பெரிய விறகுக்கட்டையை அடுப்பில் போட்டு 20 நாழிகை இரவு பகல் காட்டுத் தீயால் எரிக்கவும். இவ்விதம் 24நாழிகை தீ எரிக்கும்பொழுது அடுப்பானது நெருப்பினால் நிரம்பிவிட்டால் தீயைக் குறைக்காமல் அவ்வப்போது சிறிது சிறிதாகத் தணலை மட்டும் எடுத்துவிடவும். கடைசியில் உள்ள தணலை எடுக்காமல் அப்படியே அடுப்பில் வைத்து விடவும். பிறகு மூன்று நாட்கள் நன்றாக ஆறவிட்டுக் குப்பியை எடுத்துச் சீலைமண்ணை நீக்கிப் பார்க்க சிவந்தும், பூவைப்பார்க்கிலும் மிருதுவான சிந்தூரமாயிருக்கும். இதை எடுத்துத் தூள் செய்து புட்டியில் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் நோய்களும் :**

1) சரீரம் வெளுத்தும் இளைத்தும் இரத்தமில்லாமலிருந்தால் சிரகம், மிளகு, சுக்கு, கற்கண்டு இவைகளைச் சமமாகச் கொண்டு பொடித்து இதில் வேளைக்கு ½ வராகனெடை எடுத்து ½ பணவிடை சிந்தூரத்துடன் கலந்து ½ வராகனெடை நெய்யில் மத்தித்து தினம் இருவேளையும் 1 மண்டலம் வரை கொடுக்க மேற்கூறிய வியாதிகள் தீரும்.

**பத்தியம் :** இச்சாபத்தியம்.

2) பித்தபாண்டு, விஷபாண்டு, வீக்கம், காமாலை, கை கால்களின் வீக்கம் முதலானதற்கு ½ வராகனெடை சங்கிலையின் வேரை நைவாயரைத்து அத்துடன் 1 பணவிடை சிந்தூரத்தைச் சேர்த்து உள்ளுக்குக் கொடுத்து அதன்மேல் ¼ சேர் காய்ச்சாத வெள்ளாட்டுப்பாலைக் குடிக்கவும். மாலையில் வெள்ளாட்டுப்பாலைக் காய்ச்சி அவ்விதமே மருந்தைச் சாப்பிடவும்.

**பத்தியம் :** வெள்ளாட்டுப்பாலைக் காய்ச்சி சர்க்கரையுங் கூட்டி பால் சாதம் ஏழு நாட்கள் உப்பில்லா பத்தியமாகச் சாப்பிடவும். 8-ம் நாள் சங்கிலையுடன் உப்பைக் கூட்டிச் சுட்டு அந்த உப்பு. அரைக்கீரை, கத்தரிப்பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு இவைகளைக் கூட்டி புளி, மோர், பால் இவைகளை நீக்கவும். பிறகு மறுபத்தியம் ஏழுநாள் பிடிக்கவும். அப்பொழுது சங்கிலை, வெள்ளாட்டுப்பால் இவைகளைக் கூட்ட வேண்டியதில்லை. தேனில் ½ பணவிடை மருந்தைக் கலந்து இந்த மறுபத்தியம் ஏழு நாட்களும் சாப்பிடவும். பிறகு 15-ம் தினத்தன்று புளியைக் கூட்டவும். ஓமத்தையரைத்து ஆரோக்கிய ஸ்நானம் செய்யவும். பிறகு இரண்டு நாள் கழித்து முக்கூட்டெண்ணெயைத் (எள்ளெண்ணெய், ஆமணக்கு எண்ணெய், பசுவின் நெய்) தேய்த்துத் தலை முழுகவும். இவ்விதம் செய்ய வியாதி பூரண குணமடையும். ஒருக்கால் சொல்ப வியாதி இருப்பின் இச்சாபத்தியத்துடன் வேளை ஒன்றுக்கு ½ பணவெடை சிந்தூரம் வீதம் இருவேளையும் 1 மாதம் வரையில் சாப்பிட குணமடையும். வீரிய விருத்தி, இரத்தவிருத்தி உண்டாகும். வெள்ளாட்டுப் பால் கிடைக்காவிடில் ½ பணவெடை சிந்தூரத்தை மட்டிலும் தினம் இரு வேளையும் 7 நாட்கள் உட்கொண்டு வெந்நீர் சாதத்தை பத்தியத்திற்கு சாப்பிடவும். மிளகுடன் கரிவேப்பிலையைத் தூள் செய்து வெந்நீர் சாதத்துடன் தொட்டுக்கொள்ளவும். மறு பத்திய தினங்களிலும் மருந்து சாப்பிடவும். வியாதி பிரபலமாக (கடுமையாக) இருந்தால் 7 நாள் உப்பில்லாப் பத்தியமிருக்கவும். உடம்பில் சக்தியில்லாவிடில் 5 அல்லது 7 நாட்கள் மருந்தைச் சாப்பிட்டு உப்பில்லாத பத்தியமாக இருந்து பிறகு எவ்வளவு நாட்களுக்குப் பத்தியமிருக்க முடியுமோ அவ்வளவு நாட்களும் பத்தியமிருக்கவும். பிறகு பத்தியமில்லாமலே மருந்தை அதிக நாட்களுக்கு (தீர்க்கமாய்) உட்கொண்டுவர மேற்கூறிய பிணிகள் தீர்ந்து வாயில் உருசியுமுண்டாகி, இரத்த விருத்தியுமேற்படும். பாண்டு, விஷபாண்டு இவைகளுக்கு உடம்பில் வீக்கங்காணுமுன் தினம் ஒரு பணவிடை மருந்தைத் தேனுடன் கலந்து ஒரு

மண்டலம் வரை சாப்பிட நோய் அதிகரிக்காமல் சீக்கிரம் தீரும்.

3) கிராணி நோய்க்கு

| | |
|---|---|
| சிறுநாகப்பூ | உலர்ந்த வில்வக்காய் |
| ஜாதிக்காய் | கிராம்பு |
| திப்பிலி | சீரகம் |
| கசகசா | |

இவ்வேழையும் வகைக்கு ½ வராகனெடை வீதமெடுத்து பொன்னிறமாக வறுத்துச் சூரணித்து இதில் சிறிது எடுத்து ½ பணவிடை சிந்தூரத்தையுங் கலந்து தேனில் மத்தித்து வேளை ஒன்றுக்கு இவ்விதமாக தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொள்ள 6 வகை கிராணியும் தீரும்.

எக்காரணத்தாலும் அடிக்கடி நோய்வாய்ப்படுதல், கைகால்களில் பலமின்மை, சரீரத்தில் சக்தியின்மை முதலானதற்கு வேளை ஒன்றுக்கு இச்சிந்தூரத்தில் ½ பணவிடை வீதம் எடுத்து தேனில் கலந்து தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொள்ள உடம்பில் இரத்தம் ஊறி பலமேற்பட்டு மேற்கூறிய வியாதிகள் தீரும்.

அக்கினிமந்தம், பித்தகுன்மம், பித்தவாயு இவைகளுக்கு அப்பளாக்காரம் 9 தோலாவை எடுத்து ஒரு வறட்டியின் பேரில் வைத்து குக்குட புடத்தில் எரித்து பிறகு எடுத்து பொடித்து இதில் ¼ வராகனெடைத் தூளை எடுத்து ½ பணவிடை மருந்துடன் சேர்த்து ஒரு பீங்கான் பாத்திரத்தில் வைத்து ஒரு எலுமிச்சம்பழச் சாற்றை அதன் மேலூற்றி நன்முகக் கலந்து வேளை ஒன்றுக்கு இவ்விதமாக தினம் இருவேளையும் அரை மண்டலம் வரை உட்கொள்ள மேற்சொன்ன வியாதிகள் தீரும். இம்மருந்து மிகவும் அபூர்வமானதும் கைகண்டதுமாம்.

## 435. பெரும்பாடுக்கு பஞ்சாமிர்த சிந்தூரம்

| | |
|---|---|
| ஊசிக்காந்தம் 8 பலம் | இரசம் 2 பலம் |
| கருவங்கம் 2 பலம் | நாகம் 2 பலம் |
| வெள்ளங்கம் 2 பலம் | |

இவ்வைந்தில் கருவங்கம், வெள்வங்கம், நாகம் இவைகளை ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு உருக்கி ஆறும் தருணத்தில் அதில் பாதரசத்தையுங் கலந்து ஆறிய பிறகு இத்துடன் காந்தத்தையும் சேர்த்து கல்வத்திலிட்டு கையாந்தகரைச் சாற்றில் 12 ஜாமம் அரைத்து, பிறகும் 12 ஜாமம் கற்றாழைச்சாற்றில் அவ்வாறே அரைத்து வட்டமாக ஒரு வில்லைத்தட்டி சிந்தூரம் செய்யும் ஒரு சட்டியிலிட்டு நன்றாக உலர்த்தி அதன் மேலொரு சட்டியை மூடி சந்து பதிய வைத்துச் சீலமண் செய்து 24 ஜாமம் கமலாக்கினித் தீயால் எரித்து தானாக ஆறிய பின்பு எடுத்துப் பொடித்து சீசாவில் அடைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :-** இம்மருந்தில் வேளைக்கு ½ பணவிடை வீதம் எடுத்து நெய் அல்லது வெண்ணெயில் தினம் இருவேளையும் 21 நாட்கள் உட்கொள்ளப் பெரும்பாடு தீரும்.

| | |
|---|---|
| சீரகம் | கற்கண்டு |

இவைகளைப் பொடித்து அதில் ½ வராகனெடை தூள், ½ வராகனெடை வெண்ணெய் இவைகளுடன் ½ பணவிடை மருந்தையுங் கலந்து தினம் இருவேளையுமாக ½ மண்டலம் வரை சாப்பிட மூத்திரயெரிவு தீரும்.

பெருந்துத்தியிலையுடன் ½ வராகனெடை சீரகத்தைக் கூட்டிப் பெரிய கழற்சிக்காயளவு எடுத்து ½ வராகனெடை சிந்தூரத்தையுங் கலந்து தினம் இரண்டு வேளையும் ½ மண்டலமுட்கொள்ள வெண்மேகம் தீரும்.

கீழாநெல்லியின் வேரைப் பசுவின்பால் விட்டுஅரைத்து பெரிய கழற்சிக்காயளவு உருண்டை செய்து அதில் $\frac{1}{2}$ பண விடை சிந்தூரத்தைக் கலந்து சாப்பிட்டு மேலும் $\frac{1}{4}$ சேர் பசுவின் பாலைக் குடிக்கவும். இவ்விதம் $\frac{1}{2}$ மண்டலம் உட்கொள்ள மஞ்சள் நிறமுடைய பித்தமேகம், வெட்டை முதலியவைகள் தீரும்.

காலையில் காய்ச்சாத பாலையும் மாலையில் காய்ச்சிய பாலையும் குடிக்கவும். நெய் அல்லது தேனில் இச்சா பத்தியத்துடன் மருந்தைத் தினம் இரு வேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள இரத்த விருத்தியாகும்.

இம்மருந்தை தகுந்த அனுபானத்தில் எவ்விதமான நோய்க்கும் இச்சாபத்தியத்துடன் கொடுக்கலாம். கைகண்டது.

## 436. கிட்டான் சிந்தூரம்

வெங்கலகிட்டம் 1 சேரைக் கல்வத்திலிட்டு குப்பை மேனியின் சாற்றில் 40 ஜாமம் அரைத்து உலரும் தருவாயில் 50 வில்லைகளாகச் செய்து நன்றாக உலர்த்தி பெரியதொரு அகலில் வைத்து மேலொரு அகலைமூடி சீலைமண் செய்து $1\frac{1}{2}$ கஜம் உயரம். 1 கஜம் அகல, நீளமாக ஒரு பள்ளத்தை வெட்டி அதில் பாதிபாகம் காட்டெருவை நிரப்பி நடுவில் அகலை வைத்து மேலும் காட்டெருவால் மூடி தீயை மூட்டி புடம் நன்றாக எரிய ஆரம்பித்ததும் ஒருகூடை பெருஉமியை அதன் மேல் கொட்டவும். பிறகு புடம் எரிந்து தானாகவே ஆறிய பின்பு மருந்தை எடுத்து குப்பைமேனிச்சாறு விட்டு 40 ஜாமம் அரைத்து மறுபடியும் முன்பு கூறியபடி புடம் போடவும். இவ்விதமாக மொத்தம் 3 புடங்களில் எரிக்க உயர்ந்த சிந்தூரமாகும்.

வேளைக்கு $\frac{1}{2}$ பணவிடை வீதம் சிந்தூரத்தை எடுத்து வெண்ணெயுடன் கலந்து தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரை சாப்பிட மூலவியாதி தீரும்.

இதை அஸ்வகந்தி இரசாயனத்துடனும் மேற்கூறிய படி உண்ண க்ஷய ரோகம் ஒழியும்.

## 437. வெங்கலச் சிந்தூரம்

வெங்கல பற்பம் ஒருபாகம். அதற்கு $\frac{1}{2}$ பாகம் இலிங்கம். இலிங்கத்திற்கு $\frac{1}{2}$ பாகம் கந்தகம், கந்தகத்திற்கு $\frac{1}{2}$ பாகம் பாதரசம். இவைகளைக் கல்வத்திலிட்டு ஆலம்பால், செருப்படிச்சாறு, அரசம்பட்டையின் கஷாயம், கருவேலம் பட்டையின் கஷாயம், பலாசம் பட்டையின் கஷாயம், பூனைக்காலி வேரின் கஷாயம், எலுமிச்சம் பழச்சாறு, இவைகளைத் தனித்தனியே நாள் ஒன்றுக்கு ஒரு சாறு விதம் விட்டு நைவாயரைத்து கஜபுடத்தில் வைத்து எரிக்கவும் இவ்விதம் ஏழு கஜபுடங்களில் மேற்கூறியபடி எரிக்க சிந்தூரமாகும். அல்லது அரைத்த விழுதை ஒரு குகையிலிட்டு சீலைமண் செய்து கொல்லனுடைய உலையில்வைத்து இரு துருத்திகளை உபயோகித்து ஊதி எடுக்க சூர்யோதயம் போல் பிரகாசமான சிந்தூரமாகும்.

இது சகல வியாதிகளையும் வெல்லும்.

## 438. காந்த சிந்தூரம்

காந்த பற்பம் 1 பாகத்திற்கு $\frac{1}{2}$ பாகம் இலிங்கத்தைக் கூட்டி ஆகாசத்தாமரையின் கஷாயத்தில் அல்லது கண்டங்கத்திரி வேரின் கஷாயத்தில் 3 நாளரைத்துச் செம்மண் குகையில் போட்டு வாயை மூடி சீலைமண் செய்து மூன்று கஜபுடங்கள் போட்டு மூன்று தரம் எரிக்க சூர்யோதயம் போன்று பிரகாசமான சிந்தூரமாகும்.

## 439. கருவங்கச் சிந்தூரம்

கருவங்கப்பற்பத்தை ஆடாதோடைச் சாற்றுடன் கலந்து கல்வத்திலிட்டு 2 ஜாமம் அரைத்து வில்லையாகத் தட்டி, பிறகு நன்ருக உலரவைத்து 20 வறட்டியில் புடம்

போட்டு எரிக்கவும். இவ்விதம் ஓமக் கஷாயத்தில் அரைத்து 10 புடமும், கொட்டைக்கரந்தையின் சாற்றிலரைத்து 10 புடமும். வெற்றிலேச்சாற்றிலரைத்து 10 கஜபுடமும். கொடுத்து எரித்து எடுக்க உயர்ந்த சிந்தூரமாகும்.

### 440. வெள்வங்கச் சிந்தூரம்

வெள்வங்கபற்பம் முன்பு கருவங்கச் சிந்தூரத்திற்குச் சொல்லி இருக்கும் முறைப்படியே செய்யவும். அல்லது வெள்வங்கபற்பத்தை 2 ஜாமம் எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்து வில்லே தட்டி உலர்த்திக்கொண்டு கஜபுடம் போட்டு எரிக்க சிந்தூரமாகும்.

### 441. தாமிர சிந்தூரம்

தாமிர பற்பத்தை திரிபலா (கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி) கஷாயத்திலரைத்து வில்லேகளாகத் தட்டி உலர்த்திக்கொண்டு புடம் போடவும். இவ்விதம் ஏழு தடவை அரைத்து 7புடம் போடவும். பிறகு செருப்படியின் சாற்றிலரைத்து 7 புடம், எருக்கம் பால் விட்டு அரைத்து 7 புடம், ஆலம்பாலில் அரைத்து 7 புடம், வரலுச்சுண்டி இலேயின் கஷாயத்தில் அரைத்து 7புடம், அரசம்பட்டையின் கஷாயத்தில் 7 புடம், இச்சிப் பட்டையின் சாற்றிலரைத்து 7 புடம். இவ்விதமாக 49 புடங்களில் எரித்து சிந்தூர மாக்கிக் கொள்ளவும்.

**அனுபானம்:** இச்சிந்தூரத்தில் ஒரு பணவிடை எடுத்து தகுந்த அனுபானத்துடன் கொடுக்க வாந்தி, விக்கல், தாகம் முதலானது தீரும்.

### 442. தங்க சிந்தூரம்

தங்கபற்பத்திற்குச் சமயெடை ஜாதிலிங்கத்தைச் சேர்த்து எருக்கம்பால் விட்டு 4 ஜாமம் அரைத்துக் கொள்ளவும், பிறகு அரசம்பட்டைச் சாற்றில் 4 நாட்கள், பூனைக்

காலிவேரின் சாற்றில் 4 நாட்கள் இவ்விதமாக 8 நாட்கள் ரைத்து வில்லை தட்டி உலர்த்தி ஒரு அகலில் வைத்துமேலும் ஓர் அகலை மூடிச் சீலைமண் செய்து காட்டெருவில் புடம் போட்டு எரிக்கவும். இவ்விதமாக 5 புடங்களில் எரிக்க சிந்தூரமாகும்.

**அனுபானம் :—**

இதில் 1 பணவிடை தகுந்த அனுபானத்துடன் கொடுக்க சகல வியாதிகளும் தீரும்.

## 443. வெள்ளிச் சிந்தூரம்

வெள்ளி பற்பத்திற்கு சமயெடை லிங்கத்தைச் சேர்த்து

கருவேலம் பட்டையின் கஷாயம்

எருக்கம்பால்

சிறுசெருப்படிச்சாறு

ஆலம்பால்

வெள்வேலம்பட்டையின் கஷாயம்

கருப்பஞ்சாறு

இவ்வகையான சாறுகளில் ஒவ்வொரு நாள் ஒவ்வொரு சாற்றில் தனித்தனியாக அரைத்து வில்லை தட்டி உலர்த்திக் கொண்டு அகலில் வைத்துச் சீலைமண்செய்து உலர்த்திப் பிறகு கஜபுடத்தில் வைத்து எரிக்கவும். இவ்விதமாக ஒவ்வொரு சாற்றிலும் எவ்வேழு தடவை அரைத்து எவ்வேழு புடம் போட்டு எரித்துச் சிந்தூரமாக்கிக் கொள்ளவும்.

**அனுபானம் :-** இதில் 1 பணவிடை மருந்தை தக்க அனுபானத்தில் உட்கொள்ள க்ஷயம் முதலான சகல நோய்களும் தீரும்.

## 444. அப்பிரகச் சிந்தூரம்

அப்பிரகத்தை நவநீதமாகச் செய்து கொண்டு (வெண்ணெயாக்கிக் கொண்டு), அதை பசுவின் நெய்யில் ஒருநாள் அரைத்து ஒரு கஜ புடம் போட்டு எரிக்கவும். இவ்விதம் நெய்யிலரைத்து 3 கஜபுடம், சொள்ளுக்கட்டியில் (கொள்ளு ரசம்) அரைத்து 3 புடம், வெள்ளாட்டுப் பாலிலரைத்து 3 புடம், எருக்கம் பால் விட்டு அரைத்து 3 புடம், ஆலம் பாலிலரைத்து 3 புடம், ஆக 15 புடங்கள் போட்டு எரித்தபின்

| | |
|---|---|
| காட்டுத்துளசி | கற்றாழைச்சாறு |
| கல்யாணைப்பூசணிச்சாறு | அரசம்பட்டைச்சாறு |
| பொன்னாங்காணிச்சாறு | வெள்ளைச்சாரணையின்சாறு |
| தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு | நிலப்பனங்கிழங்கின்சாறு |
| | கொட்டைக்கரந்தையின்சாறு |
| நொச்சியின் சாறு | ஆடாதோடைச் சாறு |
| அமுக்கராக்கிழங்கின்சாறு | சிந்தில்கொடியின்சாறு |
| விழுதியிலைச்சாறு | புரசம்பட்டையின்சாறு |
| முருங்கையின்சாறு | |

இவ்விதம் 16 வகைச்சாறுகளில் தனித்தனியே அரைத்து 16 புடம் போட்டு எரிக்கவும்.

**அனுபானம்:-** இம்மருந்தைத் தக்க அனுபானத்தில் சாப்பிட வாந்தி, அரோசகம், சுரம், நீரிழிவு, மூலவியாதி முதலியவைகள் தீரும்.

## 445. ஆயிரம் புடம் பூர்ணப்பிரகச் சிந்தூரம்

கிருஷ்ணப்பிரகத்தின் வெண்ணெய் 5 சேரை ஒவ்வொரு சேராகத் தனித்தனியே 5 கல்வத்தில் போட்டு அத்துடன் ஒவ்வொரு சேர் நெய்யையுங் கூட்டி ஐந்து பேர்களை விட்டு கைவிடாமல் 4 ஜாமமரைத்துப் பிறகு அதை ஐந்து வில்லைகளாகத் தட்டி ஐந்து அகல்களில் வைத்து மேலும் ஒவ்வொரு அகல்களை மூடி சந்தில்லாமல் சீலைமண்செய்து

உலர்த்திக்கொள்ளவும். பிறகு குழிவெட்டி காட்டெருமுட்டைகளை நிரப்பி அதனடுவே ஐந்து அகல்களையும் வைத்து எரித்து தானாக ஆறிய பின்பு உள்ளிருக்கும் அகல்களை வெளியே எடுத்து மருந்துகளை ஒரு கல்வத்திலிட்டரைத்து. இவ்விதம் அரைத்த மருந்தை 5 சமபாகங்களாகப் பிரித்து 5 கல்வங்களில் போட்டு மேலே சொல்லியபடி நெய்விட்டு அரைத்து மறுபடியும் புடம் போடவும்.

இவ்விதமே நெய்யிலரைத்து 30 புடங்கள், கொள்ளுக்கட்டில் அரைத்து அவ்விதமே 30 புடங்கள்; வெள்ளாட்டுப் பாலிலரைத்து அவ்விதமே 30 புடங்கள்; எருக்கம்பாலில் அரைத்து அவ்விதமே 30 புடங்கள்; ஆலம்பாலில் அரைத்து 30 புடங்கள்; காட்டுத் துளசிச் சாற்றிலரைத்து 50 புடங்கள்; கற்றாழைச்சாற்றிலரைத்து 50 புடங்கள்.

கல்யாணப்பூசணியின்சாறு
அரசம்பட்டைச்சாறு
பொன்னாங்காணிச்சாறு
வெள்ளைச்சாறணையின்சாறு
தண்ணீர்விட்டான்கிழங்கின்சாறு
நிலப்பனங்கிழங்கின்சாறு
கொட்டைக்கரந்தை இலையின்சாறு
நொச்சியிலைச்சாறு
ஆடாதோடை இலைச்சாறு
அமுக்கிராக்கிழங்கின்சாறு
சீந்தில்தண்டின்சாறு
விழுதியிலை(?)ச்சாறு
சங்குஇலைச்சாறு
புரசம்பட்டைச்சாறு
முருங்கைவேர்ப்பட்டைச்சாறு

இந்த 17 வகைச் சாற்றிலரைத்து தனித்தனியே ஒவ்வொரு சாற்றிலும் 50 புடங்கள் வீதம் போட மொத்தம் 1000 புடங்களாகும். இந்த 1000 புடங்கள் போட்டபின் மருந்து பாலசூரியனைப் போன்று செந்நிறத்துடன் இருக்கும். இதற்கு ஸகஸ்ரபுட பூர்ணப்ரகம் என்று பெயர்.

**குறிப்பு :** அப்பிரக சிந்தூரத்தை அரைக்கும்பொழுது 4 ஜாம காலம் அரைக்கவும். புடங்கள் 1000 ஆனபின் 5 பாகங்களையும் ஒன்றுகூட்டி அரைக்க வேண்டும். அரைத்த மருந்தை ஒரு தங்க டப்பியிலாவது, ஸ்படிகத்தினாலான சீசாவிலாவது எடுத்து வைக்கவும். வேளை ஒன்றுக்கு 1 பண விடை மருந்தை சீந்தில் சர்க்கரையுடன் கலந்து தினம் இரு வேளையும் ஒரு மண்டலம் வரையில் சாப்பிட பிரமேகம், பிரமியம் முதலிய 21 மேகங்களும், 21 மது மேகங்களும், பித்த நோய், அஸ்திசுரம், தாதுநஷ்டம், உஷ்ணரோகம், பலங்குன்றச் செய்யும் சுரவகை முதலான எல்லாவித நோய் களும் கதிரவனைக்கண்ட காரிருள் போன்று மறைந்துவிடும்.

## 446. இரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்தி செய்யப்பட்ட ரசம் | 1 சேர் |
| சுத்தி செய்யப்பட்ட கந்தகம் | 1 சேர் |

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு கருந்துளசிச் சாற்றை விட்டு இரண்டு நாள் அரைத்து உலரவைத்து காசிக்குப்பி யில் அடைத்து குப்பியின் வாயை மூடி 7 சீலைமண் செய்து ஓர் பானையின் அடியில் ஆறுவிரல் உயரத்திற்கு மணலைப் போட்டு நடுவே குப்பியை வைத்து அதன்மீது 6 விரல் உய ரத்திற்கு மணலைப்போட்ட பின்பு அப்பானையை அடுப்பின் மீதேற்றி முதல்நாள் தீபாக்கினியும், இரண்டாம் நாள் கமலாக்கினியும், மூன்றும்நாள் காடாக்கினியுமாக அடுப்பை எரித்து நான்காம்நாள் பானை ஆறிய பின்பு குப்பியை வெளியே எடுத்து உடைத்து மருந்தை எடுத்துக்கொள்ள வும். மருந்தானது மாதுளம் பூவைப்போன்று சிவந்திருக் கும்.

இம்மருந்தில் ஒரு பணவிடையைத் தக்க அனுபானத் துடன் கொடுக்க சன்னி, சுரம் முதலிய பலவித நோய்கள் தீரும்.

## 447. இரசசிந்தூரம்

| | |
|---|---|
| கந்தகம் | தாளகம் |
| மனோசிலை | பாதரசம் |
| காந்தம் | வத்஻ஸநாபி |

இந்த ஆறு வகைகளையும் சமபாகங்கொண்டு சுத்திசெய்து கல்வத்திலிட்டு சிறுசெருப்படிச் சாற்றைவிட்டு மூன்றுநாள் அரைக்கவும். பிறகு ஓர் காசிக்குப்பியில் அரைத்த மருந்தை நிரப்பி அதன்மேல் சிறிது செருப்படிஇலைச்சாறு ஊற்றி அதன்மேல் நிலத்தாமரை வேரின் சூரணத்தைப் போட்டு குப்பியின் வாயைமூடி 7 சீலைமண் செய்து ஓர் பானையில் கொஞ்சம் மணலைப் போட்டு நடுவே குப்பியை வைத்து மறுபடியும் அதன்மீது மணலைப் போட்டு பானையை அடுப்பின் மீதேற்றி 3 நாள் வரையில் விடாமல் அடுப்பை எரிக்கவும். நான்காம் நாள் பானை ஆறியபின்பு குப்பியை வெளியே எடுத்து உடைத்து மருந்தை மட்டில் எடுத்துக் கொள்ளவும். அம்மருந்து மாதுளம்பூவைப் போன்று சிவந்திருக்கும்.

**அனுபானம் :—** இந்த சிந்தூரத்தில் ஒரு பணவிடையைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க நரையயிர், சரீரத்தின் மேல்தோல் சுருங்குதல், மூப்பு, மூடம், குஷ்டம், திக்குவாய், வாய்ப்புண், பிளவை, பைசாசபீடை, மயக்கம், முழங்கால் வலி, கிரந்திநோய், இதர விரணம் முதலியன தீரும். மரணத்தைக் கொடுக்கக்கூடிய நோய்களுக்கு சிறந்த ஔடதம்.

## 448. பாலார்க ரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்திசெய்யப்பட்ட இரசம் | 1 பலம் |
| சுத்திசெய்யப்பட்ட கந்தகம் | 2 பலம் |

இவையிரண்டையும் கல்வத்திலிட்டு கருந்துளசிச் சாற்றில் 3 நாள் வரை தொடர்ந்து அரைத்து பிறகு நிழலில்உலர்த்தி மருந்தைக் காசிக்குப்பியில் நிரப்பி குப்பியின் வாயை

மூடவும், பின்னர் 7 சீலைமண் செய்து ஓர் சட்டியின் அடியில் 3 விரல் உயரத்திற்கு மணலைப்போட்டு சட்டியின் நடுவே மருந்துடன் கூடிய குப்பியை வைத்து சட்டியை அடுப் பேற்றி ஓர் நாள் தீபாக்கினியும், மறுநாள் கமலாக்கினியும் மூன்றும்நாள் காடாக்கினியுமாக அடுப்பை எரித்து ஆறிய பின் குப்பியை உடைத்து மருந்தை வெளியே எடுக்க மருந்தானது பாலசூரியனைப் போன்று சிவந்திருக்கும்.

மருந்து உட்கொள்ளவேண்டிய அளவு ஓர் பணவிடை.

பாலார்க்க ரச சிந்தூரத்தின் அனுபானமும் தீரும் நோயும் :-

நெற்பொரிமாவுடன் மருந்தை 10 நாள் உட்கொண்டால் வாந்தி, சுரம் பறந்துபோம். சர்க்கரையுடன் கலந்து 10 நாள் வரை தினம் இருவேளையும் உட்கொண்டால் சுரம் தீரும். திப்பிலிச் சூரணத்துடன் மருந்தைக் கலந்து தினம் இரு வேளையும் சாப்பிட சீதசுரம் குணமாகும். ஜாதிக்காய் சூரணத்துடன் கலந்துண்ண சுரம், அதிசாரம் முதலியவை தீரும்.

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் இம்மூன்றையும் சம அளவாகக்கொண்டு செய்த சூரணத்துடன் கலந்து மருந்தை உண்ண அஜீர்ணசுரம் குணமாகும். அதிவிடயத்தின் சூரணத்துடன் கலந்து உட்கொள்ள கிரஹணி எனும் நோய் மறையும்.

பழந்துணிகளை எரித்து உண்டான பற்பத்தில் மருந்தைக் கலந்து 10 நாட்கள் உண்ண அதிசாரம் ரத்த பிரமியம் தீரும். சித்திரமூல கஷாயத்தில் கலந்து 10 நாள் உட்கொண்டால் எட்டுவித குன்மநோய் மறையும். தசமூல கஷாயத்திலுண்ண சன்னிபாத தோஷம், நசியும். பஞ்சமூல கஷாயத்தில் 5 நாட்கள் உண்ண தோஷமுள்ள கொடிய சுரம் குணமாகும். சுக்கு, மல்லி இவையிரண்டின் கஷாயத்திலுண்ண அரோசிகம், சுரம் தீரும். அமுக்கராக்

கிழங்கின் சாற்றில் தினம் இருவேளை இருபது நாட்கள் வரை உட்கொள்ள கர்ப்ப ஊறலாலான பவுத்திர நோய் குணமாகும்.

பெருமரப்பட்டைச் சாற்றில் கலந்து இருபது நாட்கள் உட்கொள்ள மஹோதரம் குணமாகும். கையாந்தகரை, மிளகு இலையிரண்டையும் அரைத்து அதில் மருந்தைக் கலந்துண்ண 5 விதமான பாண்டு ரோகம் நசித்துப்போம். துளசியின் சாற்றுடன் கலந்து 20 நாட்கள் உண்ண விக்கல், மூலசுரமும், கொடிப்பாகலிலையின் சாற்றுடன் கலந்து 10 நாட்கள் வரை மருந்துண்ண மூலரோகமும், பிரண்டைச் சாற்றில் பணவிடை மருந்தைக்கலந்து 10 நாட்கள் உண்ண கிருமி, குஷ்டம் முதலியனவும் சூரியனைக்கண்ட பனிபோல் பறந்துபோம். மருந்தை உபயோகிக்கையில் அந்தந்த நோய்களுக்கு ஏற்ற அனுபானத்துடன் கலந்து உண்ணுதல் மெத்த அவசியம்.

## 449. குருரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்தி செய்த பாதரசம் | 20 பலம் |
| சுத்திசெய்த கந்தகம் | 2 பலம் |
| வெள்ளைச்சாறணை வேர் | 20 பலம் |

இம்மூன்றையுங் கல்வத்திலிட்டு மெல்லியதாய் அரைத்து காசிக்குப்பியில் நிறப்பி குப்பியின் வாயை அரைத்த மணலால் மூடிச் சீலைமண் செய்து உலர வைத்து வாலுகா யந்திரத்தில் 4 விரல்கள் உயரம் மணலை நிறப்பி அதன் நடுவில் காசிக்குப்பியை வைத்து மேலும் மணலால் மூடி அடுப்பின் மேலேற்றி 12 ஜாமம் இளந்தீயிட்டு எரிக்கவும். ஆறிய பின்பு குப்பியை உடைத்துப் பார்த்தால் சிந்தூரமாயிருக்கும்.

இச்சிந்தூரத்துடன் ½ பாகம் இரச சிந்தூரத்தையுங் கூட்டி நன்றாக அரைத்துக் கொள்ளவும். ஒரு நெல்லிடை தகுந்த அனுபானத்துடன் கொடுக்கவும். தவிர வெல்லம்,

தேன், சர்க்கரை முதலான அனுபானத்திலுங் கொடுக்க எட்டுவித குன்மம், கிரந்தி, அரையாப்புக்கட்டி, மேக விரணங்கள் முதலான பிணிகள் தீரும்.

## 450. நவச்சார ரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | 8 பலம் |
| சுத்திசெய்த தங்கம் | 4 பலம் |
| சுத்திசெய்த மனோசிலை | 7 பலம் |
| சுத்திசெய்த தாளகம் | 6 பலம் |
| சுத்திசெய்த கந்தகம் | 12 பலம் |

இவைகளை ஒன்றுகூட்டிக் கல்வத்திலிட்டு மாதுளம்பூவின் சாற்றில் 3 நாட்களரைத்து உலரவைத்துக் காசிக்குப்பியில் அடைத்து குப்பியைச் சீலைமண் செய்து காயவைத்து ஒரு சட்டியில் 4 விரல்கள் உயரம் மணலைப்போட்டு நடுவில் குப்பியை வைத்து மேலும் மணலைப் போட்டு நன்றாக மூடி அடுப்பின் மேலேற்றி இரவு பகலாய் 3 நாட்கள் கமலாக்கினித் தீயால் எரிக்கவும். ஆறிய பின்பு எடுத்துப் பார்க்க மாதுளம் பூவைவிட சிவந்து பிரகாசமாயிருக்கும்.

இச்சிந்தூரத்தில் 1 பணவிடை தக்க அனுபானத்தில் 10 நாட்கள் உட்கொள்ள சுவாசம், க்ஷயம், இருமல், குன்மம், சுரம் முதலான நோய்கள் தீரும்.

கைகண்ட மருந்து

## 451. ஹம்ஸப்ரயோக ரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | 10 பலம் |
| சுத்திசெய்த கந்தகம் | 10 பலம் |

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு சிறுசெருப்படிச் சாற்றில் 8 ஜாமம் அரைத்து, அம்மான் பச்சையரிசிப் பழங்கள் அளவு உருண்டைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி காசிக் குப்பியில் அடைத்து, குப்பியின் வாயை மூடிச் சீலைமண்

செய்து, ஒரு சட்டியை அடுப்பின் மேலேற்றி அதில் 4 விரல் உயரம் மணலைக் கொட்டி நன்றாக மூடி 12 சாமம் கமலாக்கினித் தீயால் எரிக்கவும். தானாகவே ஆறிய பின்பு எடுத்துக் குப்பியையுடைத்துச் சிந்தூரத்தைப் பொடித்து வைத்துக் கொள்ளவும்.

இந்த சிந்தூரத்திற்கு 6 பாகம் நாபி, நாபிக்குச் சம எடை மிளகு இவைகளை ஒன்றுகூட்டிப் பொடிசெய்து சிந்தூரத்துடன் கலந்து மூங்கில் குழாயில் அடைத்து வைத்துக் கொண்டு ஒரு குன்றிமணியெடை சிந்தூரத்தைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க சன்னிபாதம், விஷசுரம், சூலை, விரணம் முதலானவைகள் தீரும். கைகண்ட மருந்து.

## 452. பஞ்சாக்கினி சிந்தூரம்

மூத்திரக்கிரிச்சரம், ஸ்திரீகள் நியமித்த காலங்களில் விலக்கமாகாமலிருத்தல், அக்கினிமந்தம் முதலான நோய்களுக்கு மருந்து.

உவர்மண்ணில் உண்டாகும் உப்புத்திராவகம் $\frac{1}{2}$ வராகனெடை, நவச்சாரம் 1 வராகனெடை, இரசம் 2 வராகனெடை, வெடியுப்பு 6 வராகனெடை, நெல்லிக்காய் கந்தகம் 8 வராகனெடை, ஊசிக்காந்தம் 12 வராகனெடை, இரும்புத்தூள் 14 வராகனெடை. இவைகள் யாவற்றையுங் கல்வத்திலிட்டு 2 சேர் எருக்கம்பால் விட்டு ஜாமமரைத்து, பிறகு கையாந்தகரைச் சாற்றில் 4 ஜாமமரைத்து வில்லை தட்டி ஒரு சட்டியின் நடுவில் வைத்து உலரவைத்துப் பிறகு அந்தச் சட்டியின் பேரில் மற்றொரு சட்டியை மூடிச் சீலை மண் செய்து நன்றாக உலர வைத்து அடுப்பின் மேலேற்றி காட்டுத் தீயால் 10 ஜாமம்வரை எரித்து தானாகவே ஆறிய பின்பு குப்பியையுடைத்து மருந்தைப் பொடித்துச் சீசாவில் அடைத்து வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும்:**

இந்த மருந்தில் வேளை ஒன்றிற்கு $\frac{1}{2}$ பணவிடை வீதம் எடுத்து தேனில் கலந்து கொடுக்கவும்.

| | |
|---|---|
| மிளகு | 1 வராகனெடை |
| அரத்தை | 1 வராகனெடை |
| நாய்க்கடுகு | 1 வராகனெடை |

இவைகளை இலேசாக வறுத்து ஒன்றிரண்டாக இடித்து 2 சேர் தண்ணீரில் போட்டு $\frac{1}{4}$ சேர் கஷாயமாகக் காய்ச்சித் தேனில் மருந்தை உட்கொண்ட உடன் இக்கஷாயத்தைக் குடிக்கவும். இவ்விதம் தினம் இருவேளையுமாகப் பத்து நாட்களுக்கு உட்கொள்ள மூத்திரக் கிரிச்சரம், நீரடைப்பு, மூத்திர ஸ்தானத்தில் புருஷர்களுக்கோ அல்லது ஸ்திரீகளுக்கோ உண்டான கல்லடைப்பு முதலான வியாதிகள் தீரும்.

கல்லடைப்பு வியாதியில் கல்விழுவது பிரத்தியக்ஷமாகக் கண்ணுக்குப் புலனாகும். தவிர மேற்கூறிய அனுபானத்தில் இச்சிந்தூரத்தைச் சாப்பிட எவ்விதமான கடின மூத்திர ரோகங்களும் தீரும். கைகண்ட மருந்து.

| | |
|---|---|
| மூங்கில் சிவல் | மூங்கிலிலை |
| தராய்வேர் | சீரகம் |
| கண்டங்கத்திரிவேர் | |

இவைகள் வகைக்கு வீதமெடுத்துக் கஷாயம் செய்யவும். இதை ஒரு வேளைக்குச் சாப்பிடப் போதுமானது. மருந்து சாப்பிட்ட பின்பு கஷாயத்தைச் சாப்பிடவும். மருந்தைத் தேனில் உட்கொள்ளவும். இவ்விதம் தினம் இரு வேளையுமாக ஒரு மண்டலம் உட்கொள்ள வாயுவினால் சரீரம் பெருத்து சுரோணிதம் உள்ளிழுத்துக்கொண்டு உள்ள ஸ்திரீகளுக்கு இம்மருந்தைக் கொடுத்தால் மாதமொருமுறை நியமித்த காலங்களில் விலக்கமாவார்கள். வாயுவால் வழக்கம் போல் மாதவிடாய் காணாது சிறிதளவு காணுமாயின் வீட்டிற்கு விலக்காகுங் காலத்திற்கு இரண்டு மூன்று நாள்

முன்னதாகவே இம்மருந்தை ஆரம்பித்துத் தொடர்ந்து 5 நாட்களுக்குக் கொடுக்கவும். இவ்விதம் நான்கைந்து முறை இம்மருந்தைக் கொடுக்கச் சூதக நோய்கள் பறந்துபோம்.

இரத்த விருத்தியில்லாமல் மெலிந்து பலஹீனமான சரீரமுடைய ஸ்திரீகளுக்கு வழக்கம்போல் மாதவிடாய் காணுதிருக்குமாயின் இம்மருந்தைக் கொடுக்கலாகாது.

**பரிமாணம்:** திப்பிலி, மிளகு இவ்விரண்டையும் நன்கு வறுத்துப் பொடித்து அதில் ஒரு சிட்டிகை சூரணத்தையும் ½ பணவிடை மருந்தையும் தேனில் கலந்து உட்கொள்ளவும். மருந்துண்ட பிறகு 1½ வராகனெடை சுக்குக் கஷாயத்தையும் உட்கொள்ள வேண்டும்.

இவ்விதமாக தினம் இருவேளையும் ஒரு மண்டலம் வரையில் உட்கொள்ள அக்கினிமந்தம் தீரும். கைகண்டது.

## 453. குன்மத்திற்கு நாக சிந்தூரம்

நாகம் 10 பலத்தை எடுத்து இலுப்பெண்ணெயும், பசு வெண்ணெயும் கலந்து அதன்மீது தடவி வெள்ளாட்டுப் பாலில் இருபது தடவை நாகத்தை உருக்கி சுருக்குங்கொடுத்தால் சுத்தியாகும். ஒரு பானையில் சுத்திசெய்த நாகத்தைப் போட்டு அடுப்பின் மேலேற்றி எரித்து அதில் வெடியுப்பு 1 படி, சுக்கு 1 பலம், ஓமம் ½ படி, மஞ்சள் 1 பலம் இவற்றை ஒன்றுகூட்டிப் பொடிசெய்து நாகத்தின் மேல் சிறிது சிறிதாகப் போட்டு நாயுருவிச் செடியின் அடித்துண்டுகளால் நன்கு வறுத்து எடுக்கவும். இவ்விதம் வறுக்க வறுக்க நாகம் மாதுளம்பூவைப் போல் சிவந்து சிந்தூரிக்கும்.

இச்சிந்தூரத்தில் 3 குன்றிமணியெடை கொடிவேலி வேரின் சூரணத்துடன் தேனில் கலந்து 10 நாட்கள் உட்கொள்ள, வாந்தியுடன் கூடிய குன்மம், வாயுகுன்மம், கடுப்புடன் கூடிய குன்மம், பதினெண்விதகுட்டங்கள் முதலான பிணிகள் தீரும்.

சுக்கு, மிளகு, திப்பிலி இம்மூன்றையுஞ் சிறிது வறுத்துப் பொடி செய்து அதில் வேளை ஒன்றுக்கு ஒரு சிட்டிகை வீதமெடுத்து 3 குன்றிமணியெடை சிந்தூரத்துடன் கலந்து தினம் இருவேளையும் ஒரு மண்டலம் உட்கொள்ள இருமல் கபம், எலிக்சுடி, வாதகாசம், சுவாசகாசம் 96 வித கபரோகம், சகல பித்தரோகம், இந்திரிய தாபம், கண்ட தாபம், 18 விதபிரமியம், 12 வித சோம வியாதி, மார்பு வலி, வாய் எரிவு, கைகால் எரிவு முதலியன தீரும்.

நில ஆவாரையின் இலை, அதன் புட்பம், வேர், காய், சமூலம் இவற்றை உலர்த்திச் சூரணித்து அந்தச் சூரணத்தில் ஒரு சிட்டி எருத்து சிந்தூரத்துடன் கலந்தாவது அல்லது இவ்வைந்தின் கஷாயத்தில் கலந்தாவது ஒரு மண்டலம் வரை இம்மருந்தை உட்கொள்ள 20 வித பேதி, 18 வித மூத்திர ரோகம், 12 வகை எலும்பு சம்பந்தப்பட்ட நோய், க்ஷயம், ஸ்திரிகளின் மார்புவலி, ஸ்தன விப்புருதி முதலிய நோய்கள் தீரும்.

அனுபவங்கண்ட மருந்து.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

௬०-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## மாத்திரைகள்

## மாத்திரைகள்

### 454. சண்முக சஞ்சீவி மாத்திரை

| | |
|---|---|
| சுத்திசெய்த லிங்கம் | அதிமதுரம் |
| கோஷ்டம் | சண்பகமொட்டு |
| இலவங்கப்பட்டை | ஏலம் |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை வீதமெடுத்துத் தனித் தனியே சூரணித்துக் கல்வத்திலிட்டு 4 ஜாமம் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் தேன், இஞ்சிச்சாறு, முலைப்பால் இவை களொன்றில் கலந்து கொடுக்கப் பலவித பிணிகள் தீரும்.

### 455. சரபேந்திர குளிகை (குன்ம வாயுவுக்கு)

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | சுத்திசெய்த வத்ஸநாபி |
| பொரித்த இந்துப்பு | பொரித்த வெங்காரம் |
| சுக்கு | சுத்திசெய்த லிங்கம் |
| சுத்திசெய்த அப்பிரகம் | திப்பிலி |
| ஓமம் | கருஞ்சீரகம் |
| மிளகு | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை. சுத்திசெய்த நேர் வாளப் பருப்பு 5½ வராகனெடை. இவைகளை எல்லாம் ஒன்றுசெய்து கையாந்தகரைச் சாற்றிலரைத்துக் குன்றி மணியிடை மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி நாளொன்றுக்கு ஒரு மாத்திரை பிரமாணம் சுக்குக் கஷா யத்தில் அல்லது இஞ்சிச்சாற்றில் உரைத்துக் கொடுக்கக் குன்மம், சுரம் முதலான பிணிகள் தீரும்.

### 456. இராசபூபதி மாத்திரை

| | |
|---|---|
| லோக பற்பம் | இரசம் |
| கந்தகம் | மிளகு, கருநாவி |

இவைகள் வகைக்கு காலேயரைக்கால் சேர் வீதம் எடுத்துக் கல்வத்திலிட்டு மனேசிலே காலேயரைக்கால் சேர் கூடப் போட்டு பெருஞ்செருப்படிச்சாற்றில் 8 ஜாமம் அரைத்து வில்லைகளாகத்தட்டி காசிக்குப்பியில் நிரப்பி வாலுகாயந் திரத்தில் வைத்துப் புடம்போட்டுப் பிறகு எடுத்து அதை யரைத்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

தகுந்த அனுபானத்தில் கொடுக்க வாதசுரம், பித்த சுரம், சன்னி, தோஷம் முதலானது தீரும்.

## 457. சிந்தாமணி மாத்திரை

| | |
|---|---|
| லோக சிந்தூரம் | நிமிளைச் சிந்தூரம் |
| இரச சிந்தூரம் | கருவங்கச் சிந்தூரம் |

இவைகள் வகைக்குக் காலேயரைக்கால் சேர்.

| | |
|---|---|
| இரச கற்பூரம் $\frac{1}{4}$ சேர் | மனேசிலே $\frac{1}{4}$ சேர் |
| காந்தம் | அஞ்சனக்கால் |
| தாளகம் | |

இம்மூன்றும் வகைக்கு 1 பலம்

இலிங்கம் $1\frac{1}{3}$ சேர். இவைகள் யாவற்றையும் கல்வத்தி விட்டுக் கொடிவேலியின் கஷாயத்தில் 12 ஜாமமரைத்து வில்லைகளாகத் தட்டிக் கோழிமுட்டையின் ஓட்டிற்குள் வைத்து வாலுகாயந்திரத்தில் எரித்துக்கொண்டு பிறகு எடுத்து அதைத்தூள்செய்து அரைத்து மாத்திரைகளாகச் செய்துகொள்ளவும்.

**அனுபானம் :-** இதை சன்னி, சுரம், கஷ்டம், வாயு முதலான பிணிகளுக்குத் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கத் தீரும்.

**இதன் பரிமாணம் :** சாதாரணமாக ஒரு குன்றிமணி யிடை. அல்ப நோய்களுக்கு ஒரு குன்றிமணி அளவு போதுமானது. கடின நோய்க்கு 4 மாத்திரை வரை

கொடுக்கலாம். சைத்தியத்தின் உத்வேகமதிகமாயிருந்தால் 6 குன்றிமணி வரையில் கொடுக்கவும். அஜீர்ண சுரம் முதலான சகல சுரங்கள், க்ஷயம், சுவாசகாசம், அக்கினி மந்தம், வாதரோகம் முதலானதற்கும் கொடுக்கவும்.

## 458. இரகுராமபாண மாத்திரை

| | |
|---|---|
| இரசம் 1 பலம் | சுந்தகம் 2 பலம் |
| மனோசிலை $1\frac{1}{2}$ பலம் | தாளகம் 1 பலம் |
| இரச கற்பூரம் 2 பலம் | கொம்பரக்கு 1 பலம் |
| சாம்பிராணித் தைலம் 1 பலம் | |

இவைகளை ஒன்றுகூட்டிக் காட்டாமணக்கு விதையின் பாலில் அரைத்து வில்லைதட்டிப் புடம்போட்டு ஆறிய பிறகு எடுத்து அரைத்து மாத்திரைகளாகச் செய்துகொள்ளவும்.

பிணியை நன்கு அறிந்து தகுந்த அனுபானத்தில் மாத்திரையைக் கொடுக்க சகல நோய்களும் தீரும்.

## 459. கண்ணோய்க்கு ரௌப்யப்ரவாளாதி மாத்திரை (வெள்ளி பவள மாத்திரை)

| | |
|---|---|
| வெள்ளி இரேக்கு | பவளம் |
| முத்து | சங்கு |
| கடல்நுரை | காட்டுப்பன்றியின்பல் |
| மான் கொம்பு | தாமிரப்பொடி |

இளநீரினால் சுத்திசெய்தெடுத்த ஆமணக்கெண்ணெய் இவைகள் வகைக்கு 1 வராகனெடை.

ஈர (பச்சை) கொட்டைப்பாக்குப் பழம் 15
சூரத்துக் கடுக்காய் 15

யாவற்றையும் கல்வத்திலிட்டு, நந்தியாவட்டைப்பூவின் சாறு, பசலையின்சாறு இவைகள் சமமாகக் கூட்டி கல்வத்திலுள்ள மருந்துடன் போட்டு 90 நாழிகை அரைத்து மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்தவும்.

தினம் இருவேளையும் சிறிது இழைத்துக் கண்ணில் போட சகல கண்ணோய்களும் தீரும்.

**பத்தியம் :-** ஸ்திரீ சங்கமம் கூடாது. இரவில் படுக்கைக்குப் போகையில் ஆமணக்கெண்ணெயை உள்ளங்காலில் தடவி நன்றாகத் தேய்த்துக்கொள்ளவும். இவ்விதம் ஒரு மண்டலம்வரை செய்ய சகல நேத்திரரோகங்களும் தீரும்.

## 460. இரத்தினாதி மாத்திரை (கண்ணோய்க்கு)

| | |
|---|---|
| மாணிக்கம் | முத்து |
| பவளம் | கோமேதகம் |
| நீலம் | பச்சை |
| புட்பராகம் | வைடூரியம் |
| சிஞக்காரம் | யானையின் கடைவாய்ப்பல் |
| காட்டுப்பன்றியின்பல் | மாட்டுப்பல் |
| ஆட்டுப்பல் | எருமைப்பல் |
| மான்கொம்பு | ஆமை ஓடு |
| தங்க இரேக்கு | வெள்ளி இரேக்கு |
| தாமிரத்தூள் | நாகம் |
| காந்தம் | மனோசிலை |
| புங்கவிதை | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| ஏலம் | சங்கு |
| பலகறை | கற்பூரம் |
| நீலாஞ்சனக்கல் | இந்துப்பு |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை. இவைகளில் முதலாக இரத்தினங்களை ஒன்றாகச சேர்த்து பன்னீர் விட்டுஅரைத்து பிறகு மற்றதை எல்லாம் அத்துடன் கலந்து பன்னீர்விட்டு 3 நாள் அரைத்து. மறுபடியும் எலுமிச்சம்பழச்சாற்றை விட்டு 3 நாட்களரைத்து ஏழாவது நாளில் மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

இம்மாத்திரையை இழைத்துக் கண்ணிலிட சகல கண் வியாதிகளும் தீரும்.

### 461. தாம்பிராதி மாத்திரை (கண்ணோய்க்கு)

| | |
|---|---|
| தாமிரப்பொடி | 12 வராகனெடை |
| சங்குத்தூள் | 3 வராகனெடை |
| திப்பிலி | 10 வராகனெடை |
| அதிமதுரம் | 12 வராகனெடை |
| கடுகுரோகணி | 6 வராகனெடை |
| கோஷ்டம் | 5 வராகனெடை |
| மயில் துத்தம் | 5 வராகனெடை |

இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றில் அரைத்து தாமிரப் பாத்திரத்தில் மெழுகப்பூசி அடுத்தநாளதை எடுத்து பிறகும் முன் போலவே அரைத்து தாமிரப்பாத்திரத்தில் மெழுகப் பூசி இதே போல் 21 முறை செய்து பிறகு 22-ம்நாள் மருந்தை அரைத்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

இதனால் கண்ணில் வளரும் துர்மாமிசம், நீர்சொரிதல், காசரோகம், சுக்கிரம், அமரம் முதலான கண் நோய்கள் தீரும்.

### 462. தாம்பிராதி மாத்திரை (கண்ணோய்க்கு)

| | |
|---|---|
| பாதரசம் | 1 வராகனெடை |
| கருவங்கம் | 2 வராகனெடை |
| மயில்துத்தம் | 4 வராகனெடை |
| சங்கு | 8 வராகனெடை |
| செம்புப்பொடி | 16 வராகனெடை |

இவைகளைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் 32 ஜாமம் அரைத்து மாத்திரைகளாகச் செய்து கொண்டு கண்ணில் உபயோகிக்க சகலவித கண்ணோயும் தீரும்.

### 463. நேத்திராதி மாத்திரை (கண்ணேய்க்கு)

| | |
|---|---|
| வெள்ளிப்பற்பம் | உடும்பின் நகம் |
| நத்தையின்கூடு(மேலோடு) | யானைப்பல் |
| கோழியின் நெஞ்செலும்பு | மயில்துத்தம் |

இவைகளைச் சமயெடை எடுத்துக் கல்வத்திலிட்டு 12 ஜாமம் எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும். முலைப்பாலில் இழைத்துக் கண்ணிலிட கண் பூ முதலானவைகள் தீரும்.

### 464. வெள்ளெழுத்துக்கு மாத்திரை (கண்ணேய்க்கு)

| | |
|---|---|
| பொன்னுங்காணி | சிறுகீரை |
| நிலத்தாமரை | |

இம்மூன்றையும் நன்ருக எரித்துக் கருக்கிப் பச்சை கற்பூரத்தையும் தேனையுங் கூட்டி அரைத்து மாத்திரை களாக உருட்டிக் கொண்டு அதை பன்னீரிலுரைந்து ஒரு எள் அளவு கண்ணில் விடவும்.

இரண்டு இளநீரின் தண்ணீரை ஒரு மண்பாண்டத்தில் எடுத்து, வெள்ளை மிளகு 50-ஐத் தூள் செய்து போட்டு, கையாந்தகரையின் வேர் 5-ஐயும் போட்டு சுத்தமான $\frac{1}{4}$ சேர் தேனையும் விட்டு நன்ருகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும்.

இதில் ஒருதுளி கண்ணில் போட்டுவர வெள்ளெழுத்து நீங்கும்.

### 465. சுனேந்திராதி மாத்திரை (கண்ணேய்க்கு)

| | |
|---|---|
| பீதரோகணி | மயில்துத்தம் |
| மரமஞ்சள் | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

| | |
|---|---|
| லோத்திரம் | அரக்கு |
| காவிக்கல் | செஞ்சந்தனம் |
| நீலாஞ்சனம் | வசம்பு |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை

| | |
|---|---|
| சங்கு | இந்துப்பு |
| செம்புப்பொடி | அதிமதுரம் |
| தாமரைப்பூவிலுள்ள அரிசி | புங்கவிதை |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை

| | |
|---|---|
| வாலுளுவையரிசி | மிளகு |
| திப்பிலி | சுக்கு |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| கடுக்காய் | |

இவைகள் வகைக்கு 4 வராகனெடை விதமெடுத்து ஒன்ருகக் கூட்டி புங்கயிலைச் சாற்றில் ஒரு நாள் முழுதும் அரைத்து பிறகு தண்ணீர் விட்டு இருநாட்களரைத்து மாத்திரை களாகச் செய்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும். இம் மருந்தை சிறிதளவு இழைத்துக் கண்ணிலிட சகல கண் ணேய்களும் திரும்.

## 466. கனகதாம்பிராதி மாத்திரை (கண்ணேய்க்கு)

| | |
|---|---|
| தங்கப்பொடி | 2 வராகனெடை |
| வெள்ளிப்பொடி | 4 வராகனெடை |
| திப்பிலி | 6 வராகனெடை |
| இந்துப்பு | 8 வராகனெடை |
| மடல்துத்தம் | 10 வராகனெடை |
| கோஷ்டம் | 12 வராகனெடை |
| அதிமதுரம் | 14 வராகனெடை |
| தாமிரப்பொடி | 16 வராகனெடை |

இவைகளை ஒரு நாள் முழுவதும் வெள்ளாட்டுப் பாலில் அரைத்து, பிறகு சுத்தம் செய்த செப்புப்பாத்திரத்தினுள்

மெழுகப்பூசி இரவு முழுவதும் அப்படியே வைத்து விடியற் காலையில் அதைச் சுரண்டியெடுத்து மறுபடியும் முன் சொல்லியபடி வெள்ளாட்டுப்பாலில் அரைத்து இரவில் அச் செப்புப் பாத்திரத்தினுள் பூசி மறுநாள் காலையில் எடுத்து அரைக்கவும். இவ்விதம் நான்கு நாட்கள் செய்து 5 முதல் 8-ம் நாட்கள் வரையில் அதே பிரகாரம் வெள்ளாட்டுப் பாலுக்குப் பதிலாகத் தண்ணீர் விட்டரைத்துப் பிறகு நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

இம்மருந்தினுல் சகல நயன ரோகங்கள் தீரும்.

### 467. வாக்பட்ட ரத்னுதி மாத்திரை

| | |
|---|---|
| மாணிக்கம் | பச்சை (மரகதம்) |
| முத்து | பவளம் |
| வைடூரியம் | மூசுதங்கப்பொடி |
| வெள்ளிப்பொடி | தாமிரப்பொடி |
| காட்டுப்பன்றியின்பல் | யானைத்தந்தம் |
| குதிரையின்பல் | ஒட்டகத்தின்பல் |
| மயில் துத்தம் | சங்கு |
| கடல்நுரை | மனோசிலை |
| மிளகு | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்துக் கல்வத்திலிட்டு வெள்ளாட்டுப் பாலில் மைபோல் நைவாய் அரைத்து மாத்திரைகளாக உருட்டி நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

முலைப்பால், பனைமட்டையின்சாறு இவைகள் ஏதேனுமொன்றில் இழைத்துச் சிறிது கண்ணிலிட சகல நேத்திர ரோகங்கள் தீரும்.

### 468. மேகசஞ்சீவி மாத்திரை

கால் சேர் எடையுள்ள தான ஒரு இலிங்கக்கட்டி, அதே எடையுள்ள இரச சிந்தூரக்கட்டி, இவ்விரண்டு கட்டிகளையும்

இரும்பு எண்ணெய்சட்டியில் வைத்து அடுப்பின்மேல் ஏற்றி நெல்லிக்காய்ச் சாற்றினல் 16 ஜாமம் வரை சுருக்கங் கொடுக்கவும். பிறகு இதைக் கல்வத்திலிட்டு அரைச்சேர் நாமக்கட்டியையுங் கூட்டி தண்ணீர்விட்டு 32 ஜாமமரைத்து ஒரு வராகனெடை அளவுள்ள மாத்திரைகளாகச் செய்து உலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

**அனுபானம் :-** இதில் வேளை ஒன்றுக்கு ஒரு பணவிடை வீதமெடுத்துத் தேனில் இழைத்து உட்கொண்டு மேலும்,

| | |
|---|---|
| சுக்கு | சிற்றரத்தை |
| சிறுதேக்கு | பற்பாடகம் |
| சிறுகாஞ்சொரி | கோரைக்கிழங்கு |
| நன்னரிவேர் | சீந்தில்கொடி |
| தேவதாரம் | கோஷ்டம் |

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை வீதம் கொணர்ந்து இரண்டு சேர் தண்ணீரைக் கலந்து எட்டிலொரு பங்கு கஷாயமிறக்கிக் குடிக்கவும். இவ்விதம் தினம் இருவேளை யும் 10 நாட்கள் உட்கொள்ள 64 வித சுரங்கள் தீரும்.

தருண சுரத்திற்குப் புளியை விலக்கவும். ஜீரண சுரத் திற்கு இச்சாபத்தியத்தை அனுஷ்டிக்கவும். எவ்விதமான சுரமும் பத்து நாட்களில் தீரும்.

அஸ்தி சுரத்திற்கு வேளை ஒன்றுக்கு அசுவகந்தி இரசா யனத்துடன் ½ பணவிடை மருந்தைச் சேர்த்து தினம் இரு வேளையுமாக 20 நாட்கள் உட்கொள்ள அஸ்தி சுரம் தீரும்.

கீழாநெல்லிவேர் 1½ வராகனெடை எடுத்து நைவாய் அரைத்து ஒரு பணவிடை மருந்துடன் கூட்டி தினம் இரு வேளையும் 20 நாட்கள் உண்ண சகல மேகங்களும் தீரும்.

## 469. சீதசுரத்திற்கு மாத்திரை

| | |
|---|---|
| வெள்ளைப்பாஷாணம் | 4 பலம் |
| லிங்கம் | 2 பலம் |
| தயிரை இறுத்தெடுத்த அடிவண்டல் | 3 பலம் |

இவைகளை ஒன்றாகக் கலந்து மைபோலரைத்து பச்சைப் பயறு அளவு மாத்திரைகள் செய்து உலர்த்தி வைத்துக் கொண்டு மோருடன் ஒரு மாத்திரையை இழைத்துக் கொடுக்க சீத சுரம் தீரும்.

## 470. சுரனாத மாத்திரை

தாளகம் 6 பலம் மயில்துத்தம் 3 பலம்

இவ்விரண்டையும் பாகலிலைச் சாற்றிலரைத்து பச்சைப் பயறின் அளவுக்கு மாத்திரைகளாக்கி உலர்த்திக்கொண்டு இஞ்சிச்சாற்றில் ஒரு மாத்திரையை உரைத்து ஒருவேளை கொடுக்க சீதசுரம் தீரும்.

## 471. சங்கடசார மாத்திரை

| | |
|---|---|
| சுத்தி செய்த பாதரசம் | 4 வராகனெடை |
| கந்தம் | ,, |
| வத்ஸநாபி | ,, |
| மிளகு | 2 வராகனெடை |
| சுக்கு | ,, |
| பெருங்காயம் | 4 வராகனெடை |
| பஞ்சலவணம் வகைக்கு | 1 வராகனெடை |
| புளியம்பட்டையை எரித்து உண்டாக்கிய சாம்பல் | 7 பலம் |

இவைகளை ஒன்றுகூட்டிக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு நாள் அரைத்து ஒரு வராகனெடை அளவில் மாத்திரைகளை உருட்டிக்கொள்ளவும்.

**அனுபானம்:** இஞ்சிச் சாற்றில் ஒரு மாத்திரையை இழைத்துக் கொடுக்க சூலை, குன்மம், மந்தம், அஜீரணம், அதிசாரம் முதலான நோய்கள் தீரும்.

## 472. இரத்தகாசத்திற்கு மாத்திரை

| | |
|---|---|
| கடுக்காய்த்தோல் | 16 வராகனெடை |
| தான்றிக்காய்த்தோல் | 19 வராகனெடை |
| நெல்லிவிதை | 15 வராகனெடை |
| வாலுளுவையரிசி | 22 வராகனெடை |
| கையாந்தகரைச்சூரணம் | 62 வராகனெடை |
| நொச்சியின் சூரணம் | ,, |
| சித்திரமூலம் | ,, |
| தகரைவேர் | ,, |
| இலவங்கப்பட்டை | 22 வராகனெடை |
| சீந்தில்கொடிச் சூரணம் | 62 வராகனெடை |

இவைகள் யாவற்றையும் கல்லுரலிலிட்டிடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து வெல்லம் 80 வராகனெடை எடுத்து பாகு செய்து அதில் சூரணத்தைக் கொட்டி நன்றாகக்கிளறி 300 உருண்டைகளாகச் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும். நாள் ஒன்றிற்கு ஒரு மாத்திரை வீதம் ஒரு மாதமுண்ண சகல நோய்களும் தீரும்.

இரண்டு மாதமுட்கொள்ள சரீரம் கெட்டியாகும். மூன்றும் மாதத்தில் உடம்பிலுள்ள சகல உஷ்ணம், வறட்சி தீரும். நான்காவது மாதத்தில் உடம்பில் பலமேற்படும். ஐந்தாம் மாதத்தில் சரீரத்திற்கு நிறங்கொடுக்கும். ஆறும் மாதத்தில் உடம்பில் அதிகமான பலமேற்படும். ஏழாம் மாதத்தில் நேத்திரத்தில் ஒளி பிறக்கும். எட்டாம் மாதத்தில் பிரக்ஞையும், ஒன்பதாம் மாதத்தில் சித்த சுத்தியும் ஏற்படும். இவ்வாறு முன்னூறு மாத்திரைகளையும் முன்னூறு நாட்களில் உட்கொள்ளவும்.

## 473. வீரிய விருத்திக்கு மாத்திரை

விளாமரப்பட்டையை நிழலில் உலர்த்தி பாதாளயந்திரத்தை வைத்து பட்டையில் சத்துவத்தை இறக்கிக் கொண்டு அதில்,

| | |
|---|---|
| தகரை விதை 1 சேர் | வேலம்பிசின் 1 சேர் |

இவைகளையும் போட்டு மேலும்,

| | |
|---|---|
| இசுபுகோல் விதை | வாலுளுவையரிசி |
| அக்கராகாரம் | |

வகைக்கு ஒரு சேர் வீதமெடுத்து நல்லெண்ணெயில்போட்டு நைவாயரைத்து கொண்டைக்கடலைப் பிரமாணம் மாத்திரைகளை உருட்டி வைத்துக்கொண்டு 40 நாட்கள் உட்கொள்ள வீரிய விருத்தியாகும்.

**பத்தியம்:-** புளிப்பு, உறைப்பு, ஸ்திரீசங்கம் இவைகளை விலக்கவும்.

## 474. சீதபேதிக்கு மாத்திரை

ஜாதிக்காயொன்றை எடுத்து உடைத்து சிறிது வறுத்துக்கொண்டு அதில் $\frac{1}{4}$ வராகனெடை அபினைக் கலந்து நல்லெண்ணெய் விட்டரைத்து மாத்திரைகளாகச் செய்து தேகத்தை அனுசரித்துக் கொடுக்கவும்.

## 475. பாலசஞ்சீவி மாத்திரை

| | |
|---|---|
| சுக்கு | வசம்பு |
| ஓமம் | இந்துப்பு |
| உலந்தாலிங்கம் | |

இவைகள் வகைக்கு 3 தோலா, பெருங்காயம் $\frac{3}{4}$ தோலா, ஆமை ஓடு 3 தோலா, இரசகற்பூரம் 3 வராகனெடை, மிளகு 3 வராகனெடை, திப்பிலி 3 வராகனெடை, இவைகளை ஒன்றுகூட்டி முலைப்பால் விட்டு நன்றாய் அரைத்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

## 476. கோரோசனை மாத்திரை

ஜாதிக்காய் கிராம்பு
இலவங்கப்பட்டை ஏலக்காய்
ஜாதாப்பிலை அதிமதுரம்
சுக்கு சிற்றரத்தை

இவைகள் வகைக்கு 9 வராகனெடை

| | |
|---|---|
| கோரோசனை | 3 வராகனெடை |
| சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு | $\frac{1}{2}$ பலம் |
| இரசகற்பூரம் | 3 வராகனெடை |

இவைகளை இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து கல்வத்தில் போட்டு முலைப்பால்விட்டரைத்து பச்சைப் பயறுப் பிரமாணம் மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

## 477. கோரோசனை மாத்திரை (வேறுவிதம்)

கோரோசனை பச்சைக்கற்பூரம்
குங்குமப்பூ ஜாதிக்காய்
ஜாதிப்பத்திரி

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ வராகனெடை

இரசசிந்தூரம் அப்பிரகசிந்தூரம்
வகைக்கு 1 வராகனெடை

| | |
|---|---|
| தங்கரேக்கு | $\frac{1}{2}$ வராகனெடை |
| சுக்கு | 1 வராகனெடை |
| ஏலக்காய் | $\frac{1}{2}$ வராகனெடை |
| அக்கராகாரம் | $\frac{1}{2}$ வராகனெடை |
| வால்மிளகு | $\frac{1}{2}$ வராகனெடை |
| திப்பிலி | $\frac{1}{4}$ வராகனெடை |

கஷாயத்திற்கு வேண்டிய சாமான்கள் :-

| | |
|---|---|
| சந்தனத்தூள் | 7 வராகனெடை |
| விலாமிச்சைவேர் | 5 வராகனெடை |

| | |
|---|---|
| வெட்டிவேர் | 5 வராகனெடை |
| கோரைக்கிழங்கு | 2½ வராகனெடை |
| சண்பகமொட்டு | 5 வராகனெடை |

இவைகளை ஒன்றிரண்டாக இடித்து ஓர் புதிய பானையில் இட்டு எட்டுசேர் தண்ணீரை ஊற்றி சுமார் 1½ சேர் கஷாயமானதும் வடிகட்டிக் கொள்ளவும்.

இக்கஷாயத்தை விட்டு முன்பு கூறிய மற்ற சாமான்களை எல்லாம் கல்வத்தில் போட்டு நன்முக நைவாய் அரைத்து வேண்டிய அளவிற்கு சிறிதாகவும், பெரிதாகவும் மாத்திரைகள் உருட்டி நிழலில் உலர்த்திக்கொண்டு பத்திரப் படுத்திக் கொள்ளவும்.

இது குழந்தைகளின் நோய்களுக்கு மிகவும் உபயோகமானது.

### 478. கோரோசனை மாத்திரை (வேறுவிதம்)

| | |
|---|---|
| கோரோசனை | குங்குமப்பூ |
| இரசகற்பூரம் | இரசசிந்தூரம் |
| கோஷ்டம் | அப்பிரகசிந்தூரம் |
| கிராம்பு | ஜாதிக்காய் |
| அக்கராகாரம் | |

இவைகள் சமயெடைகொண்டு சந்தனக்கஷாயத்தில் 3 நாட்களரைத்து பச்சைப்பயறு வீதம் மாத்திரைகள் செய்யவும். விரேசனமாக வேண்டுமானல் சுத்திசெய்த நேர்வாளத்தையும் கூட்டி அரைத்துக் கொள்ளவும்.

### 479. கோரோசனை மாத்திரை (வேறு விதம்)

| | |
|---|---|
| பச்சைக்கற்பூரம் | கோரோசனை |
| குங்குமப்பூ | இரசசிந்தூரம் |
| லிங்கச்சிந்தூரம் | இரசகற்பூரம் |
| அப்பிரகச்சிந்தூரம் | ஜாதிக்காய் |

| | |
|---|---|
| கிராம்பு | ஏலக்காய் |
| அக்ராகாரம் | சிறுநாகப்பூ |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை.

| | |
|---|---|
| கஸ்தூரி | 2 குன்றிமணி எடை |
| முத்து | $\frac{1}{2}$ வராகனெடை |
| தங்கரேக்கு | 11 (எண்ணிக்கையில்) |

இவைகள் யாவற்றையும் (தங்கரேக்கு, கோரோசனை, கஸ்தூரி இவைகளைத் தவிர) தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து கல்வத்திலிட்டு மற்றவைகளையும் ஒன்று கூட்டி முலைப்பால் விட்டு நைவாயரைத்து பச்சைப்பயறுப் பிரமாணம் மாத்திரைகளைச் செய்து உலரவைத்துக் கொள்ளவும்.

## 480. எட்டுவித சுரம், சன்னி முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| இரசகற்பூரம் | இரசசிந்தூரம் |
| நெல்லிக்காய்க்கந்தகம் | கோரோசனை |

இவைகளைச் சுத்திசெய்துகொள்ளவும். பிறகு தனித் தனியே வெள்ளைத்துணியில் பொட்டணம் கட்டி அடுப்பின்மேல் ஒரு பாத்திரத்தை வைத்து 1 சேர் நல்லெண்ணெய் விட்டு அதில் இப்பொட்டணங்களைப் போட்டு தீபாக்கினியால் எரிக்கவும். பொட்டணங்கள் எண்ணெயில் மூழ்கியதும் உடனே அதை எடுத்துவிட்டு ஊமத்தஞ்சாற்றில் போட்டு வெய்யிலில் வைத்து பிறகு எடுத்துக்கொள்ளவும். ஒரு பானையில் 1 சேர் பசுவின் பால் விட்டு பானையின் வாயை ஒரு துணியால் கட்டி அதன்மேல் கந்தகத்தை வைத்து மேலொரு சட்டியால் மூடிச் சீலைமண் செய்து அடுப்பின் மேலேற்றி எரிக்க கந்தகம் உருகி பாலில் இறங்கும். அந்தக் கந்தகத்தை எடுத்து மேற்கூறிய மற்ற பொட்டணங்களிலுள்ள மருந்தையும் எடுத்து இத்துடன் கலந்து கல்வத்திலிட்டு செருப்படிச்சாற்றினுல் மூன்று நாட்கள் அரைத்து

நீளமான மாத்திரைகளாக செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும் :-** திப்பிலி, கிராம்பு இவைகளைச் சிறிது வறுத்துத் தூள்செய்து தேனுடன் கலந்து கொடுக்கவும்.

பித்தசுரத்திற்கு இஞ்சிச் சாற்றிலும், வாதசுரத்திற்கு கண்டத்திப்பிலியை வறுத்துத் தூள்செய்து அதில் இஞ்சிச் சாறு கலந்து கொடுக்கவும். புளியை விலக்கவும்.

சன்னிக்கு முருங்கைப்பட்டைச்சாறு, மாவிலிங்கப் பட்டைச்சாறு, நொச்சிப்பட்டைச்சாறு வெற்றிலைச்சாறு, இச்சாறுகளுடன் சுக்கு, சிற்றரத்தை இவைகளின் சூரணத்தையுங் கூட்டி மாத்திரையை இழைத்துக் கொடுக்கவும்.

சன்னி, சைத்தியம் தீரும்.

**பத்தியம் :-** புளியை நீக்கவும்.

## 481. கார்யா மாத்திரை

பொரித்த வெங்காரம் 2 தோலா
சடாமாஞ்சில் $\frac{1}{2}$ சேர்
அண்ணபேதி 9 தோலா
திப்பிலி 4 தோலா
வாயுவிளங்கம் 9 தோலா
மரமஞ்சள் 9 தோலா
பறங்கிப்பட்டை 1 சேர்
ஏலக்காய் 9 தோலா
ஜாதிக்காய் 9 தோலா
கஸ்தூரி 1 தோலா
தாளிசபத்திரி 9 தோலா
பேரரத்தை 4 தோலா
மதனகாமப்பூ 4 தோலா
அப்பளாகாரம் 5 தோலா
இந்துப்பு $1\frac{1}{2}$ சேர்
ஓமம் 9 தோலா
கண்டத்திப்பிலி 3 தோலா
வாலுளுவை $\frac{1}{4}$ சேர்
கழற்சிப்பருப்பு 4 தோலா
கிராம்பு 9 தோலா
ஜாதிப்பத்திரி 9 தோலா
குங்குமப்பூ 3 தோலா
சிறுநாகப்பூ 9 தோலா
கோஷ்டம் 9 தோலா
அதிமதுரம் 9 தோலா
இலவங்கப்பட்டை 9 தோலா

வில்வவேர் 9 தோலா
விலாமிச்சைவேர்
வலம்புரிக்காய்
அக்கராகாரம்
வெற்றிலைச்சாறு
அருகம்புல்வேர்ச்சாறு
சூரியகாந்தத்தின்சாறு
இவைகள் வகைக்கு 9 தோலா
ஓரிதழ்தாமரைச்சாறு $\frac{1}{4}$ சேர்
சாம்பிராணித் தைலம் 4 தோலா

அமுக்கிராவேர் 9 தோலா
வாதுமைப்பருப்பு
சந்தனம்
நெல்லிமுள்ளி
வல்லாரைச்சாறு
சந்திரகாந்தத்தின்சாறு
நெய்சட்டியின்சாறு
மணத்தக்காளிச்
சாறு 4 தோலா

இவைகள் யாவற்றையும் ஒன்றாகக் கூட்டவும். தூள் செய்ய வேண்டியதை இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து மற்ற சாற்றுடன் கலந்து கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாறு, துருஞ்சிப்பழச்சாறு, மாதுளம்பழச்சாறு, இம்மூன்று சாற்றினால் நைவாய் அரைத்து இரண்டு வராகனெடைப் பிரமாணம் மாத்திரைகளைச் செய்து வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவும். இம்மருந்தைக்கொண்டு சுமார் 240 மாத்திரைகள் செய்யக்கூடும்.

## 482. குட்டம் முதலானதற்கு மாத்திரை

பாதரசம்
கந்தகம்

சமயெடைகொண்டு கல்வத்திலிட்டு நொச்சியிலைச் சாற்றில் அரைத்து மறுபடியும் இவ்விதமே இருமுறை அதே சாற்றில் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து தக்க அனுபானத்துடன் கொடுக்கக் குட்டம் தீரும்.

## 483. தாபசுரம், சன்னி, விஷக்கடி, வாயு, முதலானதற்கு மாத்திரை

சுக்கு
திப்பிலி
தான்றிக்காய்

மிளகு
கடுக்காய்
நெல்லிமுள்ளி

சுந்தகம் லிங்கம்

இவைகள் வகைக்கு 1 தோலா விதமெடுத்து சுத்திசெய்த நேர்வாளம் 8 தோலாவையுங் கூட்டி 3 ஜாமம் சர்க்கரை நார்த்தம்பழச்சாற்றிலரைத்து கொண்டைக்கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திப்பத்திரப் படுத்திக் கொள்ளவும்.

**அனுபானம்:** தேன், முலைப்பால், வெற்றிலைச்சாறு. இஞ்சிச்சாறு.

## 484. கருப்பு மாத்திரை

| | |
|---|---|
| பொரித்த பலகை-வெங்காரம் | சுக்கு |
| | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |

வகைக்கு 1 தோலா

| | |
|---|---|
| சுத்திசெய்த நேர்வாளம் | 7 தோலா |
| சுட்டுக் கருக்கிய கொட்டாங்கச்சி | 1 தோலா |

இவைகளை ஒன்றாகக் கலந்து வெந்நீரைவிட்டு மூன்றுஜாமம் அரைத்து பச்சைப்பயறு முதல் கொண்டைக்கடலை வரை அளவுள்ள மாத்திரைகள் செய்து தேன், முலைப்பால், வெற்றிலைச்சாறு, இஞ்சிரசம் முதலான அனுபானங்களில் கொடுக்க தாபசுரம், சன்னி, விஷக்கடி, வாயு, நமைச்சல், மாந்தம் முதலானது தீரும்.

## 485. வாதராக்ஷஸ மாத்திரை

| | |
|---|---|
| பாதரசம் | 1 வராகனெடை |
| சுத்திசெய்த சுந்தகம் | 1 வராகனெடை |
| சாணத்தில் சுத்தி செய்து பொரித்த வெங்காரம் | 1 வராகனெடை |
| சுத்திசெய்த வத்஢ஸநாபி | 3 வராகனெடை |

| | |
|---|---|
| சங்குப்பற்பம் | 2 வராகனெடை |
| பலகறைப்பற்பம் | 2 வராகனெடை |
| மிளகு | 8 வராகனெடை |

இவைகளை எல்லாம் ஒன்ருகக் கூட்டி எலுமிச்சம்பழச் சாற்றில் மைபோலரைத்து மிளகு அல்லது கொண்டைக் கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

இந்த வாதராக்ஷஸ மாத்திரையின் அனுபானமும் தீரும் நோயும்:—

| | |
|---|---|
| இஞ்சிச்சாறு | சுக்குக்கஷாயம் |
| திரிகடு சூரணம் | வெந்நீர் |

இவ்வித அனுபானங்களில் வேளை ஒன்றுக்கு 1 மாத்திரையை உரைத்துக் கொடுக்க வாயுவைக் கண்டித்து மலச்சிக்கலைத் தீர்க்கும். அதிகமாக வயிறு கழிந்தால் வசம்பைச்சுட்டு கருக்கி தேனில் குழப்பிக் கொடுத்திட இம்மருந்தைக் கொடுத்ததிஞல் ஏற்பட்ட கழிச்சல் நிற்கும்.

இம்மாத்திரையைக் கொடுத்தும் மலச்சிக்கல் தீரா விடில் இரண்டு முதல் மூன்று மாத்திரைகள் வரையில் கொடுக்க மலச்சிக்கல் தீரும்.

## 486. பீனிசத்திற்கு மாத்திரை

| | |
|---|---|
| சிறுவெங்காரம் | அபின் |
| கவாரப்பட்டை | |

இவைகள் வகைக்கு $1\frac{3}{4}$ வராகனெடை விதமெடுத்துக் கல்வத்திலிட்டு தினம் ஒரு கோழியின் பித்தத்தைப்போட்டு அரைக்கவும். இவ்விதம் பதினெரு கோழியின் பித்தத்தைப் போட்டு 11 தினங்கள் நன்ருக அரைத்து பச்சைப்பயறுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி தினம் இருவேளையும் ஒவ்வொரு மாத்திரை விதம் 7 நாட்கள் உட்கொள்ள நாசியிலிருந்து வடியும் நீர் முதலானது தீரும்.

## 487. அஜீரணம், பசியின்மை முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| இந்துப்பு | சீனுவெங்காரம் |
| சுக்கு | பெருங்காயம் |

இவைகள் வகைக்கு 3 தோலா வீதமெடுத்து சீனு வெங்காரத்தை மட்டிலும் பொரித்துக்கொள்ளவும். சுசப்பு முருங்கையின் வேர்ப்பட்டையின் சாற்றை விட்டு யாவற்றையும் ஒன்றுபட நைவாயரைத்து காட்டு இலந்தையைவிட சிறிதளவு குறைவாய் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானம் :** அஜீரணம், பசியின்மை, வயிற்று உப்பிசம், வாயு முதலான பிணிகளுக்குத் தக்க அனுபானத்துடன் ஒரு மாத்திரையைக் கொடுக்கவும்.

## 488. அண்டவாதம். விரைவாதம், விரைவீக்கம் முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| கருஊமத்தை விதை | பறங்கிப்பட்டை |
| இலவங்கப்பட்டை | இரேவல்சினி |
| வால்மிளகு | |

இவ்வைந்தையும் மெல்லியதாய்ப் பொடிசெய்து வேண்டிய அளவு சர்க்கரையும் தேனும் விட்டரைத்து பச்சைப்பயறுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானம் :-** தேனுடன் கூட்டிக் கொடுக்கவும். தினம் இருவேளையும் ஒவ்வொரு மாத்திரை வீதம் கொடுக்கவும். வாயு பதார்த்தங்களை பத்தியத்திற்கு நீக்கவும்.

## 489. வயிற்றுநோய், மகோதரம் வயிற்றுக்கட்டி முதலானதற்கு மாத்திரைகள்

வேண்டிய அளவு சர்க்கரையைக் கொணர்ந்து தட்டப் பயறுக்காய், சதுரக்கள்ளிப்பால் இவைகளில் $1\frac{1}{2}$ ஜாமம் அரைத்துப் பச்சைப்பயறு பிரமாணம் மாத்திரைகளாக உருட்டி உலர்த்திக்கொண்டு மூன்று நாட்களுக்கு ஒருதரம் சரீரத்தை அனுசரித்து ஒன்று முதல் இரண்டு மாத்திரைகள் வரை கொடுக்க வயிறு நன்றுகக் கழியும்.

அனுபானம் :- மருந்துண்ணும் நாளில் புளியை விலக்கவும். மற்ற நாட்களில் இச்சா பத்தியம். சரீரத்திற்குகந்தவாறு நெய் அல்லது தேனில் கொடுக்கவும்.

## 490. வீரியவிருத்தி மாத்திரை

பெரிய பேரிச்சங்காய்களை எடுத்து அதனுள் இருக்கும் விதைகளைப் போக்கி வீசம் தோலா அபினை அதனடுவில் வைத்து பேரிச்சங்காயின் மேல் நூலைச் சுற்றிக்கொள்ளவும். அரிவாளினுல் ஆலமரப்பட்டையை ஒரு வெட்டு வெட்டி பட்டை கீழே விழாமல் திறந்து அதற்குள் பேரீச்சங்காய்களை வைத்து பட்டையை மூடி விடவும்.

இவ்விதம் தினம் 20 நாட்கள் சாயந்திரம் பேரீச்சங்காய்களை அம்மரப்பட்டையினுள் வைத்து காலையில் எடுத்துக்கொண்டு 20 நாட்களுக்குப் பிறகு அவைகளை நன்றுயரைத்து பூவந்திக்கொட்டைப் பிரமாணம் மாத்திரைகளைச் செய்து நிழலில் உலர்த்தி உபயோகிக்கவும். இரவில் 2 சேர் பசுப்பாலைக் குடிக்கவும்.

## 491. பெருங்காய மாத்திரை

| | |
|---|---|
| சீரகம் | ஒரே கணுவுள்ள வெள்ளைப் பூண்டு |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | இந்துப்பு |

நெருப்பின் மேல் வைத்துப் பொரித்த பெருங்காயம், சுத்தி செய்த நெல்லிக்காய் கந்தகம், இவைகள் சமயெடை. இவைகளை (வெள்ளைப்பூண்டைத் தவிர) தூள்செய்து வெள்ளைப்பூண்டுடன் தேவையுள்ள அளவு சர்க்கரை நாரத்தையின் சாற்றையுங்கலந்து 3 நாட்கள் அப்படியே ஊறவைத்து நான்காவது நாளில் எடுத்து அரைத்து சிறிய நெல்லிக்காயளவு உருண்டைகள் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

## 492. அம்ருதாதி மாத்திரை

கோரோசனை பச்சைக்கற்பூரம்

குங்குமப்பூ

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

உலாந்தாலிங்கம் 1 வராகனெடை

இவைகளை ஒன்று கூட்டி முலைப்பால் விட்டரைத்து பச்சைப் பயறு அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும். இதைச் சிறுபிள்ளைகள் முதல் பெரியோர்கள் வரை கொடுக்கலாம். சுரம், அஜீரணம், மந்தம், வாயு, பித்தம் முதலானதற்குத் தக்க அனுபானத்துடன் கொடுக்கவும்.

## 493. சுரத்திற்கு மாத்திரை

வடக்கில் ஓடியிருக்கும் வெள்ளெருக்கின் வேரை எடுத்து அதன் மேலுள்ள தோலை மட்டிலுமெடுத்துக் கொள்ளவும். இதை இடித்துத் தூள்செய்து 4 தோலா எடையை எடுத்துக்கொண்டு அத்துடன் அதே எடையில் மிளகும், சுக்கும் வைத்தரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகளை உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

## 494. மூச்சு, இருமல் முதலானதற்கு மாத்திரை

வெள்ளெருக்கம்பூ ஒன்றை எடுத்து அதன் தண்டை நீக்கிவிடவும். பிறகு இவ்விதம் எவ்வளவு பூக்களை எடுத்துக் கொள்ளப்படுகிறதோ அவ்வளவு எண்ணிக்கை மிளகையும் கூட்டி நன்ருக அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலரவைத்துக் கொள்ளவும். இருமும்பொழுது ஒரு மாத்திரையை வாயிலடக்கிக் கொண்டு சிறிது சிறிதாக உமிழ்நீரை முழுங்கிவர இருமல் தீரும். இவ்விதமே மூச்சுக்கு மிளகுக்குப் பதில் கிராம்பை உபயோகப்படுத்தி மாத்திரைகள் செய்து முன்பு கூறியபடி செய்ய மூச்சு தீரும்.

## 495. முட்டிகளின் சூலைக்கு மாத்திரை

பால்துத்தம் 2 வராகனெடை, இரசகற்பூரம் ½ வராகனெடை, இவைகளைக் கல்வத்திலிட்டு வேண்டியளவு தண்ணீர் விட்டரைத்து 104 மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

**அனுபானம்:** நெய். ஒரு மாத்திரையை உட்கொண்ட பிறகு தண்ணீரில் (நதியில்) 104 முழுக்குப் போட்டு தலை முழுகி தயிர் கலந்த பழைய சோற்றைச் சாப்பிடவும்.

## 496. ஹரித்திராவடக மாத்திரை

| | |
|---|---|
| மஞ்சள் | வேப்பிலை |
| திப்பிலி | மிளகு |
| மரமஞ்சள் | வாயுவிளங்கம் |
| பெருங்கோரைக்கிழங்கு | சுக்கு |

இவ்வெட்டு வகைகளும் சமயெடை எடுத்து வெள்ளாட்டு நீரில் ஒரு நாள் ஊறவைத்து மறுநாள் எடுத்து நன்ருக அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் நோயும் :** இம்மருந்தை அஜீரண சுரத்துக்கு வெந்நீரிலும், அதிசாரம், கிராணி இவைகளுக்கு 3 நாட்கள் மோரிலும் கொடுக்கவும். பாம்பின் விஷத்திற்கு 8 குன்றிமணியெடை வரையில் கொடுத்து மேலும் மோரில் ஒரு மாத்திரையை உரைத்துக் கடிவாயில் தடவ விஷமிறங்கும். கண் சிவந்து தண்ணீர் கசிந்து கொண்டிருத்தல், பூச்சிகளினுல் புருவத்தின் ரோமங்கள் உதிர்தல் முதலானதற்கு கோமூத்திரம் அல்லது தண்ணீரில் உரைத்து கண்ணில் கலிக்கமிடத் தீரும்.

திரிதோஷம், விஷசுரம் இவைகளுக்கு வெல்லத்தில் கலந்துகொடுக்கவும். இரத்தாதிசாரத்திற்கு ஏலக்காய், இலவங்கபத்திரி இவைகளை லேசாக வறுத்துத் தூள் செய்து அத்துடன் கொடுக்கவும். தேள்கடிக்கு எருக்கம் பாலில் மாத்திரையை உரைத்துக் கடிவாயில் பூசவும். தவிர மற்ற எல்லாவிதமான நோய்களுக்கும் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கத் தீரும்.

### 497. சுவர்ணமால்ய வசந்த மாத்திரை

| | |
|---|---|
| தங்க இரேக்கு | $\frac{1}{2}$ வராகனெடை |
| முத்து | 1 வராகனெடை |
| கந்தகம் | 1 வராகனெடை |
| வத்஬நாபி | $1\frac{1}{2}$ வராகனெடை |
| திப்பிலிமூலம் | $1\frac{1}{2}$ வராகனெடை |
| இரசசிந்தூரம் | 6 வராகனெடை |

இவைகளைக் கல்வத்திலிட்டு கங்காஜலத்தை ஊற்றி 12 ஜாமம் அரைத்து வில்லை மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

ஒரு வேளைக்கு $\frac{1}{2}$ பணவிடை விதம் தினம் இருவேளையும் அசுவகந்திச் சூரணத்துடன் ஒரு மண்டல முட்கொள்ள அஸ்தி சுரம், க்ஷயம் முதலான நோய்கள் தீரும்.

**பத்தியம் :** இச்சா பத்தியம். இம்மருந்து கைகண்டது.

## 498. கண்ணோய்க்கு மாத்திரை

| | |
|---|---|
| பொரித்த சீனக்காரம் | மயில்துத்தம் |
| கடுக்காய்ப்பிஞ்சு | திப்பிலி |
| மிளகு | ஏலம் |
| நெய் | |

இவைகளை சம எடைகொண்டு தூள் செய்து வடிகட்டி, அதில் பெருந்துத்தியிலைச்சாற்றை விட்டு ஏழு நாட்கள் அரைத்து மாத்திரைகளாகச் செய்து உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும் :**

முலைப்பால், எலுமிச்சம்பழச்சாறு, நந்தியாவட்டைப் பூவின் சாறு, தண்ணீர் இவ்விதமான அனுபானங்களில் மாத்திரையை இழைத்துக் கண்ணிலிட, கண்ணிலுள்ள பூ, திரை, நாகபடலம், பித்தகாசம், நீர் அரிப்பு முதலானது தீரும்.

## 499. சுவாச நிவாரண மாத்திரை

| | |
|---|---|
| பாதரசம் | 16 வராகனெடை |
| தாமிரபற்பம் | 16 வராகனெடை |
| கந்தகம் | 8 வராகனெடை |
| பொரித்த வெங்காரம் | 6 வராகனெடை |

இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றை விட்டு 4 ஜாமம் அரைத்து உளுந்து பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து உலர்த்திக்கொள்ளவும்.

வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் தினம் இரு வேளையும் தேனில் கலந்து உட்கொள்ள சுவாசரோகம் தீரும். கைகண்ட மருந்து.

## 500. அஜீரணம், பசியின்மை முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| கந்தகம் | ½ வராகனெடை |
| இந்துப்பு | 2 வராகனெடை |
| சுக்கு | 1 வராகனெடை |

இவ்விதமெடுத்து எலுமிச்சம்பழச்சாற்றை விட்டு நன்ருக அரைத்து சிறு மாத்திரைகளாகச் செய்து உலரவைத்து உபயோகிக்கவும்.

**தீரும் நோய் :** அஜீரணம் தீரும். பசி ஏற்படும்.

## 501. குட்டத்திற்கு மாத்திரை

சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம் காலேயரைக்கால் வராகனெடை, பழைய இலுப்பைப்பூ (அன்று மலராதது) மூன்றிலுள்ள அழுக்கை எடுத்துவிட்டுப் பூவைமட்டிலுங் கொண்டு பாஷாணத்துடன் சேர்த்து நைவாயரைத்து கொண்டைக்கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து கொள்ளவும். கடுமையான குட்டத்திற்கு 20 நாட்கள் ஆரம்பக் குட்டத்திற்கு 7 நாட்கள் வீதம் உட்கொள்ளவும்.

**பத்தியம் :** புளி, வாயுபதார்த்தங்கள் இவைகளை விலக்கி, மாமிசம், நெய் இவைகளை அதிகமாகக்கூட்டவும். பறங்கி நோயும் இம்மருந்தினுல் தீரும்,

## 502. அரிமேதாதி மாத்திரை

கருவேலம்பட்டை 100 பலத்தைக் கொணர்ந்து 8 படி தண்ணீர் விட்டு 2 படி கஷாயமிறக்கிக் கொண்டு அதில்

| | |
|---|---|
| ஜாதிக்காய் | கிராம்பு |
| தக்கோலம் | கொட்டைப்பாக்கு |
| கற்பூரம் | |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ பலம் வீதமெடுத்து இடித்துச் சூரணித்து இக்காஷாயத்தை விட்டு நைவாயரைத்து மத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

**தீரும் வியாதி:** வாயில் ஒரு மாத்திரையை அடக்கி வைத்துக்கொள்ள தந்தரோகம், முகரோகம், துர்கந்தம், உதட்டின் விரணங்கள், நாக்கின் விரணம் முதலானது திரும்.

## 503. அண்டவாதம், அண்டசூலே இவைகளுக்கு மாத்திரை

| | |
|---|---|
| தூதுவளேவேரின்பட்டை | நாய்வேளேவேரின்பட்டை |
| குடியோட்டிப்பூண்டின்பட்டை | திப்பிலி |
| கண்டத்திப்பிலி | கழற்சிக்கொடிவேரின் பட்டை |
| கடுகரோகணி | |

இவைகள் வகைக்கு 5 வராகனெடை. சுத்திசெய்த நேர்வாளத்தின் பருப்பு 3 வராகனெடை. இவற்றை ஒன்றுகூட்டிச் சூரணித்து வடிகட்டி சுயமான தேனில் அரைத்து பூவந்திக்கொட்டைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொண்டு வேளேக்கு 1 மாத்திரை வீதம் எடுத்துத் தேனில் இழைத்து 7 நாட்கள் கொடுக்கவும். மருந்துட்கொண்ட பின்பும் வியாதி சொல்பமிருந்தால் மறுபடியும் 7 நாட்களுக்குக் கொடுக்கவும்.

**பத்தியம்:** புளி, மிளகாய், மீன், வாயு பதார்த்தங்கள் இவைகளே விலக்கவும்.

## 504. நரசிம்ம மாத்திரை

| | |
|---|---|
| பாதரசம் | கந்தகம் |
| இரும்புப்பொடி | |

இவைகள் வகைக்கு 2 பலம் வீதமெடுத்து ஒன்றுகூட்டி அரைத்து ஓட்டில் வைத்துச் சீலேமண் செய்து கஜபுடம்

போட்டு எரித்துப் பிறகு மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

இதை பாரிசவாயு, குன்மம், வாயு முதலானதற்குத் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கத் தீரும்.

### 505. வயிற்றுக் கடுப்புக்கு மாத்திரை

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| ஜாதிக்காய் | கிராம்பு |
| ஏலக்காய் | தாளிசபத்திரி |
| கோரைக்கிழங்கு | கோரைக்கிழங்கு |
| ஜாதிப்பத்திரி | மரமஞ்சள் |
| அபினி | கசகசா |
| கர்க்கடகசிங்கி | மாசிக்காய் |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்துத் தயிரை விட்டு நன்ருக அரைத்துக்கொண்டு மாதுளம்பழத்தைத் துளைத்து அதிலுள்ள விதைகளை நீக்கிவிட்டு அரைத்த இம் மருந்தை சோற்றுப் பருக்கையால் மூடி மேலும் சாணத்தால் முழுவதும் கவசமிட்டு சிறிது உலர்த்தி பத்து வறட்டியில் புடம் வைத்து எரிக்கவும். மேலுள்ள கவசம் நன்ருய் எரிந்ததும் எடுத்து கவசத்தை நீக்கி மருந்துடன் கூடிய மாதுளையைக் கல்வத்திலிட்டு நைவாக அரைத்து கழற்சிக் காயளவு மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொண்டு வாழைச் சருகைச் சுட்டு சாம்பலாக்கி இத்துடன் தயிரையுங் கூட்டி ஒரு மாத்திரையை உரைத்துக் கொடுக்கவும்.

### 506. கோடாசுழி இலவங்காதி மாத்திரை

| | |
|---|---|
| பாதரசம் | கந்தகம் |
| மிளகு | கிராம்பு |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு 1 வராகனெடை. இவற்றை ஒன்ருகக் கலந்து கடுக்காயின் கஷாயத்தைவிட்டு 4 ஜாமமரைத்து அதை இரு பாகங்களாக்கி, ஒரு பாகத்தில் ½ வராகனெடை இரசகற்பூரத்தைப் போட்டு மறுபடியும் ஒரு ஜாமம் அரைத்து மாத்திரைகளாகச் செய்துகொள்ள வும்.

கடுரமான சுரத்திற்குத் தக்க அனுபானத்தில் கொடுக்கவும்.

இரசகற்பூரம் சேராது இருக்கும் மற்ற பாதி மருந்தை இரசகற்பூரம் சேர்க்காமல் மாத்திரைகள் செய்து சாதாரண சுரங்களுக்குத் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கவும்.

## 507. கோடாசுழி மாத்திரை (குன்மத்துக்கு)

| | |
|---|---|
| பொரித்த வெங்காரம் | சுத்திசெய்த நாபி |
| சுக்கு | மிளகு |
| கடுக்காய் | திப்பிலி |
| நெல்லிமுள்ளி | சுத்திசெய்த தாளகம் |
| தான்றிக்காய் | ,, பாதரசம் |

இவைகள் வகைக்கு 1½ வராகனெடை

சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு 15 வராகனெடை

இவற்றைக் கல்வத்திலிட்டு முருங்கைச் சாற்றினுல் நைவாக அரைத்துக் குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

இஞ்சிச் சாற்றுடன் தினம் ஒரு மாத்திரையை உட்கொள்ள சூலை, சுரம், சோகம், வயிற்றுவலி, சன்னி பாதம், சுவாச காசம், முதலானவைகள் தீரும்.

முலைப்பாலில் கொடுக்க, வாத பித்த கபத்தினுல் ஏற்படும் சுரங்கள் தீரும்.

## 508. கோடாசூழி மாத்திரை (வேறுவிதம்)

சுத்தி செய்த பாதரசம் சுத்திசெய்த வத்ஸநாபி
சுத்திசெய்த கந்தகம்

இவைகள் வகைக்கு 1 வராகனெடை.

தான்றிக்காய் நெல்லிமுள்ளி
திப்பிலி சுக்கு
மிளகு

இவைகள் வகைக்கு 1 வராகனெடை இவற்றின் சமஎடை கந்தகத்தைச் சேர்த்து கையாந்தகரைச்சாற்றில் 4 ஜாமம் அரைத்துக் குன்றிமணியளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :**

தகுந்த அனுபானத்துடன் உட்கொள்ள 8 வித குன்மம், வாயு முதலான பிணிகள் தீரும்.

## 509. இருமல் 8 வகை, சுரம் 8 வகை இவைகளுக்கு மாத்திரை

ஏலக்காய் திராக்ஷை
பெரீச்சங்காய்

இவைகள் வகைக்கு 4 தோலா

கிராம்பு 2 தோலா பொரித்தவெங்காரம் $2\frac{1}{2}$ [தோலா
சிற்றரத்தை
பேய்மருட்டிவேர் நன்னாரிவேர்

இவைகள் வகைக்கு 2 தோலா

எலுமிச்சம்பழச்சாற்றிலரைத்த அபின் 2 தோலா
கருஞ்சீரகம் 1 தோலா சர்க்கரை $4\frac{1}{2}$ தோலா
நெற்பொரி 4 தோலா ஜாதிக்காய் 2 தோலா
ஜாதிப்பத்திரி 2 தோலா

இவற்றைத் தேன்விட்டு நைவாயரைத்து அம்மான் பச்சை யரிசிக்காய் அளவு மாத்திரைகள் செய்து அரை மண்டலம் வரையில் சாப்பிடவும். வெள்ளாட்டுக் கொழுப்பை சுண்டவைத்துச் சாப்பிடவும்.

## 510. இரசலோக மாத்திரை (குன்மத்திற்கு)

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டு | இந்துப்பு |
| சுத்திசெய்த பாதரசம் | சுத்திசெய்த வெள்ளி |
| பொரித்த வெங்காரம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| காந்தம் | சதுரக்கள்ளி |

இவைகளை சமஎடை எடுத்து நொச்சியிலைச் சாற்றைவிட்டு நன்றுயரைத்து மாத்திரைகள் செய்யவும்.

தகுந்த அனுபானத்துடன் கொடுக்கக் குன்மம் தீரும்.

## 511. குன்மத்திற்கு குக்கிலாதி மாத்திரை

சிந்தில் கொடியைக் கொணர்ந்து மேம்பட்டையை நீக்கிவிட்டு அதைத் துண்டுகளாகச் செய்து அதை எடை போட்டு மொத்தம் 32 பலம் எடுத்துக் கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| குங்கிலியம் | 5 பலம் |
| மிகப்பழைய இரும்பின் தூள் | 2 பலம் |
| கடுக்காய் | தான்றிக்காய் |
| நெல்லிமுள்ளி | |

இவைகள் வகைக்கு 2 பலம். யாவற்றையும் ஒரு பானையிலிட்டு 4 படி தண்ணீரையூற்றி 2 படி கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும்.

| | |
|---|---|
| திரிபலா (கடுக்காய், தான்றிக்காய், நெல்லிமுள்ளி) வகைக்கு | 2 வராகனெடை |
| திரிகடுகு (சுக்கு, மிளகு, திப்பிலி) வகைக்கு | 2 வராகனெடை |

| | |
|---|---|
| சுத்திசெய்த சிவதைவேர் | $1\frac{1}{2}$ வராகனெடை |
| காட்டாமணக்குப் பருப்பு | $2\frac{1}{2}$ வராகனெடை |
| வாயுவிளங்கம் | ,, |
| சீந்தில் சர்க்கரை | ,, |

இவைகளை எல்லாமொன்றுபடக் கலந்து நன்ருக இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து முன்பு தயாரித்த கஷாயத்தில் கலந்து அடுப்பின் மேலேற்றி பக்குவமாய்க் காய்ச்சி ஒரு வராகனெடை வீதம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானம்:** தினமும் ஒரு மாத்திரை வீதம் அரைச்சேர் பாலுடன் 45 நாட்கள் உட்கொள்ள குன்மம், பவுத்திரம், குட்டம், நரம்புச்சிலந்தி, பாண்டு, மேகம், அக்கினி மந்தம், முதலான பிணிகள் தீரும்.

**பத்தியம்:** இச்சா பத்தியம்.

## 512. குங்கிலிய மாத்திரை (குன்மரோகத்திற்கு)

| | |
|---|---|
| குங்கிலியம் 5 பலம் | இரும்புத்தூள் 2 பலம் |
| கடுக்காய் 2 பலம் | தான்றிக்காய் 2 பலம் |
| நெல்லிமுள்ளி 2 பலம் | |

இவைகளை 4 படி தண்ணீரில் போட்டு 2 படி கஷாயமாகக் காய்ச்சிக் கொள்ளவும். கஷாயம் காய்ச்சி அது பக்குவத்திற்கு வரும்பொழுது 32 வராகனெடை எடையுள்ள சீந்தில் கொடியின் பட்டையைத் துண்டுகளாக்கி அதில் போட்டு, மேலும்

சுக்கு, மிளகு, திப்பிலி
இவைகள் வகைக்கு 2 வராகனெடை

| | |
|---|---|
| சுத்திசெய்த சிவதை வேர் | $1\frac{1}{4}$ வராகனெடை |
| ஆமணக்கு விதை | $1\frac{1}{4}$ வராகனெடை |
| வாயுவிளங்கம் | 2 வராகனெடை |
| சீந்தில் சர்க்கரை | 2 வராகனெடை |

இவைகளை இடித்து வஸ்திரகாயஞ் செய்து கஷாயத்தில் கூட்டி பக்குவமாய்க் காய்ச்சி இறக்கிக்கொண்டு ஒருவராகு னெடை வீதம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

மருந்து உட்கொள்ளுமுன் பேதிக்கு சாப்பிட்டு பிறகு மருந்தையுண்ணவேண்டும். இம்மருந்தை நாள் ஒன்றுக்கு ஒரு மாத்திரை பிரமாணம் 45 நாட்கள் கால்படி பசுவின் பாலுடன் கூட்டிச் சாப்பிடவும்.

இவ்விதம் செய்ய குன்மம், சோகம், பவுத்திரம், நரம்புச் சிலந்தி, பாண்டு, மேகம், க்ஷயம், அக்கினிமந்தம் முதலான வியாதிகள் தீரும்.

**பத்தியம் :** இச்சா பத்தியத்துடன் மருந்தை உண்ணவும்.

## 513. தந்தரோகத்திற்குக் கருவேலம் மாத்திரை

கருவேலம்பட்டை 20 பலத்தை இடித்து 2 படி நீருடன் கலந்து அடுப்பின் மேலேற்றி ஒரு படி கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டிக் கொண்டு அதில்

| | |
|---|---|
| கிராம்பு | கற்பூரம் |
| ஜாதிக்காய் | கொட்டைப்பாக்கு |
| தக்கோலம் | |

இவைகள் வகைக்கு ¼ பலம் வீதமெடுத்துச் சூரணம் செய்து வஸ்திரகாயஞ்செய்து கல்வத்திலிட்டு முன் கூறிய கஷாயத்தைச் சிறிது சிறிதாக விட்டு நன்றாக அரைத்து உருண்டைகள் செய்து ஒரு மாத்திரையைத் தாடையில் அடக்கிக்கொள்ள வாயிலுள்ள விரணம், உதட்டின் விரணம், வாயின் துர்நாற்றம், நாக்கின் விரணம் முதலானது தீரும்.

## 514. அஷ்டகுன்மாதிக் குலாந்தக மாத்திரை

| | |
|---|---|
| சுத்திசெய்த வஸ்தநாபி | தாளகம் |
| பாதரசம் | தாம்பிரப்பொடி |
| நெல்லிக்காய் சுந்தகம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து அத்துடன் 3 வராகனெடை சுத்தி செய்த நேர்வாளப் பருப்பையும் கல்வத்தில் போட்டு கையாந்தகரைச் சாற்றைவிட்டு 3 ஜாமங்கள் அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள்செய்து நிழலில் உலர்த்திக்கொண்டு நொச்சியிலைச்சாறு அல்லது இஞ்சிச்சாறு அல்லது தேனுடன் 1 மாத்திரையைக் கொடுக்க சகலவித வயிற்றுவலி குன்மம் முதலான பிணிகள் தீரும்.

## 515. சுவாசகாசம், க்ஷயம் இவைகளுக்கு நீலகண்டரச மாத்திரை

| | |
|---|---|
| சுத்தி செய்த பாதரசம் | சுத்தி செய்த கந்தகம் |
| லோகபற்பம் | தாமிரபற்பம் |
| சுத்திசெய்தவத்ஸநாபி | இலவங்கப்பத்திரி |
| ஏலம் | சித்திரமூலம் |
| வாயுவிளங்கம் | அரேணுகம் |
| கோரைக்கிழங்கு | திப்பிலிமூலம் |
| சுக்கு | நெல்லிமுள்ளி |
| கடுக்காய்த்தோல் | சுத்திசெய்த நேர்வாளப் |
| திப்பிலி | [பருப்பு |

இவைகள் வகைக்கு 1 பலம் வீதம் எடுத்துக்கொள்ளவும். பாதரசம், கந்தகம் பற்பவகை இவைகளைத் தவிர மற்றதை இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு, கல்வத்தில் இரசம், கந்தகம், இவ்விரண்டையும் போட்டு

கஜ்ஜலி (மை) போல்செய்து பற்பத்தையுங் கூட்டியரைத்து சூரணத்தையுங் கலந்து பிறகு தண்ணீர் விட்டரைத்துக் கொண்டைக் கடலைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும்:** திப்பிலிச் சூரணத்தில் ஒரு மாத்திரையைக் கலந்து காலையில் உண்ண க்ஷயம், சுவாசகாசம் தீரும். திப்பிலிச் சூரணத்துடன் சர்க்கரையைக் கலந்து ஒரு மாத்திரையை உட்கொள்ள பிரமியம் தீரும். சுரத்திற்கு வெல்லத் தண்ணீரில் உரைத்துக்கொடுக்க தீரும்.

## 516. இளைத்தல், இருமல் முதலானதற்குத் தூதுவளை மாத்திரை

தூதுவளைப் பழம் 30 கொணர்ந்து அதனுடைய தோலை மட்டிலுமெடுத்து நன்றாகப் பொரித்துக் கொள்ளவும். பழத்திலுள்ள 30 வித்துடன்,

| | |
|---|---|
| சீரகம் | மிளகு |
| திப்பிலி | கிராம்பு |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

தேற்றான்கொட்டைச் சிவல் 4 வராகனெடை

இவைகளை ஒன்றுகூட்டிப் பாலையிலிட்டு சிவக்க வறுத்துக் கொண்டு கல்லுரலிலிட்டிடித்துத் தூள்செய்து வஸ்திர காயஞ் செய்துகொள்ளவும் பிறகு வேண்டியளவு தேனையுங் கூட்டி தேற்றான்கொட்டைப்பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும்:**

ஒரு மாத்திரையை வாயிலடக்கிக்கொண்டு சிறிது சிறிதாக உமிழ்நீருடன் கரைந்து வரும் மருந்தை விழுங்க இருமல் தீரும். க்ஷயம், மூச்சு, கபம் முதலானதும் தீரும்.

## 517. சிலேத்துமத்திற்கு மாத்திரை

| | |
|---|---|
| தூதுவளையிலை | சங்கிலை |
| ஆடாதோடையிலை | துளசியிலை |
| கண்டங்கத்திரியிலை | |

இவைகளைச் சமமாகக் கொண்டு சுத்தம் செய்து வைத்துக் கொள்ளவும்.

ஒரு புதுச்சட்டியில் பாதி தண்ணீர் விட்டு சட்டியின் வாயைத் துணியால் வேடுகட்டி அதன்மேல் இவ்விலைகளை வைத்து மேலே மூடி வேகவைத்துப் பிறகு எடுத்து அவைகளின் சாற்றைப் பிழிந்து அச்சாற்றுடன்

| | |
|---|---|
| சுக்கு | கடுக்காய்த்தோல் |
| மிளகு | திப்பிலி |

இவைகளைச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து கலந்து பிறகு அதை அம்மியின்மேல் வைத்து மெழுகு போல் அரைத்துக் கொட்டைப்பாக்களவு மாத்திரைகள் செய்து உலர வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :**

ஒரு மாத்திரையைத் தேனில் இழைத்துக் கொடுக்க கபம் முதலான சிலேத்தும உபத்திரவங்கள் தீரும்.

## 518. சுவாசகாசத்திற்குக் குங்கிலிய மாத்திரை

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | வாயுவிளங்கம் |
| கோரைக்கிழங்கு | செவ்வியம் |
| கடுக்காய்த்தோல் | நெல்லிக்காய் |
| தான்றிக்காய்த்தோல் | தேவதாரம் |
| புக்கர்வேர் | மரமஞ்சள் |
| இந்துப்பு | உப்பு |
| மூக்கரட்டைவேர் | திப்பிலிமூலம் |

| | |
|---|---|
| கடுகரோகணி | கொடிவேலி வேர் |
| ஏலக்காய் | வசம்பு |
| இலவங்கப்பட்டை | வளையலுப்பு |
| வெட்பாலையரிசி | யானைத்திப்பிலி |

இவைகள் வகைக்கு ½ பலம் வீதமெடுத்துக் கல்லுரலில் இட்டு இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்து கொள்ளவும்.

பிறகு 13 பலம் குங்கிலியத்தை இடித்து அத்துடன் சூரணத்தையும் போட்டு மறுபடியும் நன்ருக இடித்து எல்லாம் ஒன்றுபடக் கலந்து இலந்தையளவு மாத்திரைகள் உருட்டிக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும்:**

தேன் அல்லது நெய்யில் ரோகத்தை அனுசரித்தும் தேகத்தையனுசரித்தும் கொடுக்க விக்கம், க்ஷயம், காசம், சுவாசம், அக்கினிமந்தம், குன்மம், வயிற்றுக்கட்டி, பாண்டு, கிராணி, கிருமி, கபம் முதலான கடின நோய்களும் தீரும்.

### 519. காசம், மூச்சு, இருமம், எலிக்கடி முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| சுத்திசெய்த லிங்கம் | பாதரசம் |
| வெள்ளிப்பொடி | கந்தகம் |
| வத்ஸநாபி | பொரித்த வெங்காரம் |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்துக் கல்வத்திலிட்டு இதற்கு முன்பே கந்தகத்தையும் இரசத்தையும் ஒன்றுகூட்டி மைபோல் அரைத்துக்கொண்டு பிறகு இதர சரக்குகளையும் போட்டு நொச்சியிலைச் சாற்றினல் 3 ஜாமங்கவரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் உருட்டி நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் உட்கொள்ள காசம், மூச்சு, இருமல், எலிக்கடி முதலான நோய்கள் தீரும்.

## 520. காசரோகத்திற்கு மாத்திரை

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | கந்தகம் |
| வத்஭நாபி | இரும்புத்தூள் |
| கொடிவேலிவேர் | கடுக்காய்த்தோல் |
| நெல்லிமுள்ளி | தான்றிக்காய்த்தோல் |
| கிராம்பு | தாளிசபத்திரி |
| ஏலம் | திப்பிலிமூலம் |
| அரேணுகம் | செவ்வல்லிக்கிழங்கு |
| இலவங்கப்பட்டை. | கோஷ்டம் |
| தாம்பிரபற்பம் | சிறுநாகப்பூ |
| பெருங்கோரைக்கிழங்கு | |

இவைகள் சமமாகக் கொள்ளவும். முதலில் கந்தகத்தையும் பாதரசத்தையும் கல்வத்திலிட்டு மைபோல் அரைத்துக் கொண்டு அதில் இரும்புத் தூளையுங்கூட்டி அரைத்துக் வைத்துக்கொள்ளவும். பிறகு மற்றவைகளை கல்லுரலி லிட்டிடித்து சூரணித்து வஸ்திரகாயஞ் செய்து அதையும் அரைத்த மருந்தில் கலந்து எலுமிச்சம்பழச் சாற்றினால் ஒரு நாள் அரைத்து கொண்டைக் கடலைப் பிரமாணம் மாத்திரை கள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**தீரும் வியாதிகள் :** தகுந்த அனுபானத்துடன் கொடுக்க காசம், சுவாசம், க்ஷயம், பிரமியம், மகோதரம், பாண்டு, சூலை, மூத்திரகிரிச்சரம், அரோசகம், கிராணி, கிருமி, உன் மத்தம், குன்மம், வாத பித்த கப ரோகங்கள், விஷ சுரம், அநேகவித தோஷங்கள் முதலான பற்பல நோய்கள் தீரும்.

## 521. நீரிழிவுக்கு திரிகடாதி மாத்திரை

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | நெல்லிமுள்ளி |

| | |
|---|---|
| கடுக்காய்த்தோல் | தான்றிக்காய்த்தோல் |
| வெல்லம் | கற்பூரம் |
| திருகிய தேங்காய்ப்பூ | கடுகு |
| பொரித்த இந்துப்பு | சுத்தி செய்த மயில் துத்தம் |

இலோசக வறுத்துக் கொண்ட எலுமிச்சமரப் பட்டையும் அதன் முள்ளும்

இவைகள் சமயெடை கொண்டு தேனைவிட்டு நன்ருக அரைத்து மைபோலனதும் கொட்டைப் பாக்களவு மாத்திரைகள் உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும் :**

வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் தினம் காலை மாலை இருவேளையும் தேனில் உரைத்து உட்கொள்ள சூரியன் முன் பனி நீங்குவது போல் நீரிழிவு பறந்து போம்.

## 522. இரசசேகர மாத்திரை (குன்மகாச வியாதிக்கு)

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | தாமிரபற்பம் |
| நெல்லிக்காய் கந்தகம் | சுத்திசெய்த வத்ஸநாபி |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | லோஹபற்பம் |
| பொரித்த வெங்காரம் | கிராம்பு |
| சிறுநாகப்பூ | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

| | |
|---|---|
| சங்குபற்பம் | மஞ்சள் நிற ஊமத்தையின் வித்து |
| இலவங்கப்பட்டை | கஸ்தூரி மஞ்சள் |
| வில்வப்பழத்தின் சோறு | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்து யாவற்றையும் கல்வத்திலிட்டு யாவற்றிற்கும் சமயெடை கையாந்தகரைச் சாற்றைவிட்டு 3 நாட்களரைத்து குன்றி மணியளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும் :**

நாள் ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் உட்கொள்ள ஐந்துவித குன்மம், காசம், க்ஷயம், சுவாசம், மந்தஅக்கினி (அக்கினி மந்தம்), சூலை, காமாலை, பித்த அதிசாரம், கிராணி முதலான நோய்கள் தீரும்.

## 523. வித்தியாரச மாத்திரை (குன்மம், பெரும்பாடு, கர்பபாதம் இவைகளுக்கு)

சுத்திசெய்த சுந்தகம் தாளகம்
மனோசிலை நிமிளை
தாமிரபற்பம்

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை வீதம் எடுத்துக் கல்வத்திலிட்டு, திப்பிலிக் கஷாயத்தில் ஒரு நாளரைத்து ஒரு வராகனெடை பிரமாணம் மாத்திரைகள் செய்து கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :** வேளை ஒன்றுக்கு ஒரு மாத்திரை வீதம் கொள்ளுக்கட்டில் (கொள்ளு இரசத்தில்) கலந்துண்ண குன்மம், குடல்வலி, இவ்வகையான கடின நோய்கள் 60 தினங்களில் குணமாகும்.

சிறுதேக்கு சுக்கு
திப்பிலி மிளகு

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை எடுத்துச் சூரணம் செய்து ஒரு மாத்திரையுடன் கலந்து சாப்பிட குன்மம், பெரும்பாடு, கர்ப்பச்சிதைவு முதலான நோய்கள் தீரும்.

சுக்கு திப்பிலி
தேவதாரம் புங்கம்பட்டை
சிறுதேக்கு

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை விதமெடுத்துச் சூரணித்து ஒரு மாத்திரையுடன் கலந்துண்ண மிகுதியான

இரத்த பிரவாகம், சாதாரணப் பெரும்பாடு, கடூரமான இடுப்பு வலி முதலான ரோகங்கள் தீரும்.

### 524. வாதகுன்மத்துக்கு மாத்திரை

சுத்திசெய்த நெல்லிக்காய் கந்தகம்
சுத்திசெய்த பாதரசம்
தாமிரபற்பம்
யவச்சாரம்
சுத்தி செய்த அப்பிரகம்
சுட்டுக் கருக்கிய யானைத் தந்தம்

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்துக் கல்வத்தில் இட்டு கொடிவேலியின் சாற்றில் ஒருநாள் முழுதும் அரைத்து இரண்டு குன்றிமணியெடையுள்ள மாத்திரைகளாகச் செய்து நிழலில் நன்ருக உலரவைத்தெடுத்து ஒரு சீசாவில் அடைத்துக் கொள்ளவும்.

**அனுபானம்:** இம்மாத்திரையில் ஒரு மாத்திரையை வெற்றிலைச் சாற்றில் உரைத்துக் கொடுக்க குன்மம் முதலான நோய்கள் தீரும்.

### 525. குழந்தைகளின் மாந்தத்திற்கு மாத்திரை

சுக்கு
மிளகு
தான்றிக்காய்
திப்பிலி
கடுக்காய்

இவைகள் வகைக்கு ½ பலம்.

சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு 1 பலம்

இவைகளைத் தண்ணீர்விட்டு நைவாய் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து கொள்ளவும்.

ஒரு வேளைக்கு ஒரு மாத்திரை வீதம் கொடுக்க மாந்தம் தீரும். நன்ருக வயிறு கழியும்.

## 526. குழந்தைகளுக்கு மாந்தத்திற்கு மாத்திரை (வேறு விதம்)

வேங்கைப்புலியின் தோல்
பழைய செருப்புத் தோல்
வசம்பு

இம்மூன்றையும் சமமாகக்கொண்டு சுட்டுக் கருக்கி அதில் உத்தாமணிச் சாற்றைவிட்டு நைவாயரைத்து இதற்கு சமயெடை திப்பிலிச் சூரணத்தையுங் கலந்து முலைப்பால் விட்டு மறுபடியும் நன்ருக அரைத்து குன்றிமணியளவு மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும்:**

இம்மாத்திரையைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க மாந்தம் தீரும். உத்தாமணி, நாய்வேளைவேர், நொச்சியின் கொழுந்திலை, பொடுதலையிலை, முருங்கை இலையின் ஈர்க்கு. நுணா ஈர்க்கு முதலியவைகளின் கஷாயத்தில் இவ்வியாதிக்குக் கொடுக்கவும்.

## 527. வசம்பு மாத்திரை (குழந்தைகளின் மாந்தத்திற்கு)

வசம்பு
சிற்றரத்தை
வெள்ளைப்பூண்டு
மிளகு
கருஞ்சீரகம்
கடுகரோகணி
கார்போகரிசி
வாயுவிளங்கம்
கிராம்பு
திப்பிலி
திப்பிலிமூலம்

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ பலம்

உத்தாமணி
பாவட்டை
சிறுசெருப்படி
கருநொச்சி
வெள்ளைச்சாரணை
பொடுதலை

இவைகளைத் தனித்தனியே சாறுபிழிந்து மேற்கூறிய மற்ற சாமான்களுடன் ஒவ்வொரு ரசத்தையும் தனித்தனியே விட்டரைத்து பிறகு தேற்றான்கொட்டைப் பிரமாணம் மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

முலைப்பால் அல்லது வெந்நீரில் ஒரு மாத்திரையை உரைத்துக் கொடுக்க மாந்தம் தீரும்.

2) கடுகரோகணி இலுப்பைப்பூ
சுத்தி செய்த நேர்வாளப் பருப்பு

இவைகள் சமயெடை கொண்டு பாகலிலைச் சாற்றில் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

ஒரு மாத்திரையை வெந்நீரில் இரண்டு மிளகுடன் இழைத்துக் கொடுக்க மாந்தம் தீரும்.

(3) சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு 12 பணவிடை
இலவங்கப்பட்டை அதிமதுரம்
கோஷ்டம் சண்பகமொட்டு

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை வீதமெடுத்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் நைவாய் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் நோயும் :**

இம்மாத்திரையை முலைப்பாலில் உரைத்துக்கொடுக்க அடிக்கடி உண்டாகும் வாந்தி, மயக்கம், வயிற்றுவலி, வயிற்று உப்பிசம் முதலானது தீரும்.

குழந்தையின் தேகத்தையும், வியாதியின் நிலைமையையும் தெரிந்துகொண்டு மாத்திரையைக் கூட்டியும் குறைத்தும் கொடுக்கவும்.

## 528. கோரோசனை மாத்திரை (குழந்தைகளுக்கு)

| | |
|---|---|
| கிரந்திநாயகவேர் | நன்னாரி வேர் |
| நாயுருவி வேர் | கீழாநெல்லிவேர் |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை

| | |
|---|---|
| மான்கொம்பு | அரைத்த சந்தனம் |
| உத்திராக்ஷம் | சீரகம் |
| கடுகரோகணி | |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை

| | |
|---|---|
| கோரேசனை | 1 வராகனெடை |
| சுட்டுக்கருக்கிய ஆமை ஓடு | 1 வராகனெடை |
| செம்பருத்தி விதையிலுள்ள பருப்பு | 5 வராகனெடை |
| வெள்ளைக் களிமண் (நாமகட்டி?) | 5 வராகனெடை |

இவைகளை ஒன்றுகூட்டித் தூள் செய்து கற்பூரவல்லியின் சாற்றில் 3 நாட்கள் இரவு பகலாக விடாமல் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**அனுபானம் :** கற்பூரவல்லிச்சாறு, முலைப்பால், வெந்நீர் இவ்விதமான அனுபானத்தில் ஒரு மாத்திரையை உரைத்துக் கொடுக்க மாந்தம், காமாலை, காமாலைச்சுரம், உஷ்ணகாமாலை முதலான நோய்கள் தீரும்.

## 529. குழந்தைகளின் மாந்தக் கழிச்சலுக்கு மாத்திரை

| | |
|---|---|
| வெங்காயம் | திப்பிலி |
| வாயுவிளங்கம் | ஓமம் |
| மிளகு | சுட்டுக்கருக்கிய ஆமை ஓடு |
| கழற்சிப் பருப்பு | |

இவைகளை சமயெடை எடுத்துக் கல்வத்திலிட்டு பொடுதலைச் சாற்றில் நைவாயரைத்து சிறிய மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**அனுபானம்:** இருமல், சுரம், கழிச்சல் முதலானதற்குக் கிழாநெல்லிச் சாற்றில் ஒரு மாத்திரையை இழைத்துக் கொடுக்க தீரும்.

வயிற்றுப்பிசம், கொமட்டல், வயிறு இரைதல் முதலானதற்கு உத்தாமணியின் கஷாயத்தில் கொடுக்கவும்

சாதாரண வயிற்றுக்கழிச்சலுக்கு ஓமக்கஷாயத்துடன். கொடுக்கத் தீரும். மிகவும் கைகண்ட மருந்து.

## 530. மாந்தக் கழிச்சலுக்கு மாசிக்காய் மாத்திரை

| | |
|---|---|
| காட்டாத்திப்பூ | மாசிக்காய் |
| சீரகம் | கர்கடகசிங்கி |
| இலவம்பிசின் | பெருஞ்சீரகம் (சோம்பு) |

இவைகள் வகைக்கு ஒரு காசிடை வீதமெடுத்து இலேசாக வறுத்துக்கொண்டு கல்வத்திலிடவும்.

| | |
|---|---|
| ஜாதிக்காய் | புளியங்கொட்டையின் மேல் |
| மாதுளை ஓடு | போஸ்துக்காய் [தோல் |
| அதிவிடயம் | |

இவைகள் வகைக்கு 1 காசிடை, இலவங்கப்பட்டை 1 பலம், இவற்றை ஒன்றுகூட்டிக் கஷாயத்தை இரக்கிக் கொண்டு, கல்வத்திலிட்ட மருந்துகளுடன் இக்கஷாயத்தையும் அதிலுள்ள சாமான்களையுங் கூட்டி நன்ருக அரைத்துப் பிறகு காட்டாத்திப்பூவின் சாற்றினுலும் எலுமிச்சம்பழச் சாற்றினுலும் தனித்தனியே அரைத்துச் சிறிய மாத்திரைகளாகச் செய்துகொள்ளவும்.

**தீரும் நோய் :** தேகபலத்தை அனுசரித்துத் தகுந்த அனுபானத்துடன் கொடுக்கக் குழந்தைகளுக்குண்டாகும் வயிற்றுவலி, கடுப்பு, மூலஉஷ்ணம், மாந்தக்கழிச்சல், அதிசாரம், மூலவியாதி முதலான பிணிகள் தீரும்.

## 531. கிராணிக்கு மாத்திரை (பிள்ளைகளுக்கு)

| | |
|---|---|
| புளியங்கொட்டையின் மேற்றோல் | காசிக்கட்டி |
| | ஓமம் |
| ஜாதிக்காய் | அதிவிடயம் |
| மாம்பருப்பு | பொன்முசுட்டைவேர் |

இவைகள் சமஎடை கொண்டு கல்லுரலிலிட்டிடித்துப் பிறகு கல்வத்திலிட்டுப் புளித்த மோரைவிட்டு நைவாய் அரைத்துக் குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

ஒரு மாத்திரையை வெந்நீரில் உரைத்து உள்ளுக்குக் கொடுக்க, கிராணி, கழிச்சல், சுரம் முதலானது தீரும்.

கைகண்ட மருந்து.

## 532. சுரத்திற்கு மாத்திரை (பிள்ளைகளுக்கு)

| | |
|---|---|
| கடுகரோகணி | செங்கழுநீரிலைச்சாறு |

இவைகளை அரைத்து சுழற்சிக்காயளவு மாத்திரைகளாய் உருட்டி நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

பிள்ளைகளுடைய தேகபலத்தையும், வியாதியையும் அனுசரித்து ஒரு மாத்திரையை முலைப்பாலில் உரைத்து ஒரு பாலாடை (சங்கு) அளவு கொடுக்கவும்.

அம்மருந்தையே உடம்பின் மீதும் பூச நோய் தீரும்.

## 533. கணம், சுரம், அக்கரக்காய்ச்சல் குளிர் முதலானதற்கு மாத்திரை

| | | | |
|---|---|---|---|
| திருமண் (நாமக்கல்) | 5 பலம் | பருத்திப் பருப்பு | 5 பலம் |
| சீரகம் | 2 பலம் | சந்தனம் | 2 பலம் |
| நன்னாரிவேர் | 3 பலம் | நாயுருவி வேர் | 3 பலம் |
| கிரந்திநாயகம் | 3 பலம் | கீழாநெல்லிச் சமூலம் | 3 பலம் |
| கோரோசனை | 1 பலம் | | |
| கடுகரோகணி | 1 பலம் | ஆமை ஓடு | 1 பலம் |

இவைகளைக் கற்பூரவல்லிச் சாற்றிலரைத்து குன்றிமணி அளவு மாத்திரைகள் உருட்டி நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :**

இம்மாத்திரையை கற்பூரவல்லிச் சாற்றில் இழைத்துக் கொடுத்திட மாந்தம், கணம், அக்கரக்காய்ச்சல் முதலானது தீரும்.

## 534. கணத்திற்கு மாசிப்பச்சை மாத்திரை

மாசிப்பச்சை　　கோஷ்டம்
ஏலக்காய்　　விலாமிச்சைவேர்
சண்பகப்பூ

இவைகள் வகைக்கு 1 காசிடை.

கோரோசனை 3 காசிடை　　ஜாதிப்பத்திரி
அதிமதுரம்

இவைகள் வகைக்கு 1 வராகனெடை யாவற்றையும் கல்வத்திலிட்டு நிலவேம்பு வேரின் சாற்றிலரைத்து கடலைப் பிரமாணம் உருண்டைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் நோயும் :**

ஒரு மாத்திரையை முலைப்பாலில் உரைத்துக்கொடுக்க உடனே வயிற்றுவலி, கடுப்பு, கணச்சூடு இவைகள் ஒழியும்.

## 535. மாந்த சுணத்துக்கு மாத்திரை (பிள்ளைகளுக்கு)

| | |
|---|---|
| அதிமதுரம் | கர்கடகசிங்கி |
| கம்பிப்பிசின் | கிராம்பு |
| ஓமம் | சதகுப்பை |
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| மாதுளை ஓடு | இலவங்கப்பத்திரி |
| ஜாதிப்பத்திரி | அதிவிடயம் |
| பெருமரப்பட்டை | வாயுவிளங்கம் |
| திப்பிலிமூலம் | பச்சைக்கற்பூரம் |
| சீரகம் | கஸ்தூரி மஞ்சள் |
| சந்தனத்தூள் | ஜாதிக்காய் |
| ஏலக்காய் | கோரோசனை |

இவைகள் வகைக்கு 1 தோலா.

பச்சைக் கற்பூரம், கோரோசனை இவ்விரண்டைத்தவிர மற்றவைகளை இடித்துத் தூள்செய்து ஒரு பானையில் துளசியிலையை நன்ருகப் பரப்பி அதன் நடுவில் இந்த சரக்குகளைப் போட்டு, மேலும் துளசியிலையைப் போட்டு 4 படி தண்ணீர் விட்டு அடுப்பின்மேல் வைத்து $\frac{1}{4}$ படியாகும்வரை சுண்டக் காய்ச்சி இக்கஷாயத்தினுல் ஷெ சரக்குகளை நைவாயரைத்து வெந்த துளசியிலை, கோரோசனை, பச்சைக்கற்பூரம் இவைகளையும் அத்துடன் சேர்த்து நன்ருக அரைத்து மாத்திரைகளாக உருட்டிக் கொள்ளவும்.

அனுபானமும், தீரும் வியாதியும்:

வெந்நீரில் உரைத்துக் கொடுக்க அநேக சுரங்கள், வாத பித்த சிலேத்துமத்தாலேற்படும் சுரங்கள், கிரந்தி, விரணம் முதலான பிணிகள் தீரும்.

தூதுவளை துளசி

கஞ்சாங்கோரை மாதுளை

கண்டங்கத்திரி

இவைகளை வேடுகட்டி வேகவைத்து சாற்றைப் பிழிந்து கொண்டு இச்சாற்றில் மாத்திரையை உரைத்துக் கொடுத்து மேலும் வெந்நீரைக் குடிக்க வயிறு நன்றாகக் கழியும்.

மாதுளையிலையை வேகவைத்து சுண்டிய நீரில் மருந்தைக் கொடுக்க வயிறு கழிதல் நிற்கும்.

மேலும் பாச்சோற்றிப் பூண்டின் சாற்றிலும் இழைத்து தேற்றான்கொட்டைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நல்ல நாளில் சாப்பிட குணந்தரும்.

**பத்தியம்:** கத்தரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, தூதுவளை வற்றல், துவரம்பருப்பு இவைகளைக் கூட்டவும்.

## 536. ஜலதோஷத்திற்கு மாத்திரை

விடத்தாரையிலை ஆவாரையிலை

ஆவாரம் வித்து

இவைகள் சமமாகக்கொண்டு ஒரு பானையிலிட்டு எருமையின் மோரைக் கலந்து பானையின் வாயைத் துணியால் மூடி அடுப்பின் மேலேற்றி, மோர் முழுவதும் சுண்டும்வரைக் காய்ச்சி அதை எடுத்துத் துணியில் பொட்டணங்கட்டிப் பானையில் மறுபடியும் மோரை விட்டுப் பானையின் வாயைத் துணியால் மூடி நன்றாகக்கட்டி அதன்மேல் இப்பொட்டணங்களை வைத்து புட்டவியலாக அவித்துப் பிறகு அதை எடுத்து நைவாய் அரைத்து வேண்டிய பரிமாணத்தில் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

அனுபானமும். தீரும் வியாதியும்.

எருமைத் தயிரில் ஒரு மாத்திரையை உரைத்துக் கொடுத்திட சளி, ஜலதோஷம் தலைவலி முதலானது தீரும்.

## 537. விரணம், சிலந்தி முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| கொடிவேலி வேர்ப்பட்டை | 2 பலம் |
| பறங்கிப்பட்டை | 5 பலம் |
| புளியம்புறணி சுட்ட கரி | $1\frac{1}{4}$ பலம் |

கொடிவேலிவேர்ப் பட்டை, பறங்கிப்பட்டை இந்த இரண்டையும் முதலில் பாலில் வேகவைத்துக்கொள்ளவும். பிறகு இம்மூன்றையும் கல்வத்திலிட்டு, பெருங்கரந்தைச் சாறுவிட்டு 4 ஜாமங்கள் அரைத்து கடுக்காயளவு மாத்திரைகள் செய்து உலர்த்திக்கொள்ளவும்.

தினமும் 1 உருண்டை வீதம் உட்கொள்ள புண், சிலந்தி இவைகள் தீரும். இச்சாபத்தியமிருக்கவும்.

## 538. ஒட்டியபுண், புரைகளுக்கு உருண்டை

(1) பாதரசம் வெள்ளைப்பாஷாணம்
துருசு திப்பிலி

இவைகள் வகைக்கு 1 பணவிடை, கடுக்காய்த்தூள் 6 பணவிடை இவைகளைக் கல்வத்திலிட்டு மருதோன்றிச் சாறு, வெற்றிலைச்சாறு, வெல்லத்தண்ணீர் இவைகளை முறையே தனித்தனியே விட்டு ஒவ்வொரு ஜாமம் அரைத்துப் பாதரசம் முறிந்து ஒன்றானபின் நல்ல வெல்லத்துடன் சேர்த்து 4 உருண்டைகளாக உருட்டி வைத்துக்கொள்ளவும்.

வேளை ஒன்றுக்கு 2 உருண்டைகள் வீதம் காலையிலும் மாலையிலும் உட்கொள்ள ஒட்டியபுண், புரை முதலியவைகள் வெகு எளிதில் குணமாகும்.

**பத்தியம் :** உப்பு, புளிப்பு, புகையிலை முதலானவைகளை நீக்கவும்.

(2) தூதுவளைவேர் குறிஞ்சான்வேர்
ஓமம்

இவைகளைச் சமமாக எடுத்துக் கல்வத்திலிட்டுத் தெளிந்த குப்பைமேனிச் சாறுவிட்டு நன்றாக அரைத்த பாதரத்தையுஞ் சேர்த்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும்.

**அனுபானம் :**

இவைகளைத் தினம் இருவேளையும் எருமை வெண்ணெயுடன் முழுங்கவும்.

**பத்தியம் :** கைப்பு, புளிப்பு பதார்த்தங்களைத் தள்ளவும். ராமுள்ளி, நெற்றலி, குளத்து குறவை முதலான மீன்களைச் சுண்டிச் சாப்பிடவும். இவ்விதம் 9 நாளைக்கு மருந்து சாப்பிடவும். 11 வது நாளன்று தலை முழுகவும். மற்ற நாட்களில் இரண்டு வேளைகளிலும் தலை முழுகவும். வெந்நீரையே எக்காரியத்திற்கும் உபயோகிக்கவும். இவ்வாறு செய்தால் புண்கள், புரைகள் முதலானவை தீரும்

## 539. வாயுவுக்கு உருண்டை

இந்துப்பு கடுகரோகணி
வெள்ளைப்பூண்டு பெருங்காயம்

இவைகளைப் பச்சையாகவும்.

| | |
|---|---|
| சீரகம் | கருஞ்சீரகம் |
| ஓமம் | மிளகு |
| நாய்க்கடுகு | திப்பிலி |
| சுக்கு | |

இவைகளை வறுத்துக்கொண்டும் பின்பு எல்லாவற்றையும் ஒன்ருகக் கல்லுரலிலிட்டிடித்துத் துளாக்கியபின் எலுமிச்சம்பழச் சாறுவிட்டு நன்ருக அரைத்து கழற்சிக் காயளவு உருண்டைகள் செய்துகொள்ளவும்.

**அனுபானம் :** சுக்குக் கஷாயத்தில் சாப்பிட வாயு முதலானது தீரும்.

### 540. காய்ச்சல், குளிர், தலைவலி, செரியாக் குன்மம், பேய் முதலானதற்கு மாத்திரை

| | |
|---|---|
| சுக்கு | பூண்டு |
| மிளகு | திப்பிலி |
| பெருங்காயம் | |

இவைகளைச் சரியெடை எடுத்து நொறுக்கிக் கல்வத்தில் இட்டு

| | |
|---|---|
| குப்பைமேனிச் சாறு | திருகுகள்ளிச் சாறு |
| ஊமத்தஞ் சாறு | எலுமிச்சம்பழச்சாறு |

இச்சாறு வகைகளில் முறையே ஒவ்வொரு ஜாமமும் அரைத்து உருண்டை செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும் :**

குளிர் காய்ச்சலானுல் குப்பைமேனிச் சாற்றிலும், தலைவலிக்கும் செரியாக் குன்மத்திற்கும் முலைப்பாலிலும்

உட்கொள்ளவும். பேய், பிசாசுகளுக்கு எலுமிச்சம்பழச் சாற்றில் சாப்பிடவும். இந்நோய்களனைத்தும் தீரும்.

## 541. பல்விக்கம், பல்லசைவு, பல் புழுவுக்கு உருண்டை

பெருங்காயம் சிறுக்காரம்

அண்ணபேதி தேவதாரம்

சரளதேவதாரம்

இச்சரக்குகளை யொன்றுகூட்டி இடித்துச் சூரணஞ் செய்து கருவேலம்பட்டைக் கஷாயமிட்டு நன்ருக அரைத்து உருண்டைகள் செய்து வலியிருக்கும் பற்களில் அடக்கிவர பற்கள் இறுக்கும், வீக்கமும் தீர்ந்து பல் புழுவும் விழும்.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்
60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## விசேஷமான இரசவகை மருந்துகள்

# விசேஷமான இரசவகை மருந்துகள்

## 542. வசந்தகுசுமாகரம்

| | |
|---|---|
| தங்கபற்பம் | 10 வராகனெடை |
| வெள்ளி பற்பம் | 10 வராகனெடை |
| வங்க பற்பம் | 15 வராகனெடை |
| நாக பற்பம் | 15 வராகனெடை |
| காந்த சிந்தூரம் | 15 வராகனெடை |
| பவளபற்பம் | 20 வராகனெடை |
| முத்து | 20 வராகனெடை |
| இரசசிந்தூரம் | 20 வராகனெடை |
| அப்பிரக சிந்தூரம் | 20 வராகனெடை |

இவ்விதம் பற்பங்களை எடுத்துக்கொள்ளவும்.

முதலில் முத்தை புளித்த தயிரில் ஒரு நாள் முழுவதும் ஊறவைத்துப் பிறகு சுத்தமான தண்ணீரில் கழுவி கல்வத்திலிட்டுப் பன்னீரால் 4 ஜாமமரைத்துப் பிறகு அத்துடன் இரச சிந்தூரத்தைக் கூட்டி மறுபடியும் பன்னீர் விட்டு 8 ஜாமம் அரைத்து மற்ற மருந்துகளைச் சேர்த்துப் பசும்பால் விட்டு 21 ஜாமம் அவ்விதமே அரைக்கவும். பிறகு

ஆடாதோடைச்சாறு
ஏஸ்தாளி வாழைக்கிழங்கின் சாறு
மலாக்கா சந்தனக்கஷாயம்
செந்தாமரைப்பூவிதழின் சாறு
ஜாதிப்பூவின் சாறு
ஈரமஞ்சளின் சாறு
தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு
வெந்தாமரைப் பூவிதழின் சாறு

இவ்விதச் சாறுகளில் முறையே ஒவ்வொரு சாற்றிலும் 21 ஜாமம் வீதம் தனித்தனியே அரைத்துக்கொள்ளவும்.

பிறகு கஸ்தூரி 1 தோலாவையுங் கூட்டிப் பன்னீர் விட்டு 21 ஜாமமரைத்து கடைசி முறையாக கடப்பன்பூவின் சாற்றில் 21 ஜாமமரைத்து மாத்திரைகளாகவோ அல்லது

தூளாகவோ எவ்விதம் வேண்டுமோ அவ்விதம் செய்து உலரவைத்துப் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

இதன் பரிமாணம்: தேகபலத்தை அனுசரித்துக் குன்றிமணியெடை முதல் கூட்டியும் குறைத்தும் கொடுக்கவும்.

**இதற்கு அனுபானமும், இதனல் தீரும் வியாதிகளும்:**

தேன் 1 வராகனெடை, நெய் 2 வராகனெடை, கற்கண்டு 3 வராகனெடை இவைகளை ஒன்று கலந்து இத்துடன் மருந்தை உட்கொள்ள மேகரோகம், சோஷம், உஷ்ணத்திலேற்படும் இருமல், தாகம், இரத்தவாந்தி, இரத்தபேதி, நீரடைப்பு, நீரிழிவு, கல்லடைப்பு, முதலான நோய்கள் தீரும்.

மேலும் இந்த மருந்து பலரோகங்களைத் தீர்க்க வல்லதாகையால் அந்தந்த நோய்களுக்குத் தகுந்த அனுபானத்துடன் கஷாயத்திலும் சேர்த்துக் கொடுக்க அந்தந்த வியாதிகளை இம்மருந்து விரைவில் குணப்படுத்தும்.

வியாதி இல்லாதவர்களுக்கு 1 குன்றிமணியெடை மருந்தை முன்பு கூறிய அனுபானங்களில் கொடுக்கச் சரீரத்தில் விருத்ததரை (விருத்தாப்பிய நிலைமை) சீக்கிரம் அணுகாது. கண்களில் பிரகாசமேற்படும். சரீரத்தில் பலம், அழகு, காந்தி முதலியவைகள் அதிகரிக்கும்.

**பத்தியம்:** அரிசி, கோதுமை, பசுவின் பால், பசுவின் நெய், சர்க்கரை, நிரோகிக்கு ஆகாராதிகளில் நிபந்தனை இல்லை.

ரோகம் உள்ளவர்கள் மட்டிலும் ரோகத்தை அனுசரித்துப் பத்தியம் இருத்தல் அவசியம்.

## 543. வசந்தகுசுமாகரம் (மற்ருெருவிதம்)

தங்கபற்பம் பங்கு 2
வெள்ளி பற்பம் பங்கு 2
அயக்காந்த பற்பம் பங்கு 3
கிருஷ்ணுப்பிரகபற்பம் பங்கு 4
முத்துபற்பம் பங்கு 4
வெள்ளீய பற்பம் பங்கு 3
நாக பற்பம் பங்கு 3
இரசசெந்தூரம் பங்கு 4
பவள பற்பம் பங்கு 4

இவைகளைக் கல்வத்திலிடவும். பிறகு

பசுவின் பால்
ஆடாதோடைப்பூவின் சாறு
மஞ்சள் சாறு
வாழைக்கிழங்கின் சாறு
மல்லிகைப்பூவின் சாறு
இக்ஷுகணசீதகஷாயம்
மகிழம்பூவின் சாறு
மரமஞ்சள் சாறு
தாமரைப்பூவின் சாறு

இவைகளால் முறையே தனித்தனியாக இரண்டு ஜாமம் வீதம் எவ்வேழு தடவை அரைத்து கடைசியாக கஸ்தூரிக் கலவை நீரினல் அரைத்து இரண்டு குன்றிமணியெடை வீதம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திப் பத்திரப் படுத்தவும்.

**அனுபானம் :** சீனிசர்க்கரை, நெய், தேன்,

**தீரும் நோய்கள் :** சாரீர மானஸ ரோகங்களைப் போக்கும். க்ஷயம், மதுமேகம், நரை, மூப்பு இவைகளைப் போக்கும். வீரியம், உத்ஸாகம், தேஜஸ், சுகம் இவைகள் அதிகரிக்கும்.

## 544. வசந்தகுசுமாகரம் (மற்ருெரு விதம்)

தங்கபற்பம் 1 பலம்
வெள்ளி பற்பம் 2 பலம்
அப்பிரகபற்பம் 4 பலம்
வங்க பற்பம் 1 பலம்

| | |
|---|---|
| வெள்வங்க பற்பம் 1 பலம் | காந்த பற்பம் 1 பலம் |
| இரச பற்பம் 4 பலம் | முத்து பற்பம் 4 பலம் |

இவைகளைக் கல்வத்திலிட்டுப் பசுவின் பால்விட்டு ஒரு நாளும், கருப்பஞ்சாற்றில் ஒரு நாளும், ஆடாதோடைச் சாற்றில் ஒருநாளும், சுத்தமான தண்ணீரில் ஒரு நாளும், வெட்டிவேர்க் கஷாயத்தில் ஒருநாளும், மஞ்சள் நீரில் ஒரு நாளும், வாழைக்கிழங்கின் சாற்றில் ஒருநாளும் இவ்விதம் தனித்தனியே அரைத்துப் பிறகு ஒரு வராகனெடை அளவு உள்ள வில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானம்:** தினம் இருவேளையும் வேளை ஒன்றுக்கு ஒரு குன்றியெடை மருந்தைத் தேன் அல்லது சர்க்கரையில் கலந்துண்ணவும். இவ்வாறு செய்ய மேககக்ஷயம், பித்தக்ஷயம் பிரமை முதலான நோய்கள் தீரும்.

## 545. வஸந்தகுசுமாகரம் (மற்றொருவிதம்)

| | | | |
|---|---|---|---|
| தங்கம் | 3 வராகனெடை | பாதரசம் | 4 வராகனெடை |
| வெள்ளி | 3 வராகனெடை | அப்பிரகம் | 4 ,, |
| வெள்வங்கம் | 4 ,, | பவளம் | 4 ,, |
| காந்தம் | 4 ,, | முத்து | 4 ,, |

இவைகளின் பற்பங்களை முறையே கொண்டு கல்வத்தில் இட்டு

| | |
|---|---|
| பசுவின்பால் | கருப்பஞ்சாறு |
| தாமரைப்பூவின் சாறு | சண்பகப்பூவின் சாறு |

இவைகளை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சாறுவீதம் விட்டுத் தனித்தனியே அரைத்துப் பிறகு ½ வராகனெடை புனுகையுஞ் சேர்த்து 1 நாள் முழுவதும் அரைத்து மாத்திரைகளாகவோ அல்லது தூளாகவோ செய்துகொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

தினம் இருவேளையும், அரைமண்டலம் வரையில் தேன், நெய், சர்க்கரை இவ்வித அனுபானங்களில் கொடுக்க பாண்டு, கிராணிசூலை, மூத்திரக்கிரிச்சரம், மூல வியாதி, மேகம், நெஞ்சுவலி க்ஷயம், காசம் முதலான பிணிகள் தீரும்.

## 546. சுவர்ணமால்ய வசந்தம்

முதலில் மடல் துத்தத்தைக் கொணர்ந்து மூசையில் போட்டுக் கொல்லன் உலையில் வைத்துத் துருத்தியைக் கொண்டு மூசை சிவக்கும் வரையில் ஊதி அதை கோமூத்திரத்தில் போட்டு சுருங்கக் கொடுக்கவும். இவ்விதம் மும்முறை செய்து மறுபடியும் அவ்விதமே எலுமிச்சம்பழ ரசத்தில் மும்முறை சுருக்கங் கொடுக்கவும். இவ்விதம் செய்ய மடல் துத்தமானது சுத்தியாகும்.

பிறகு புளித்தமோர் அல்லது எலுமிச்சம்பழ ரசத்தில் இரண்டு ஜாமம் முத்தை ஊறவைத்து எடுக்க முத்து சுத்தியாகும். மோர் அல்லது பழரசத்தில் இரண்டு கல் உப்பையுங் கூட்டி ஊறவைக்கவும். இலிங்கத்தை இவ்விதமே எலுமிச்சம்பழ ரசத்தில் 1 ஜாமம் அரைக்க சுத்தியாகும்.

**மருந்து செய்யும் முறை :**

| | | | |
|---|---|---|---|
| தங்கம் | 1 வராகனெடை | லிங்கம் | 3 வராகனெடை |
| முத்து | 2 வராகனெடை | மிளகு | 4 வராகனெடை |

மடல்துத்தம் 4 வராகனெடை

இவைகளில் லிங்கத்தை முதலில் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றில் ஒரு ஜாமமரைத்துத் தனியே வைத்துக் கொள்ளவும். பிறகு அதே கல்வத்தில் முத்தைப் போட்டு ஒரு ஜாமம் அரைத்து இத்துடன் ஒரு வராகனெடை தங்க பற்பத்தையுங் கூட்டி பிறகு அரைத்த லிங்கத்தின் விழுது,

மிளகு	மடல் துத்தம்
பசுவின் வெண்ணெய்

இவைகளையும் சேர்த்து எலுமிச்சம்பழச் சாற்றை விட்டு வெண்ணெயின் கவிச்சி (துர்க்கந்தம்) நீங்கும் வரையில் 4 அல்லது 5 நாட்கள் வரை நைவாய் அரைத்து நீளமான மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் நோயும் :**

நெடுநாளைய ஜிர்ணஜுரம், அதிசாரம், க்ஷயரோகம், பித்தக்ஷயம், மேகக்ஷயம், மேகரோகம், இரத்தபித்தம், வாந்தி, விக்கல், இருமல், பெரும்பாடு. அக்கினிமந்தம் முதலான வியாதிகள் தீரும்.

## 547. கனகசுந்தர ரசம்

| | |
|---|---|
| தங்க பற்பம் | வெள்ளி பற்பம் |
| வத்ஸநாபி | பாதரசம் |
| வெங்காரம் | லிங்கம் |
| நிமிழை பற்பம் | காந்த பற்பம் |
| அப்பிரக பற்பம் | லோகபற்பம் |
| தாமிர பற்பம் | கருவங்க பற்பம் |

இவைகள் சமயெடை, மொத்த எடைக்குச் சமபாகம் கந்தகத்தைச் சேர்த்து கொடிவேலியின் கஷாயத்தில் 2 ஜாமம் அரைக்கவும். பிறகு நன்றுக உலர்த்தி வஜ்ஜிரக் குகையில் போட்டு வாயை மூடிச் சீலைமண் செய்து குக்குட புடத்தில் எரிக்கவும்.

ஆறியபின்பு அத்துடன்

சுக்கு, மிளகு, திப்பிலி இவைகளின் சூரணத்தைச் சமயெடை போட்டு நன்றுகக் கலந்து வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :**

ஒரு குன்றிமணியெடை மருந்தை இஞ்சிச்சாற்றில் கலந்துண்ண சன்னிபாதம் தீரும். வாந்திக்கு நெய்யில்

கலந்து கொடுக்கவும். பித்தஜுரத்திற்குத் தேனிலும், சிலேத்துமஜுரத்திற்குத் திப்பிலிச் சூரணத்திலும், பித்த ஜுரத்திற்குச் சந்தனத்திலும், சிலேத்தும வாதஜுரத் திற்கு நல்லெண்ணெய்யிலும், வாதபித்த ஜுரத்திற்குப் பெருங்காயத்திலும், சூலைக்கு நிலப்பனங்கிழங்கின் சாற்றி லும், மற்ற நோய்களுக்குத் தகுந்த அனுபானத்திலும் கொடுக்க சகல பிணிகளும் தீரும்.

### 548. கனகசுந்தர ரசம் (மற்றொரு விதம்)

| | |
|---|---|
| வாலை ரசம் | சுவர்ணநிமிழைப்பற்பம் |
| காந்த சிந்தூரம் | அப்பிரக சிந்தூரம் |
| வங்க பற்பம் | வெள்வங்க பற்பம் |

இவைகள் வகைக்கு 10 வராகனெடை

பாலில் சுத்திசெய்த நெல்லிக்காய்கந்தகம் 60 வராக னெடை

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | |

இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ சேர் விதம் எடுத்துக் கஷாயம் இறக்கி, எல்லா மருந்துகளையும் கல்வத்திலிட்டு இக்கஷா யத்தையும் விட்டு 3 ஜாமம் அரைத்து வில்லை செய்து உலர வைக்காது ஒரு அகலில் வைத்து மேலொரு அகலை மூடிச் சீலைமண் செய்து ஒரு ஜாண் குழிதோண்டி அதில் 4 விரல் உயரம் மணலைப் பரப்பி அதனடுவில் அகலை வைத்து மேலும் மணலைப்போட்டு குழியை நன்றாக மூடி இரண்டு ஜாண் அகலம், இரண்டு ஜாண் நீளம், இரண்டு ஜாண் உயரத்தில் காட்டெருவை அடுக்கிப் புடம்போடவும். புடம் தானாக எரிந்து ஆறியதும் மருந்தை எடுத்து அத்துடன்

சுக்கு 40 வராகனெடை மிளகு 40 வராகனெடை
திப்பிலி 40 வராகனெடை

இவைகளின் சூரணத்தையும் கலந்து கொள்ளவும்.

பிறகு சுக்கு, மிளகு, திப்பிலி இவைகள் வகைக்கு $\frac{1}{2}$ சேர் வீதம் எடுத்து அதில் 12 சேர் தண்ணீரையூற்றி 3சேர் கஷாயமாகக் காய்ச்சி இறக்கிக்கொண்டு, இக்கஷாயத்தை விட்டு மருந்தை நைவாயரைத்து மாத்திரைகள் அல்லது தூள்செய்து கொள்ளவும்.

மருந்தின் பரிமாணம் : 1 குன்றிமணியெடை

**இதனால் தீரும் வியாதிகள் :**

மூலவியாதி, வயிற்றுசூலை, கடினமான கண்ணோய், திரிதோஷங்களினுலேற்படும் க்ஷயரோகம், இருமல், சுவாசம், அக்கினி மந்தம், சுரம், காதுவலி, கபாலசூலை, பல்வலி, பீனிசம், நெஞ்சுவலி, ஒருபக்கவாதம், தனுர் வாதம், நடுக்கல்வாதம், மூர்ச்சைவாதம், ஜீர்ணசுரம் முதலான பற்பல நோய்கள் தீரும்.

**இதற்கு அனுபானம் :**

வாதசுரத்திற்கு நெய்' பித்தசுரத்திற்குத் தேன், சிலேத்தும சுரத்திற்குத் திப்பிலிச் சூரணம், வாத பித்தத்திற்கு 5 வராகனெடை செஞ்சந்தனத்தின் கஷாயம், பித்தவாயுவுக்கு நெய், சிலேத்தும பித்தசுரத்திற்கு இஞ்சிச்சாறு, சன்னிபாத சுரத்திற்கு நொச்சிப் பட்டையின் சாறு, பல்வலி, கபால சூலை, கண்வலி, தலைவலி, ஜீரண சுரத்திற்குக் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த் தோல்: நெல்லிமுள்ளித் தோல், இவைகளின் கஷாயம் அல்லது இஞ்சிச் சாறு, மூர்ச்சை வாதம், ஏகாங்க வாதம், தனுர்வாதம் இவைகளுக்குக் குமிழம்வேரின் கஷாயம், பீனிசத்திற்குப் பால்; பாண்டு, க்ஷயம், இருமல், காமாலை இவைகளுக்கு நெய் கூட்டிய மிளகுப்பொடி, அக்கினிமந்தம், தொப்புள் சுற்றிலுமுண்டாகும் வலி இவைகளுக்கு வாயுவிளங்கம் ஓமம் இவ்விரண்டின் கஷாயம், வரக்ஷசுரம், அரோசகம் இவைகளுக்கு வாழைப்பழம், ஸ்திரீகளுக்கு உண்டாகும் சூதகவலிக்கு வாலேந்திரபோலம், இவ்வாறான அனுபானங்களில் கொடுக்கவும். கைகண்ட மருந்து.

## 549. சுவர்ணபூபதி ரசம்

| | |
|---|---|
| தங்கஇரேக்கு | 5 வராகனெடை |
| சுத்திசெய்த பாதரசம் | 5 வராகனெடை |

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றில் 4 ஜாமம் அரைத்து பிறகு அதை காடியில் கழுவி கொடிவேலியின் கஷாயத்தில் டோலாயந்திர முறைப்படி 4 ஜாமம் வரையில் நன்றாக வேகவைத்து பிறகு தண்ணீரில் சுத்தமாகக் கழுவி மறுபடியும் கல்வத்திலிட்டு செருப்படிச் சாற்றில் 4 ஜாமம் அரைக்கவும். அதையெடுத்து தண்ணீரில் கழுவி கல்வத்திலிட்டு சுத்திசெய்த கந்தகம் 20 வராகனெடையும் கூடப்போட்டு மைபோல் 4 ஜாமம் அரைக்கவும்.

ஒரு ஓட்டில் இரசகற்பூரத்தை வைத்து அடுப்பின் மேலேற்றி அடுப்பின்கீழ் ஒரு அகலை வைத்து இலுப்பை எண்ணெய் ஊற்றி அதில் ஒருவிரல் கனமான திரியை வைத்து 2 ஜாமம் எரித்து பசுவின்பாலில் இரசகற்பூரத்தை சுருக்கங் கொடுக்கவும்.

பிறகு அரைசேர் இரசசிந்தூரத்தின் பெரிய கட்டிகளை எடுத்து முன்பு இரசகற்பூரத்திற்குக் கூறியபடி 2 ஜாமம் ஆடாதோடைச்சாற்றில் சுருக்கங் கொடுக்கவும். இதே ஓட்டில் மறுபடியும் 1 சேர் லிங்கத்தை வைத்து முன்பு கூறியபடியே 4 ஜாமம் வேப்பிலைச்சாற்றில் சுருக்கங் கொடுக்கவும்,

இவ்விதம் மேற்கூறிய $\frac{1}{4}$ சேர் இரச கற்பூரம், $\frac{1}{2}$ சேர் இரசசிந்தூரம், 1 சேர் லிங்கம் இவைகளை கந்தகத்தின் (கஜ்ஜலியில்) மையில் கூட்டி இஞ்சிச்சாற்றில் 12 ஜாமம் அரைத்து மாத்திரைகள் அல்லது தூள் செய்துகொண்டு பத்திரப்படுத்தவும்.

**மருந்தின் பரிமாணம்:** ஒரு குன்றிமணியெடை.

அஜீரண சுரத்திற்கு $1\frac{1}{2}$ குன்றிமணியெடை, ஜீரண சுரத்திற்கு 2 குன்றிமணியெடை, தருணசுரத்திற்கு $1\frac{1}{2}$

குன்றிமணியெடை, விஷபேதிக்கு 2 குன்றிமணியெடை, சன்னிபாதம் முதலான சகல வியாதிகளுக்கும் 3 குன்றி மணி எடை.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

அஜீரண சுரத்திற்கு ஆடாதோடையிலையும், வேப்பம் பட்டையும் கலந்து செய்த கஷாயம்; தருண சுரத்திற்கு இஞ்சி, அரத்தை, கோஷ்டம் இவைகளின் சாறு; விஷ பேதிக்கு இஞ்சி, ஓமம், கோஷ்டம், கண்டத்திப்பிலி, வெற்றிலை இவைகளின் சாறு; சகல விஷாதிகளுக்கும் விஷங்களுக்குத் தக்க அனுபானம்; அதிசாரத்திற்கு அதிவிடயம், கிராப்பு, வெட்டத்திருப்பி இம்மூன்றின் கஷாயம்; சகல வியாதிகளுக்கும் 1 வராகனெடை மருந்துடன் சுக்கு, ஓமம் இவ்விரண்டையும் மோருடன் அரைத்துக் கலந்து கொடுக்கத் தீரும்.

## 550. இராசேந்திரபூபதி இரசம்

| | |
|---|---|
| மாணிக்கம் | முத்து |
| பவளம் | தங்கம் |
| வங்கம் | இரும்பு |
| அப்பிரகம் | தாமிரம் |
| சுவர்ணமாக்ஷிகம் | |

இவைகளின் பற்பம் சமயெடை

| | |
|---|---|
| இரசசிந்தூரம் | சுத்திசெய்த வத்ஸநாபி |
| கஸ்தூரி | குங்குமப்பூ |
| ஜாதிப்பத்திரி | |

இவைகளும் அவ்வாறே சமயெடை.

இவைகள் எல்லாவற்றையுங் கல்வத்திலிட்டுக் கீழே கண்டவைகளின் சாற்றில் முறையே தனித்தனியாக ஒவ்வொரு சாற்றிலும் ஒவ்வொரு நாள் வீதம் அரைத்து மூன்று

குன்றிமணியெடைப் பிரமாணம் மாத்திரைகள் உருட்டி நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

**இதன் பரிமாணம் :**

தினம் காலை மாலை இருவேளையும் ஒவ்வொரு மாத்திரை விதமெடுத்துத் தேன் அல்லது சர்க்கரையுடன் கூட்டி உட்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

அமோகமான வீரிய விருத்தியுண்டாகும். விருத்த புருஷர்கள் யௌவனர்களாகத் தோற்றமளிப்பர். க்ஷய ரோகம் ஒழியும். சகல ரோகங்களுக்கும் தகுந்த அனுபானத்தில் கொடுக்கத் தீரும். நெய் சம்பந்தப்பட்ட ஆகாராதிகளை உண்ணவும்.

## 551. இலகுராஜ மிருகாங்கம்

| | |
|---|---|
| இரச பற்பம் | 1 வராகனெடை |
| சங்கு பற்பம் | 2 வராகனெடை |
| முத்து பற்பம் | 2 வராகனெடை |
| தங்க பற்பம் | 1 வராகனெடை |
| கந்தகம் | 2 வராகனெடை |
| பொரித்த வெங்காரம் | $\frac{1}{4}$ வராகனெடை |

இவைகளைக் கொடிவேலிக் கஷாயத்தில் 4 ஜாமம் அரைத்து மூசையிலடைத்து மூசையின் வாயை ஓட்டால் மூடிச்சீலைமண் செய்து கொள்ளவும்.

பிறகு ஒரு பானையில் பாதி அளவு உப்பைக் கொட்டி அதனடுவில் மூசையை வைத்து பானையின் மேல் வேறொரு பானையால் மூடி சந்தில்லாமல் பதியவைத்துச் சீலைமண் செய்து அடுப்பின் மேலேற்றி 4 ஜாமம் வரையில் கமலாக்கினியால் எரித்து பிறகு மூசையை உடைத்து மருந்தை எடுத்து பொடித்துக் கொள்ளவும்.

அனுபானமும், தீரும் வியாதியும் :

4 குன்றிபணியெடை மருந்தை பத்து மிளகு, இரண்டு திப்பிலி இதன் சூரணத்துடன் தேனில் கலந்து தினம் இரு வேளையும் ஒரு மண்டலம் வரை உட்கொள்ள க்ஷயம், ராஜ க்ஷயம் முதலான பிணிகள் தீரும்.

## 552. இராஜமிருகாங்கம்

| | |
|---|---|
| இரச சிந்தூரம் | 30 வராகனெடை |
| வெள்ளி பற்பம் | 10 வராகனெடை |
| முத்து | 10 வராகனெடை |
| மனோசிலை | 10 வராகனெடை |
| கந்தகம் | $1\frac{1}{2}$ சேர் |
| தங்க பற்பம் | 10 வராகனெடை |
| தாமிர பற்பம் | 10 வராகனெடை |
| பவள பற்பம் | 10 வராகனெடை |
| தாளகம் | 10 வராகனெடை |

மேற்கூறியவைகளை ஒன்றுகூட்டி எருக்கம்பால் விட்டு 4 ஜாமம் நைவாயரைத்துக் கொள்ளவும். பிறகு இவ் விரண்டு பலகறைகளாக எடுத்து இவ்விரண்டின் அடிப் பாகங்கள் பொருந்தும்படி நன்றாகத் தேய்த்து வைத்துக் கொள்ளவும். பிறகு அரைத்த மருந்தை பலகறைக்குள் திணித்துபலகறையின் வாயை பலகறைக்கு சமயெடை பொரித்த வெங்காரத்தை எருக்கம்பால் விட்டு அரைத்து பலகறையின் வாயை மூடி இவ்விரண்டு பலகறைகளையும் ஒன்றாய்ப் பொருந்தும்படி பந்தனம் செய்து உலரவைக்கவும்.

பிறகு எல்லா பலகறைகளையும் ஒரு கலயத்தில் வைத்து மேலொரு அகலை மூடிச் சந்தைப் பதியவைத்துச் சீலைமண் செய்து கலயத்தின் மேலும் மறுபடியும் சீலைமண் செய்து உலரவைக்கவும். பிறகு பெரியதொரு சாலில் பாதி உமியைக் கொட்டி அதனுள் சீலைமண் செய்த கலயத்தை வைத்து மேலும் உமியை நிரப்பி வாயை ஓட்டால் மூடிச் சீலைமண் செய்து 5 அடி அகலம், 5 அடி உயரம், 5 அடி

நீளமான ஓர் குழியைத் தோண்டி காட்டெருமை நிரப்பி அதன்மேல் சாலே வைத்து பின்னும் முழங்கால் உயரம் காட்டெருமை அடுக்கிப் புடம் போட்டு எரிக்கவும். புடம் ஆறிய பின்பு சாலேத் திறந்து பார்க்க உள்ளிருக்கும் உமி நன்ருக எரிந்து கருகி இருக்கும். அவ்விதமில்லாதிருந்தால் மருந்துள்ள கலயத்தைப் பிரிக்காமல் மறுபடியும் சாலில் உமியைப் போட்டு மற்ருெரு புடத்தில் வைத்தெரிக்கவும். இவ்விதஞ் செய்து பிறகு கலயத்திலுள்ள பலகறைகளே எடுத்துடைத்து அதிலுள்ள மருந்தைச் சுரண்டி வைத்துக் கொண்டு ஆடாதோடைச் சாற்றில் நைவாய் அரைத்து மாத்திரைகள் அல்லது உலரவைத்துத் தூள் செய்து கொள்ளவும்.

**இதன் பரிமாணம் :** 3 குன்றிமணியெடை.

**அனுபானமும், பத்தியமும் :**

திப்பிலி 9, மிளகு 19 (எண்ணிக்கையில்) இவைகளே வறுத்துச் சூரணித்துத் தேனுடன் கூட்டி மருந்தையுங் கலந்து உட்கொள்ளவும். நெய் சாதம், பசுவின்பால், வெள்ளாட்டுப்பால் இவைகள் உத்தமமானது. இராஜ க்ஷயம் தீரும்.

உஷ்ணசரீரத்திற்கு நெய்யில் மருந்தைக் கொடுக்கவும். பசித்தால் சசல ஆகாராதிகளும் கொடுக்கவும்.

## 553. இராஜமிருகாங்கம் (மற்ருெரு விதம்)

| | | | |
|---|---|---|---|
| வைர பற்பம் | பங்கு 1 | காரிய பற்பம் | பங்கு 7 |
| தங்க பற்பம் | ,, 2 | லோகபற்பம் | ,, 8 |
| ரச பற்பம் | ,, 3 | மரகத பற்பம் | பங்கு 9 |
| வெள்ளிபற்பம் | ,, 4 | வைக்ராந்தபற்பம் | ,, 10 |
| காந்தபற்பம் | ,, 5 | அப்பிரகபற்பம் | ,, 7 |
| தாமிரபற்பம் | ,, 6 | சுவர்ணமாக்ஷிகபற்பம் | ,, 7 |

| | | | |
|---|---|---|---|
| கந்தகம் | பங்கு 9 | பொரித்த வெங்காரம் ,, | 20 |
| முத்துபற்பம் | ,, 10 | | |

இவைகளைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சாற்றில் அரைத்து உருண்டைகள் செய்து உப்பின் நடுவில் வைத்து மத்தியாக்கினியில் 8 ஜாமம் எரிக்கவும். ஆறிய பின்பு எடுத்து அத்துடன்

| | |
|---|---|
| பச்சைக் கற்பூரம் | கஸ்தூரி |
| சந்தனம் | குங்குமப்பூ |
| சிறுநாகப்பூ | மூங்கிலுப்பு |
| ஜாதிக்காய் | விலாமிச்சை வேர் |
| பதிமுகம் | பச்சிலை |
| கோஷ்டம் | கஞ்சா |
| வசம்பு | |

மேற்கூறியவைகளைக் கூட்டி அரைத்து 4 குன்றிமணி வீதம் மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

**அனுபானம் :** நெய், திப்பிலிச்சூரணம், திருகடு சூரணம். மருந்தைக் காலையில் சாப்பிடவும்.

**பத்தியம் :** பசுவின்பால், நெய், தயிர், பால்சாதம், பசலை, வாஸ்துக்கீரை, பீர்க்கு, பொன்னாங்கண்ணி, புடல், முருங்கை, நெல்லிக்காய், கோதுமை, பயறு, துறிஞ்சி, முள்ளுக்கத்தரி, கோவை, கொள்ளு இவைகளைக் கூட்டவும்.

**தீரும் வியாதிகள் :** காசம், சுவாசம், க்ஷயம், அக்கினி மந்தம், கிராணி, பாண்டு, பிரமியம் முதலிய வியாதிகளுக்குத் தகுந்த அனுபானங்களில் கொடுக்கத் தீரும்.

## 554. மகாராஜமிருகாங்கம்

| | | | |
|---|---|---|---|
| இரச பற்பம் | 1 பலம் | முத்து | 1 பலம் |
| கந்தகம் | 4 பலம் | வெங்காரம் | 2 பலம் |
| சுவர்ணபற்பம் | 1 பலம் | | |

இவைகளை எலுமிச்சம்பழச் சாற்றில் 4 ஜாமம் அரைக்கவும். அரைத்த மருந்தைத் துணியில் முடித்து டோலா யந்திர முறைப்படி பானையில் தொங்கவிட்டு பானையில் உப்பைக்கொட்டி அடுப்பின் மேலேற்றி கமலாக்கினி தீயிட்டு எரிக்கவும். ஆறிய பின்பு மருந்தை எடுத்து பொடித்துக் கொள்ளவும்.

**பரிமாணமும் தீரும் வியாதியும் :**

ஒரு குன்றிமணியெடை மருந்தைத் தேனில் குழைத்துத் தினம் இருவேளையுமாக அரைமண்டலம் வரை உட்கொள்ள இராஜக்ஷயம் தீரும். தேகம் சுத்தியாகும். அசுவகந்தி இரசாயனத்துடன் சாப்பிட மிகுதியான பலனளிக்கும்.

## 555. பூரண சந்திரோதயம்

| | |
|---|---|
| நக்க இரேக்கு | 10 வராகனெடை |

இரேக்கை பற்பம் செய்யும் முறைப்படி பற்பம் செய்து முக்கால் பாகம் ($\frac{3}{4}$ பக்குவம்) பற்பமாகும் தருவாயில் எடுத்துக்கொள்ளவும். இவ்வித பற்பத்துடன்

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | 80 வராகனெடை |
| கந்தகம் | 40 வராகனெடை |

இவைகளைப் போட்டு செம்பருத்திப்பூவின் கஷாயத்தில் நாலு ஜாமமரைத்து நன்றாக உலரவைத்து ஆமணக்கு எண்ணெய் தேவையுள்ளதைக் கூட்டி உருண்டைகள் செய்யவும். இந்த உருண்டைகளை தாப்தா என்னும் பட்டுத் துணியில் சிறிய முடிச்சுகளாக முடித்து வைத்துக் கொள்ளவும்.

பிறகு ஒரு அகலில் கொடிவேலியின் சூரணத்தை நிரப்பி அதனடுவில் இம்முடிச்சுகளை ஒன்றின்மேல் ஒன்று படாமல் இருக்கும்படி வைத்து மேலும் கொடி வேலியின் சூரணத்தைப் போட்டு அதன்மேல் ஒரு அகலை மூடிச் சந்தைப் பதியவைத்துச் சீலைமண் செய்யவும். இவ்விதம்

எல்லா முடிச்சுகளையும் அகல்களில் நிரப்பிச் சீலைமண் செய்து ஒரு ஜாண் குழி தோண்டி அதில் 4 விரல் உயரத்தில் மணலைப் பரப்பி அதன்மேல் அகல்களை வைத்து மேலும் 4 விரல் உயரத்தில் மணலைப் போட்டு அதன் மேல் $1\frac{1}{2}$ ஜாண் உயரததில் வறட்டியை அடுக்கிப் புடம் போட்டு எரிக்கவும்.

புடம் ஆறியபின்பு அதை எடுத்து முன்பு கூறியபடியே உருண்டைகளை தாப்தா துணியில் முடிச்சுகள் செய்து கொடிவேலிச் சூரணத்துடன் கூடிய அகலில் வைத்து 4 அல்லது 5 முறை புடம்போட மருந்து உருண்டைகள் சிந்தூரம் போல் சிவந்திருக்கும். அப்பொழுது இவைகளை எடுத்து தாப்தா பட்டுத் துணியில் பெரியதொரு மூட்டை யாகக் கட்டி வைக்கவும்.

பிறகு ஒரு பானையை அடுப்பின் மேலேற்றி அதில் பாதியளவு பாலையூற்றி, பானைவாயின் குறுக்கில் ஒரு குச்சியை வைத்து அதில் மேற்கூறிய மூட்டையை டோலா இயந்திர முறைப்படி பாலில் படாதபடி தொங்க விட்டு இரண்டு ஜாமம்வரை பால் ஆவியில் இம்மருந்தை வேக வைத்துப் பிறகு மூட்டையை அவிழ்த்து உருண்டைகளை நன்ருகக் கழுவி வைத்துக்கொள்ளவும்.

பிறகு கீழ்க்கண்டவைகள் வகைக்கு இந்த மருந்தின் கால் பங்கு அளவு வீதம்

| | |
|---|---|
| பச்சைக்கற்பூரம் | ஜாதிக்காய் |
| மிளகு | கிராம்பு |

எடுத்து மருந்துடன் கூட்டிக் கல்வத்திலிட்டு அரைக் கவும். இம் மருந்துகளின் மொத்த எடையில் 32-ல் ஒரு பாகம் கஸ்தூரியுங் கலந்து பிறகு வெற்றிலைச் சாற்றை விட்டு எல்லாவற்றையும் நைய அரைக்கவும். முடிவாக பன்னீர் விட்டு ஒரு ஜாமம் அரைத்து மாத்திரைகள் அல்லது தூள்செய்து நிழலில் உலர்த்திப் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

**இதன் பரிமாணம் :** இரண்டு குன்றிமணி அளவு மருந்தை உட்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

மருந்தை வெற்றிலையில் சுருட்டி உட்கொள்ளவும். மருந்தை தேகபலம், ரோகபலம் இவைகளை அனுசரித்து குறைத்தும் கூட்டியும் கொடுக்கவும். இம்மருந்தை யுக்த மான முறையில் யுக்தமான பரிமாணத்தை ஒருவன் உட் கொள்ள அதிக வீரியமுள்ளவனுவான். பல ஸ்திரீகளை சுகிக் குந்தன்மை உடையவனுவான்.

பாலை நன்ருகக் காய்ச்சி சாப்பிடவும். மிருதுவான மாமிசம், பருப்பு வகைகள், கோதுமை, சர்க்கரை, இள நீரின் சோறு இவைகளைக் கூட்டவும். இவ்விதம் செய்ய உடம்பில் விருத்தாப்பியத்திஞல் ஏற்படும் தோல் சுருக்கங் கள், நரை இவைகள் ஏற்படாது. மருந்து உண்ணும் பொழுது முகத்தில் எத்தகையான பருவம் (தோற்றம்) பிரதிபலித்திருக்கிறதோ அதே தோற்றம் நெடுநாட்களுக்கு நிலைத்து இருக்கும். விருத்தாப்பியத்தின் தோற்றம் சீக்கிரம் அணுகாது. சுரங்கள் முதல் மூப்பு (வாஜீகரணம், காய கல்பம்) முதலான சகல ரோகங்கள் தீரும்.

எவ்வளவு கடினமான நோய்களிருந்தாலும் குண மேற்படும். எவனெருவன் வீட்டில் இம்மருந்தானது இருக்கிறதோ அவன் மன்மதனைப் போன்று அநேக ஸ்தீரீ களின் பிரிய நாயகனுக விளங்குவான்.

பத்தியத்திற்கு கைப்புப் பதார்த்தங்களை விலக்கவும்.

**தீரும் நோய்கள் :**

இம்மருந்து வாத பித்த கப சுரங்கள், அக்கினி மந்தம் முதலானவைகளை பரிஹாரம் செய்யக்கூடிய தாகையால் இது சகலவித நோய்களையும் தீர்க்கவல்லது என்று சந்தேக மில்லாமல் கூறலாம்.

## 556. பூரணசந்திரோதயம் (மற்ருெரு விதம்)

(க்ஷயம் முதலான சகல ரோகங்கள், வீரியவிருத்தி முதலானதற்கு)

அபரஞ்சித்தங்கம் 1 பலம் பாதரசம் 8 பலம்
கந்தகம் 16 பலம்

இம்மூன்றையும் கையாந்தகரைச் சாற்றில் ஒரு நாள் முழுவதும் அரைக்கவும். அடுத்தநாள் கற்ருழைச் சாற்றில் அவ்விதமே அரைத்து உலர்த்திக் காசிக் குப்பியிலடைத்து, குப்பியின் வாயை மாவுக் கல்லினுல் மூடிச் சீலைமண் செய்து சட்டியில் பாதி மணலைப் போட்டு அதனுள் காசிக்குப்பியை வைத்து மேலும் மணலை நிரப்பி மேலொரு சட்டியை மூடி அடுப்பின் மேலேற்றி தீபாக்கினியால் ஒரு நாள் முழுவதும் எரித்து மறுநாள் கமலாக்கினியாலும் மூன்ரும் நாள் காடாக்கினியாலும் எரித்து பிறகு புடம் ஆறிய பின்பு உடைத்து மருந்தை மட்டிலும் எடுத்துக்கொள்ளவும்.

மருந்தின் கால் பங்கு அளவு பச்சைக் கற்பூரத்தையும், வகைக்கு $\frac{1}{8}$ பங்கு வீதம்

கிராம்பு குங்குமப்பூ
ஜாதிக்காய் கஸ்தூரி

இவைகளை முறையே சேர்த்து, பிறகு வெற்றிலைச் சாற்றை விட்டு மூன்றுநாள் முழுவதும் நைவாயரைத்து குன்றிமணி யெடைப் பிரமாணம் மாத்திரைகள் அல்லது தூள்செய்து உலர்த்திப் பத்திரப்படுத்தவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும்:**

இம்மருந்தை வேளை ஒன்றிற்கு கால் பணவிடை வீதம் தினம் இருவேளையும் தேனில் இழைத்து வெற்றிலைச் சாற்றுடன் கலந்து 21 நாட்கள் உட்கொள்ள க்ஷயம்

முதலான சகல ரோகங்களும் தீரும். வீரிய விருத்தியுமேற்படும். அனுபான பேதங்களில் இன்னும் பற்பல நோய்களுக்கும் கொடுக்கலாம்.

## 557. பூரண சந்திரோதயம் (மற்ருெரு விதம்)

இரசசிந்தூரம் லோகபற்பம்
அப்பிரகபற்பம் சிலாஜத்
சுவர்ணமாக்ஷிகபற்பம் வாயுவிளங்கம்
(சுவர்ண நிமிளே)

இவைகளைக் கல்வத்திலிட்டு நைவாய் அரைத்து உலர வைத்துக் கொள்ளவும்.

**அனுபானம்:** இதில் வேளை ஒன்றுக்கு 8 குன்றிமணி யெடை மருந்தை நெய் அல்லது பால் அனுபானத்தில் கொடுக்க மிகுதியான வீரிய விருத்தி உண்டாகும்.

மேலும் அனுபான பேதங்களில் கொடுக்க அநேக ரோகங்கள் தீரும்.

## 558. பூரண சந்திரோதயம் (மற்ருெரு விதம்)

சுருள் தங்கம் 4 தோலா சுத்த இரசம் 32 தோலா
கந்தகம் 64 தோலா

இம்மூன்றையும் முறையே மைபோல் செய்துகொண்டு செம்பருத்திப்பூவின் சாற்றில் ஒரு நாளும், கற்ருழைச் சாற்றில் ஒருநாளும் அரைத்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

இதைக் குப்பியிலடைத்து நன்ருகச் சீலைமண் செய்து வாலுகாயந்திர முறைப்படி கிரமமாய் அதிகரிக்கும் அக்கினியில் (தீபாக்கினி, கமலாக்கினி, மந்தாக்கினி, மத்யமாக்கினி, தீவ்ராக்கினி) மூன்று நாட்கள் இடைவிடாது

எரிக்கவும். குப்பி தானுக ஆறியவுடன் குப்பியிலுள்ள ஜாடா மருந்தையும் எடுத்து கல்வத்திலிட்டு அத்துடன்

| | |
|---|---|
| பச்சைக்கற்பூரம் | ஜாதிக்காய் |
| மிளகு | கிராம்பு |

இவைகளின் சூரணம் வகைக்கு 16 தோலாவும், கஸ் தூரி 28 குன்றிமணியெடையும் சேர்த்துக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :**

2 குன்றிமணியெடை மருந்தை வெற்றிலையில் வைத்து உட்கொள்ளவும். இம்மருந்து நல்ல இரசாயனமும், வாஜீ கரணமுமாகும். பல ரோகங்களுக்குச் சிறந்த மருந்து.

## 559. பூரணேந்து ரசம்

சுத்திசெய்த பாதரசத்தை இலவஞ்சாற்றில் 15 நாள் அரைத்து ஓர் துணியில் முடித்து இரண்டு ஜாமம் வரையில் தோலாயந்திர முறைப்படி தொங்கவிட்டு வேகவைத்து எடுத்துக்கொண்டு மறுபடியும் இலவஞ் சாற்றில் 1 நாளரைத்து உருண்டை செய்து நாகவல்லி இலையால் கவசஞ் செய்து காசிக்குப்பியிலடைத்து, காசிக்குப்பி நிறையும் வரையில் அதன்மேல் இலவஞ்சாற்றையும் ஊற்றி சீலைமண் செய்து வாலுகாயந்திர முறைப்படி இரண்டு ஜாமம் எரித்து எடுத்துக் கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :**

காலையில் இரண்டு குன்றிமணியெடை மருந்தை வெற்றிலையில் சுருட்டி சாப்பிடவும்.

| | |
|---|---|
| நிலப்பனங்கிழங்கு | சர்க்கரை |

இவைகள் வகைக்கு 2 தோலா வீதமெடுத்துப் பாலுடன் கூட்டிச் சாப்பிடவும். வீரிய விருத்தி அதிகமாகும். தகுந்த அனுபானத்துடன் கொடுக்க சகல ரோகங்களும் தீரும்.

## 560. பஞ்சபாண ரசம்

| | | | |
|---|---|---|---|
| அப்பிரக சிந்தூரம் | $\frac{1}{2}$ சேர் | தங்க பற்பம் | $\frac{1}{4}$ சேர் |
| வெள்ளி பற்பம் | $\frac{1}{4}$ சேர் | வாலைரசம் | 1 சேர் |
| சுத்தி செய்த கந்தகம் | 1 சேர் | | |

முதலில் கந்தகத்தையும் இரசத்தையும் சேர்த்து 4 ஜாமம் அரைத்து மையாக்கி இத்துடன் மற்றதையுங் கூட்டி வெள்ளழிஞ்சில் சாற்றில் 12 ஜாமம் அரைக்கவும்.

சிகப்பு கொடிவேலியிலைச்சாறு, நிலப்பனங்கிழங்கின் சாறு

இவ்விரண்டு சாறுகள் சமமாகக்கொண்டு வியாதியில்லாத ஆட்டின் மாமிசத்தைக் கொணர்ந்து மேற்கூறிய சாற்றிலரைத்து உருண்டை செய்துகொள்ளவும்.

முன்பு அரைத்து வைத்திருக்கும் மருந்தை தாப்தா பட்டுத் துணியில் முடித்து அதன்மேல் அரைத்த மாமிசத்தைக் கவசமிடவும். பிறகு அடுப்பின்மேல் வாணலை ஏற்றி நல்லெண்ணெய் ஊற்றி அதில் மாமிச உருண்டையைப் போட்டு மாமிசம் நன்ருய்ப் பக்குவமாகும் வரையில் வறுத்து ஆறியபின் மாமிச கவசத்தை நீக்கிவிடவும்.

மறுபடியும் முன்பு கூறிய சாற்றில் புதிதாய் அரைத்த மாமிசத்தால் கவசஞ்செய்து நல்லெண்ணெயில் வறுக்கவும். மருந்தானது சிந்தூரமாகும் பரியந்தம் இவ்விதமே வறுத்தெடுக்கவும், மருந்து சிந்தூர வர்ணம் அடைந்ததும் அதை ஒரு துணியில் கட்டி ஒரு பானையில் டோலாயந்திர முறைப்படி தொங்கவிட்டுப் பானையில் பாலையூற்றி வேசு வைக்கவும்.

**குறிப்பு:** மாமிசத்தின் எடை மருந்தைவிட எட்டு பாகம். பால் மருந்தைவிட 16 பாகம்.

பிறகு இம்மருந்தை கல்வத்திலிட்டு

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | பூனைக்காலிவேர் |
| நீர்முள்ளிவேர் | நெருஞ்சில் வேர் |
| நிலப்பனங்கிழங்கு | |

இவ்வேழு வகையும் சமமாகக்கொண்டு அதற்கு 8 பாகம் தண்ணீரையூற்றி நான்கிலொரு பாகம் கஷாயமாகக் காய்ச்சி அதைவிட்டு நைவாயரைத்து மாத்திரைகள் அல்லது தூள்செய்து கொள்ளவும்.

**மருந்தின் பரிமாணம்:** 4 குன்றிமணியெடை.

**அனுபானமும், தீரும் வியாதியும்:**

ஒரு பாகம் தேன், இரண்டு பாகம் நெய் இவ்விரண்டுடன் மருந்தைக் கலந்து சாயங்காலம் சாப்பிடவும். உடம்பிற்கு ஏற்கும் அளவு பால் குடிக்கவும். பிறகு ஸ்திரீகளுடன் சுகிக்கவும். அவ்விதம் செய்யாவிடில் சரீரத்திற்கு உபத்திரவம் ஏற்படும். எந்நாட்களில் ஸ்திரீகளுடன் கூடுதல் இயலாதோ அன்று இம்மருந்தை உட்கொள்ளத் தேவையில்லை. ஸ்திரி புருஷர்கள் இருவர்களும் துர்பலமுள்ளவர்களாயிருந்தால் இவர்களுக்கு இந்த நியதி இல்லை. தவிர தக்க அனுபானத்துடன் கொடுக்க சகல ரோகங்களும் தீரும்.

## 561. த்ரைலோக்கிய சிந்தாமணி ரசம்

| | |
|---|---|
| தங்கம் | வெள்ளி |
| தாமிரம் | கிருஷ்ணாப்பிரகம் |
| வங்கம் | நிமிளை |
| வயிரம் | சங்கு |
| இரசம் | |

இந்த ஒன்பது வகைகளின் பற்பமும் அயசிந்தூரமும் சமமாகக்கொண்டு ரச பற்பத்தைத் தவிர மற்றவைத் ஒன்றுபடக் கலந்து கொள்ளவும்.

சுத்திசெய்த கந்தகம் தாளகம்
மனேசிலை

இம்மூன்றும் அதே சமயெடை எடுத்துக்கொண்டு கந்தகத்தையும் இரச பற்பத்தையும் கலந்து மைபோல் அரைத்துக்கொண்டு பிறகு மற்றதையும் ஒருமிக்கச் சேர்த்து கல்வத்திலிட்டு நன்ருயரைத்து

எருக்கம்பால் கள்ளிப்பால்
பஞ்சலோகக் கஷாயம்

இம்மூன்றையும் ஊற்றி முறையே தனித்தனியாக தடவை ஒன்றுக்கு 2 ஜாமம் விதம் எவ்வேழு தடவை (மொத்தம் 21 தடவை) அரைத்து வைத்துக்கொண்டு மஞ்சள் பலகறையில் இம்மருந்தை நிறப்பி அதன் வாயை எருக்கம்பால் விட்டரைத்த வெங்கார விழுதால் மூடி நன்ருக உலர வைக்கவும்.

பிறகு இப் பலகறைகளை காசிக்குப்பியில் போட்டு வாயை மூடிச் சீலைமண் செய்து வாலுகாயந்திர முறைப்படி எட்டு ஜாமம் காட்டுத் தீயால் எரித்து தாளுக ஆறியதும் சோழிகளுக்குள்ளிருக்கும் மருந்தை எடுத்து அதற்கு இரண்டு பாகம் சோழிப் பற்பத்தையுங் கூட்டி கல்வத்திலிடவும். யாவற்றிற்கும் சமயெடை இரச பற்பத்தையுங் கலந்து

துரிஞ்சிப்பழச்சாறு கருநொச்சிலையிலைச்சாறு
வெற்றிலைச்சாறு

இம்மூன்றையும் விட்டு தனித்தனியாக 10 தடவைகள் அரைக்கவும். பிறகு வரிக்கும்மட்டிக்காய் சாற்றினல் 5 தடவை அரைக்கவும்.

பிறகு இரச பற்பத்திலிருந்து

வைக்கிராந்த பற்பம் $\frac{1}{4}$ பங்கு பவள பற்பம் $\frac{1}{16}$ பங்கு
நல்லமுத்து பற்பம் $\frac{1}{16}$ பங்கு

இவைகளையும் சேர்த்து அரைக்கவும்.

அதன் பின்பு

| | |
|---|---|
| பாகலிலைச்சாறு | ஆடோதோடையிலைச்சாறு |
| காராக்கரணைக் கிழங்கின்சாறு | காட்டுக்கரணையின்சாறு |
| முருங்கைவேர்கஷாயம் | கஞ்சாயிலைக் கஷாயம் |
| கர்கடகசிங்கிக்கஷாயம் | சதாதிஸ்ராவின்சாறு(?) |
| அழகுண்ணியிலைச்சாறு | எட்டிக்கொட்டைக் கஷாயம் |

இவைகளால் முறையே தனியாக ஒவ்வொரு தடவை அரைத்து பிறகு

| | |
|---|---|
| பொரித்த வெங்காரம் | வத்ஸநாயிச் சூரணம் |
| மிளகுப்பொடி | |

இவைகள் வகைக்கு இரசபற்பத்திலிருந்து கால்பங்கு வீதம் சேர்க்கவும்

அதன் பின்பு

| | |
|---|---|
| அரிசித்திப்பிலி | கடுக்காய் |
| ஜாதிக்காய் | சுக்கு |
| கிராம்பு | |

இவைகளின் சூரணம். இவ்வைந்தும் தனியே வத்ஸ நாபிக்கிழங்கு சூரணத்தின் கால்பங்கு ஒன்றுசேர்த்து எல்லாவற்றையும் ஒருமிக்க கல்வத்திலிட்டு அரைக்கவும்.

கடைசியாக கஸ்தூரியின் தண்ணீரினுல் அரைத்து மணமுள்ள தாழம்பூவின் மடல்களின் உட்புறத்தில் அரைத்த மருந்தை அப்பி மெல்லிய நூலினுல் கட்டி வாயகன்ற மண் அகல் மடக்குகளில் பத்திரப்படுத்திக் கவசம் செய்து மூன்று நாட்கள் தானிய புடத்தில் வைத்துப் பிறகு எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கொள்ளவும். யானைத்தந்த சிமிழில் அடைத்துக் கொள்ளவும்.

**மருந்தின் பரிமாணம்:—** 4 குன்றிமணியெடை மருந்தை 8 குன்றிமணியெடை திப்பிலிச் சூரணத்துடன் தேனைக் கூட்டி சாப்பிடவும்.

**தீரும் நோய்கள் :**

கருடன் பாம்புகளைப்போல சகலவித கடின நோய்களையும் சிக்கிரத்தில் தீர்க்கும். அக்கினிபலம், தாதுபலம், வீரியதேஜஸ் இவைகள் அதிகரிக்கும். இம் மருந்து உத்தமமான இரஸாயன மருந்துகளில் ஒன்றாகும்.

## 562. காமதேவ ரசம்

வாலை ரசம் 32 வராகனெடை

இதை வெள்ளழிஞ்சில் வேரின் சாற்றில் 24 ஜாமம் கடைந்து பிறகு ரசத்தை நன்றாகக்கழுவி அத்துடன் சுத்திசெய்த கந்தகம் 64 வராகனெடையைச் சேர்த்து மைபோல் 3 ஜாமம் அரைத்து பிறகு 32 வராகனெடை தங்கபற்பத்தைக் கலந்து வெள்ளை அலரிவேரின் கஷாயத்தில் 21 ஜாமமும், நிலப்பனங்கிழங்கின் சாற்றில் 21 ஜாமமும் அரைத்து உருண்டைகள் செய்து உலர வைக்கவும்.

உருண்டைகளின் மேல் 4 பாகம் அன்றாட புதிய ஆட்டு மாமிசத்தைச் சிகப்பு சித்ரமூலத்தின் கஷாயத்தை விட்டரைத்துக் கவசஞ் செய்து அதன்மேல் உழுந்து மாவைப் பிசைந்து கவசஞ் செய்து பந்தனம் செய்யவும். இவைகளைப் பசுவின் நெய்யில் நன்றாக வறுக்கவும். மருந்து முழுவதும் சிந்தூரமாகும் வரையில் வேண்டிய மாமிச கவசங்களில் வைத்து வறுத்தெடுக்கவும். பிறகு இதை பன்னீர்விட்டு நன்றாயரைத்து மாத்திரைகள் அல்லது தூள்செய்துகொள்ளவும்.

**தேன் பரிமாணம்:** 1 பணவிடை

அனுபானமும் தீரும் வியாதியும் :

தேன் $\frac{1}{4}$ வராகனெடை, நெய் $\frac{1}{2}$ வராகனெடை, சர்க்கரை 1 வராகனெடை, இம்மூன்றையும் சேர்த்து மருந்துடன் கூட்டிச் சாப்பிடவும். மருந்துண்ட பின்பு பால் சாப்பிடவும. லட்டு, பாயஸம் முதலான ஆகாராதிகளைச் சாப்பிடவும். சரீரத்திற்குத் தகுந்தபடி சுகத்தையும் அனுபவிக்கவும். இந்த அனுபானம் நிரோகிகளுக்கும் வீரிய விருத்தி விரும்புவோர்க்கும் ஏற்றது.

வியாதியஸ்தர்களுக்கு அந்தந்த வியாதிக்குத் தகுந்தவாறு அனுபான பேதங்களில் கொடுக்க சகல ரோகங்களும் தீரும்.

பாதரசம், தங்கம், கந்தகம் இம்மூன்றும் யோகவாஹி ஆனதாலும் சகல விஷங்களைப் போக்கவல்லது ஆகையாலும் மேற்கூறிய குணங்களில் ஒன்றேனும் பிசகாது.

## 563. பஞ்சபாண ரசம் (மற்றொருவிதம்)

பாதரசம் (இரச சிந்தூரம்)
அப்பிரக சிந்தூரம்
வங்கபற்பம்
பலகறை பற்பம்
லோகபற்பம்
நாகபற்பம்
சங்கு பற்பம்

இவைகள் சமயெடை கொணர்ந்து எல்லாம் ஒன்று கூட்டி பால்விட்டு மூன்று தடவை அரைக்கவும். பிறகு

போஸ்துக்காயின் சாறு
ஊமத்தையின் சாறு
அதிமதுரம்

இவைகள் ஒவ்வொன்றில் தனித்தனியே 2 தடவை அரைத்துக்கொள்ளவும்.

பிறகு

கிராம்பு
சுக்கு
அக்கராகாரம்
ஜாதிக்காய்

மிளகு திப்பிலி
இலந்தை சந்தனம்

இவைகளைக்கூட்டி இறக்கிய கஷாயத்தில் 7 தடவை அரைத்து பிறகு கஸ்தூரியைக் கலந்து மிருதுவாக அரைத்து வைத்துக்கொள்ளவும்.

**அனுபானமும், தீரும் வியாதியும் :**

மிகுதியான வீரிய விருத்தியை உண்டாக்கும். இதைப்போன்ற வீரிய விருத்தியுண்டாக்கும் இரசாயன மருந்து உலகில் வேறு ஒன்றுமில்லை என்று சொல்லலாம். இதை உட்கொள்ள புத்தி அதிகரிக்கும். மருந்துகளில் சிரேஷ்டமானது. பலத்தையும் வீரியத்தையும் அளிக்க வல்லது. பிரமியம், வயிற்றுக்கட்டி, ஜலதோஷம், கல்லடைப்பு, அபஸ்மாரம் முதலான ரோகங்கள் தீரும்.

## 564. மதனசுந்தர ரசம்

வாலை ரசம் 40 வராகனெடை எடுத்து செந்தாமரைப் பூவின் சாற்றில் 21 ஜாமம் அரைக்கவும்.

40 வராகனெடை நெல்லிக்காய் கந்தகத்தை நெய் பால், கருப்பஞ்சாறு, செவ்வல்லிச்சாறு இவ்வித சாறுகளில் முறையே சுத்திசெய்து கொள்ளவும்.

தணலின்பேரில் ஓட்டைவைத்து கரிநெருப்பை உண்டாக்கி ஓட்டில் கந்தகத்தைப்போட்டு உருக்கி அத்துடன் சுத்திசெய்த ரசத்தையும்போட்டு இரும்புக் கம்பியால் மத்திக்கவும். இரசமும் கந்தகமும் சேர்ந்து சிந்தூரம் போலானதும் கீழிறக்கி நன்றாக ஆறும் வரையில் மத்திக்கவும். ஆறியபின்பு மருந்தை எடுத்து மறுபடியும் செந்தாமரைப்பூவின் சாற்றில் 21 ஜாமம் அரைத்து நன்றாக உலரவைத்து தூள்செய்து கொள்ளவும்.

பிறகு இத்தூளை காசிக்குப்பியிலடைத்து வாயை மூடி 7 சீலைமண்செய்து உலர்த்தி பானையில் சிறிது

மணலைப் பரப்பி அதனடுவில் குப்பியையவைத்து மேலும் குப்பியின் வாய்வரையில் மணலைக்கொட்டி சமப்படுத்தி மேலொரு மூடியால் மூடி தீபாக்கினியால் 1 ஜாமமும், கமலாக்கினியால் 3 ஜாமமும், காடாக்கினியால் 9 ஜாமமும், ஒரே ஜாதி விறகால் தீ எரித்து ஆறியபிறகு எடுத்துப்பார்க்கச் சிந்தூரித்திருக்கும்.

இச்சிந்தூரத்தில் 40 வராகனெடை எடுத்து அதில் தங்க பற்பம் 20 வராகனெடையும் அப்பிரசிந்தூரம் 20 வராகனெடையும் கலந்து கல்வத்திலிட்டு நிலப்பனங் கிழங்கின் சாற்றில் 3 ஜாமமும், ரஸ்தாளி வாழைக் கிழங்கின் சாற்றில் 3 ஜாமமும், இலந்தையின் கஷாயத்தில் 3 ஜாமமும், அமுக்கராக் கிழங்கின் கஷாயத்தில் 3 ஜாமமும் நைவாயரைத்து வில்லை தட்டிக் கொள்ளவும்.

பிறகு ஒரு அகலை எடுத்து அதில் பாதி முள்ளிலவம் பிசின் தூளைப்போட்டு நடுவில் வில்லைதட்டிய மருந்தை வைத்து அதன்மேல் நிறைய அதே பிசினைப் போட்டு மேலொரு அகலைமூடிச் சந்து பதியவைத்துச் சீலைமண் செய்து ஒரு ஜாண் குழிதோண்டி அதில் 4 விரல் உயரம் மணலைக்கொட்டி நடுவில் அகலை வைத்து மேலும் 4 விரல் உயரம் மணலைப்போட்டு அதன்மேலும் $1\frac{1}{2}$ முழம் உயரத்தில் காட்டெருவை அடுக்கிப் புடம் போடவும். புடம் எரிந்து தானாகவே ஆறிய பின்பு மருந்தை எடுத்துக் கல்வத்திலிட்டு

| | |
|---|---|
| நிலப்பனங்கிழங்கு | ரஸ்தாளி வாழைக்கிழங்கின் சாறு |
| அமுக்கிராக்கிழங்கு கஷாயம் | இலந்தையின் கஷாயம் |

இவைகளில் முறையே தனித்தனியே 3 ஜாமங்கள் அரைத்து மாத்திரைகள் அல்லது தூள்செய்து உபயோகிக்கவும்.

**மருந்தின் பரிமாணம் :** 2 பணவிடை

**அனுபானம், பத்தியம், தீரும் வியாதிகள் :**

| | |
|---|---|
| முள்ளிலவம் பிசின் தூள் | 2 பணவிடை |
| தேன் | 4 பணவிடை |
| நெய் | 6 பணவிடை |
| சர்க்கரை | 1 பணவிடை |

இவைகளுடன் மருந்தைக் கலந்து சாப்பிட்டு மேலும் பாலைக் குடிக்கவும். வேண்டிய அளவு சிக்ஷா பொடி (பரிமளஸ்நானப் பொடி)யும் அத்துடன் சமமாகக் கோதுமை மாவையும் சேர்த்து முள்ளிலவயிலைச் சாற்றில் அரைத்து கல்கம் செய்து உடம்பில் பூசி $\frac{1}{2}$ ஜாமம் கழிந்து வெந்நீரில் ஸ்நானம் செய்யவும். அதிகமான புளிப்பு, உறைப்பு, கைப்பு இல்லாமல் இனிப்புள்ள ஆகாரங்களை சேர்க்கவும். இவ்விதம் 21 நாட்கள் செய்ய சரீரம் புஷ்டி அடையும். சகல ரோகங்களும் பரிஹாரமாகும்.

**க்ஷயத்திற்கு அனுபானம் :** 2 பணவிடை மருந்து

| | |
|---|---|
| கோமூத்திர சிலாஜந்துபற்பம் | 2 பணவிடை |
| திப்பிலிச் சூரணம் | 2 பணவிடை |

இவைகளுடன் கலந்து தேனையுங் கூட்டி உட்கொள்ளவும். பித்தாதிகமானால் தேனும் நெய்யுங்கூட்டிச் சாப்பிட க்ஷய ரோகம் தீரும்.

**அதிசாரத்திற்கு அனுபானம் :**

| | |
|---|---|
| கிராம்பு | ஜாதிக்காய் |
| அதிவிடயம் | சிறுநாகப்பூ |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை வீதமெடுத்து நல்லெண்ணெயில் வறுத்துப் பொடிசெய்து முக்கால் பாகம் பக்குவமான (முழுமையும் பழுக்காத) மாதுளையை நான்கு பாகமாகப் பிளந்து அதனுள் இப்பொடியை நிரப்பி இரண்டு வராகனெடை அபினையுங் கலந்து பிளவை மூடி நூலால் சுற்றிலும் இறுகக் கட்டி அதன்மேல் இலந்தங் கொழுந்தையும், மாங்கொழுந்தையும் கருட்டி கவசமிட்டு

காட்டெருவினால் உண்டாக்கிய நெருப்பில் சுட்டு, மாதுளை தணல்போல் சிவந்ததும் அதை எடுத்து உடைத்து கொழுந்து. மாதுளை, மருந்து எல்லாவற்றையும் அம்மியின் மேல் வைத்து தயிரை விட்டு மைபோல் அரைத்து கல்க பதமாயிருக்கையில் இரும்புக் கரண்டியில் போட்டு கட்டிப் படும் வரையில் காய்ச்சி இலந்தைவிதைப் பிரமாணம் மாத்திரைகள் செய்துகொள்ளவும்.

இதில் ஒரு மாத்திரையை எடுத்து தயாரித்திருக்கும் மதன சுந்தர ரசத்துடன் கலந்து தேனுடன் கூட்டி இழைத்துச் சாப்பிட ஐந்துவித அதிசாரம் முதலானவைகள் தீரும்.

| | |
|---|---|
| சுக்கு | கொத்தமல்லி |

இவ்விரண்டின் கஷாயத்தை மருந்து சாப்பிட்டவுடன் குடிக்கவும். தவிர இம்மருந்தை அநேக ரோகங்களுக்கு அனுபான பேதங்களில் கொடுக்கத் தீரும்.

## 565. ஹேமசுந்தர ரசம்

| | |
|---|---|
| இரச பற்பம் 1 பாகம் | தங்க பற்பம் $\frac{1}{4}$ பாகம் |

இவ்விரண்டையும் ஒன்றுபடக் கலந்து பால், நெய், தேன் இவைகளையுங் கூட்டி காந்தலோகத்தினால் செய்த பாத்திரத்தில் போட்டு 1 மாதம் வரையில் அப்படியே வைத்துப் பிறகு எடுத்து உபயோகிக்கவும். கார்போகரிசியின் சூரணம் 3 தோலாவை நெல்லிக்காய்ச் சாற்றில் கலந்து உண்ணவும். சகல ரோகங்களும் தீரும்.

## 566. பஞ்சாம்ருத ரசம்

| | |
|---|---|
| இரசசிந்தூரம் | காந்த சிந்தூரம் |
| அப்பிரக பற்பம் | தாளக பற்பம் |
| வங்கசிந்தூரம் | |

இவ்வைந்தும் சமமாகக்கொண்டு திரிகடு (சுக்கு, மிளகு, திப்பிலி) கஷாயத்தில் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொண்டு தக்க அனுபானத்தில் கொடுக்கச் சகல ரோகங்களும் தீரும்.

## 567. இலக்ஷ்மி விலாச ரசம்

தங்க பற்பம்
இரசசிந்தூரம்
பவள பற்பம்
குங்குமப்பூ
கிராம்பு
இலவங்கப்பட்டை
முத்து பற்பம்
லோகபற்பம்
கஸ்தூரி
ஜாதிப்பத்திரி
ஏலக்காய்

இவைகள் சமமாகக்கொண்டு வெற்றிலைச் சாற்றில் 3 நாட்கள் அரைத்துத் தேவையான அளவிற்கு மாத்திரைகள் செய்து உபயோகிக்கவும்.

**அனுபானம் :**

மருந்துடன் சர்க்கரையும் தேனையும் கூட்டிச் சாப்பிடவும். சகல ரோகங்களும் தீரும். காமவிருத்தி மிகுதியாகும். நீரிழிவு, மேகம், க்ஷயம் முதலான நோய்களும் தீரும்.

## 568. சுவர்ண பஞ்சாம்ருத ரசம்

இரசசிந்தூரம்
அப்பிரகசிந்தூரம்
காந்தசிந்தூரம்
தங்க பற்பம்
வெள்ளி பற்பம்

இவ்வைந்தும் வகைக்கு 20 வராகனெடை வீதமெடுத்து கல்வத்திலிட்டு முதலில் ஆடாதோடைச் சாற்றில் 3 நாட்களரைத்து இரும்புக்கரண்டியில் போட்டு நெருப்பின்மேல் வைத்து சிறிது பக்குவஞ்செய்து பிறகு கல்வத்திலிட்டு வெள்ளை இண்டின் சாற்றில் ஒருநாளும் அரைத்து மாத்திரைகள் அல்லது தூள்செய்து வைத்துக்கொள்ளவும்.

**மருந்தின் பரிமாணம் :** 3 குன்றிமணியெடை

**அனுபானம், பத்தியம், தீரும் வியாதிகள் :**

மிளகு, திப்பிலி இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு சிறிது வறுத்துத் தூள் செய்து இத்துடன் மருந்தைக்கலந்து

கொடுக்கவும். உடம்பில் ஏற்படும் கடுப்பு வலிக்குத் தேனுடன் கூட்டிக்கொடுக்கவும். இம்மருந்துடன் சமயெடை மஹிசாக்ஷிகுங்கிலியம்.

சுக்கு கண்டத்திப்பிலி
கொத்தமல்லி

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதம் கலந்து கஷாயமிறக்கிக் கொடுக்கவும்.

வாழையும் அதன் இதர அம்சங்களும்,

பாகல் கத்தரிக்காய்
காராமணி வெள்ளரிக்காய்

முதலியவைகளை விலக்கவும்.

வெள்ளாட்டுப்பால் 1 சேர் சுக்கு 1 வராகனெடை
நெருஞ்சில்வேர் 1 வராகனெடை

இம்மூன்றையுஞ் சேர்த்து 1 சேர் தண்ணீரையுமூற்றி $\frac{1}{2}$ சேர் கஷாயமிறக்கி வடிகட்டி அத்துடன் $\frac{1}{2}$ வராகன் எடை திப்பிலிச் சூரணத்தையும் போட்டு குடிக்கவும். க்ஷயரோகம் தீரும். க்ஷயத்தினுலேற்படும் சுரம், சுவாசம், காசம், அரோசகம், அக்கினி மந்தம், க்ஷயத்துடன் கூடிய அதிசாரம் இவைகள் தீரும். க்ஷயத்துடன் கூடிய அதிசாரத்திற்கு மஹிசாக்ஷிகுங்கிலியத்திற்குப் பதிலாக சுந்தகத்தைச் சேர்த்துக் கொடுக்கவும்.

கஷாயத்துடன் யானைத்திப்பிலி, கிராம்பு இவைகள் வகைக்கு 1 வராகனெடை கூட்டிக் கொடுக்கவும்.

## 569. சிவனுமரசம்

வத்ஸநாபி கருநாபி
மனேசிலை வெங்காரம்
சுக்கு திப்பிலி

இவைகள் வகைக்கு 10 வராகனெடை

| | |
|---|---|
| வெள்ளை மிளகு | 35 வராகனெடை |
| எருக்கின் கரி | 10 வராகனெடை |

இவைகளை எல்லாம் ஒன்றுகூட்டிக் கல்வத்திலிட்டு 3 நாட்களரைத்து தூள் செய்து பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

## 570. ஆனந்த பைரவ ரசம்

| | |
|---|---|
| வெங்காரம் | லிங்கம் |
| திப்பிலி | மிளகு |
| வத்ஸநாபி | பாதரசம் |
| கந்தகம் | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதம் எடுத்துக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றைவிட்டு 3 நாட்கள் அரைத்துக் குன்றிமணி அளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும். இம்மருந்தை அனுபான பேதங்களில் கொடுக்க சகல சுரங்களும் தீரும்.

## 571. பஞ்சமூர்த்தி ரசம்

| | |
|---|---|
| வாலைரசம் சேர் 1 | தாளகம் சேர் $\frac{1}{8}$ |
| கந்தகம் சேர் $\frac{3}{4}$ | மனோசிலை சேர் $\frac{3}{8}$. |
| வீரம் சேர் $\frac{5}{32}$ | |

இவைகளை ஏழாம் காய்ச்சல் பச்சை வெடியுப்பு ஜெய நீரில் 7 நாட்கள் ஊறவைத்துப் பிறகு கழுவி கந்தகத்தைத் தவிர மற்றதை வெய்யிலில் உலர்த்திக் கொள்ளவும். கந்தகத்தை மட்டிலும் நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

இவைகள் நன்ருக உலர்ந்ததும் கல்வத்திலிட்டுச் சூரணித்து ஜலதரங்க பீங்கானில் வைத்து மேலொரு அதே அளவுள்ள பீங்கானை மூடி சந்தைப் பதியவைத்து இடைவெளியில்லாமல் செய்துகொண்டு 7 சீலமண் செய்து காயவைத்துச் சிந்தூரம் செய்யும் ($\frac{3}{4}$ முழ அகலமுள்ள)

சட்டியில் 6 விரல் உயரம் மணலைப்பரப்பி அதன்மேல் சீலைமண்செய்த பீங்கானை வைத்து பிறகு பீங்கான் முழுவதும் முழுகும்வரை மணலைக்கொட்டி மேலொரு சட்டியை மூடி இடைவெளியில்லாமல் பொருந்தும்படி வைத்து ஒரே ஜாதி விறகால் 1½ நாள் அல்லது 36 மணி நேரம் கமலாக்கினியால் எரிக்கவும். பிறகு இரண்டுநாள் வரையில் ஆறவைத்து ஷ பீங்கானைத் திறந்து உள்ளிருக்கும் சிந்தூரத்தையும், பீங்கானில் கட்டி இருக்கும் பதங்கத்தையும் தனித்தனியே எடுத்துப் பொடித்து வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

சகல வாதரோகங்கள், சுரம், சன்னி, சூலை முதலானதற்கு இரண்டு அரிசியெடை பிரமாணம் மருந்தை எடுத்துத் தேனில் மத்தித்துக் கொடுக்கவும். பாரிசவாயுவுக்கு மிகவும் மேன்மையான மருந்து. ஏகாங்க வாதம், பாரிச வாயு, வாய்கோணல், கைகால் முடக்கு இவைகளுக்குத் தேனில் கலந்துண்ணவும். அதன்மேல் ⅛ சேர் தேனை சுண்ணாம்பு நீக்கிய ⅛ சேர் இஞ்சிச் சாற்றுடன் கலந்து குடிக்கவும். சகல வாத நோய்களுக்கும் தகுந்த அனுபானங்களில் கொடுக்க வாதநோய் தீரும். நூற்றுக் கணக்கானவர்களுக்குக் கொடுக்கப்பட்டு மிகவும் அனுபவங் கண்ட மருந்து.

**பத்தியம் :-**

| | |
|---|---|
| புளி | மஞ்சள் |
| கடுகு | நல்லெண்ணெய் |
| தயிர் | பால் |
| வாகிரிவஸ்துக்கள் | வாயுபதார்த்தங்கள் |
| மீன் | கருவாடு |
| கோழி | முட்டை |

இவைகளை விலக்கவும்.

| | |
|---|---|
| துவரம்பருப்பு | சீரகம் |
| எலுமிச்சம்பழம் | மிளகு |
| உப்பு | நெய் |
| தேங்காய் எண்ணெய் | கத்தரிப்பிஞ்சு |
| முருங்கைப்பிஞ்சு | புடலம்பிஞ்சு |
| கோதுமை | வெள்ளாட்டு மாமிசம் |
| புரு மாமிசம் | உப்புகண்டம் (மாமிச வற்றல்) |

இவைகளைக் கூட்டவும்.

வாதத்திற்கு முதலில் மூன்று நாட்கள் மருந்தைச் சாப்பிட்டுப் பிறகு 3 நாட்கள் மருந்துண்ணுமல் மறு பத்தியத்தை அனுஷ்டிக்கவும்.

மிகவும் அனுபவங்கண்ட முறை.

## 572. இரசசிந்தாமணி ரசம்

| | |
|---|---|
| பாதரசம் | 2 பலம் |
| நெல்லிக்காய் கந்தகம் | ,, |
| லிங்கம் | ,, |
| சிஞக்காரம் | ,, |
| கருநாபி | ,, |

இவைகளை ஒன்றுகூட்டவும். கொடிவேலிச் சமூலத்தைக் கொணர்ந்து ஒன்றிரண்டாக இடித்து 2 படி தண்ணீரைச் சேர்த்து $\frac{1}{4}$ படி கஷாயமாகக் காய்ச்சி வடிகட்டிக் கொள்ளவும்.

மேற்கூறிய மருந்து சரக்குகளை வத்ஸநாபியைத்தவிர மற்றதை கல்வத்திலிட்டு தயாரித்து வைத்திருக்கும் கஷாயத்தைவிட்டு 3 நாட்கள் நைவாயரைத்து நன்ருக உலரவைத்து பொடித்துக்கொள்ளவும்.

பிறகு அதை காசிக்குப்பியிலடைத்துக் குப்பியின் வாயை மாவுக்கல்லினுல் மூடிச் சீலைமண்செய்து ஒரு

சட்டியில் 4 படி மணலைப்போட்டுக் குப்பியை அதனடுவில் வைத்து மேலும குப்பி மூழ்கும்வரை மணலைக்கொட்டி அடுப்பின் மேலேற்றி காட்டுத்தீயால் எரிக்கவும். மணலின் மேல் தீயிடுமுன் சிறிது நெல்லைத் தெளித்து வைக்கவும். அந்தநெல் பொரியாகும் வரையில் தீ எரித்து உடனே தீயை நிறுத்திக்கொள்ளவும்.

மறுநாள் புடம் ஆறிய பிறகு குப்பியிலுள்ள மருந்தை எடுத்து சுத்திசெய்த வத்ஸநாபியைச் சேர்க்கவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும்:**

சகல ரோகங்கள், மேக ரோகங்கள், சகல வாயு ரோகங்கள், சுரம் இவைகளுக்குத் தகுந்த அனுபானங்களில் கொடுக்கவும். விசேடமாக தேன், நெய், நோய்களுக்குரிய கஷாயம், சாறு இவைகளில் கொடுக்கவும்,

**பத்தியம்:** இச்சாபத்தியம், நோய் கடினமாக இருந்தால் கடின பத்தியம். சாதாரண நோய்க்கு லகு பத்தியம்.

## 573. சன்னிபாத பைரவ ரசம்

முதலில் லிங்கத்தை சுத்திசெய்து கட்டும் முறை:—

தேவையான லிங்கத்தை ஒரே கட்டியாயிருக்கும்படி எடுத்துக்கொண்டு அதை ஒரு ஓட்டில்வைத்து அடுப்பின் மேலேற்றி, அடுப்பின்கீழ் ஒரு அகலைவைத்து அதில் இலுப்பெண்ணெய்விட்டு கைவிரல் கனத்தில் ஒரு திரியை வைத்து எரிக்கவும். லிங்கத்தின் எடை எவ்வளவு பலம் இருக்கிறதோ அவ்வளவு ஜாமம் வரையில் வேப்பம் பட்டைக் கஷாயத்தினால் லிங்கத்திற்குச் சுருக்கம் கொடுக்கவும். இவ்விதஞ்செய்ய லிங்கம் சுத்தியாகும்.

| | |
|---|---|
| மயில்துத்தம் | வெடியுப்பு |
| வெங்காரம் | சீனக்காரம் |

இவைகள் சமயெடை. இவைகள் யாவற்றிற்கும் சமஎடை கந்தகம். இவ்வைந்தின் மொத்தயெடை லிங்கத்தின் மொத்தயெடைக்குச் சமமாக இருத்தல் வேண்டும். ஐந்தையும் ஒருமிக்கச்செய்து தூள்செய்துகொள்ளவும்.

பிறகு முன்பு கூறியபடி ஓட்டை அடுப்பின் மேலேற்றி அதன்கீழ் இலுப்பெண்ணெய் விளக்கை வைத்து ஓட்டில் லிங்கக்கட்டியை வைத்து அதன்மேல் சிறுகச்சிறுக தயாரித்திருக்கும் தூளைத் தூவி ஒரு இரும்பு சலாக்கினால் கிண்டிக்கொடுக்கவும். இவ்விதம் செய்ய தூளானது எரிந்து கந்தகம் உருகி ஓட்டில் ஒட்டிக்கொள்ளும். சூரணம் முழுமையும் போட்டு எரித்த பிறகு லிங்கத்தை எடுத்து வைத்துக்கொள்ளவும்.

பிறகு லிங்கத்திற்கு சமயெடை கொடிவேலி வேரை எடுத்து நன்றாக இடித்து ஒரு பானையில் போட்டு அதற்கு 16 பங்கு தண்ணீரை விட்டு ஒருநாள் முழுவதும் ஊற வைத்து மறுநாள் ஒரே ஜாதி விறகால் தீ எரித்து நான்கி லொரு பாகம் கஷாயமிறக்கிக்கொண்டு இக்கஷாயத்தை வேறொரு சிறிய பானையிலிட்டு லிங்கத்தை டோலாயந்திர முறைப்படி தொங்கவிட்டு கஷாயம் முழுவதும் சுண்டும் வரையில் காய்ச்சி பிறகு லிங்கத்தை எடுத்துச் சுத்தமான தண்ணீரில் கழுவி எடுத்துக்கொள்ள லிங்கமானது கட்டுப் பட்டிருக்கும்.

**இரசகற்பூரந்தைச் சுத்தி செய்து கட்டும் விதம் :**

வேண்டிய அளவு இரச கற்பூரக்கட்டியை முன்பு கூறிய விதமே ஓட்டில் வைத்து இலுப்பெண்ணெய் விளக்கை ஏற்றி வெள்ளைப்பூண்டு தைலத்தில் சுருக்கம் கொடுக்கவும். ஒரு பலம் இரச கற்பூரத்திற்கு கால் ஜாமம் அளவு வீதம் சுருக்கம் கொடுக்கவும்.

பிறகு இவ்வாறே ஒரு பலம் இரச கற்பூரத்திற்கு ஒரு நாழிகைப் பிரமாணம் பிண்டதைலத்தில் சுருக்கம் கொடுக்கவும்.

**வத்ஸநாபி சுத்தி செய்யுமுறை :**

தேவையான வத்ஸநாபியை துண்டுகளாக்கி ஒரு புதுப்பானையில் போட்டு கோமூத்திரத்தை நிறையவிட்டு மூன்று நாட்கள் வரையில் ஊறவைக்கவும்.

பிறகு எடுத்து நன்ருகக் கழுவி வைக்கவும்.

**மனேசிலை சுத்திசெய்யும் விதம் :**

தேவையான மனேசிலையை இஞ்சிச்சாற்றில் ஒரு ஜாமம் அரைத்து உருண்டைகள் செய்துகொள்ள சுத்தி ஆகும்.

**தாளகத்தைச் சுத்திசெய்யுமுறை :**

சுட்டசுண்ணும்புக்கற்களை ஒரு கலயத்தில் பாதி அளவு நிரப்பி அதில் தேவையான தாளகத்தை வைத்து அதன் மேல் தென்னங்கள்ளை ஊற்றி சுண்ணும்பு பூத்து தானுகவே ஆறிய பிறகு தாளகக் கட்டியை எடுத்துத் தண்ணீரில் சுத்தம் செய்துகொண்டு மறுபடியும் அதை ஒரு பானையில் போட்டு பாதிப்பானை நிறைய புடசம் பட்டையை எரித்து ஆக்கிய சாம்பலைக்கொட்டி அதன் மேல் பூசணியின் திருகலைப் பிழிந்து அதனின்று வரும் சாற்றையும் பானையில் ஊற்றி அடுப்பின்மேல் ஏற்றி $\frac{1}{2}$ ஜாமம்வரையில் வேக வைத்துப் பிறகு தாளகத்தை எடுத்து தண்ணீரில் சுத்தம் செய்துகொள்ளவும்.

**இவ்விதம் சுத்திசெய்த சரக்குகளை ஒன்ருகச் சேர்க்கும் முறை :**

இவ்விதமாகச் சுத்திசெய்த மருந்துகளில்

| | |
|---|---|
| லிங்கம் | 6 பலம் |
| வத்ஸநாபி | 1 பலம் |
| தாளகம் | 1 வராகனெடை |
| இரசகற்பூரம் | 4 பலம் |
| மனேசிலை | 1 வராகனெடை |

தவிர

| | |
|---|---|
| பொரித்த வெங்காரம் | 1 பலம் |
| திப்பிலி | 1 பலம் |
| மிளகு | 1 பலம் |

இவ்வித அளவுப்படி எடுத்துக்கொண்டு முதலில் லிங்கக் கட்டியை கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழ ரசத்தினல் 8 நாழிகை வரையில் இடைவிடாது அரைக்கவும். பிறகு இரசகற்பூரக் கட்டியைச் சேர்த்து 12 நாழிகை வரை எலுமிச்சம்பழச் சாற்றிலரைக்கவும்.

பிறகு எல்லா மருந்துகளையும் ஒன்றுபடக் கலந்து 16 நாழிகை வரையில் இடைவிடாமல் அரைத்து மாத்திரைக ளாகவோ அல்லது உலரவைத்துத் தூளாகவோ செய்து கொண்டு புட்டியிலடைத்துக்கொள்ளவும்.

**இம்மருந்தின் பரிமாணம் :**

இரண்டு குன்றிமணியெடை முதல் தேகபலத்தையும், ரோக பலத்தையுமனுசரித்து கூட்டியுங் குறைத்துங் கொடுக்கவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

23வித சன்னிபாத ரோகங்களில் அதறகுத் தகுந்த கஷாயத் துடன் இஞ்சிச்சாற்றையுங் கூட்டிக்கொடுக்க சன்னிபாதங் கள் ஒழியும்.

**வாத சுரத்திற்கு :**

| | |
|---|---|
| சுக்கு | அரத்தை |
| கண்டத்திப்பிலி | |

இம்மூன்றின் கஷாயத்துடன் ஒரு குன்றிமணியெடை மருந்தை தினம் இருவேளை விதம் மூன்று நாட்கள் கலந் துண்ண வாதசுரம் தீரும்.

**பித்த சுரத்திற்கு :**

| | |
|---|---|
| சுக்கு | கொத்தமல்லி |
| கண்டங்கத்திரி | |

இம்மூன்றின் கஷாயத்தில் ஒரு குன்றிமணியெடை மருந்தைக் கலந்து தினம் இருவேளையும் மூன்று நாட்கள் உட்கொள்ள பித்த சுரம் தீரும்.

**கப சுரத்திற்கு:**

சுக்கு திப்பிலி

ஆடாதோடை வேர்

இம்மூன்றின் கஷாயத்தில் இரண்டு குன்றிமணியெடை மருந்தைக் கலந்து தினம் இருவேளையும் மூன்று நாட்கள் உட்கொள்ள கபசுரம் தீரும்.

இம்மருந்து மிகவும் அனுபவங்கண்டது. அநேகருக்கு கொடுத்துப் பரிக்ஷை பார்த்தது.

## 574. பட்டுக்கருப்பு ரசம்

| | |
|---|---|
| பாதரசம் | 1 பலம் |
| நெல்லிக்காய் கந்தகம் | 2½ வராகனெடை |

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு சிற்றாமணக்கு எண்ணெய் வேண்டியளவு ஊற்றி (கஜ்ஜலி) மைபோல் அரைத்து அதை வில்லைகளாகத் தட்டிக்கொள்ளவும்.

கொடிவேலியின் தோலை எடுத்து நன்றாக இடித்துத் தூள்செய்து சிகப்பு பட்டுத்துணியில் இச்சூரணத்தைப் பரப்பி அதன்மேல் இவ்வில்லையை வைத்து மேலும் சூரணத்தைப்போட்டு பட்டுத்துணியை நன்றாகச் சுருட்டி பட்டு நூலால் பந்தனம் செய்யவும். ஒரு அகலை எடுத்து முன்பு கூறிய சூரணத்தை நிரப்பி அதனடுவில் முட்டையை வைத்து மேலும் சூரணத்தைப் போட்டு வேறொரு அகலை மூடிச் சந்தைப் பதியவைத்து சீலைமண் செய்து நிழலில் உலர்த்திக்கொண்டு 1½ மரக்கால் மணலை பூமியில் பரப்பி அதன்மேல் ஒருவிரல் உயரம் மணலைப்பரப்பி 15 வறட்டியையும் அடுக்கிப் புடம்போட்டு எரித்துக்கொள்ளவும்.

மருந்து தயாரிக்கும்பொழுது தங்கம், வெள்ளி இவைகளின் இரேக்குகளையும் தேவையானால் சேர்த்து அரைக்கவும். இவைகள் சேர்ந்த மருந்து மிகவும் உயர்ந்ததாயிருக்கும்.

அனுபானமும் தீரும் வியாதியும் :

வாயுவுக்கு சுக்கும் கருப்புட்டியுஞ்சேர்த்து மருந்துடன் கலந்து சாப்பிடவும். சுரத்திற்குத் தேன் அல்லது இஞ்சிச்சாற்றில் கலந்துண்ணவும். சாதாரண காலங்களில் உஷ்ண சரீரத்திற்குத் தேனிலும், வாத சரீரத்திற்குச் சர்க்கரையிலும் மருந்தை கலந்து உண்ணவும்.

## 575. அம்ருதாதி ரசம்

| | |
|---|---|
| கோரோசனை | 1 வராகனெடை |
| பச்சைக்கற்பூரம் | ,, |
| குங்குமப்பூ | ,, |
| உலாந்தாலிங்கம் | 2 வராகனெடை |

இவைகள் யாவற்றையும் ஒருமிக்கச் செய்து கல்வத்தில் இட்டு முலைப்பால் விட்டு நைவாய் அரைத்துப் பச்சைப் பயறுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

அனுபானமும் தீரும் வியாதியும் :

சிறுபிள்ளைகள் முதல் பெரியோர்கள் வரையில் இம் மருந்தை உட்கொள்ளலாம். சுரம், அஜீரணம், மந்தவாயு, பித்தம் முதலான நோய்களுக்கு அனுபான பேதங்களில் கொடுக்க மேற்கண்ட நோய்கள் தீரும்.

## 576. பிரமதேபாங்குச ரசம்

| | |
|---|---|
| சத்திக்ஷாரம் | பூநீர் |
| யவக்ஷாரம் | பஞ்சலவணம் (5) |

| | |
|---|---|
| நவச்சாரம் | வெங்காரம் |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்விமுள்ளி |
| ஊமத்தைவிதை | மஞ்சள் |
| கடுகு | வெல்லம் |

இவ்விருபதுவகை மருந்துகள் ஒருபாகமென்ருல் பாதரசம் 30 பாகம். இவ்விதமாக எடுத்துக் கல்வத்திலிட்டு 12 ஜாமம் அரைத்துப் பிறகு இப்பாதரசத்தை உறுதியான துணியில் முடித்து பிழிந்து இத்துடன்,

| | |
|---|---|
| வெள்ளைக்காக்கரட்டான் பூவின் ரசம் | 1 பாகம் |
| சங்கம் குப்பியிலைச்சாறு | 1 பாகம் |
| சிகப்பு தொட்டாற்சிறுங்கியிலையின் சாறு | 1 பாகம் |

இவ்விதம்போட்டு கையால் 4 நாழிகை நன்ருக மத்தித்து பிறகு ஒரு ஜாமம் தீயெரித்து அதற்குப் பிறகு கற்ருழைச் சாற்றில் 15 தினமும் அரைத்து, கொடிவேலிக்கஷாயத்தில் 7 தினம் டோலாயந்திர முறைப்படி கமலாக்கினித் தீயால் எரிக்கவும்.

மறுபடியும் பாதரசத்தை கல்வத்திலிட்டுக் கொடி வேலிக் கஷாயத்தில் 21 நாட்களும், வடக்கில் ஓடியிருக் கும் செவ்வலரிவேர்க் கஷாயத்தில் 21 நாட்களும், ஜாதிக் காய் கஷாயத்தில் (சுமார் வேளை ஒன்றிற்கு 4 ஜாதிக்காய் வீதம்) ஒரு நாளும், ரக்தோத்பலத்தின் சாற்றில் ஒருநாளும் இவ்விதமாக அரைத்த பாதரசத்தை எடுத்துக் கொள்ள வும்.

பிறகு கருப்பஞ்சாறு, பால், நெய் இம்மூன்றில் சுத்தி செய்த கந்தகம் பாதரசத்தின் மொத்த எடையில் $\frac{1}{4}$ பங்கு சேர்த்துக்கொண்டு சிறுதுளி ஆமணக்கெண்ணெயுங் கூட்டி மத்தித்து தாப்தா பட்டுத்துணியில் முட்டைகட்டிப் பட்டு நூலால் பந்தனம் செய்துகொள்ளவும்.

கடைசியாக கொடிவேலிவேர் மேற்றேலின் சூரணத்தை ஒரு அகலில் நிரப்பி அதனடுவில் மருந்தை வைத்து மேலும் சூரணத்தைக் கொட்டி நன்ருக அமுக்கி அதன்மேல் வேருெரு அகலைமூடி வாயைப் பதிய வைத்துச் சீலேமண் செய்து குழிதோண்டி சிறிது மணலைப் பரப்பி அதனடுவில் அகலைவைத்து மேலும் 1 அங்குலம் மணலைப்போட்டு நான்கு அல்லது 5 வறட்டியை அடுக்கிப் புடம்போட்டு எரிக்கவும். இவ்விதம் 5 புடம் போட்டெரிக்க மருந்து சிந்தூரமாகும்.

**அனுபானமும் தீரும் வியாதியும்:**

ஒரு பணவிடை மருந்தை அல்ப சரீரத்திற்கு 3 அல்லது 4 மாலைகள் மட்டிலும் கொடுக்கவும். தேக பலத்தையும் ரோகபலத்தையும் அனுசரித்து இருவேளையும் கொடுக்கலாம்.

தேன் 1 பாகம் நெய் 2 பாகம்
சர்க்கரை 3 பாகம்

இவைகளுடன் மருந்தைக் கலந்து கொடுக்கவும்.

**இதற்குப் பத்தியம்:**

பால்சாதம், நெய், சர்க்கரை இவைகளைக் கூட்டவும்.

நல்லெண்ணெய், கடுகு, மிளகாய் இவைகளை விலக்கி, மிகக் குறைவாக உப்பு, புளி இவைகளைப் பகலில் மட்டும் சேர்க்கவும். இரவில் பால்சாதம் சர்க்கரை இவைகளைத் தான் கூட்ட வேண்டும். வேறு எதையும் சேர்க்கலாகாது.

இவ்வாறு 14 நாட்களுண்ண தீபனம், தாதுவிருத்தி, இரத்த விருத்தி முதலானவைகள் உண்டாகும். இருபது வருடங்கள் வரையில் தாது நஷ்டமுண்டாகி சந்தான விருத்தியில்லாதவர்கள் இம்மருந்தை உட்கொண்டால் தாதுவிருத்தி ஏற்பட்டு சந்தான பிராப்தி உண்டாகும்.

இம்மருந்து அனுபவங்கண்டது. அநேகருக்குக் கொடுத்து அவர்களைக்கேட்டு அவர்களுடைய அனுபவத்தையறிந்து எழுதியது.

## 577. ஆனந்த பைரவ ரசம்

| | |
|---|---|
| பொரித்த வெங்காரம் | லிங்கம் |
| திப்பிலி | வத்ஸநாபி |
| பாதரசம் | சுந்தகம் |
| மிளகு | |

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை வீதமெடுத்து கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றில் மூன்று தினங்கள் அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திக்கொண்டு டப்பியில் அடைத்துக்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

| | |
|---|---|
| சுக்கு | சிற்றரத்தை |
| கண்டத்திப்பிலி | ஓமம் |
| வெற்றிலே | |

இவைகளின் சுரசம் அல்லது இஞ்சிச்சாறு. இதில் வேளை ஒன்றிற்கு 1 மாத்திரை வீதம் எடுத்து இழைத்துக் கொடுக்க சன்னிபாதம், திரிதோஷசுரங்கள் முதலான சகல பிணிகளும் தீரும்.

வெற்றிலேச்சாற்றில் உரைத்துக் கண்ணில் சலிக்கமிடலாம். வெந்நீர், குளிர்ந்த ஜலம், தேன் இம்மூன்றில் ஏதேனுமொன்றில் சமயத்திற்குகுந்தவாறு ரோகத்தை அறிந்து மருந்தை இழைத்துக்கொடுக்கவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

| | |
|---|---|
| கிராம்பு | சிறுநாகப்பூ |
| கர்கடசிங்கி | |

இவைகளை வறுத்துச் சூரணஞ்செய்து தேனையுங் கூட்டி மருந்தையுங் கலந்து கொடுக்க சுரம், அதிசாரம் முதலானவைகள் தீரும்.

**இதற்குப் பத்தியம் :**

சுரம், தோஷர், சைத்தியம் இவைகளுக்குப் புளியை விலக்கவும்.

அதிசார சுரத்திற்குப் புளியைச் சுட்டு சேர்க்கவும்.

## 578. இரசசிந்தாமணி

| | |
|---|---|
| பாதரசம் 2 பலம் | உலாந்தா லிங்கம் 2 பலம் |
| நெல்லிக்காய் | படிக்காரம் 2 பலம் |
| கந்தகம் 2 பலம் | |

இவைகளை ஒன்றுகூட்டிக் கல்வத்திலிடவும். பிறகு கொடிவேலி சமூலத்தைக் கொணர்ந்து ஒன்றிரண்டாக இடித்து இரண்டு படி கஷாயமிறக்கி வடிகட்டிக்கொண்டு கல்வத்திலுள்ள மருந்துடன் சிறிது சிறிதாகக் கலந்து 3 நாட்கள் இடைவிடாமல் அரைத்து பிறகு தூள்செய்து காசிக் குப்பியிலடைத்துக் குப்பியின் வாயை மாவுக் கல்லினுல் மூடி 7 சீலைமண் செய்து ஒரு பானையில் 4 படி மணலைப் போட்டு அதனடுவில் குப்பியை வைத்து மேலும் குப்பியின் வாய் வரையில் மணலை நிரப்பிப் பானையை அடுப்பின் மேலேற்றிக் காட்டுத் தீயால் எரிக்கவும்.

மணலில் நெல்லைப்போட அது பொரியாகும் வரையில் தீ எரிக்கவும். பிறகு தீயை திருத்திவிடவும். மறுநாள் குப்பி ஆறியதும் உடைத்து வெகு ஜாக்கிரதையுடன் மருந்தை எடுத்துப் பத்திரப்படுத்தவும். வத்ஸநாபியை சுத்திசெய்தே இதில் சேர்க்கவேண்டும்.

**தீரும் நோய்கள் :**

சகலமேகங்கள், சகல வாயு ரோகங்கள், சூலைக்கட்டு, சுரம் முதலான ரோகங்களுக்கு அந்தந்த நோய்களுக்குரிய அனுபானங்களில் கொடுக்கவும்.

தேன், நெய் வியாதிகளுக்குத் தக்க கஷாயம், சுரசம் முதலான விசேஷ அனுபானங்களிலும் கொடுக்கலாம்.

**இதற்குப் பத்தியம் :**

இச்சாப்பத்தியம். வியாதி பலமாக இருந்தால் கடின பத்தியமிருக்கவும்.

**குறிப்பு :** வத்ஸநாபி இம்மருந்திற்காக சுத்தி செய்யு முறையாவது.

வத்ஸநாபியைக் கொணர்ந்து ஒரு பானையில் போட்டு அத்துடன் 2 படி எருமையின் சிறுநீரைவிட்டு கால்படியளவு சுண்டும் வரையில் அடுப்பின் மேலேற்றிச் காய்ச்சவும். பிறகு கீழே இறக்கி சுத்தமான ஜலத்தில் நன்ருக அலம்பி உலரவைத்து உபயோகிக்கவும்.

## 579. பிரதாபலிங்க ரசம்

| | |
|---|---|
| உலாந்தாலிங்கம் | $37\frac{1}{2}$ வராகனெடை |
| வீரம் | 15 வராகனெடை |
| நெல்லிக்காய்கந்தகம் | 52 வராகனெடை |

இவைகளைப் பொடித்து காசிக்குப்பியிலடைத்து வாலுகா யந்திரத்தில் வைத்து 8 ஜாமம் எரித்து புடம் தானுகவே ஆறிய பின்பு மருந்தை எடுத்துத் தூள்செய்து வைத்துக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

மூலவாயு, கபரோகம், சுவாசகாசம், வாதரோகம், சகலவித சைத்தியம் இவைகளுக்குக் கொடுக்கவும். குழவு சீனி, தேன் இவைகளில் கலந்துண்ணவும். ரோகத்தை யனுசரித்தும் தேகபலத்தையனுசரித்தும், வயதுக்கிரமப்படி மருந்தின் அளவைக் கூட்டியும் குறைத்தும் கொடுக்கவும். பத்தியமும் அதற்குத் தகுந்தவாறு அனுசரிக்கவும்.

## 580. காலகண்ட ரசம்

| | |
|---|---|
| பாதரசம் | நெல்லிக்காய் கந்தகம் |
| பூரம் | தாளகம் |

இவைகளைச் சுண்ணும்புக் கல்லில் சுத்திசெய்யவும்.

மனேசிலையை கழுதையின் சிறுநீரில் சுத்தி செய்யவும்.

| | |
|---|---|
| வெங்காரம் | நவச்சாரம் |
| இந்துப்பு | பெருங்காயம் |
| கருஞ்சீரகம் | |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை.

உலர்ந்த சாணத்தைத் தூள்செய்து நீருடன் கலந்து நேர்வாளத்தையும் அத்துடன் போட்டு நன்முக வேகவைத்துப் பருப்பை மட்டும் இறுத்து எடுத்துக்கொள்ளவும். பருப்புடன் பச்சரிசியைக் கலந்து தண்ணீர்விட்டு மறுபடியும் நன்முக வேகவைத்து அரிசி சாதமானதும் பருப்பை எடுத்து அதிலுள்ள முளைகளைக் களைந்து விட்டு பருப்பை மட்டிலும் எடுத்துக்கொள்ளவும்.

தரையில் 6 அல்லது 7 மடிகளாகத் துணியை மடித்துப் போட்டு அதன்பேரில் பருப்பை தனித்தனியே பரப்பி வைத்து அதன்மேலும் மடித்த துணியால் மூடி கனமான அம்மிக்கல் அல்லது திருவைக்கல்லை வைக்கவும். இவ்விதஞ் செய்ய வாளப்பருப்பிலுள்ள எண்ணெய் வெளியே கசிந்து சுத்தியாகும். இவ்விதம் சுத்தி செய்த

| | |
|---|---|
| நேர்வாளப்பருப்பு | 1 பலம் |
| கடுக்காய்த்தோல் சூரணம் | 1 பலம் |

இவ்வாறு எல்லா சரக்குகளையும் ஒன்முகக் கூட்டிச் சூரணித்துக் குப்பியிலடைத்துக் கொள்ளவும்.

**அனுபானம் :**

தேன், இஞ்சிச்சாறு, சுக்குக்கஷாயம். ரோகத்தை அனுசரித்தும் வயதுக்கிரமத்தை அனுசரித்தும் மருந்தைக் கூட்டியுங் குறைத்துங் கொடுக்கவும்.

## 581. கந்தாம்ருத ரசம்

| | |
|---|---|
| பாதரச பற்பம் பங்கு *1* | கந்தகம் பங்கு *2* |

இவ்விரண்டையும் கற்ருழைச் சாற்றிலரைத்துச் சிறிய தொரு புடத்தில் வைத்து எரித்து எடுத்துக் கொள்ளவும்.

**அனுபானம் :**

*3* குன்றிமணியெடை மருந்துடன் தேன், அல்லது நெய்யைக் கூட்டிக்கொடுக்கவும்.

சுரம், அகால மரணம் முதலியவைகளைப் போக்கும்.

மருந்துண்டவுடன்

| | |
|---|---|
| கையாந்தகரைச்சமூலம் | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |

இவைகளைச் சமமாகக்கொண்டு நிழலிலுலர்த்தித் தூள் செய்து சர்க்கரையைக் கலந்து வைக்கவும். இதில் தினமும் 4 தோலா சூரணத்தை உட்கொள்ளவும்.

## 582. மோரேஸ்வர ரசம்

| | |
|---|---|
| பாதரசம் | ½ தோலா |
| தாமிர பற்பம் | ¼ தோலா |
| லோக பற்பம் | 2 தோலா |
| அப்பிரக பற்பம் | 2 தோலா |
| சுத்திசெய்த கந்தகம் | ½ தோலா |
| தங்க பற்பம் | 12 குன்றிமணியெடை |
| பச்சைக்கற்பூரம் | 12 குன்றிமணியெடை |

| | |
|---|---|
| சிற்ருமுட்டியின் வித்து | பெருந்துத்தி வித்து |
| சங்கபுஷ்பம் | ஏலக்காய் |

இவைகள் வகைக்கு ¼ தோலா

யாவற்றையும் கல்வத்திலிட்டுத் தண்ணீர்விட்டு நைவாயரைத்துக் குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

உடம்பில் தேஜஸ் உண்டாகும். வீரியவிருத்தி உண்டாகும். தாதுசூன்யம் தீரும். அதிக பலம் ஏற்படும்.

இம்மருந்தை 49 நாட்கள் உட்கொள்ள பூரண குணமளிக்கும். ஸ்தூல சரீரமுடையவன் மத்தியமான கிரய சரீரமுடையவனுவான். மிகவும் இளைத்தவன் புஷ்டியடைவான்.

## 583. உன்மாதபைரவ ரசம்

| | |
|---|---|
| ஜாதிக்காய் | இந்துப்பு |
| லிங்கம் | பலகறைபற்பம் |
| சுக்கு | வத்ஸநாபி |
| ஊமத்தை விதை | திப்பிலி |
| வெங்காரம் | மிளகு |

இவைகள் சமமாகக் கொண்டு

| | |
|---|---|
| துரிஞ்சிப்பழச்சாறு | ஊமத்தஞ்சாறு |
| கஞ்சாயிலைக் கஷாயம் | |

இவைகளில் முறையே தனித்தனியாக அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

ஒரு மாத்திரையை வெற்றிலையில் சுருட்டி தாம்பூலத்துடன் உட்கொள்ளவும். அலித்தன்மை, க்ஷீணவிரியம் (தாது சூன்யம்) நீரிழிவு முதலான பிணிகள் திரும்.

## 584. க்ஷயகுலாந்தக ரசம்

சீந்தில் சர்க்கரை
இரசசிந்தூரம்
கிருஷ்ணுப்பிரகபற்பம்
மாக்ஷிக(கிட்டான்)பற்பம்
லோகபற்பம்
வங்கபற்பம்
தங்கரேக்கு

இவைகள் சமயெடைகொண்டு கல்வத்திலிட்டு ஏழுநாட்கள் வரையில்

கடுக்காய்
தான்றிக்காய்
நெல்லிமுள்ளி

இவைகளின் கஷாயத்தில் அரைத்து 3 குன்றிமணி யெடை விதம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திக் கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

தினம் காலை மாலை இருவேளையும் ஒரு மாத்திரையைத் தேனுடன் இழைத்து உட்கொள்ள க்ஷயரோகம், ஜீரண சுரம், பிரமியம், பாண்டு, பித்தரோகம், காசம், இரத்த பித்தம், மூச்சு, தாதுநஷ்டம் இவைகள் தீரும். புஷ்டி, பலம், இரத்தவிருத்தி இவைகள் அதிகரிக்கும்.

சகல க்ஷயரோகங்களையும் ஒழிக்கக்கூடிய இரசாயனங் களில் இம்மருந்து மிகவும் சிரேஷ்டமானது.

## 585. தன்வந்தரிரசம்

பாதரசம்
வத்ஸநாபி
அப்பிரகம்
உலோகம் (இரும்பு)
தங்கம்
முத்து
சத்திக்ஷாரம்
நவச்சாரம்
சீனக்காரம்
நிமிளை
வங்கம்
லிங்கம்
திப்பிலிமூலம்

இவைகள் சமமாகக்கொண்டு கல்வத்திலிட்டு

| | |
|---|---|
| சித்திரமூலக்கஷாயம் | செருப்படிச்சாறு |
| எருக்கம்வேரின் கஷாயம் | கையாந்தகரைச்சாறு |
| பஞ்சகோல கஷாயம் | |

இவைகளைவிட்டு ஒவ்வொரு ரசத்திலும் தனித்தனியே அவ்வைந்து நாள்விதம் அரைத்து உலர்த்திக் கொள்ளலாம்.

பிறகு உலர்த்திய மருந்தை காசிக்குப்பியில் அடைத்துக் குப்பியின் வாயை மாவுக்கல்லினல்மூடி நன்ருகச்சீலைமண் செய்து உலர வைத்து வாலுகாயந்திர முறைப்படி ஒரு சட்டியில் வைத்து மேலுங் கீழும் மணலைப்போட்டு அடுப்பின் மேலேற்றி (ஒரே ஜாதி விறகால்) கமலாக்கினித் தீயால் மூன்று ஜாமம் எரித்து பிறகு சட்டி ஆறியதும் காசிக் குப்பியை உடைத்து அதனுள் இருக்கும் மருந்தை எடுத்து மறுபடியும் கல்வத்திலிட்டு

| | |
|---|---|
| மீன்பித்து | எருமையின்பித்து |
| மயில்பித்து | வெள்ளாட்டுப்பித்து |

இவ்வகை பித்துக்களில் தனித்தனியே அவ்வைந்து நாட்கள் அரைத்து உளுந்து பிரமாணம் மாத்திரைகள் செய்து தகுந்த அனுபானத்துடன் கொடுக்க சகலவிதமான சன்னி பாத ரோகங்களும் தீரும்.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## கல்க வகைகள்

## கல்கம்

### 586. மாணினி மகரத்வஜம்

| | |
|---|---|
| ஏலக்காய் | இலவங்கப்பத்திரி |
| இலவங்கம் | செவ்வல்லி |
| கோஷ்டம் | கோரைக்கிழங்கு |
| நீர்முள்ளிவிதை | தண்ணீர்விட்டான்கிழங்கு |
| அதிமதுரம் | அமுக்கராக்கிழங்கு |
| சிவதைவேர்ப்பட்டை | சீரகம் |
| கற்பூரம் | நெல்லிமுள்ளி |
| கூகைநீர் | பொன்னுங்காணிவேர் |
| பெருநன்னுரிவேர் | நெருஞ்சில்வேர் |
| இலவம்பிசின் | சிந்தில்கிழங்கு |

இவைகள் சமமாகக்கொண்டு கல்லுரலிலிடித்துச் சூரணித்து வடிகட்டிக்கொண்டு அதற்கு இருமடங்கு சீந்தில் சர்க்கரையைக் கலந்து தான்றிக்காயளவு மருந்தைத் தேனில் காலையிலும், பசு நெய்யல்லது குளிர்ந்த நீரில் மாலையிலுமுட்கொள்ள தாகம், நாக்கு, தொண்டை இவைகள் உலர்தல் முதலான நோய்கள் தீரும்.

சர்க்கரையுடன் கொடுக்க மதுமேகம், பிரமியம், கை கால், கண்களின் எரிவு, உஷ்ணம், யோனிதோஷம், லிங்க தோஷம், வீரிய நஷ்டம், சகல சுரங்கள், சகல உஷ்ணம் முதலான பிணிகள் தீரும். வீரிய விருத்தியும் ஆகும்.

### 587. குன்மத்திற்கு சாரணைவேரின் கல்கம்

சாரணைவேரை நன்முக அரைத்து விழுதாக எடுத்துக் காலையில் பல் துலக்கியவுடன் சாப்பிட

| | |
|---|---|
| விதைவீக்கம் | சீத இரத்தம் |
| வாதபித்தம் | இலேத்துமாதிக் குன்மம் |
| வாதரோகம் | |

முதலானது தீரும்.

## 588. எரிகுன்மத்திற்கு

| | |
|---|---|
| பொன்னாங்காணிச்சாறு | பழையகாடி |
| நெய் | அரைத்த சந்தனம் |

இவைகளை ஒன்றுபடக் கலந்து விடியற்காலையில் உட்கொள்ள சகலவிதமான குன்மம், உஷ்ணம் முதலியவைகள் தீரும்.

## 589. கடுப்புடன் கூடிய குன்மத்திற்குக் கல்கம்

*1)* உயர்ந்த வகைப் பெருங்காயம் ¼ வராகனெடை எடுத்து நன்றாக வறுத்து அத்துடன் கால்பலம் பூண்டையும் வறுத்து நன்றாக அரைத்து இருவேளையும் ஏழுநாட்கள் உட்கொள்ள வலிக்குன்மம் தீரும். வாயு பதார்த்தங்களையும் நீக்கவும்.

*2)* முற்றியதும் பூச்சியில்லாததான இரண்டு கத்தரிக்காய்களில் சிறுதுளை களிட்டு உள்ளிருக்கும் விதை முதலானதை எடுத்துவிட்டு அதில் ¼ வராகன் எடை பெருங்காயத்தை வைத்து ½ சேர் நல்லெண்ணெயில் வதக்கி அப்படியே சாப்பிடவும். இவ்விதம் மூன்று நாட்கள் செய்யவும். அதிலுள்ள எண்ணெயை வலி இருக்குமிடத்தில் பூச வலி தீரும்.

*3)*

| | |
|---|---|
| பெருங்காயம் | மிளகு |
| சுக்கு | பூண்டு |
| கடுகு | திப்பிலி |
| இந்துப்பு | சீரகம் |
| கருஞ்சீரகம் | வெந்தயம் |

கழற்சிப்பருப்பு　　உத்தாமணியிலை
நாய்வேளையிலை

இவைகள் வகைக்கு 1 பலம் விதமெடுத்து நன்ருயிடித்து இத்துடன் தேங்காய்ப்பால் 2 படியுமிட்டு, வெள்ளாட்டுப் பால் 2 படியுமிட்டு நன்ருகக் காய்ச்சி 2 படி அளவு சுண்டியதும் எடுத்துக்கொண்டு தேக பலத்தை அனுசரித்தும், ரோகத்தை நிதானித்துக்கொண்டும் வேண்டிய அளவு உட்கொள்ள வலிக்குன்மம் தீரும்.

## 590. சிறுவர்கள் முதல் பெரியோர்கள் வரை வயிற்றிலுள்ள உபத்திரவத்திற்குக் கல்கம்

| | |
|---|---|
| கற்ருழைச் சோறு | 200 தோலா |
| வெல்லம் | 200 தோலா |

ஒரு பானையில் கற்ருழைச் சோற்றில் சிறிது எடுத்து பரப்பி அதன்மேல் சிறிது வெல்லத்தைப்போட்டு மேலும் கற்ருழைச்சோற்றை மேற்பரப்பி வெல்லத்தைப் போடவும்.

இக்கிரமத்தில் எல்லாவற்றையும் போட்டு பானையின் வாயை ஒரு அகலினுல் மூடிச் சீலமண் செய்து ஒரு கஜம் நீளம், அகலம், உயரம் குழிதோண்டி பானையை வைத்து மேலும் மண்ணைப்போட்டு மூடிவிட்டு 41 நாட்கள் வரை புதைத்துவைத்துப் பிறகு எடுத்து உபயோகிக்கவும்.

இவ்விதமின்றி வெகு சீக்கிரத்தில் இம்மருந்து தேவையானுல் அப்பள்ளத்தில் மண்ணிற்குப் பதிலாக குதிரையின் இலத்தியைப் போட்டு நன்ருக மூடி 21 நாட்களுக்குப்பின் எடுத்து நன்ருகப் பிசைந்து வஸ்திரகாயஞ்செய்து ஒரு புட்டிக்குள் அடைத்துக் கொண்டு உபயோகப்படுத்தவும்.

பிள்ளைகளுக்கு வயதுக் கிரமப்படி 1 தோலா முதல் 3 தோலா வரையிலும், பெரியவர்களுக்கு 3 தோலா முதல் 5 தோலா வரையிலும் கொடுக்கவும். கைகண்டது.

## 591. வயிற்றுக்கட்டிக்குக் கல்கம்

| | |
|---|---|
| உப்பு | கடுகு |
| சூரியகாந்திப்பூவிதை | அழிஞ்சில்வேர்ப்பட்டை |

சூரியகாந்திப்பூ வித்தைத் தவிர மற்றவைகள் வகைக்கு 3 தோலா. சூரியகாந்திப்பூ வித்து 1 தோலா. இவைகளை ஒன்றுகூட்டிச் சிறிது தண்ணீர்விட்டரைத்து உருண்டைகளாகச்செய்து 1 உருண்டையைச் சாப்பிடவும்.

இவ்விழுதைச் சாப்பிடுமுன் ½ சேர் வெள்ளாட்டுப் பாலைக் குடிக்கவும். வெற்றிலைபாக்கு போடவும். 100 வெற்றிலையும் அதற்குத் தேவையான கொட்டைப் பாக்கையும் உண்ண வயிற்றுக்கட்டி விழும்.

**பத்தியம் :**

நெய்யுடன் சாதத்தைக் கலந்து காரமில்லாமல் சாப்பிடவும்.

## 592. வயிற்றுவலிக்குக் கல்கம்

வெள்ளாட்டு நீரில் கடுக்காயை ஏழு நாட்களூற வைத்துப் பிறகு எடுத்துத் தோலை அரைத்து விடியற்காலையிலுண்ண ஜன்மத்திலுண்டான சூலைநோய் தீரும்.

## 593. வயிற்றுவலிக்குக் கல்கம்

| | |
|---|---|
| பாதரசம் | நாகம் |
| கந்தகம் | இந்துப்பு |
| திப்பிலி | சுக்கு |
| ஓமம் | வசம்பு |
| பூண்டு | இஞ்சிக்குருத்து |

வகைக்கு 2 வராகனெடை. சதுரக்கள்ளி வேண்டிய அளவு. இவைகள் எல்லாமொன்று கூட்டி, ஒரு தேங்காயில் துளையிட்டு அதில் நிரப்பி துளையை மூடி, சாணியால் கவசம்

செய்து தேங்காய் ஓடு நன்ருகக் கருகும்படி புடமிட்டு அதை யுடைத்து தேங்காயுடன் மற்றவைகளையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு 2 வராகனெடை வெல்லத்தையுங் கூட்டி மெழுகு போலரைத்து தேனையுங் கலந்து இளகிய பதமாய்ச் செய்து கொண்டு ஒரு குப்பியிலடைத்துக் கொள்ளவும்.

அரை கரண்டி முதல் 1 கரண்டி வரையில் கொடுக்கவும். அதிகமாக வயிறு கழிந்தால் மோர்சாதம் சாப்பிடவும். இவ்வாறு உட்கொள்ள,

| | |
|---|---|
| குன்மம் | சூலை |
| வயிற்றுவலி | நீர் அடைப்பு |
| மிகுதியான வேர்வை | மூலகிராணி |
| ஜலகிராணி | கண்நோய் |
| வயிற்றுநோய்கள் | |

முதலானவைகள் தீரும். வெளிக்கு நன்ருகப் போகும்.

## 594. குன்மகுடோரி

| | |
|---|---|
| பெருங்காயம் | 3 பலம் |
| சௌவர்ச்சலவணம் | 6 பலம் |
| சிற்ருமணக்கெண்ணெய் | 12 பலம் |
| பூண்டு | 16 பலம் |

இவைகளை ஒன்றுகூட்டியரைத்து கழற்சிக்காயளவு உட்கொள்ள 8 வித குன்மம், சூலை, உதடு உலர்தல் முதலானது தீரும்.

## 595. குன்மசூலை, குன்மம் முதலானதற்குக் கல்கம்

நீர்முள்ளிவேர்பட்டை 3 பங்கு மிளகு 1 பங்கு

இவ்விரண்டையும் நைவாயரைத்து ஒரு காசு அளவுக்கு வில்லைகள் தட்டி நெய்யில் வறுத்து இருவேளையும் வேளை ஒன்றிற்கு 1 வில்லை பிரமாணம் உட்கொள்ளவும்.

## 596. குன்மத்திற்குக் கல்கம்

வெள்ளை ஆமை மூன்றைக் கொணர்ந்து மாமிசத்தை மட்டிலும் எடுத்துக்கொண்டு அதை நன்ருக வெய்யிலில் உலர்த்தி இடித்துத் தூள்செய்து கொள்ளவும்.

நிலப்பனங்கிழங்கு $\frac{1}{2}$ சேரை துண்டுகள் செய்து

| | |
|---|---|
| கசகசா | மிளகு |
| கொத்தமல்லி | வெந்தயம் |
| பூண்டு | வெங்காயம், இந்துப்பு |

இவைகள் வகைக்கு 1 தோலா

| | |
|---|---|
| இலவங்கப்பட்டை | 5 வராகனெடை |
| வால்மிளகு | 3 வராகனெடை |

இவைகளைச் சூரணித்து அத்துடன் நெய், தேன் இவைகளைக் கூட்டி பக்குவம் செய்துகொண்டு எலுமிச்சம்பழம் அளவு உருண்டைகளைச் செய்து நெய்யில்போட்டு வைத்துக் கொண்டு வேளைக்கு ஒரு உண்டை வீதம் தினம் இரு வேளை யும் உட்கொள்ள குன்மம், மூலவியாதி முதலானவைகள் தீரும்.

## 597. வயிற்றுச் சூலைக்கு

அகத்திக்கீரையின் சாறு $\frac{1}{4}$ சேர் மிளகு 7 (எண்ணிக்கையில்)

இவ்விரண்டையும் சேர்த்து அரைத்துக்கொடுக்கத் தீரும்.

## 598. நீரிழிவுக்கு (பஹு மூத்திரம்)

முற்றின ஈசுவர மூலிகையின் விதையை நன்ருகயிடித்து அத்துடன் 6 காசிடை சிறுகீரைச் சாற்றைக் கலந்து அரைத்து தினமும் இருவேளை சாப்பிட நீரிழிவு தீரும்.

## 599. நீரிழிவுக்கு (வேறுவிதம்)

| | |
|---|---|
| தோல்நீக்கிய தேற்ருங்கொட்டை | $4\frac{1}{2}$ காசிடை |
| அத்திக்காயையிடித்துத் தூள்செய்து | 2 காசிடை |
| வெள்ளைக்குன்றிமணி | 2 காசிடை |

இவைகளைப் பசுவின் மோரிலரைத்து நன்ருகக் கலந்து 45 நாட்கள் குடித்திட பஹுமூத்திரம் தீரும்.

## 600. நீரிழிவுக்கு (வேறுவிதம்)

| | |
|---|---|
| பனம்பழம் | நாகப்பூ |
| பேரீச்சம்பழம் | வாழைக்கச்சல் |
| அதிமதுரம் | |

இவைகள் சமமாகக்கொண்டு பசுவின்பாலிட்டு நைவாயரைத்து பாலுடன் குழப்பி தினம் காலை மாலை இருவேளையுமாக உட்கொள்ள அநேகவிதமான நீரிழிவு நோய்கள் தீரும்.

## 601. நீரிழிவுக்கு விடத்தாரையின் மருந்து

| | |
|---|---|
| விடத்தாரையிலை | $\frac{1}{2}$ வராகனெடை |
| சீரகம் | ,, |

எருமையின் தயிரை ஒரு துணியில் கட்டி அதினின்று வடியும் தண்ணீரைச் சேகரித்து அத்தண்ணீரினுல்

| | |
|---|---|
| விடத்தாமரை | சீரகம் |

இவைகளை அரைத்து அத்துடன் துணியில் எஞ்சிய தயிரின் சக்கையை ஒரு எலுமிச்சம்பழ அளவுக்கு எடுத்துக்கொண்டு ஒன்ருகக் கலந்துண்ண நீரிழிவு தீரும். இது மிகவும் கைகண்ட முறை.

**பத்தியம் :** இச்சாபத்தியம்.

## 602. நீரிழிவுக்கு நீர்முள்ளியின் மருந்து

நீர்முள்ளிவிதை $\frac{1}{2}$ பலம் சீரகம் $\frac{1}{4}$ பலம்
சர்க்கரை $\frac{1}{4}$ பலம்

இவைகளை பசுவின்பால்விட்டு நன்ருக அரைத்து ஒரு வேளைக்கு சாப்பிடவும். இவ்விதமாக தினம் இருவேளையு முட்கொள்ள நாள்பட்ட மூத்திர வியாதி தீரும்.

## 603. நீரிழிவுக்கு ஏலக்காய்க் கல்கம்

ஏலக்காய் இலவங்கப்பத்திரி
கிராம்பு ஆவாரம் வேர்
ஆவாரம்பட்டை ஆவாரம் இலை
ஆவாரம் பூ ஆவாரங்காய்
சீந்தில்கிழங்கு தண்ணீர்விட்டான் கிழங்கு
தாமரைவளையம்

இவைகளைச் சமமாகக்கொண்டு மோர்விட்டரைத்து உருட்டி நெய்யுடன் கலந்து உட்கொள்ள, மேகம், நீரிழிவு முதலானது தீரும்.

## 604. நீரிழிவுக்குப் பருத்திக்கொட்டை மருந்து

பருத்திவிதையை தண்ணீரில் ஊறவைத்துப் பிறகு நன்ருக இடித்துச் சாறுபிழிந்து பசுவின் பாலுடன் கலந்து வடிகட்டிக்கொண்டு சிறிது நல்லெண்ணெயுங் கூட்டி பனை வெல்லத்துடன் கரைத்து விழுதாக்கி விடியற்காலையில் புசித்திட நீரிழிவு தீரும்.

## 605. நீரிழிவுக்கு வெள்ளிலோத்திர மருந்து

வெள்ளிலோத்திரப்பட்டையைக் கொணர்ந்து தூள் செய்து வஸ்திரகாயஞ்செய்து அதில் $1\frac{1}{2}$ வராகனெடை எடுத்து ஒரு பிஞ்சு வெள்ளரிக்காயில் நிரப்பி இரவு முழுவதும் வைத்து விடியற்காலையில் சாப்பிட வலியுடன் கூடிய நீரிழிவு தீரும்.

மூர்ச்சையாயிருந்தால் மோர்சாதம் சாப்பிடவும்.

மேகரோகங்களும் தீரும்.

## 606. நீரிழிவுக்கு மருந்து

| | |
|---|---|
| நிலாவாரையின் பட்டை | சிறுகுறிஞ்சான்வேர்ப் |
| துத்திவிதை | பனைவித்து [பட்டை |
| ஜாதிக்காய் | ஜாதிப்பத்திரி |
| கிராம்பு | நவதானியங்கள் |

இவைகளை சமயெடைகொண்டு இளவறுவலாக வறுத்துக் கொண்டு, மூன்றுவிரல்கள் கொண்ட அளவு சூரணத்தைத் தண்ணீர்விட்டரைத்து உண்ணவும்.

**பத்தியம்:** வாழைக்காய், மொச்சை, மாமிசம், கடுகு, வெந்தயம் இவைகளைச் சேர்க்கவும்.

## 607. நீரிழிவுக்கு மருந்து

வேப்பம்பிசினை வெய்யிலில் உலர்த்தித் தூள்செய்து கொண்டு சாமையரிசியையும் தூள்செய்து இவ்விரண்டும் சமமாகக் கூட்டி மூவிரல்கொண்ட அளவு தூளை 1 மண்டல முட்கொள்ளத் தீரும். இம்மருந்து மிகவும் கைகண்டது.

## 608. நீரிழிவுக்கு மருந்து

| | |
|---|---|
| குன்றிமணியிலை | கருவேலம்பூ |
| ஆவாரம்பூ | உளுந்து |

இந்நான்கையும் சமயெடைகொண்டு தனித்தனியே இடித்து வஸ்திரகாயஞ்செய்து பிறகு ஒன்ருகக்கூட்டி மூவிரல் கொண்ட அளவு சூரணத்தை வாழைப்பழம், சர்க்கரை வெண்ணெய் இம்மூன்றில் கலந்து சாப்பிட நீரிழிவு தீரும்.

## 609. நீரடைப்புக்கு மருந்து

பேய்ச்சுரையின் இலை இரண்டு பிடியைக் கொண்டுவந்து 4 படி தண்ணீர்விட்டு 1 படி கஷாயமாக்கிக் கொண்டு அதில் 1 வராகனெடை பொரித்த வெங்காரத்தையுங் கூட்டி குடித்திட நீர் சுலபமாக இறங்கும்.

## 610. நீரடைப்புக்கு மருந்து

| | |
|---|---|
| பனைவேர் | வெள்ளரிவித்து |
| எலிப்புளுக்கை | |
| ஒருகரண்டியளவு | ஆமணக்கெண்ணெய் |
| ஒருகரண்டியளவு | காடி |

இவைகளைப் பக்குவப்படுத்தி நன்முக அரைத்து தொப்புளைச் சுற்றிலும் பத்துப்போட மூத்திரம் நன்முக இறங்கும்.

## 611. கர்ப்பிணி அல்லது புருஷர்கள் இவர்களுக்கு நீரடைப்புக்கு

கரும்பைச் சுட்டு சாற்றைப் பிழிந்து சேலஞ் சர்க்கரையை சேர்த்துக் கொடுக்க குணமாகும்.

## 612. நீரடைப்புக்கு மருந்து

இரேவல்சினியைத் தூள்செய்து அரைச்சேர் பாலில் இட்டுச் சர்க்கரையுங் கூட்டி ஒன்றுபடக் கலந்து குடித்திட நீரிறங்கும்.

## 613. நீரடைப்புக்கு மருந்து

பொரித்த வெங்காரம் 1 பலத்தை இளநீரில் கலந்து சாப்பிடவும். வியாதி தீரும்.

## 614. நீரடைப்புக்கு மருந்து

பசலைக்கீரை | சுத்திரியிலை

இவைகளைக் கஷாயமாக்கிக் கொண்டு பொரித்த வெங்காரத்தையுங் கலந்து குடித்திட நீரிறங்கும்.

## 615. மூத்திரக் கிருச்சரத்திற்கு

கடுக்காயின் தோலை இளநீரிலரைத்து அதில் $\frac{1}{2}$ வராகனெடை பெருங்காயத்தைக் கரைத்துக் கொடுக்க விரேசனமாய் நன்றாக நீரிறங்கும். வயிற்றுப்பிசம் தீரும்.

3 நாட்களுக்குக் கொடுக்கவும்.

## 616. மூத்திரக் கல்லடைப்புக்கு

சாரணையிலை | சந்தனம்

இவைகளையரைத்து கொட்டைப்பாக்களவு எடுத்துத் தண்ணீருடன் கலந்து உட்கொள்ளவும்.

## 617. மூத்திரக்கல்லடைப்புக்கும் பிரமியத்திற்கும்

ஈரவெங்காயம் 1 பிடி | நாயுருவியிலை 1 பிடி

இவ்விரண்டையும் மெல்லியதாய் அரிந்து நீரில் சிறிது வேகவைத்துப் பசுவின் வெண்ணெயில் வறுத்து அத்துடன் சீனக்கற்கண்டையும் சேர்த்துச் சாப்பிட கல்லடைப்பு, பிரமியம் தீரும்.

## 618. மூத்திரக் கல்லடைப்புக்கு

வைக்கோலை (நெல் வைக்கோலை) எரித்துச் சாம்பலாக்கி அத்துடன் 3 தோலா தண்ணீரைக்கலந்து குடித்திட தீரும்.

### 619. மூத்திரக் கல்லடைப்புக்கு

| | |
|---|---|
| பிரண்டை விதை | 4½ (எண்ணிக்கையில்) |
| பலகறை | 3 (எண்ணிக்கையில்) |
| பொன்னுங்காணிவேர் | |

இவைகளை வெற்றிலைச் சாற்றிலரைத்துப் பசுவின் பாலில் கலந்து கொடுக்கக் கல்லடைப்பு நீங்கும்.

### 620. பிரமியம். (பிரமேஹம்) முதலானதற்குக் கோழிமுட்டையின் மருந்து

மூன்று கோழிமுட்டையின் வெள்ளைக்கருவை மாத்திரம் எடுத்து

1 பலம் நல்லெண்ணெய் 3 எலுமிச்சம்பழச்சாறு

இவைகளைக் கூட்டி 3 நாட்கள் புசிக்கப் பிரமியம் தீரும்.

**பத்தியம் :** உப்பு, புளி இவைகளை விலக்கவும்.

### 621. பிரமியத்திற்கு கையாந்தகரை மருந்து

கையாந்தகரை கருஞ்சீரகம்

இவ்விரண்டும் சமமாகக்கொண்டு நிழலில் உலர்த்திக் கொண்டு அதற்குச் சமயெடை சர்க்கரையைச் சேர்த்து இடித்துச் சூரணித்து வடிகட்டிக்கொண்டு, அதில் ஒரு சிட்டிகை அல்லது 2 சிட்டிகை வீதம் தினமும் 3 நாளைக்கு உட்கொள்ள சகலவிதமான பிரமியங்கள் தீரும்.

**பத்தியம் :** புளியை விலக்கி, நெய்ச்சோற்றைக் கூட்டவும்.

### 622. பிரமியத்திற்கு பொடுதலையின் மருந்து

பொடுதலையைக் கொண்டுவந்து எருமை மோரில் ஊற வைத்து பிறகு எடுத்து சாறுபிழிந்து தினம் ஒருவேளைக்குக்

கால்படி சாறுவிதம் 3 நாளைக்குக் குடித்திட பிரமியம் திரும்.

**பத்தியம்:** புளி, உப்பு இவைகளை விலக்கி எருமை மோர், தயிர் இவைகளைக் கூட்டவும்.

### 623. வலியுடன் கூடிய பிரமியத்திற்கு மருந்து

எள் — வெல்லம்
சர்க்கரை — வெண்டையின்விதை

இவைகளை ஒன்றாகக் கூட்டியரைத்து உட்கொள்ள குணமாகும்.

### 624. பிரமியத்திற்கு சீந்தில் சர்க்கரை மருந்து

சிந்தில் சர்க்கரை — சீவிய தேற்றான்கொட்டை

இவைகள் சமயெடைகொண்டு தயிரைவிட்டரைத்து ஒரு வெல்லக்கட்டியையும் சேர்த்துண்ண வெள்ளைப் பிரமியம் திரும்.

### 625. வெள்ளைப்பிரமியத்திற்கு மருந்து

வாழைக்கிழங்கைக் கல்லுரலிலிட்டிடித்துச் சாறு பிழிந்து அத்துடன் தேற்றாங்கொட்டையின் சிவலையுங்கூட்டி நன்றாக அரைத்து ஒரு சிறிய வெல்லக் கட்டியுடன் கலந்துண்ண சகலவிதமான வெள்ளைப் பிரமியங்களும் திரும்.

### 626. 60 வருஷ பிரமியத்திற்கு மருந்து

வன்னியிலை 1 பிடி எடுத்துப் பசுவின் பாலிலரைத்து 7 நாட்கள் உட்கொள்ளவும்.

**பத்தியம்:** பசுவின் பால்சோறு.

இவ்விதம் செய்ய 60 வருஷத்துக்கு மேற்பட்ட பிரமியம் திரும்.

## 627. சகல பிரமியத்திற்கும் குங்கிலிய மருந்து

சுத்திசெய்த வெள்ளைக்குங்கிலியம் 2 பலமெடுத்து நல்லெண்ணெயிலரைத்துப் பிறகு சுத்தமான தண்ணீரில் அதைக்கழுவிக் கொள்ளவும். இவ்விதம் பலமுறை தண்ணீரில் கழுவிச் சுத்தம்செய்யக் குங்கிலியம் சுத்தமான வெள்ளை நிறத்துடன் இருக்கும்.

இதைப் பத்திரப்படுத்திக் கொண்டு வேளை ஒன்றிற்கு ஒரு கொட்டைப்பாக்களவு காலையிலும், மாலையிலும் 20 நாட்களுக்குச் சாப்பிட சகலவிதமான பிரமேகாதி ரோகங்கள் தீரும்.

## 628. பிரமியத்திற்குக் கையாந்தகரை மருந்து

நல்லெண்ணெய் ஒரு சிறங்கை (உள்ளங்கை) அளவு
கையாந்தகரைச்சாறு ஒரு சிறங்கை

இவ்விரண்டையுங் கூட்டி சர்க்கரையைக் கலந்து குடித்திடப் பிரமியம் ஒழியும்.

## 629. பிரமியத்திற்கு வல்லாரை மருந்து

வல்லாரைச்சாறு எள்ளெண்ணெய்
பசுவின்நெய் பசுவின்பால்
நெல்லிக்காய்ச்சாறு

இவைகள் வகைக்கு 1 படி. இவைகளை ஒன்று கூட்டி அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சிக்கொண்டு அதில் சர்க்கரை 1 பங்கு, சிந்தில் சர்க்கரை 1 பங்கும் கலந்து வைத்துக்கொண்டு தினமும் $\frac{1}{2}$ தோலா வீதம் சாப்பிட்டுவர பிரமியம், நீரிழிவு முதலான நோய்கள் தீரும்.

## 630. பிரமியத்திற்கு மருந்து

சுயமான எள்ளெண்ணெய் $\frac{1}{8}$ படி, பருத்திக்காயை அரைத்த விழுது ஒரு எலுமிச்சம்பழ அளவு இவ்விரண்டையும் கலந்து மூன்று நாளைக்கு விடியற்காலையில் உள்ளுக்குக் கொடுக்க பிரமியம் திரும். கைகண்ட முறை.

**பத்தியம்:** கைப்பு, புளிப்பு இவைகளை நீக்கவும்.

(2) பிரமியத்திற்கு தேங்காயை அரைத்து ஒரு எலுமிச்சங்காயளவு உருண்டை செய்து வெந்நீரில் குழப்பிச் சாப்பிடவும், பிரமியம் தீரும்.

## 631. பிரமியத்திற்குக் கிழாநெல்லியின் மருந்து

கிழாநெல்லியின் சமூலத்தைக்கொண்டுவந்து அரைத்து ஒரு எலுமிச்சம்பழ அளவு எடுத்து வெண்ணெயுடன் கூட்டிப் புசிக்க பிரமியம் திரும்.

## 632. பிரமியத்திற்கு மருந்து

புளியம்வேரின்பட்டை அம்மான்பச்சையரிசி
கிழாநெல்லி

இவைகளைச் சமமாகக்கொண்டு சிறிய துண்டுகளாகச் செய்து பசுவின் பாலிலூறவைத்து, பிறகு அந்தப்பாலை வடிகட்டி சர்க்கரையுங்கூட்டிக் குடித்துவரப் பிரமியம் திரும்.

## 633. பிரமியத்திற்கு மருந்து

(1) கழுநீரில் பச்சரிசியையரைத்துக் குடிக்கத் திரும்.

(2) அப்பிரக சிந்தூரத்தைப் பசுவின் வெண்ணெயில் குழைத்து 4 நாட்கள் சாப்பிட பிரமியம் தீரும்.

(3) கற்ருழைச்சோறு, நீர்பூலாவேர்ப்பட்டை இந்த இரண்டையும் நன்ருயரைத்து வெந்நீரில் குழப்பிச் சர்க்கரையுங் கூட்டி 3 நாளைக்கு உட்கொள்ள தீரும்.

(4) முதியார்கூந்தல், கொடிவேலிவேர், முருங்கை வேர், கழற்சிப்பருப்பு இவைகள் சமஎடைகொண்டு ஊமத்தையின் சாறுவிட்டு நன்ருயரைத்து வேளை ஒன்றுக்கு மிளகுப் பிரமாணம் எடுத்து இரு வேளையுமாக 3 நாட்களுக்குச் சாப்பிட பிரமியம் தீரும்.

## 634. பிரமியம், தாகம் முதலானதற்கு மருந்து

| | |
|---|---|
| இலவங்கம் | 1 பலம் |
| ஏலக்காய் | 2 பலம் |
| கூகைநீர் | 8 பலம் |
| திப்பிலி | 4 பலம் |

இவைகளைக் கல்லுரலிலிட்டிடித்து வஸ்திரகாயஞ்செய்து அத்துடன் சுயமான தேன் 2 பங்கு, பசுவின் நெய் 1 பங்கு, இவ்விதம் கலந்து மறுபடியும் நன்ருய் இடித்து 1 பலம் எடையில் உருண்டைகளாகச் செய்து தினமும் சாப்பிடத் தீரும்.

**தீரும் வியாதி :**

தினமும் 3 பல எடை வீதம் சாப்பிடவும் இவ்விதம் உட்கொள்ள உடம்பிலுள்ள எரிவு, கைகால்எரிவு, வயிற்று வலி, பிரமியம், ஜீரணசுரம், இரத்தம் விழுதல், கபம் முதலான பிணிகள் தீரும்.

## 635. பிரமியத்திற்கும், வயிற்றிலுள்ள விரணத்திற்கும் மருந்து

சுத்திசெய்த

| | |
|---|---|
| பறங்கிப்பட்டை | 5 பலம் |
| சர்க்கரை | 3 பலம் |

| | |
|---|---|
| சீரகம் | 1 பலம் |
| கோரோசனை | 3 வராகனெடை |

இவைகளை எல்லாம் நன்ருயிடித்துத் தூள்செய்து வஸ்திர காயஞ்செய்து பசுவின் நெய் 1 படியையும் கலந்து நன்ருகக் காய்ச்சி பக்குவம் செய்து உட்கொள்ள, வயிற்றிலுள்ள விரணம், கிரந்தி, பிரமியம், சூலை, வாயு முதலான பிணிகள் தீரும்.

**பத்தியம்:—** துவரம்பருப்பு, இளங்கீரைவகைகள் பத்தியத்திற்குச் சேர்க்கவும்.

## 636. பிரமியத்திற்குக் குங்கிலிய மருந்து

கருங்குங்கிலியம் 2 பலமெடுத்துப் பொடித்து ஒரு பாண்டத்திலிட்டுக் குங்கிலியம் முழுகும்வரை பசுவின் நெய்யையூற்றி அத்துடன் சர்க்கரையையும் ஒன்றுபடக் கலந்துகொண்டு மூவிரல் கொள்ளுமளவு எடுத்து தினம் சாப்பிடவும். புருஷர்களுடைய பிரமியம் தீரும். ஸ்திரீகளுடைய பிரமியத்திற்கு நெய்க்குப் பதிலாக நல்லெண்ணெயைக்கூட்டி இம்மருந்தை உட்கொள்ளத் தீரும். கைகண்டது.

## 637. பிரமியத்திற்கு ஆடாதோடை மருந்து

ஆடாதோடையின் வேரை வெள்ளாட்டுப்பாலில் போட்டு அடுப்பின் மேலேற்றி நன்ருகக் காய்ச்சி காலையில் அந்தப்பாலைக் குடிக்க பிரமியம் தீரும்.

**பத்தியம்:** இச்சா பத்தியம்

## 638. பிரமியத்திற்கு நெருஞ்சில் மருந்து

| | |
|---|---|
| சிகப்புவகை நெருஞ்சில் வேர் | 1 பிடி |
| அதன் இலை | 1 பிடி |

இவ்விரண்டையும் ஒன்றுகூட்டி கருங்குருவை அரிசியை இதற்கு சமமாகக்கொண்டு ரொட்டி செய்து சுட்டு அத்துடன் நல்லெண்ணெய், வெண்ணெய், வெல்லம் இவைகளை வேண்டிய அளவு சேர்த்து 3 நாளைக்கு உட்கொள்ளவும்.

### 639. பிரமியத்திற்கு கேதகி மருந்து

தாழம்பூவின் சாற்றை எடுத்து வடிகட்டி சர்க்கரையுங் கூட்டிக் குடித்திடப் பிரமியம் தீரும்.

### 640. பிரமியத்திற்குப் பீர்க்கின் மருந்து

பீர்க்கம் வேர் பீர்க்கம் வித்து

இவ்விரண்டையும் வெந்நீரில் அரைத்து விழுதாக்கி உட்கொள்ள பிரமியம் தீரும்.

### 641. பிரமியத்திற்கு இலந்தையிலை மருந்து

இலந்தைக்கொழுந்தை எருமைத் தயிரிலரைத்து ஒன்றுகக் குழப்பிக் குடித்திட பிரமியம் தீரும்.

**பத்தியம்:** இச்சாபத்தியம்.

### 642. இரத்த பிரமியத்திற்கு சுரஹுதி மருந்து

| | |
|---|---|
| வெள்ளைக் கருணைக்கிழங்கு | 2 படி |
| பசுவின்நெய் | 1 படி |
| பருத்திப்பருப்பின் சாறு | 2 படி |
| வாழைப்பூவின் சாறு | 2 படி |
| அதிமதுரம் | 12 வராகனெடை |

மேற்கூறிய சாறுகளைக் கலந்து அடுப்பின்மேலேற்றி 2 படியாக சுண்டக் காய்ச்சி அதில் அதிமதுரம், நெய் இவைகளையுங் கூட்டி இரண்டுநாள் ஊறவைத்து மறுபடியும் அடுப்பின்

பேலேற்றி பக்குவமாய் காய்ச்சிக்கொண்டு ஒரு கழற்சிக் காயளவு மருந்தைத் தினந்தோறும் உண்ண இரத்தப் பிரமியம் தீரும்.

**பத்தியம் :** கைப்பு, புளிப்பு இவைகளை நீக்கவும்.

## 643. இரத்தப்பிரமியத்திற்கு மருந்து

1) வெள்ளரிக்காயைக் கொண்டுவந்து அதை நான்கு பாகமாக நேர்வாக்கில் பிளந்து அதனுள் சுண்ணும்பைத் தடவி வெய்யிலில் சிறிதுநேரம் வைத்துப் பிறகு சாப்பிட இரத்தப் பிரமியம் தீரும்.

2) மலராத தென்னம்பாளையை எடுத்துக் கல்லுரலி லிட்டிடித்து அதில் பசும்பாலையுமூற்றி சாற்றைப் பிழிந்து வடிகட்டிக்கொண்டு சர்க்கரையுங் கூட்டி உள்ளுக்குக் கொடுக்க இரத்த பிரமியம் தீரும்.

**பத்தியம் :** புளிப்பு, கைப்பு இவைகளை விலக்கவும்.

## 644. மூத்திரத்துடன் இரத்தம், தோல்மாதிரி துண்டு விழல் முதலானதற்கு மருந்து

| | |
|---|---|
| இரேவல்சினியின் கட்டை | 1 தோலா |
| வெடியுப்பு | 1 தோலா |
| ஏலக்காய் | 1 தோலா |
| தணக்குமரப் பிசின் | 1 தோலா |
| சுவர்ணக்காவி | 1 தோலா |

இவைகளை ஒன்றுகூட்டி இடித்துத்தூள்செய்து வஸ்திர காயஞ்செய்து வைத்துக்கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

பூனைக்காலியிலையின் சாற்றை எடுத்துக்கொள்ளவும். ஒரு தோலா மருந்திற்கு 1 தோலா சாற்றைக் கலந்து அத்துடன்

| | |
|---|---|
| வெள்ளாட்டுப்பால் | 20 தோலா |
| தண்ணீர் | 80 தோலா |

இவைகளை எல்லாமொன்றுகூட்டி, இரு மண்பாண்டத்திலிட்டு ஒன்றிலிருந்து மற்றொன்றில் ஊற்றி (இவ்விதம் பல தடவை செய்து) இவைகளை நன்ருகச் சேர்த்துத் தேசு பலத்தை அனுசரித்துச் சிறிது குடிக்கக் கொடுக்கவும்.

**பத்தியம் :** பருப்புப் பொங்கல் செய்து சாப்பிடவும்.

### 645. பிரமியம் (வலியுடன் கூடியதற்கு)

தேன், ஆமணக்கெண்ணெய் இவ்விரண்டையும் ஒன்ருகக் கலந்து உட்கொள்ள பிரமியம் தீரும்.

### 646. பித்தபிரமியம், பித்தபாண்டு முதலானதற்கு

| | | | |
|---|---|---|---|
| கிட்டம் | 1 சேர் | பழைய இரும்பு | 1 சேர் |
| இரும்புப்பொடி | 9 தோலா | காந்தம் | 9 தோலா |

இவைகளைப் பொடித்து

| | |
|---|---|
| சுக்கு | சிற்றரத்தை |
| சீரகம் | திப்பிலி |
| திப்பிலிமூலம் | கடுகரோகணி |

வகைக்கு $4\frac{1}{2}$ தோலா.

| | |
|---|---|
| கடுக்காய்ப்பூ | கையாந்தகரை |

இவைகள் வகைக்கு $4\frac{1}{2}$ தோலா. பிறகு

| | |
|---|---|
| காடி | புளித்தமோர் |
| வெள்ளாட்டு நீர் | பசுவின் நீர் |

இவைகள் வகைக்கு 3 சேர் வீதமெடுத்து மற்ற எல்லாவற்றுடன் கலந்து 3 நாட்களுக்கு சூரிய புடத்தில் வைத்துச் சிறிதளவு தினமும் இருவேளையுட்கொள்ளவும்.

### 647. வெள்ளைப் பிரமியத்திற்கு மருந்து

1) கண்டங்கத்தரிவேரின் சாறு, நல்லெண்ணெய் இவைகளை ஒன்றுபடக் கலந்து 3 நாளைக்கு உட்கொள்ள குணமுண்டாகும்.

2) தேன் ஆமணக்கெண்ணெய் இவ்விரண்டையும் ஒன்ருகக் கலந்து உட்கொள்ள பிரமியம் திரும்.

### 648. சீழுடன் கூடிய பிரமியத்திற்கு மருந்து

| | |
|---|---|
| (1) இலவங்கப்பட்டை | 12 தோலா |
| அசுவகந்தி | 12 தோலா |
| குஜராத்தி ஏலக்காய் | 6 தோலா |
| கூகைநீர் | 9 தோலா |

இவைகளை ஏழுதடவை புதிய ஜலத்தில் கழுவி உலர்த்திக் கொண்டு பிறகு தனித்தனியே பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து ஏழு பாகங்களாகச் செய்துகொண்டு $\frac{1}{2}$ சேர் பாலில் ஒரு பாகத்தைச் சேர்த்து காட்டிலந்தை பிரமாணம் உருண்டைகள் செய்து 7 நாட்களுக்குச் சாப்பிடவும்.

**பத்தியம்:** உப்பில்லாப் பத்தியம்.

துவரம்பருப்புடன் சோற்றை உண்ணவும். உப்பில்லாத போளியைச் சுட்டு சாப்பிடவும்.

2) சிறுகீரைச்சாறு 9 தோலாவை, சேலஞ் சர்க்கரையுடன் கலந்துகொடுக்கப் பிரமியம் திரும்.

3) தருப்பையின் வேரை கழுநீரிலரைத்து விழுங்க இரத்தப் பிரமியம் திரும்.

## 649. ஜன்மத்திலேற்பட்ட பிரமியத்திற்கு மருந்து

| | |
|---|---|
| ஏலக்காய் | வெட்டிவேர் |
| சீரகம் | கோரைக்கிழங்கு |
| இலவங்கப்பட்டை | வால்மிளகு |
| ஸ்ரீசந்தனம் | அமுக்கராக்கிழங்கு |
| கூகைநீர் | தண்ணீர்விட்டான்கிழங்கு |
| கொத்தமல்லி | காட்டாத்திப்பூ |
| நிலப்பனங்கிழங்கு | தீப திராக்ஷை |
| செஞ்சந்தனம் | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| கர்கடகசிங்கி | காட்டுஈச்சை |
| தாமரைக்கொட்டை | மல்லிகையிலே |

ஆக 22 வகை சாமான்களையும் வகைக்கு 1 தோலா வீத மெடுத்து நன்ருகத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து அதில் 1 தோலா சீந்தில் சர்க்கரையைப்போட்டு 2 தோலா எடைப்பிரமாணம் மாத்திரைகள் செய்து சர்க்கரையுடன் கலந்து 14 நாட்களுட்கொள்ளவும்.

**பத்தியம்:** கடுகு, புளி, உறைப்பு, வாயு பதார்த்தங்கள் இவைகளை நீக்கவும். எவ்வளவு கடுமையான வலியோடு கூடிய பிரமியமானுலும் தீரும்.

## 650. கடுப்புடன் கூடிய பிரமியத்திற்கு மருந்து

| | |
|---|---|
| ஏலக்காய் | சிலாஜத்து |
| சீரகம் | |

இவைகள் வகைக்கு 2 தோலா எடுத்து நன்ருயிடித்து வஸ்திரகாயஞ்செய்து தினமும் 1 தோலா வீதமெடுத்துச் சாப்பிட வலி தீரும்.

## 651. ஆசனகண்டமாலை (மூலகண்டமாலைக்கு) மருந்து

| | |
|---|---|
| சிவதைவேர் | சிறுகாஞ்சொரிவேர் |
| சங்கத்தாரிவேர் | புளிநரளை |

மிளகரணை　　　　கொடிப்பாலைவேர்
பூண்டு　　　　　　வசம்பு

இவைகள் சமயெடைகொண்டு நல்லெண்ணெயில் கலந்து அரைத்து பக்குவஞ்செய்து உள்ளுக்குக் கொடுக்கவும்.

**பத்தியம்:—** புளி, வாயு பதார்த்தங்கள் இவைகளை விலக்கவும்.

## 652. மூல வியாதிக்கு மருந்து

பெரும்தும்பையிலை　　　　கற்கண்டு
வெண்ணெய்

இவைகளை அரைத்து 12 நாட்களுக்கு உட்கொள்ள தீரும்,

## 653. இரத்த மூலத்திற்கு மருந்து

(1) நாயுருவுயின் வித்தை அரைத்து கழுநீரில் கலந்து குடித்திட மூலவியாதியினால் விழும் இரத்தம் நிற்கும்.

(2) எள்ளை அரைத்து வெண்ணெயுடன் கூட்டி உட்கொள்ளவும்.

(3) சிறுநாகப்பூவை அரைத்து கற்கண்டுத் தூளுடன் கலந்து உட்கொள்ள மூலத்திலிருந்து வரும் இரத்தம் தீரும்.

## 654. ஆறுவித மூலவியாதிக்கு விருத்ததாரா மோதகம்

பொத்திக்கீரை　　　　சேராங்கொட்டை
சுக்கு

இவைகளைச் சமமாக எடுத்துக்கொண்டு சூரணித்து அதற்கு இருமடங்கு வெல்லத்தைக்கூட்டி அரைத்து உருண்டைகளாகச் செய்து வைத்துக்கொண்டு நாள் ஒன்றிற்கு 1 உருண்டை வீதம் சாப்பிட ஆறுவித மூல

வியாதிகள் தீரும். சேராங்கொட்டையையும், சுக்கையும் சுத்திசெய்து சேர்த்துக்கொள்ளவும்.

## 655. மூலரோகத்திற்குப் பூச்சு

(1) வெள்ளை நிறமுள்ள பல்லியைப் பிடித்து அதை நெய்விட்டு பொறித்துக்கொண்டு பிறகு அதை அரைத்து மூலத்திற்குப் பூசவும்.

(2) எருக்கம்பால் | கடுக்காய்
தான்றிக்காய் | ஏலக்காய்
திப்பிலிமூலம் | மாதுளை ஓடு
சுக்கு | அதிமதுரம்
அக்கராகாரம்

இவைகளைச் சமமாகக்கொண்டு மெல்லியதாய் அரைத்து மூலத்தின்மேல் பூசவும்.

## 656. மூலவியாதிக்கு பாகலிலை மருந்து

| | |
|---|---|
| பாகலிலைச்சாறு | 1 காசிடை |
| பசுவின்நெய் | 1 காசிடை |

இவைகளை ஒன்றுகூட்டி நாள் ஒன்றிற்கு ஒரு வேளை வீதம் ஏழு நாட்கள் உட்கொள்ளவும். மறுபத்தியம் ஏழு நாள் அனுஷ்டிக்கவும்.

இவ்விதம் செய்ய மூலவியாதி தீரும்.

## 657. முளையுடன் கூடிய மூலவியாதிக்கு

வெந்தயம் 5 வராகனெடை எடுத்து இரவில் தண்ணீரில் போட்டு விடியற்காலையிலரைத்து அத்துடன் அதே எடையில் வெங்காயமும், பூண்டையுமெடுத்து நன்றாயரைத்து நெய்யில் பொரித்து எலுமிச்சங்காயளவு எடுத்து இரு வேளையும் சாப்பிட்டுவர மூலவியாதி தீரும்.

**பத்தியம்:** வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

## 658. மூல வாயுவிற்குக் கல்கம்

| | |
|---|---|
| தேங்காய்ப்பால் | 1 சேர் |
| நல்லெண்ணெய் | 1 சேர் |
| பூண்டு | 9 தோலா |
| பெருங்காயம் | 2 வராகனெடை |
| வெள்ளைச்சாரணை வேர் | 9 தோலா |

இவைகளை யொன்றுகூட்டி அரைத்துப் பக்குவம் செய்து சாப்பிட மூலவாயு தீரும்.

## 659. மூலத்திற்குக் கல்கம்

(1) கருவேலம்பிசினை நெருப்பில் சுட்டு 1 தோலா விதம் தினம் சாப்பிடவும்.

(2) ஆலம்பட்டை கருணைக்கிழங்கு
நிலப்பனங்கிழங்கு

இவைகளைச் சமமாகக்கொண்டு சூரணஞ்செய்துகொண்டு தினமும் 4 தோலா விதம் 14 நாட்கள் சாப்பிடவும்.

(3) சூரத்துக் கடுக்காய்த்தோல் ½ சேர் எடுத்து சூரணஞ்செய்து

| | |
|---|---|
| தீபதிராக்ஷை | ½ சேர் |
| திப்பிலி | ½ தோலா |

இவைகளையுங் கலந்திடித்துச் சிறிது உண்ணவும்.

**பத்தியம்:** கடலைப்பருப்பு, சிறிது உப்பு, பசுவின் நெய் இவைகளைப் பத்தியத்திற்குச் சேர்க்கவும்.

## 660. சீதரத்தக் கழிச்சலுக்குக் கல்கம்

தவனு (மரிக்கொழுந்து) மாம்பருப்பிலுள்ள தோல்
மாம்பருப்பு நெல்லிமுள்ளி

இவைகளையரைத்து சிறிதளவு உட்கொள்ள சீதஇரத்தம் தீரும்.

### 661. சிதரத்தம், சூதகவாயுவுக்குக் கல்கம்

சுக்கு 1 சேர். இதை 2 ஜாமம் கல்வத்திலிட்டு அரைத்து 5 நாழிகைவரையில் தண்ணீரில் கலந்து வைத்துப்பிறகு அதன் மேலுள்ள தெளிவை மட்டிலும் இறுத்துக்கொண்டு அதற்குச்சம அளவு பாலிவிட்டுக் காய்ச்சி, சுண்டுங்காலத்தில் அதில்

| | |
|---|---|
| ஜாதிக்காய் | கிராம்பு |
| ஏலக்காய் | சிறுநாகப்பூ |
| மாம்பருப்பு | |

இவைகளின் சூரணத்தைப் போட்டுத் தேனையுங்கூட்டிச் சிறிது உட்கொள்ள சூதகவாயு, சீதஇரத்தம் இவைகள் தீரும்.

### 662. சீத இரத்த பேதிக்குக் கல்கம்

வலம்புரிக்காய் 4 கை எடுத்து நன்ருயரைத்து ஆமணக்கு எண்ணெயில் குழப்பிக் கொடுக்கவும்.

**பத்தியம்:** பசுவின் தயிர் அன்னம். வெள்ளாட்டுச் கொழுப்பை வெங்காயத்துடன் கலந்து நெய்யில் பொரித்துச் சாப்பிடவும்.

### 663. இரத்த சீதபேதிக்குக் கல்கம்

கருவேலங்காயைத் தயிரிலரைத்து 2 தோலா கொடுக்கவும்.

பெருஞ்சீரகம் 1 தோலா சீனுகற்கண்டு 1 தோலா இவைகளை அரைத்து 7 வேளை சாப்பிட தீரும்.

**பத்தியம்:** வாயு பதார்த்தங்களை விலக்கவும்.

### 664. சீதபேதிக்குக் கல்கம்

ஏலக்காம் 3 தோலா ஜாதிப்பத்திரி 1 தோலா
தேங்காய் 9 தோலா

மாதுளையைச் சுட்டு சூரணித்து மற்றதையும் சூரணித்து பிறகு யாவற்றையும் ஒன்றுகூட்டி வெல்லத்துடன் பிசைந்து உருண்டைகள் செய்து உட்கொள்ள சிதபேதி தீரும்.

### 665. சிதம், இரத்தபேதிக்குக் கல்கம்

பொன்முசுட்டை கிராம்பு

இவைகளை ஒன்று கூட்டிக் கஷாயம் செய்து சாப்பிட வும்.

### 666. சிதபேதிக்குக் கல்கம்

*(1)* தேங்காய்முடி ஒன்றைத் திருகிப் பாலைப்பிழிந்து இரண்டு விராகனெடை காசுக்கட்டியையுங் கூட்டி உட்கொள்ள சிதபேதி தீரும்.

*(2)* மாதுளம்பூ வெங்காயம்
புளியங்கொட்டையின்தோல்

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதமெடுத்துச் சூரணித்து மாம்பருப்பின் மேலுள்ள மெல்லிய தோலை இடித்துச் சாறுபிழிந்து அச்சாற்றில் சூரணத்தைச் சிறிது போட்டு 3 நாளைக்குச் சாப்பிடவும்.

### 667. சிதபேதிக்குக் கல்கம்

*(1)* சுக்கு 1 துண்டை, வேப்பிலைக் கருக்கில் கலந்து கஷாயமாக்கி அதில் சீரகத்தையரைத்துக்குழப்பி உட்கொள்ள தீரும்.

(2) புளியம்வேரின் பட்டையுடன் சீரகத்தைக்கலந்து, எருமைத்தயிரில் அரைத்துக் கொடுக்கவும். மேலும் எலுமிச்சங்காயளவு தயிரின் சக்கையுடன் சிறிது நல்லெண்ணெயுங்கூட்டிக் கொடுக்கவும்.

(3) ஏலக்காயைப் பசுவின் தயிரில் கலந்து நன்ரு யரைத்துக்கொடுக்கச் சீதபேதி நிற்கும்.

(4) கடுக்காயைய் எருமையின் தயிரிலரைத்துச் குடித்திட சீதம் நிற்கும்.

(5) மாதுளையில் துளையிட்டு ஓமத்தை வைத்து வாயை மூடிக் கன்றின் சாணத்தால் கவசமிட்டு நன்ருகக் கருகும்வரை சுட்டு பிறகு அதை எருமைத் தயிருடன் அரைத்துக்கொடுக்க சீதபேதி தீரும்.

## 668. குழந்தைகளின் அதிசாரம், வாந்தி முதலானதற்குக் கல்கம்

கடுகரோகணியை முலைப்பாலிலரைத்துச் சிறிது கொடுக்க அதிசாரம், சுரம் முதலானவை தீரும்,

## 669. குழைந்கைகளுக்கு பேதியானல்

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | வசம்பு |
| தூதுவளையிலை | தூதுவளையிலைக் கொழுந்து |

இவைகளை ஒன்ருகச்சேர்த்துக் கல்வத்திலிட்டு முலைப்பால் விட்டு நைவாயரைத்து 3 நாட்கள் கொடுக்க பேதி நிற்கும்.

## 670. குழந்தைகளின் சீதபேதிக்கும், வயிற்றுப் போக்கிற்கும்

சிறிய சிறிய மாவடுவை துண்டங்களாக்கி வெய்யிலில் நன்ருக உலர்த்திக்கொண்டு வேண்டியளவு துண்டுகளை தயிரிலரைத்து உள்ளுக்குக் கொடுக்க சீதபேதி முதலான பேதிகள் தீரும்.

## 671. குழந்தைகளின் ஆம உபத்திரவத்திற்கு மருந்து

விடத்தாரைவேர் புண்ணாக்குக்கீரை
விளாவேர் சிறுபுல்லடிவேர்
நீர்ப்பூலாவேர் கிழாநெல்லிவேர்
வரப்பூலாவேர்

இவைகளை சமமாகக்கொண்டு பழைய காடியை வார்த்து நன்ருக அரைத்து உள்ளுக்குக் கொடுத்திடவும். உடம்பின் மேலும் இதைப் பூசவும். மறுநாள் ஒரு பாலடையளவு கொடுக்கவும். ஆம உபத்திரவம் தீரும்.

## 672. குழந்தைகளின் மாந்தத்திற்கு மருந்து

முருங்கையிலைச்சாறு நீர்முள்ளியின் சாறு

இவைகளை நல்லெண்ணெயில் கூட்டி நன்ருகக் குழப்பிக் கொடுக்கவும். உடனே மாந்த உபத்திரவம் தீரும்.

## 673. குழந்தைகளின் மாந்தத்திற்கு மருந்து

அகத்திக்கீரையின் பழுத்த இலைகள்
பூண்டு வசம்பு

இம்மூன்றையுமிடித்துச் சிறிது வெதுப்பிச் சாற்றைப் பிழிந்துகொண்டு உள்ளுக்குக் கொடுத்திட மாந்தம் தீரும்.

குழந்தையின் உடம்பின் மேலும் பூச அனுகூலங் காணும்.

## 674. குழந்தைகளின் சகலவிதமான பேதிக்கும் மருந்து

*1.* அதிவிடயம் திப்பிலி வெட்பாலையரிசி

இம்மூன்றையும் பாலிலரைத்துக் கொடுக்க அதிசாரம் நிற்கும்.

2 காசினிக்கீரை பிஞ்சு வாழைப்பூ

இவ்விரண்டை வேடுகட்டி ஆவியில் வேகவைத்து அதை எடுத்து நன்ருய்ப் பிழிந்து இத்துடன் சிறிது தேனையுங் கூட்டி ஒரு பாலடையளவு கொடுக்க எவ்விதமான அதி சாரம், ஜலபேதி முதலானவைகள் தீரும்.

## 675. குழந்தைகளின் வயிற்றுக்கிருமிகளுக்கு மருந்து

| | | |
|---|---|---|
| சிரகம் | 1 வராகனெடை | |
| பூண்டு | 1 | ,, |

இவ்விரண்டையும் சாதத்தின் கொதிநீருடன் கலந்து நைவாயரைத்து ஒரு பாலடை கொடுக்கவும்.

## 676. குழந்தைகளின் கிருமி நோய்க்கு மருந்து

(1) இலுப்பையிலையைச் சிறிது சிறிதாக அரிந்து அதிலிருந்து சாற்றைப் பிழிந்துகொண்டு அத்துடன்

வசம்பு பூண்டு

இவ்விரண்டையும் கலந்து நைவாயரைத்து ஒரு பாலடை கொடுத்திடவும்.

மேலும் இதை தலையின் பேரிலும் பூசவும். கிருமி நோய்கள் தீரும்.

(2) குப்பைமேனியிலை உத்தாமணியிலை

இவ்விரண்டையும் தண்ணீர் விட்டரைத்துப் பிள்ளையின் உச்சியில் பூச கிருமி உபத்திரவம் தீரும்.

## 677. குழந்தைகளுக்கேற்படும் சீத இரத்த பேதிக்கு மருந்து

| | |
|---|---|
| ஆமணக்கெண்ணெய் 1 சேர் | புளிச்சக்கீரை |
| வல்லாரை | நீர்ப்பூலா |
| வரப்பூலா | |

இவைகளின் இலைகளைக் கொணர்ந்து சுயமான சாற்றைப் பிழிந்து எலுமிச்சம்பழச் சாற்றையுமிட்டு பழைய வெங்காயச்சாறு ½ சேரையும் ஒன்றுபடக் கலந்து பக்குவ மாய்க் காய்ச்சி கிழிறக்கும்போது 9 தோலா வெந்தியத் தூளைப்போட்டு அந்த எண்ணெயுடன் 9 தோலா சர்க்கரையுங் கூட்டி வைத்துக்கொண்டு வேளைக்கு ஒரு கரண்டியளவு வீதம் இரு வேளையும் உட்கொள்ளவும். வாயு பதார்த்தங்களை நீக்கவும்.

## 678. இரத்த அதிசாரத்திற்கு மருந்து

| | |
|---|---|
| லோத்திரம் | வெட்பாலை |
| கோரைக்கிழங்கு | வில்வம் |

இவைகளை வெல்லத்துடன் கலந்து உட்கொள்ளவும்.

## 679. அதிசாரத்திற்குக் கடுக்காய்ப்பூ மருந்து

| | |
|---|---|
| கடுக்காய்ப்பூ | 3 தோலா |
| கிராம்பு | 1 தோலா |

இவ்விரண்டையும் வறுத்து அபினி ½ தோலாவையுங் கூட்டி தேனையும் விட்டு நன்றாயரைத்து 7 உருண்டைகளாகச் செய்து வேளை ஒன்றிற்கு 1 உருண்டை வீதம் சாப்பிடவும். இத்துடன்

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | சீந்தில் |
| நிலவேம்பு | சுக்கு |
| வெட்பாலை | |

இவைகளை சமயெடைகொண்டு சிறிது கஷாயமிறக்கிக் கொண்டு சாப்பிடவும்.

## 680. விஷபேதிக்கு கற்பூர கல்கம்

சுயமான தேன் ½ சேரை ஒரு வெள்ளித் தட்டிலூற்றி அதனடுவில் 2 பல எடையுள்ள ஒரு துண்டு நாட்டுச்சூடனை

வைத்து எரியவிடவும். அச்சூடன் முழுவதும் எரிந்து நின்றதும் தேனில் கற்பூரத்தின் சத்துவமிறங்கி இருக்கும்.

அதைத் தேனுடன் நன்ருகக் குழப்பித் தட்டில் இருக்கும் தேனை ஒரு சீசாவிலடைத்துக் கொள்ளவும். மிகுதியான கழிச்சல், அஜீரணக் கழிச்சல், ஜலபேதி விஷபேதி முதலானதற்கு வேளைக்கு ஒரு பணவிடை வீதம் கொடுத்துவர மேற்கூறிய பிணிகள் தீரும்.

### 681. குழந்தைகளின் சீத இரத்தக் கழிச்சலுக்கு

கேழ்வரகின் கொழுந்திலை இலவங்கொழுந்து
மாதுளையின் கொழுந்திலை

இம்மூன்றையும் சமமாக எடுத்துக்கொண்டு தயிரில் அரைத்து நடுநிசியில் குழந்தைக்குப் புகட்ட இரத்த சீதபேதி நிற்கும்.

### 682. இருமலுடன் இரத்தம் விழுதலுக்கு மருந்து

(1) நீலிவேர் கடுக்காய்

இவ்விரண்டை காடியிலரைத்து உட்கொள்ள தீரும்.

(2) கையாந்தகரை நொச்சியிலை
பூண்டு மிளகு

இவைகளையரைத்து குழப்பி உட்கொள்ள குணம் ஏற்படும்.

### 683. காசரோகத்திற்கும் இருமலுக்கும் மருந்து

சிறுவழுதுளை கையாந்தகரை
வல்லாரை சிந்தில்தண்டு

இவைகளின் சாறு வகைக்கு $\frac{1}{4}$ படி வீதம் எடுத்து ஒன்ருகக் கலந்துகொண்டு ஒருபடி நெய்யுமிட்டுப் பக்குவமாய்க் காய்ச்சிக்கொண்டு தினம் வேளைக்கு $\frac{1}{2}$ கரண்டி வீதம் காலை

மாலை இரு வேளையும் சாப்பிட்டுவர இருமல், காசம் சுவாசகாசம் முதலானவைகள் தீரும்.

### 684. சுவாச காசத்திற்கு ஆடாதோடை மருந்து

ஆடாதோடையிலை தூதுவளையிலை
சங்கிலை புரசம்இலை (பலாசமரம்)

இவைகள் சமமாகக்கொண்டு வேடுகட்டி, புட்டவியலாக அவித்து சாற்றைப்பிழிந்து அத்துடன்

சுக்கு திப்பிலி
மிளகு

இவைகளைச் சமஎடை எடுத்துச் சூரணித்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு ஒரு சிட்டிகை தூளுடன் 5 அல்லது 4 துளி தேனுடன் மத்தித்து உட்கொள்ள காசம் தீரும்.

### 685. இருமலுக்கு தூதுவளையின் மருந்து

தூதுவளையின் சமூலத்தைக் கல்லுரலிலிட்டிடித்து அத்துடன் தண்ணீரைக் கலந்து ஊறவைத்துக்கொண்டு மறுநாள் அதைப் பிழிந்து $\frac{1}{8}$ படி சாற்றை எடுத்து இத்துடன் கண்டங்கத்திரி வேரை அரைத்த விழுது ஒரு கொட்டைப்பாக்களவு கூட்டி 3 நாட்களுக்கு காலையில் குடிக்க வாயிலிருந்தும், வயிற்றிலிருந்தும் கபம் விழுந்து இருமல் திரும். சிறிது நேரம் சென்று அரிசிக்கஞ்சியை சாப்பிடவும்.

### 686. கபம், இருமல், மூச்சு, சுவாசம் முதலானதற்கு மருந்து

தேவதாளிச்சமூலம் வாழைக்கிழங்கு
கையாந்தகரைச்சமூலம் நீலிச்சமூலம்

இவைகளின் சாற்றை தனித்தனியே எடுத்து 4 சேர் நல்லெண்ணெயில் கலந்து பக்குவமாய்க் காய்ச்சி இறக்கிக் கொள்ளவும்.

இதில் ஒரு காசிடை மருந்தைக் காலையில் உட்கொள்ள கபம், இருமல், மூச்சு முதலான நோய்கள் தீரும்.

## 687. கக்குவான் இருமலுக்கு மருந்து

(1) செருப்படியின் சமூலத்தை நிழலிலுலர்த்திக் கல்லுரலிலிட்டிடுத்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்து அச்சூரணத்தில் 3 சிட்டிகை எடுத்து மோருடன் அல்லது வெந்நீருடன் அரைத்து விழுதாக்கி 5 நாட்களுக்குக் கொடுத்திட கக்குவான் தீரும்.

(2) சுத்திசெய்த மயில்துத்தம்
சுத்திசெய்த எலிப்பாஷாணம்
சுத்திசெய்த துத்தம்

இவைகள் சமமாகக்கொண்டு கல்வத்திலிட்டு ஊமத்தையின் சாற்றை விட்டரைத்து பாசிப்பயறு பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்திக்கொள்ளவும்.

ஒரு மாத்திரையை பாலிலரைத்துக் கொடுத்திட கக்குவான் தீரும்.

## 688. காசம், இருமல், கபம் முதலானதற்கு உத்தாமணியின் மருந்து

உத்தாமணியிலை 3 வராகனெடை

இதை ஒரு புதுப்பானையிலிட்டு சிவக்கும்வரை நன்றாய் வறுத்து பிறகு அதை இடித்துத் தூள்செய்து அத்துடன்

திப்பிலி மிளகு
சுக்கு

இவைகள் வகைக்கு 2 வராகனெடை விதமெடுத்து தூள் செய்து ஒன்றுபடக் கலந்து தேவையான தேனையுங் குழப்பி வைத்துக்கொண்டு தினம் இருவேளையும் சரீரத்திற்கேற்ற வாறு உட்கொள்ள கபம், இருமல் முதலானவைகள் தீரும்.

## 689. இருமலுக்கு மருந்து

தூதுவளைவேரை பசும்பாலிலரைத்துக் காலையில் சிறிதளவு உட்கொள்ள இருமல் தீரும்.

## 690. கக்குவானுக்கு மருந்து

(1) குட்டிவிளாயிலை களிப்பாக்கு
பூவந்திக்கொட்டை

இவைகள் சமயெடைகொண்டு வெந்நீரில் அரைத்து 7 நாட்கள் கொடுத்துவர 45 நாட்கள் குழந்தைகளைத் துன்புறுத்தும் இக்கொடிய கக்குவான் நோய் 7 நாட்களில் பறந்து ஓடிவிடும்.

(2) ஊமத்தங்காயை எடுத்து அதனுள்ளிருக்கும் விதைகளை நீக்கிவிட்டுத் தோல் சுண்டை மட்டிலும் எடுத்துக்கொண்டு அதில் உப்பை நிறப்பி மேலும் சீலைமண் செய்து புடமிட்டு அதிலுள்ள உப்பைமட்டிலும் பத்திரப் படுத்திக்கொண்டு, இதில் ஒரு காசிடை கடுக்காய்த் தூளுடன் சேர்த்துக்கொடுத்தால் வெகு சீக்கிரத்தில் இவ் வியாதி தீரும். மிகவும் கைகண்டது.

## 691. இருமலுக்கு மருந்து

(1) ஆடாதோடைச்சாறு $\frac{1}{4}$ சேர், அதில் $\frac{1}{2}$ தோலா மிளகையரைத்து துவரையளவு பெருங்காயத்தையுங்கூட்டி உட்கொள்ளவும். இவ்விதம் ஏழு நாட்கள் செய்யவும்.

**பத்தியம்:—** பருப்பு, ரொட்டி, வெந்தியக்கீரை இவைகளை சாப்பிடவும்.

(2) முட்காவேளைவேரைக் கொண்டுவந்து நிழலில் உலர்த்திச் சூரணித்துக்கொண்டு தினம் 3 தோலா எடுத்து நெய் அல்லது தேனில் மத்தித்து உட்கொள்ளவும். 14 நாட்களுக்கு சாப்பிடவும்.

இதனால் இருமல், உஷ்ணம் முதலான நோய்கள் தீரும்.

## 692. இருமலுக்கு மருந்து

கடுக்காய் திப்பிலி

இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு நன்றாயிடித்துத் தூள்செய்து தேனையுங் குழப்பி தினம் இருவேளையுமாக உட்கொள்ள நாள்பட்ட இருமல் தீரும்.

இம்மருந்தினால் வயிற்றுப்போக்கு அதிகமானால் குப்பைமேனி வேரை முலைப்பாலிலரைத்துக் கொடுக்க நிற்கும்.

மூன்று நாட்கள் மருந்தை உண்ணவும்.

## 693. சுவாசம், மூச்சு, நெஞ்சடைப்பு முதலானதற்கு

மூச்சு அதிகமாய் நெஞ்சடைத்துக்கொண்டால் சுத்தி செய்த பலகறையை அம்மியின்மீது வைத்து வெந்நீர்விட்டு நைவாயரைத்து வெந்நீரில் குழப்பிக்கொடுக்க மூச்சடைப்பு தீரும்.

எலுமிச்சம்பழச் சாற்றில் பலகறையை ஊறவைத்தெடுத்து உலர்த்த சுத்தியாகும்.

## 694. சகலவித இருமலுக்கும் மருந்து

குப்பைமேனியிலே 1 பிடி கொணர்ந்து பானையிலிட்டு நன்ருய் வதக்கிக்கொண்டு விளாங்காயளவு வெல்லத்தையும் அதிலிட்டு, நல்லெண்ணெய் ஒரு உழக்கையுங் கலந்து குச்சியினுல் கீழும் மேலாகக் கிளறிக்கொண்டு வந்தால் பாகுபோலாகும். அதைப் பத்திரப்படுத்திக்கொண்டு ஒரு வேளைக்கு ஒரு கொட்டைப்பாக்களவு வீதமெடுத்துச் சாப்பிட்டுவர சகலவிதமான இருமலும் தீரும்.

## 695. மூச்சு, கபம், சிலேத்துமம் முதலானதற்கு மருந்து

| | |
|---|---|
| ஈரவெங்காயத்தின் சாறு | 1 பாகம் |
| தேங்காய்ப்பால் | 1 பாகம் |

இவைகளை ஒன்றுகூட்டி உசிதமான அளவு வெள்ளைச் காக்கணவேர், ஆவாரம்வேர் இவைகளை முன்கூறிய சாற்றிலரைத்து, 1 வராகனெடை பொரித்த வெங்காரத் தூளையுமிட்டு நன்ருகக் கலந்துகொண்டு உபயோகிக்கவும். மூச்சு, கபம் முதலானவைகள் திரும்.

## 696. காசரோகத்திற்கு மருந்து

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| தூதுவளை | சீந்தில் |
| திப்பிலி | |

இவைகள் சமமாகக்கொண்டு இடித்து 3 படி தண்ணீரையும் ஊற்றி அடுப்பின் மேலேற்றி காய்ச்சி எட்டிலொன்ருய் கஷாயமிறக்கி, தேனும், பசுவின் நெய்யும் கலந்து உட்கொள்ள காசம் திரும்.

## 697. கபரோகத்திற்கு உபசாரம்

1. சீந்தில்கொடியின் கஷாயத்தில் தேனைக்கூட்டி சாப்பிடவும்.

2. அதிமதுரக்கஷாயத்தில் தேன் அல்லது கற்கண்டு சேர்த்து உட்கொள்ளவும்.

3. திப்பிலிச்சூரணத்துடன் தேன் அல்லது நெய்யைக் குழப்பிச் சாப்பிடவும்.

4. தான்றிக்காய்த்தோல் அதற்கு இருமடங்கு கற்கண்டு இதன் கஷாயத்தைச் சாப்பிடவும்,

5. ஏலக்காய், இந்துப்பு இவைகளை நெய்யுடன் அரைத்துச் சாப்பிடவும்.

6. சுக்கு அதற்கு நான்கு மடங்கு கற்கண்டு சேர்த்துக் கஷாயமிறக்கி உட்கொள்ளவும்.

7. நெல்லிக்காய்ச் சாற்றில் இருபங்கு கற்கண்டைச் சேர்த்துச் சாப்பிடவும்.

8. இஞ்சிச் சாற்றில் தேனையும் சர்க்கரையும் சேர்த்துச் சாப்பிடவும்.

9. பசுவின் மூத்திரத்தில் அதிமதுரத்தையும் தான்றிக்காயையும் உறைத்துச் சாப்பிடவும்.

10. இந்துப்பு, மஞ்சள், கற்றுழைச்சோறு இவைகளைத் தேனுடன் குழப்பி உட்கொள்ளவும்.

11. கோமூத்திரத்தில் மஞ்சளை உறைத்துச் சாப்பிடவும்.

12. சிதாபழத்தின் சூரணத்தைத் தேனுடன் குழைத்துச் சாப்பிடவும்.

## 698. சுவாசகாசம், காசம், இருமல் இவைகட்கு மருந்து

கால்சேர் கோதுமையை ஒரு பாத்திரத்தில் போட்டு மேலும் வெள்ளெருக்கின் பாலைவிட்டு கோதுமை

முழுவதும் மூழுகும் வரையில் ஊற்றி ஒருநாள் முழுவதும் ஊறவைத்து மறுநாள் அதை நன்ருக உலர்த்திக்கொண்டு ஒரு மண்பானையில் போட்டு சிவக்கும் வரையில் வறுத்துக் கொள்ளவும்.

ஒரு வெற்றிலையில் ஒரு சிட்டிகை எடுத்து வைத்து வெற்றிலையைச் சுருட்டி உட்கொள்ளத் திரும். இதற்குப் பத்தியம் இல்லை.

## 699. சுவாச காசத்திற்கு மருந்து

எருக்கமொட்டு அதற்குச் சமஎடை மிளகுப்பொடியை போட்டு நன்ருக அரைத்து அத்துடன் வெட்டிவேரையுங் கூட்டி அரைத்து 4 உருண்டைகளாகச்செய்து தினமொன் றுக்கு ஒரு உருண்டை வீதம் 4 நாளைக்குச் சாப்பிடவும். சுவாசகாசம் திரும்.

## 700. இருமலுக்கு முசுமுசுக்கை மருந்து

முசுமுசுக்கையிலையை ஒருசேர் நெய்யில் வறுத்து அதில் பின்னும் $\frac{1}{4}$ சேர் சிரகத்தூள், $\frac{1}{2}$ சேர் கற்கண்டுத்தூளையும் போட்டுப் பக்குவம் செய்துகொண்டு வேளைக்கு கொட்டைப்பாக்களவு உருண்டைவீதம் இருவேளையும் உட் கொள்ள இருமல் திரும்.

## 701. வாதரோகத்திற்கு (பாரிச வாயுவுக்கு) மருந்து

| | |
|---|---|
| பறங்கிப்பட்டை | 1 பலம் |
| பிரப்பங்கிழங்கு | $\frac{1}{2}$ பலம் |
| சங்கம்குப்பி | ,, |
| சங்கதாரிவேரின்பட்டை | ,, |
| சிவனர்வேம்பு | ,, |
| சிந்தில் | ,, |
| வெள்ளை அருகு | ,, |

பறங்கிப்பட்டையை மட்டிலும் பிரத்தியேகமாயிடித்துத் தூள்செய்யவும். மற்றதை ஒன்றுகூட்டிப் பொடிசெய்து கொள்ளவும்.

மருந்துண்ணும்பொழுது பறங்கிப்பட்டைத்தூளில் ஒரு சிட்டிகையும், மற்ற சூரணத்தில் இரண்டு சிட்டிகை வீதம் எடுத்துத் தேனில் கலந்து உட்கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| மிளகு | கிராம்பு |
| ஜாதிக்காய் | பெருங்காயம் |
| கழற்சிப்பருப்பு | இந்துப்பு |

இவைகளைச் சமஎடை கொண்டு தூள் செய்துகொண்டு அதில் 1 பணவிடை எடுத்து வெந்நீரில் கலந்து உடனே சாப்பிடவும்.

இவ்விதம் 3 நாளைக்குச் சாப்பிடவும்.

**பத்தியம்:** கொள்ளுக்கட்டு, வெள்ளாட்டுப்பால், தயிர் பால் இவைகளைக் கூட்டியும், புளியை விலக்கவும்.

## 702. அண்டவாதத்திற்கு மருந்து

வசம்பைப் பசுவின் நெய்யிலரைத்து உட்கொள்ளத் தீரும்.

## 703. வாயுவிற்கு மருந்து

| | |
|---|---|
| தக்காளியிலே | இந்துப்பு |
| கடுக்காய் | சுக்கு |
| மிளகு | |

இவைகளை நன்றாக அரைத்துக்காய்ச்சி சிறிது எண்ணெயுங் கூட்டிச் சாப்பிட வாயு தீரும்.

| | |
|---|---|
| தேன் | நெய் |
| பால் | வெந்நீர் |

இவ்விதமான அனுபானங்களில் கொடுக்கக் குணமளிக்கும்.

## 704. வாதரோகத்திற்கு மருந்து

(1) சுக்கு — கஞ்சாயிலை
நொச்சி — கையாந்தகரை
கொட்டைக்கரந்தை

இவைகள் சமமாகக்கொண்டு உலரவைத்து இடித்துப் பொடிசெய்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு வேளை ஒன்றிற்கு 1 தோலா விதம் கொடுக்க வாதரோகம் தீரும்.

(2) வாலுளுவை — சிற்றரத்தை
அமுக்கரா — சுக்கு
சிந்தில் — சிறுதேக்கு
சோம்பு — தண்ணீர்விட்டான்கிழங்கு
ஓமம்

இவைகள் சமமாகக்கொண்டு இவைகள் யாவற்றிற்கும் சம எடை குங்கிலியம். இதற்கு $\frac{1}{2}$ பாகம் நெய் இவைகளைச் சேர்த்துத தயாரித்துக் கொள்ளவும்.

(3) பூண்டு — கடுகரோகணி

இவைகளைப் பாலில் போட்டு அப்பாலை கோவா (திரட்டுப் பால்) செய்து சாப்பிடத் தீரும்.

## 705. வாதத்தினுல் மலமூத்திரம் அடைபட்டால் மருந்து

அரிசி — காடி

வகைக்கு $\frac{1}{4}$ சேர் கலந்து குடிக்கத் தீரும்.

## 706. அண்டவாதத்திற்கு மருந்து

(1) சிவலிங்கவேர் 1 பலம்
அதிவகந்திவேர் 3 தோலா

இவைகளை இடித்து 10 சேர் தண்ணீர் விட்டு பால் 10 தோலாவையும், தேன் $\frac{3}{4}$ தோலாவையுங்கூட்டி கோவா செய்து 1 பல வீதமாக உருண்டை செய்து சாப்பிடவும்.

அண்டவாதம், விரைவலி தீரும்.

**பத்தியம் :—** புளி, வாயு பதார்த்தங்கள் இவைகளை நீக்கவும்.

(2) இரண்டு கோழிமுட்டைகளைக் கொணர்ந்து அதிலுள்ள வெள்ளைக்கருவை மாத்திரமெடுத்துக்கொண்டு அதற்குச் சமஎடை கற்கண்டும், இதே எடை புரசம்பிசினை (பலாசம்பிசினை)யும் கலந்து, வெள்ளாட்டுப்பால் $\frac{1}{2}$ சேரையுங்கூட்டி குடித்திடவும். இவ்வாறு 14 நாட்கள் செய்யவும்.

**பத்தியம்:** புளி, வாயு பதார்த்தங்கள் முதலானவைகளை விலக்கவும்,

## 707. உஷ்ணவாயுவிற்கு மருந்து

| | |
|---|---|
| பருத்திக்கொட்டை | 1 தோலா |
| மிளகு | திப்பிலி |
| நெற்பொரி | சீரகம் |
| நெல்லிப்பருப்பு | |

இவைகள் வகைக்கு 9 தோலா

| | |
|---|---|
| திப்பிலிமூலம் | $4\frac{1}{2}$ தோலா |
| சவ்வியம் | $4\frac{1}{2}$ தோலா |
| இலவங்கப்பட்டை | $\frac{1}{2}$ வராகனெடை |
| ஏலம் | $\frac{1}{2}$ வராகனெடை |
| சுக்கு | $4\frac{1}{2}$ தோலா |
| கடுக்காய் | தான்றிக்காய் |
| நெல்லிமுள்ளி | |

வகைக்கு 5 (எண்ணிக்கையில்)

சர்க்கரை $\frac{3}{4}$ சேர் கொடிவேலிவேர் $4\frac{1}{2}$ தோலா
பசுவின் நெய் $\frac{1}{2}$ சேர் தேன் 1 சேர்

இவைகளைச் சூரணித்து நெய், தேன் இவைகளில் கலந்து சூரிய புடமாக வைத்துப் பிறகு தினம் ஒரு வேளைக்கு 1 காசிடை விதம் 20 நாட்களுக்கு இரு வேளையுமாக உட்கொள்ள சுவாசகாசம், இருமல், உஷ்ணத்தினால் இரத்தம் விழுதல், அந்தரகத சுரம், பித்தம் முதலானது தீரும்.

## 708. வாயுவிற்கு (விரைவாதம்) மருந்து

மெல்லிய நரம்புடைக்காய்(?) மிளகு
பூண்டு

இம்மூன்றையும் நன்றாயரைத்துக் கொட்டைப்பாக்களவு எடுத்து 3 நாட்களுட்கொள்ள விரைவாதம் தீரும்.

## 709. இடுப்பின் வாயுவிற்கும், வலிக்கும் மருந்து

(1) முருங்கையிலை புளியஇலை
காட்டுக்கொடியிலை வெள்ளைச்சாறடைவேர்
தும்பையிலை

இவைகளையெல்லாம் சேர்த்துச் சாறுபிழிந்து

வெங்காயம் மிளகு
நல்லெண்ணெய் பனைவெல்லம்

இவைகளையுங்கூட்டி 3 நாட்களுண்ண இடுப்புவலி, வாயு முதலானவை தீரும்.

(2) கல்லுப்பு $\frac{1}{4}$ படியைப் பானையிலிட்டு வறுக்கவும். சடபட என்ற சப்தமடங்கியதும் 2 சேர் நல்லெண்ணெயை ஊற்றி நுரைத்துக்கொள்வது நின்றதும் உப்பு நன்றாக சிவந்ததும் எண்ணெயை வடித்துக்கொண்டு எண்ணெயுடன் உப்பையுங் கூட்டி அரைத்துச் சாப்பிட இடுப்புவலி தீரும்.

## 710. தனுர் வாதத்திற்கு மருந்து

சுயமான தேன் ஒரு சேரை இரு பாகமாகச் செய்து ஒரு பாகத்தில் ஒரு சேராங்கொட்டையை விளக்கின்பேரில் பிடிக்க அதினின்று வரும் எண்ணெயைச் சேர்த்து உட் கொள்ளக் கொடுத்து பிறகு 4 நாழிகைக்குப் பின்பு இவ் விதமே மற்ற பாதி தேனில் சேராங்கொட்டையின் எண்ணெயைக் கூட்டிக் கொடுக்கத் தனுர்வாதம் தீரும்.

## 711. காமாலைக்கு மருந்து

சிற்றாமணக்கின் கொழுந்தை ஒரு கொட்டைப் பாக்களவு அரைத்துக்கொண்டு அத்துடன் எருமையின் வெண்ணெய் ஒரு கொட்டைப்பாக்களவு கூட்டி ஒரு வேளைக்கு இதில் பாதி வீதம் இருவேளையும் உட்கொள்ள வும்.

**இதற்குப் பத்தியம் :**

புழுங்கலரிசியை முதல் நாளிரவு ஊறவைத்து மறு நாள் அரைத்துச் சிறிய சிறிய உருண்டைகளாகச் செய்து ஒரு புதுப்பானையிலிட்டுத் தண்ணீர் விட்டுக் காய்ச்சி ஒரு கொதி வந்ததும் எடுத்து உப்பைச் சேர்க்காமல் ஒருவேளை சாப்பிடவும். மறுநாள் எவ்வளவு வேண்டுமோ அவ்வள வும் சாப்பிடவும். காமாலை தீரும்.

பிணியில் சிறிது எஞ்சியிருந்தால் இவ்விதமே நான்கு நாட்களுக்குப் பிறகு மருந்தையும், அரிசி உருண்டைகளை யும் கொடுக்கவும். புழுங்கலரிசியுடன் சீரகத்தைத் தாளித்துப் பொங்கல் செய்து உண்ணவும்.

## 712. உள்நாக்குக்கு மருந்து

*(1)* புளிநரளைக்கிழங்கு $\frac{1}{2}$ நெல்லிக்காயளவு எடுத்து வெற்றிலைப்பாக்குடன் 4 நாளைக்கு உட்கொள்ள உள்நாக்கு குறையும்.

(2) நேர்வாளப்பருப்பை நாய்வேளையின் சாற்றில் உரைத்து திலகமிடவும்.

(3) பழுப்பாகல் வெற்றிலை
சுண்ணும்பு பூண்டு
மிளகு ½

இவைகளைவைத்து நைவாயரைத்து உள்நாக்கிற்குத் தடவ குணமாகும்.

## 713. இரத்த வாந்திக்கு மருந்து

(1) நெல்லிப்பருப்பை அலரைத்து வெண்ணெயுடன் கலந்து கொடுக்கவும்.

(2) கழுநீரில் சர்க்கரை, எலுமிச்சம்பழச்சாறு இவை களைக் கலந்து கொடுக்கத் திரும்.

## 714. வாந்தி, ஒமட்டல் முதலானதற்கு

பாசிப்பயரை வறுத்து கஷாயமிறக்கி அத்துடன் மயிலிறகைச் சுட்டு கலந்து கொடுக்கத் தீரும்.

## 715. வாயிலிருந்து பித்தநீர் வடிதல், வாந்தி முதானதற்கு மருந்து

விளாம்பழ ஓட்டைத் தண்ணீரில் இழைத்து நாக்கில் தடவ திரும்.

## 716. வாந்தி, ஒமட்டல் முதலானதற்கு மருந்து

ஏலக்காய் விடிவிடிதாம்பு?
மயிலிறகு சுட்டகரி வசம்பு சுட்டகரி

இவைகளை வெல்லத்துடன் கலந்து நன்ருக அரைத்துத் தேனையுங் கலந்து மத்தித்து கொடுக்கத் திரும்.

## 717. வாந்தி, பித்தம், அரோசகம் முதலானதற்கு மருந்து

மரிக்கொழுந்து மாங்கொட்டையின் உள்தோல்
நெல்லிமுள்ளி

இவைகளையரைத்து உருண்டைசெய்து சாப்பிடத் திரும்.

## 718. தாதுவிருத்திக்கு மருந்து

பலாசம்பூ முள் இலவம்பூ
போஸ்துக்காய்

இம்மூன்றையுமிடித்துத் தூள்செய்து இரவு முழுவதும் புதிய கலயத்திலிட்டுத் தண்ணீர்விட்டு ஊறவைத்து விடியற்காலையில் அத்தண்ணீரை உட்கொள்ளவும். கற்கண்டையும் பொடித்து சேர்த்துக் குடிக்கவும். இவ்விதம் 2 அல்லது 7 நாளைக்குச் சாப்பிடவும்.

உப்பில்லாப் பத்தியத்தை அனுஷ்டிக்கவும்.

## 719. வீரிய விருத்திக்கு மருந்து

நீர்முள்ளி விதையை வாழைப்பழத்தில் திணித்து நெருப்பின் தணலில் வாட்டிப் பக்குவப்படுத்தி சாப்பிடவும். இவ்விதம் 7 நாட்களுக்கு செய்ய வீரியமுண்டாகும்.

## 720. சரீரம் கெட்டிப்படுவதற்கு கல்கம்

கருஞ்சீரகம் வெந்தியம்
வசம்பு பாவட்டை
ஓமம் குரோசானி ஓமம்

இவைகள் சமமாகக்கொண்டு சூரணித்து 3 தோலா தேனில் கூட்டியரைத்து உட்கொள்ளவும்.

சரீரம் கெட்டிப்பட்டு இளமைப் பருவமடையும்.

## 721. சுரத்திற்கு மருந்து (ஒருநாள் விட்டு ஒருநாள் வரும் சுரம்)

சுருந்துளசியிலை 4 (எண்ணிக்கையில்) இத்துடன் பாதி நெல்லிக்கனியளவு வெல்லத்தைச் சேர்த்து நன்ருகப் பிசைந்து உட்கொள்ளவும். அல்லது வெல்லத்துடன் வேப்பிலையை இவ்விதம் செய்துகொடுக்க சுரம் தீரும்.

## 722. அரைத் (ஒருத்) தலைவலிக்கு

பவளமல்லிப்பூ கோரோசனை

இவைகளைப் பசுவின் வெண்ணெயில் பக்குவம் செய்து அந்த நெய்யை மூக்கில் நசியமிடத் தீரும்.

## 723. சீக்கிரம் பிரசவமாக மருந்து

பெருங்காயம் ½ தோலா இந்துப்பு 2 தோலா

இவ்விரண்டையும் காடியிலரைத்துக் குடித்திட சீக்கிரத்தில் பிரசவமாகும்.

## 724. பிரசவகாலத்தில் வலி நின்றுவிட்டால் மருந்து

கோவையிலை 10 வெல்லம் 9 தோலா

சிறுகீரைவித்து 9 தோலா

இவைகளை அரைத்துப் பசுவின்பாலில் புகட்ட வலி காணும்.

## 725. கர்ப்பம் நிலைக்க மருந்து

நிலப்பனங்கிழங்கை நெய்யில் பொரித்து உண்ண கர்ப்பம் உண்டாகும்.

## 726. கர்ப்பமுண்டாக மருந்து

தாமரைக்கிழங்கு கார்கோலி
வெள்ளெருக்குவேர் வெள்ளைக்குன்றிமணிவேர்
வெள்ளைக்காக்கணவேர்

இவைகள் வகைக்கு *1* வராகனெடை வீதமெடுத்து பாலில் நன்ருகக் குழப்பி ஸ்திரீகள் விலக்கமான மூன்ருவது நாள் முதல் 5 நாள் வரை *3* நாளைக்குச் சாப்பிட கர்ப்பந் தரிக்கும்.

## 727. கர்ப்பமுண்டாக மருந்து

அரசம்வேர் அரசமரத்துப்புல்லுருவி

இவை வகைக்கு 2 வராகனெடை வீதமெடுத்துப் பாலில் அரைத்துப் பாலில் குழப்பி, வீட்டு விலக்கமான மூன்ரும் நாள் முதல் *3* நாட்களுக்குச் சாப்பிட கர்ப்பந்தரிக்கும்.

## 728. கர்ப்பமுண்டாக மருந்து

வாகை மரத்தின் பூவின் சாற்றுடன் சமமாகப் பசுவின் பாலும், பசுவின் நெய்யுங்கூட்டி வீட்டு விலக்கமாகி ஸ்நானம் செய்யும் நாட்களிலிருந்து 5 நாட்கள் உட்கொள்ள சந்தான சித்தியுண்டாகும்.

## 729. சந்தான சித்திக்கு மருந்து

நெய்சட்டி சமூலத்தின் சாற்றில் சமஎடை பாலைக் கலந்து ருதுவாகி ஸ்நானம் செய்த நாட்களிலிருந்து 5 நாட்கள் உள்ளுக்குச் சாப்பிட கர்ப்பமுண்டாகும்.

## 730. கர்ப்பமுண்டாக மருந்து

அதிமதுரம் திராக்ஷை

இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு பால் அல்லது காடி

அல்லது தண்ணீரில் அரைத்துப் பாலில் குழப்பி ருதுகால முதல் 5 நாட்கள் சாப்பிட்டுவர கர்ப்பந்தரிக்கும்.

## 731. வெள்ளைக்கு மருந்து

| | |
|---|---|
| கற்கண்டு 1 தோலா | சிரகம் 1 தோலா |
| கசகசா 1 தோலா | புளியங்கொட்டைத் தோல் 3 தோலா |

இவைகளைப் பசும்பால் அல்லது கழுநீரில் அரைத்துப் புசிக்க தீரும்.

## 732. குளிர் சுரத்திற்கு மருந்து

எருக்கிலையொன்றை எடுத்து அதை இரண்டாகத் துண்டு செய்து இரு விடயங்களாக (வெற்றிலைப்பாக்கு மடிப்பு) செய்துகொண்டு ஒரு விடயத்தைக் குளிர் வருவதற்கு முன்பு சாப்பிடவும். பிறகு இரண்டு நாழிகைக்குப் பின் மற்றொன்றையும் சாப்பிட ஒரு நாளைக்கொருமுறை அல்லது இருநாளைக்கொருமுறை வரும் சுரங்கள் தீரும்.

## 733. விக்கலுக்கு மருந்து

1) ஏலக்காய்     வெண்ணெய்

இவைகளைக்கூட்டி மெல்லியதாக அரைத்துக்கொடுக்க விக்கல் தீரும்.

| | | |
|---|---|---|
| 2) | பழைய இருப்பு 1 சேர் | கிட்டம் 1 சேர் |
| | காசுக்கட்டி $\frac{1}{4}$ சேர் | மோர் 8 சேர் |

இவைகளை ஒரு பீங்கான் பாத்திரத்தில் போட்டு வெய்யிலில் வைத்து அதிலுள்ள மோரைமட்டிலும் சிறிது சிறிதாக எடுத்து உட்கொள்ள விக்கல் நிவர்த்தி ஆகும்.

## 734. காக்கைவலிப்பு, அபஸ்மாரம் முதலானதற்கு மருந்து

*(சுட்ட)* வசம்பின் சூரணத்தை தேனில் குழைத்து உட்கொள்ள தீரும்.

**பத்தியம்:** பால் சாதத்தைச் சாப்பிடவும். வியாதி தீரும்.

## 735. அநேக வியாதிக்கு நில ஆவாரையின் பிரயோகம் (கல்பம்)

தினமும் நில ஆவாரை 2 தோலாவரை சாப்பிடவும்.

1 தேனுடன் அரைத்து உருண்டைசெய்து சாப்பிட இந்திரியம் கெட்டிப்படும்.

2 பேரீச்சம்பழத்துடன் சாப்பிட பசி ஏற்படும்.

3 தட்டப்பயறின் சாற்றிலுண்ண கிருமிகள் ஒழியும்.

4 தும்பையின் சாற்றிலுண்ண பாண்டுரோகம் ஒழியும்.

5 பசுவின் வெண்ணெயுடன் கூட்டிச்சாப்பிட திக்குவாய் திருந்துவான்.

6 ஒட்டையின் பாலுடன் உட்கொள்ள சரீரம் புஷ்டியாகும். ஸ்திரீகள் யெளவனமாவார்கள்.

7 கற்கண்டுடனுண்ண வயோதிகள் தருணனுவான்.

8 நொச்சியின் சாற்றிலுண்ண வயிற்றுக்கடுப்பு தீரும்.

9 வசம்புடன் கூட்டிச்சாப்பிட வாயுகட்டி தீரும்.

10 தயிருடன் கலந்துண்ண விஷந்தீரும்.

11 கிராம்புடன் கூட்டித்தின்ன வீரியம் கெட்டிப்படும்.

12 மாதுளைச் சாற்றிலுண்ண சரீரத்தின் துர்நாற்றம் ஒழியும்.

13 திராக்ஷைப்பழத்துடன் கலந்துண்ண இரத்த விருத்தி யாகும்.

14 எலுமிச்சம்பழ ரசத்துடன் சாப்பிட வயிற்றுவலி தீரும்.

15 பசுவின் பாலுடன் கலந்து உட்கொள்ள ராஜகளை ஏற்படும்.

16 சர்க்கரையுடன் சேர்த்துண்ண பித்தந்தீரும்.

17 நெல்லிக்கனியுடன் சேர்த்து உட்கொள்ள உடம் பெரிவு தீரும்,

18 காட்டு நெல்லிலையுடன் சாப்பிட் மூச்சு, இருமல் இவைகள் தீரும்.

19 பருத்திக்கொட்டைச்சாறும், சர்க்கரையும் இத்துடன் கூட்டிச் சாப்பிட வாதரோகங்கள் தீரும்.

20 வெள்ளாட்டுப்பாலில் கலந்து உண்ண விந்து கெட்டிப் படும்.

21 நல்லெண்ணெயில் காய்ச்சி உண்ண பாம்பின் விஷம் இறங்கும்.

22 மானின் பாலுடன் சாப்பிட 5 அல்லது 7 குதிரைகளை அடக்க முடியும்.

23 ஆண்குட்டிகள் போட்ட வெள்ளாட்டுப்பாலில் உண்ண 5 அல்லது 7 ஸ்திரீகளை போகிக்கமுடியும்.

**இவைகளுக்குப் பத்தியம்:** நிறைய நெய்யைச் சாப்பிட வேண்டும். சாதம், பச்சைப்பயறு முதலானதை சேர்க்கவும்.

புளிப்பு பதார்த்தங்களை விலக்கவும்.

### 736. மேக சம்பந்தமான உஷ்ணம், வாயு, சிரங்கு முதலானதற்கு மருந்து

நெல்லிக்காய் கந்தகத்தை 21 தடவை பாலில் சுத்தி செய்து இஞ்சிச்சாற்றில் 3 ஜாமங்கள் அரைத்து ஒரு நாள் சூரியபுடத்தில் வைத்தெடுத்து பிறகு சீசாவில் பத்திரப் படுத்தி 1 மாத முழுவதும் தானியபுடத்தில் வைத்து பிறகு அதை மேக சம்பந்தமான உஷ்ணம், சிரங்கு சொறி முதலானதற்கு பிரயோகிக்கவும்.

### 737. சகலமேகம், பித்தபிரமியம், இரத்த க்ஷயம் முதலானதற்கு மருந்து

வில்வஇலை 600 தோலா எடுத்து நன்றாகயிடித்து புட்டவியலாக வேகவைத்து சாறுபிழிந்துகொள்ளவும். நான்குசேர் சர்க்கரையை இச்சாற்றில் போட்டு நன்றாகக் கலந்து பிறகு

வெள்ளைத்தாமரையின் பருப்பு 4 பலம்

| | | | |
|---|---|---|---|
| சீரகம் | 2 பலம் | கொத்தமல்லி | 1பலம் |
| கூகைநீர் | 1 பலம் | திப்பிலி | 2 பலம் |
| தாளிசபத்திரி | 1 பலம் | நெற்பொரி | 2 பலம் |

இவைகளை இடித்து சூரணம் செய்து வஸ்திரகாயஞ்செய்து சாற்றில் போட்டு பசுவின் நெய்யும் தேனும் வேண்டிய அளவு போட்டு பக்குவஞ்செய்து வேளை ஒன்றிற்கு 1 கழஞ்சுவீதம் இருவேளையும் 1 மண்டலம் பிரமியம், கைகால் எரிவு, அஸ்திசுரம், உடம்பெரிவு, பித்த எரிவு, அன்னத்துவேஷம், அரோசகம், இருமல், இரத்தபிரமியம், சகலமேகங்கள் மற்றும் அநேக வியாதிகள் தீரும்,

**பத்தியம் :** இச்சா பத்தியம்.

## 738. உன்மாத பைத்தியம், உக்ர பைத்தியம், பித்த பிரமை, மார்எரிவு முதலானதற்கு மருந்து

கோஷ்டம் $\frac{3}{4}$ வராகனெடை எடுத்து வெந்நீருடன் கலந்து நைவாயரைத்து உருண்டைசெய்து இரண்டு வராக னெடை தேனில் குழப்பி உள்ளுக்குச் சாப்பிடவும்.

இலகு சரீரத்திற்கும், சாதாரண சரீரத்திற்கும் அரை விராகனெடை எடுத்து வெந்நீரில் கலந்து முன்பு சொல்லிய விதமே கொடுக்கவும். இவ்விதம் இருவேளையும் 6 நாளைக் குக் கொடுக்க மேற்கூறிய நோய்கள் தீரும். மருந்தை அவ்வப்போது புதிதாகச்செய்து உட்கொள்ளவேண்டும். பழைய மருந்து உதவாது.

**பத்தியம் :** இச்சா பத்தியம்.

## 739. உடம்பிலுள்ள காங்கையை சமனப்படுத்த மருந்து

| | | | |
|---|---|---|---|
| நெல்லிக்காய் | 2 படி | தேன் | 4 சேர் |
| சீரகம் | 1 சேர் | சீனுகற்கண்டு | 5 சேர் |

இவைகளைப் பால் பானையிலிட்டு மூடிச் சீலைமண் செய்து பூமியில் புதைத்துவைத்து 45 நாட்களுக்குப்பின் எடுத்து உபயோகிக்கவும். தினம் இரு வேளையுமாக ஒரு மண்டலம் சாப்பிடவும்.

**பத்தியம் :** ஸ்திரீ சேர்க்கையை விலக்கவும்,

## 740. இரத்தபித்தத்திற்கு மருந்து

| | |
|---|---|
| வெண்ணெய் | சர்க்கரை |
| நெற்பொரி | திராக்ஷை |
| கோரைக்கிழங்கு | |

இவைகள் சமஎடை கொண்டிடித்துத் தூள்செய்து நெய்யுடன் கூட்டிச் சாப்பிட்டுவர இரத்தபித்தம் தீரும்.

## 741. அக்கினிமாந்தத்திற்கு மருந்து

(1) இஞ்சி 3 தோலாவை புளித்த மோருடன் சேர்த்தரைத்து சாப்பிடவும்.

(2) திப்பிலி கடுக்காய்
சுக்கு

இவைகளை வெந்நீரிலரைத்துச் சாப்பிட பசி ஏற்படும்.

(3) கடுக்காய் தான்றிக்காய்
நெல்லிமுள்ளி சுக்கு
மிளகு திப்பிலி
கிராம்பு பெருங்காயம்
ஓமம்

இவைகள் சமஎடை. யாவற்றிற்கும் சமஎடை வெல்லத்தைச் சேர்த்து உருண்டைகள் செய்து 7 அல்லது 11 நாட்கள் சாப்பிட அக்கினி பிராப்தியாகும்.

(4) காயம் சுக்கு
மிளகு திப்பிலி
சீரகம்

இவைகள் சமமாகக்கொண்டு தூள்செய்து வெல்லத்துடன் பிசைந்து ஒரு தோலா வீதம் உருண்டைகள் செய்து வேளை

ஒன்றிற்கு ஒரு உருண்டை வீதம் சாப்பிடவும். பசி ஏற்படும்.

## 742. உடம்பிலுள்ள உஷ்ணத்திற்கும் வெட்டைக்கும் மருந்து

| | |
|---|---|
| மாசிக்காய் | கடுக்காய்ப்பிஞ்சு |
| ரோஜாமொட்டு | ஏலக்காய் |
| கசகசா | குங்குமப்பூ, ஜாதிப்பத்திரி |

இவ்வேழு சாமான்களையும் தூள்செய்து நைவாயரைத்து பால் அல்லது வெண்ணெய் அல்லது இளநீரில் சர்க்கரையுடன் கூட்டிச் சாப்பிட மேற்கூறிய வியாதிகள் தீரும்.

## 743. வாய் வெந்துபோனதற்கு மருந்து

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| சிரகம் | அதிமதுரம் |
| பெருஞ்சிரகம் | திராகைஷ |

இவைகள் சமமாகக்கொண்டு அரைத்து வஸ்திரகாயஞ் செய்து நெய்யையுங்கூட்டி நன்ருய்க்காய்ச்சி பக்குவம் செய்து இருவேளையுமுட்கொள்ள தீரும்.

## 744. பித்தத்திற்கு மருந்து

அம்மான் பச்சையரிசியை அரைத்து ஒரு எலுமிச்சம் பழத்தின் பிரமாணம் எடுத்து பாலில் குழப்பி சேலஞ் சர்க்கரை $4\frac{1}{2}$ தோலாவையும் கலந்து 7 நாட்கள்குடித்திடவும்.

நாள் ஒன்றிற்கு ஒரே தடவை குடித்திடவும். ½ சேர் பாலுடன் குழப்பிக் சாப்பிடவும்.

## 745. உடம்பின் துர்நாற்றத்திற்கு மருந்து

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| கிராம்பு | காயம், பூண்டு |

பூமியில் படர்ந்திருக்கும் முட்காவேளையின் இலை

இவைகளை ஒன்றுகூட்டி அரைத்து உட்கொள்ளவும்.

## 746. சுக்குக் கல்பம்

மலைஇஞ்சி 2 சேர் எடுத்து நன்றாக அரைத்து அத்துடன் பசுவின் நெய் 2 சேர், வெல்லம் 2 சேரையுங் கூட்டி சமரஸமாகச் செய்துகொண்டு 4 படி பானையிலிட்டு 21 நாட்களுக்கு எருவுக் குழியினடியில் புதைத்து வைத்துப் பிறகு எடுத்து தினம் 2 அல்லது உடம்பிற்கு ஏற்குமாயின் 3 தோலா வரை உட்கொள்ள 65 விதமான வியாதிகள் தீரும். சரீரமும் திவ்யமாகும்.

**பத்தியம் :—** வாயு பதார்த்தங்களை நீக்கி இச்சா பத்தியம் அனுஷ்டிக்கவும்.

## 747. க்ஷயரோகத்திற்கு மருந்து

| | |
|---|---|
| பாஷாணபேதி | கூகைநீர் |
| ஏலக்காய் | திப்பிலி |

இவைகளை ஒன்றுபடக் கலந்து சூரணம் செய்து

| | |
|---|---|
| சிந்தில்கொடியின் சாறு | 2 தோலா |
| நீர்வெங்காயத்தின் சாறு | ,, |
| தேன் | ,, |

இவைகளை ஒன்றுகூட்டி ஏழு பாகங்களாகச் செய்து தினமொரு பாகமாகச் சாற்றில் சூரணத்தைப்போட்டு உட்கொள்ளவும். ஏழு நாட்கள் சாப்பிடவும்.

## 748. வயிற்று உப்பிசத்துடன் கூடிய கணச்சூட்டிற்கு (குழந்தைக்கு) மருந்து

சாணுக்கி கீரை பூண்டு 1
வசம்பு துண்டு 1

இவைகளை இலேசாக வறுத்துக்கொண்டு சாற்றைப் பிழிந்து ஒரு பாலாடை அளவு வீதம் குழந்தைக்கு தினமிரு வேளையாக மூன்று தினங்கள் கொடுக்க வியாதி தீரும்.



சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்
60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர வைத்திய ரத்னவளி



பத்து. பிளாஸ்திரி முதலானவைகள்

## பத்து, பிளாஸ்திரி முதலானவைகள்

### 749. சொறி, சிரங்கு முதலானதற்கு பிளாஸ்திரி

புங்கமரக் கட்டையைக் கொணர்ந்து அதன் மேலுள்ள பட்டையை நீக்கிவிட்டு அதை சிவல்போல் சீவி பிறகு பிழிந்து சாற்றை எடுத்துக்கொள்ளவும். இதை ஒரு வெங்கலத் தட்டில் போட்டு அத்துடன்

| | |
|---|---|
| இரசகற்பூரம் | $\frac{1}{8}$ வராகனெடை |
| லிங்கம் | $\frac{1}{8}$ வராகனெடை |

தாமிரத்த்தகட்டில் ஒரு சிறிய துண்டு
வெள்ளியத் தகட்டில் ஒரு சிறிய துண்டு

இவைகளையும் கூட்டி நைவாக உரைத்துக் கொள்ளவும். இவ்விதம் உரைத்த விழுதில் வெண்ணெயைக் கலந்து நன்ருக மத்தித்து வைத்துக் கொண்டு சொறி, சிரங்கு முதலானவற்றின் மேல் பூசத் தீரும்.

படை முதலானதற்கும் தடவ படைகள் தீரும்.

### 750. கை கால்களின் எலும்பு முறிந்ததற்கு மேல் பூச

பிரண்டையை நைவாயரைத்து பத்துபோட்டு கட்டு கட்டவும். இவ்விதம் ஐந்து நாட்கள் செய்ய குணங் காணும்.

### 751. அண்ட வாயுவுக்கு மேல்பூச்சு

ஆமணக்கெண்ணெய் முலைப்பால்

இவ்விரண்டையும் ஒன்றுபட மத்தித்து ஒரு சீலையின் மேல் தடவி பத்து போடவும்.

பட்டிகட்டினுல் சீக்கிரத்தில் வலி குறையும்.

## 752. அரையாப்புக்கட்டிக்கு பிளாஸ்திரி

| | | | |
|---|---|---|---|
| கொடிவேலி வேரின் தோல் | 1 தோலா | யானைத்திப்பிலி | ½ தோலா |
| லிங்கம் | 1 தோலா | கிராம்பு | ½ தோலா |

இந்நான்கையும் ஒருமிக்கச் செய்து இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| சுத்திசெய்த நேர்வாளம் | 1 தோலா |
| பாதரசம் | 1 தோலா |

இவ்விரண்டையும் சேர்த்து நைவாயரைத்து அத்துடன் மேற்கூறிய சூரணத்தையும் போட்டு மறுபடியும் மிருதுவாக அரைத்துக்கொள்ளவும். 3 தோலா தேன் மெழுகை ஒரு பாத்திரத்தில் போட்டு தணலின்பேரில் அதை வைத்து மெழுகு உருகியதும் அரைத்த விழுதையும் ஒன்றுபடக் கலந்து ஒரு டப்பியில் அடைத்துக்கொள்ளவும். இதை ஒரு அழுத்தமான துணியின்மேல் தடவி தணலின்பேரில் இலேசாக வாட்டி அரையாப்புக் கட்டியின்மேல் போடவும்.

இம் மருந்தை அரைக்கும்பொழுது கைகளில் அரிப்பு ஏற்படும். ஆகையால் மருந்தரைத்ததும் இசுபு கோல் விதையை தண்ணீரில் ஊறவைத்து அத்தண்ணீரில் மருந் தரைத்த கைகளை ஒரு நாழிகை வரையில் நனைத்துவைக்க கையின் அரிப்பு தீரும்.

## 753. பிளாஸ்திரி

| | |
|---|---|
| குங்கிலியம் | பெருஞ்சீரகம் |
| உளுந்து | |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை வீதமெடுத்துக் கொண்டு தூள்செய்து கோழிமுட்டையின் வெள்ளைக்கரு வுடன் கலந்து நைவாயரைத்து காகிதத்தின் பேரில் தடவி கட்டுகட்டினால் வாயுபந்தனம், சுவாசபந்தனம் முதலான வைகள் தீரும்.

## 754. சிரங்கு, மேகவிரணத்திற்குப் பத்து

| | |
|---|---|
| இரசசெளவீரம் | 1 வராகனெடை |
| சாணத்தில் சுத்திசெய்த வெங்காரப்பொரி | 10 வராகனெடை |
| சுத்திசெய்த உளுத்தம்பருப்பு | 1 பிடி |

இவைகளை ஒருமிக்கச்செய்து காடிவார்த்து நன்றாக அரைத்து மாத்திரைகளாகச் செய்து கொள்ளவும். எவ்வித மான சிரங்கிற்கும் ஒரு மாத்திரையைத் தண்ணீரில் பத்துப் போட தீரும். இதை எண்ணெயில் உரைத்துப் போடுவது மிகவும் உத்தமமானது.

## 755. அண்டவாயுவுக்கு பத்து

மிளகு திப்பிலி இந்துப்பு

இவைகளை ஆமணக்கெண்ணெயில் காய்ச்சிப் பத்துப்போட குணங்காணும்.

## 756. விரைவாயுவுக்கு மேல்பூச

எட்டிவிதை 5 கொணர்ந்து தண்ணீர்விட்டரைத்துக் கொள்ளவும். பிறகு புகையிலையை நன்றாக விரித்து அதன் பேரில் சிலதுளி தண்ணீரைத்தெளித்து புகையிலையை மிருது வாகச் செய்துகொண்டு அதன்மேல் எட்டிவிதையின் விழுதைப் பூசி புகையிலையை விரையின் பேரில் ஒட்டி கரி நெருப்பின் ஒத்தடம் கொடுக்க வலி, வீக்கம் முதலானவை கள் தீரும்.

## 757. சிறு குழந்தைகளின் கால் படுவனுக்குப் பத்து

| | | | |
|---|---|---|---|
| பாதரசம் | $\frac{1}{4}$ பலம் | நெல்லிக்காய் கந்தகம் | $\frac{1}{4}$ பலம் |
| மனோசிலை | $\frac{1}{4}$ பலம் | | |
| விரலிமஞ்சள் | ,, | கஸ்தூரி மஞ்சள் | ,, |
| மிளகு | ,, | சீரகம் | ,, |
| கருஞ்சீரகம் | ,, | வங்கசிந்தூரம் | ,, |

இவைகளைக் கல்வத்திலிட்டுத் தூள்செய்து நைவாயரைத்து அத்துடன் மிகப்பழைய நெய் $\frac{1}{2}$ சேரையுங்கூட்டி நன்றாக மைபோல் அரைத்து பீங்கான் பாத்திரத்திலடைத்துக் கொள்ளவும்.

இம்மருந்தைப் படுவன் நோய்க்குத் தடவி அதன்மேல் பழுத்த பூவரசயிலையை வைத்துத் துணியால் கட்டு கட்டவும். இவ்விதம் 3 அல்லது 5 தடவை செய்ய படுவன் நோய் தீரும்.

## 758. மேக விரணத்திற்கு பிளாஸ்திரி

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் கந்தகம் | 1 | வராகனெடை |
| சிற்றாமணக்கின் விதை | 1 | ,, |
| அபின் | $\frac{1}{2}$ | ,, |
| தேவையான அளவு தேங்காயெண்ணெய் | | |

இவைகளை ஒன்றுகூட்டி வெண்ணெய்போல் அரைத்து எடுத்து வைத்துக்கொள்ளவும். அழுத்தமான துணியின் பேரில் தடவி விரணங்களின்மேல் போடவும்.

## 759. பிளாஸ்திரி

| | | |
|---|---|---|
| பாதரசம் | 2 | வராகனெடை |
| மயில்துத்தம் | 2 | ,, |
| இரசகற்பூரம் | 1 | ,, |
| துத்தம் | 1 | ,, |
| முரதார்சிங்கு | 1 | ,, |
| மரத்துவெள்ளை | 1 | ,, |
| பசுவின் வெண்ணெய் | $1\frac{1}{2}$ | ,, |

இவைகளை ஒருமிக்கச்செய்து நைவாயரைத்து விரணம் முதலானதற்குப் பூசவும்.

## 760. பிளாஸ்திரி (வேறொரு விதம்)

| | |
|---|---|
| பாதரசம் | 1 வராகனெடை |
| மயில்துத்தம் | ½ வராகனெடை |
| நெல்லிக்காய் கந்தகம் | 1 பலம் |
| மனேசிலே | 1 பலம் |
| இரசகற்பூரம் | 1 பலம் |

இவைகளை எலுமிச்சம்பழச் சாற்றிலரைத்து பாகலிலேயின் விழுதில்வைத்து கவசஞ்செய்து மேலும் நூலினுல் பந்தனம் செய்யவும். பிறகு சிறிது வைக்கோலேப் பரப்பி அதனடுவில் இவ்வுருண்டையை வைத்து எரித்து எடுத்துக்கொள்ளவும். பிறகு,

| | |
|---|---|
| வெள்ளைக்குங்கிலியம் | 2 காசிடை |
| நல்லெண்ணெய் | 1 சேர் |
| தேன்மெழுகு | 7 காசிடை |

இவ்விதமாக எடுத்து ஒரு கலயத்தில் போட்டு அடுப்பின் மேல் ஏற்றி மிருதுவான தீ எரித்து மெழுகு உருகியதும் உருண்டையைப் போட்டு எல்லாம் ஒன்றுபடக் கலந்ததும் எடுத்து வைத்துக்கொள்ளவும். விரணத்தை நன்ருகக் கழுவி சுத்தம்செய்து அதன்மேல் இதைத்தடவவும். சகல விதமான விரணங்களுக்கும் உசிதமானது.

## 761. சகல வீக்கங்களுக்கும் பூச்சு

கருஊமத்தையிலேயைக் கொண்டுவந்து கோமூத்திரத்தில் உரைத்துப்பூச வீக்கங் குறையும்.

## 762. விரை கிழிரங்கினுல் அதற்குப் பூச்சு

மஞ்சள் செஞ்சந்தனம்

இவ்விரண்டையும் எருமையின் பாலில் உரைத்து விரையின் மேல் பூச குணங்காணும்.

## 763. விரை மேலேறினல் அதற்குப் பூச்சு

வசம்பை பசுவின் நெய்யில் அரைத்து உள்ளுக்குப் புகட்டத் தீரும்.

## 764. சுளுக்குகளுக்குப் போட பத்து

வெல்லம் கோதுமையின் நொய்
மஞ்சள்

இவைகளை அரைத்து ஆமணக்கெண்ணெயில் காய்ச்சி சுளுக்குக் கண்ட இடத்தில் பூசத்திரும்.

## 765. சொறி, சிரங்கு முதலானதற்குப் பூச்சு

முற்றின தேங்காயின் பாலைப் பிழிந்து அதில் நவச்சாரத்தின் தூளைப்போட்டு மேலும் 1 வராகனெடை மயில் துத்தத்தின் பொடியையும் கலந்து 5 நாட்கள்வரை சூரிய புடத்தில் வைத்து பிறகு அதை வடிகட்டி வைத்துக் கொண்டு சிரங்கு, சொறி முதலானதற்குப் பூசவும்.

## 766. அண்டவாதத்திற்குப் பத்து

விலாமிச்சைவேர் அலரிவேர்த்தோல்
கஞ்சாவேர்த்தோல் பருப்புக்கீரை
நாய்வேளை இலை அவரையிலை
வேப்பிலை

இவைகள் வகைக்கு 9 தோலா வீதமெடுத்து வேப்பெண்ணெய் $4\frac{1}{2}$ சேரில் போட்டு பக்குவம்செய்து விரையின்மேல் பூசி கட்டு கட்டவும். இவ்விதம் ஏழு தினங்களுக்குச் செய்ய அண்டவாயு, அண்டசூலை முதலானவைகள் தீரும்.

## 767. கர்ணவாதம், கர்ணசூலை இவைகளுக்குப் பத்து

சுக்கு மஞ்சள்
ஓமம் வசம்பு

கருஞ்சீரகம் பெருங்காயம்
பூண்டு

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

9 தோலா வேப்பெண்ணெயில் யாவற்றையுங் கலந்து பக்குவஞ்செய்து தினம் இரு வேளையுமாக மூன்று நாட்களுக்குக் காதில்போட காதுவலி முதலானவைகள் தீரும்.

## 768. நரவிஜயி பைரவ பத்து

அமுக்கராக்கிழங்கு சங்கம்குப்பிவேர்
வெள்ளைச்சாரணைவேர் கொடிவேலிவேர்
முருங்கைப்பட்டை ஊமத்தைச்செடியின்
ஆகாசக்கருடன்கிழங்கு தோல் (பட்டை)
கருஞ்சீரகம் கஸ்தூரிமஞ்சள்
வசம்பு, பூண்டு

இவைகள் வகைக்கு 9 தோலா, யாவற்றையும் நன்ருக இடித்துத் தூள்செய்து 2 சேர் நல்லெண்ணெயில் கலந்து அடுப்பின்மேல் ஏற்றி 3 கொதி வந்ததும் கீழே இறக்கிக் கொள்ளவும்.

மேகக்கட்டி, சிரங்குக்கட்டி, விரணங்கள் இவைகளுக்கு சீலையை எண்ணெயில் நனைத்துவைத்து மேலும் வெற்றிலையை ஒட்டவைத்து கட்டுகட்டவும். இவ்விதம் 7 நாட்கள் செய்ய வியாதி தீரும்.

## 769. கட்டிச் சிரங்குக்கு

ஆமணக்குவிதை மஞ்சள்

இவ்விரண்டையும் முலைப்பாலில் அரைத்து பத்து போடவும்.

## 770. வாயுவுக்குப் பத்து

உலர்ந்த புளியம்பட்டையை தரையில்வைத்து அது முழுவதும் எரிந்ததும் தரையைக்கூட்டி சாம்பலை அப்புறப் படுத்தி இத்தரையின்மேல் சூடு இருக்கும்பொழுதே குப்பை மேனியிலையின் சாற்றை ஊற்றவும். உடனே அச்சாரானது நுரைக்கும். அந்நுரையை எடுத்து சூட்டுடன் வாய்வு கண்ட இடங்களின்மேல் பத்து போடவும். அல்லது அந் நுரையுடன் சுண்ணும்பையும் கூட்டி மத்தித்துப்போடவும். பிணி தீரும்.

## 771. தலையின் சொறிக்குப் பத்து

| | |
|---|---|
| ஆடுதீண்டாப்பாலையின்சாறு | $\frac{1}{4}$ சேர் |
| வேப்பெண்ணெய் | 9 தோலா |
| நல்லெண்ணெய் | 9 தோலா |

இவைகளை ஒன்றுகூட்டிக் காய்ச்சி பக்குவஞ்செய்து அத்துடன் $\frac{1}{2}$ வராகனெடை சுற்பூரத்தின் பொடியையும் கலந்து வைத்துக்கொள்ளவும்.

தலையின் சொறி, சிரங்கு முதலானதற்கு இப்பத்தைத் தடவி 1 ஜாமம் வரையில் பொறுத்திருந்து பிறகு அரப்புக் கட்டியைத் தேய்த்து தலைமுழுகச் செய்யவும்.

## 772. இருமுளைகளுடைய மூலத்திற்குப் பத்து

கம்பைப்பிசினை (டிக்குமல்லி) பொடிசெய்து சுத்தமான தேனுடன் கூட்டி நைவாயரைத்து 7 நாட்கள் தடவவும். மூலத்திற்கு தினம் 3 வேளை தடவவும். உப்பில்லாத பத்தியம்.

## 773. கட்டி, மேகசம்பந்தமான கட்டி, சொறி முதலானதற்குப் பூச்சு

நெய் $1\frac{1}{2}$ சேர்　　வெங்காயச்சாறு $\frac{1}{2}$ சேர்

மருதோன்றிவேரின் கஷாயம் $\frac{1}{4}$ சேர்

நெல்லிக்காய் கந்தகம் கொட்டைப்பாக்களவு

மேற்கூறிய சாறுகளில் நெய்யைக்கூட்டி அடுப்பின் மேலேற்றிக்காய்ச்சி அதில் ஒரு கொட்டைப் பாக்களவு நெல்லிக்காய் கந்தகத்தையும் போட்டு மெழுகு பதமாகச் செய்து கொள்ளவும்.

இதை விரணம், கட்டி முதலானதற்குப் பூசவும்.

## 774. சகல விரணங்களுக்குப் பத்து

தவசிமுருங்கையிலையை அரைத்து மூன்று நாட்கள் புண்ணின்மேல் வைத்து கட்டுகட்டவும். புண்கள் ஆறும்.

## 775. உஷ்ணத்தினலேற்படும் விரணங்களுக்கு

(1) மருதோன்றியிலை அல்லது மாதுளை இலையை பாலில் வெதுப்பிக் கட்டவும்.

(2) ஆடுதிண்டாப்பாலை இலையை அரைத்து வில்லை தட்டி குழந்தைகள் முதல் பெரியோர்களின் விரணங்களின் மேல் வைத்து கட்டு கட்டத் திரும்.

(3) பொன்தகரை இலையை அரைத்து இவ்விதமே செய்யக் கட்டிகள் ஆறும்.

## 776. வெண்குட்டத்திற்குப் பத்து

எலுமிச்சம்பழச் சாற்றில் பலகறையைப் போட்டு அதை நீர்த்து எடுத்து குட்டத்தின்மேல் பூசிவர குட்டந் திரும்.

## 777. விஷத்தினுலேற்பட்ட வீக்கத்திற்கு பத்து

ஈஸ்வர மூலிகை
குசும்பாக் கிழங்கு
நெல்லிக்காய்
சுக்கு
மஞ்சள்
குப்பைமேனியிலை
புழுங்கலரிசி

இவைகளைத் தண்ணீர்விட்டு நைவாயரைத்து வீக்கத்தின் மேல் பத்துபோட வீக்கந்தீரும்.

## 778. கிரந்தி நோய்க்கு

ஆடுதீண்டாப்பாலையிலை
மஞ்சள்

இவ்விரண்டையும் வேப்பெண்ணெயில் கலந்து பக்குவஞ் செய்து அதைச் சீலையில் நனைத்துக் கட்டு கட்டவும்.

## 779. விரணங்களுக்குப் பிளாஸ்திரி

பாதரசம்
பால்துத்தம்
மயில்துத்தம்

இவைகள் சமயெடை.

பால்துத்தம்
மயில்துத்தம்

இவைகளை எரித்து அதன் சாம்பலை எடுத்துக்கொண்டு அத்துடன் பாதரசத்தையுங் கூட்டி ஒரு வெங்கலத்தட்டில் அதை அப்பி மேலும் தாமிர பாத்திரத்தினுல் அதை நைவாய் உரைத்து மறுபடியும் வெற்றிலைச் சாற்றைவிட்டு மத்தித்து விரணங்களின்மேல் பூசவும்.

## 780. விரணத்திற்குப் பத்து

சரக்கொன்றையிலையைக் கொணர்ந்து வேடுகட்டி புட்டவியலாகச்செய்து அதை வீக்கத்தின் மேல் வைத்து கட்டு கட்டவும்.

## 781. கட்டிக்குப் பத்து

கடுக்காய்பிஞ்சை எடுத்து அடுப்பில் போட்டு சிறிது சுட்டு அதைப் பொடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக் கொள்ளவும். சிரங்கு, கட்டி இவைகளின்மேல் ஆமணக் கெண்ணெயை நன்றாகப்பூசி அதன்மேல் இப்பொடியைத் தூவி உ.கயினால் அமுக்கி வைக்கவும். சிரங்கு, கட்டி முதலானவைகள் திரும்.

## 782. சொறிக்குப் பத்து

கார்போக அரிசியை சூரணஞ்செய்து பசுவின் வெண்ணெயில் கலந்து வெய்யிலில் வைத்துப் பிறகு எடுத்து சொறிக்கு பூசவும். ஊமத்தம்பழத்தைக் கொணர்ந்து சிறு துவாரமிட்டு அதற்குள் $\frac{1}{4}$ வராகனெடை கந்தகப்பொடியை நிரப்பி சாணியால் முழுவதும் கவசஞ்செய்து தணலில் வாட்டி பிறகு அதில் உள்ள விதைகளை நீக்கி மற்றதைக் கல்வத்திலிட்டு நைவாய் அரைத்து நல்லெண்ணெயுங் கூட்டிச் சூரிய புடத்தில் வைத்து சொறியின்மேல் பூசவும்.

**பத்தியம் :** தயிர் சாதம் சாப்பிடவும். சாயந்திரம் அரைப்புக்கட்டியைத் தேய்த்துத் தலை முழுகச் செய்யவும்.

## 783. பரங்கிவாயுவுக்குப் பிளாஸ்திரி

| | |
|---|---|
| கத்தைக்காம்பு | 8 குன்றிமணியெடை |
| முர்தார்சிங்கு | 16 குன்றிமணியெடை |

இவைகளை பசுவின் வெண்ணெயில் மத்தித்துப் பூசவும்.

## 784. அண்ட வாயுவுக்குப் பத்து

| | |
|---|---|
| மிளகு | திப்பிலி |
| இந்துப்பு | |

இவைகளை எல்லாம் ஒன்றுகூட்டி ஆமணக்கு எண்ணெயில் பக்குவஞ்செய்து விரையின்மேல் பத்து போடவும். அண்ட வாயு தீரும்.

### 785. உடம்பின்மேலுள்ள தேமலுக்குப் பத்து

| | |
|---|---|
| முள்ளங்கி விதை | நாயுருவியிலைச்சாறு |
| பூசணிச்சாறு | வசம்பு |

இவைகளை சமமாகக்கொண்டு நைவாயரைத்துப் பத்து போடவும்.

### 786. பூச்சி அடித்த நகங்களுக்குப் பத்து

| | |
|---|---|
| இலுப்பை விதை 1 பலம் | கையாந்தகரைச்சாறு |
| கிருஷ்ண துளசிச்சாறு | |

இவைகளை நன்ருக அரைத்து நகங்களில் தடவ நகங்களிலுள்ள பூச்சிகள் ஒழிந்து நகம் நன்ருக வளரும்.

### 787. வாயு கட்டிக்குப் பத்து

| | |
|---|---|
| கடுக்காய்த்தோல் | கஸ்தூரிமஞ்சள் |
| ஈசுவரமூலிகை | கழற்சிவேர் |
| அமுக்கராக்கிழங்கு | மரமஞ்சள் |

இவைகள் வகைக்கு 1 வராகனெடை எடுத்துத் தண்ணீர் விட்டரைத்துப் பத்துப் போடவும்.

வாயுகட்டி, வலி, குத்தல் முதலானவைகள் தீரும், கட்டிகள் ஆரப்பிக்குங்காலங்களில் பத்துப்போட கட்டிகள் மேலும் மேலும் வளராமல் அமுங்கிவிடும். கட்டிகள் பழுத்து பக்குவமானதும் போட கட்டிகள் உடைந்து குணமாகும்.

### 788. யானைக்காதுக்கு (கஜகர்ணம்) மருந்து

| | |
|---|---|
| நொச்சித்தைலம் | தேன் |

இவைகளை ஒருமிக்கச்செய்து உடம்பில் பூசிட யானைக் காது வலி முதலானவைகள் தீரும்.

## 789. படை, சொறி, சிலந்தி, சிரங்கு முதலானதற்கு

சிந்தூரம் மிளகு

இவைகளை சமமாகக்கொண்டு எருமையின் வெண்ணெயில் அரைத்து 7 நாட்கள் பூசி வர நோய் தீரும்.

½ சேர் பேய்ப்புடலின் கஷாயத்தை 7 நாட்களுக்கு உட்கொள்ள மேற்கூறிய நோய்கள் தீரும்.

## 790. சரீரத்தின் துர்கந்தத்திற்கு

லோகக்கிட்டம் மரமஞ்சள்

இவைகளைச் சூரணம் செய்து உடம்பில் வேர்வை தோன்றும் பொழுது பூசவும். இவ்விதம் செய்ய துர்நாற்றம் ஒழியும்.

## 791. சிலந்தி, படை, விசர்ப்பம், தேமல் முதலானதற்கு

புளியங்கொட்டை 1 பிடி கொட்டைப்பாக்கு 4 (எண்ணிக்கையில்)

இவைகளைக் கருக்கித் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து கருஞ்சிரகயிலைச்சாறு ½ சேரைவிட்டு நைவாய் அரைத்து தூள்செய்து வைத்துக்கொண்டு மேற்கூறிய பிணிகளின் பேரில் பூசவும். இவ்விதம் 21 நாட்கள் செய்ய படைகள் தீரும்.

## 792. மறு(வு)க்கு மருந்து

1) முதலில் மறுவை அறுத்தெடுத்துவிட்டு அதன் மேல் புளி நரளைக்கிழங்கை அரைத்துப் பூசவும். இவ்விதம் 3 நாட்கள் பூசவும்.

2) மறுவை வெட்டியெடுத்து அதன்மேல் பாம்பின் சட்டையைச் சுட்டு கருக்கிய சாம்பலைப் பூசவும்.

### 793. குழந்தைகளுக்கு மலஜலம் அடைபட்டால்

வேலிப்பருத்தியின் சாற்றில் திப்பிலியை உரைத்து தலை, கழுத்து முதலான இடங்களில் துவளையிட மலஜலங் கழியும்.

### 794. குழந்தைகளின் மேகம், சொறி, சிரங்கு முதலானதற்குப் பத்து

நாகமல்லிவேரைக் கொணர்ந்து நைவாயரைத்துச் சிறிய எலுமிச்சம்பழ அளவு எடுத்து மோரில் குழப்பி தினம் இருவேளையுமாக 8 நாட்கள் கொடுக்கவும். உடனே பிணி தீரும். பத்தியம் செய்யவும்.

### 795. குழந்தைகளின் மாந்த ஜன்னிக்கு

| | |
|---|---|
| வேலிப்பருத்தியிலை | பேய்மருட்டியிலை |
| நாய்வேளைத்துளிர் | கழற்சியிலை |
| எருக்கம்பழுப்பு | வாதாமடக்கியிலை |
| முடக்கொற்றான் | |

இவைகள் சமமாகக்கொண்டு சுத்தமாகக் கழுவி கல்லுரலி லிட்டு இடித்து சாறுபிழிந்து, அதில் வசம்பு, பூண்டு இவ் விரண்டையும் கலந்து நன்றாக அரைத்து அத்துடன் புளியம் பட்டையை எரித்து உண்டாக்கிய சாம்பலையும் கூட்டி கம்பளித்துணியில் முடித்து அதனின்று கசியும் தெளிந்த நீரைமட்டிலும் எடுத்து குழந்தையின் உடம்பில் பூசவும். வியாதி தீரும்.

### 796. குழந்தைகளுக்கு மாந்தத்தினால் ஏற்படும் வயிற்றுவலிக்குப் பத்து

| | |
|---|---|
| வெள்ளைப்பூண்டின் தைலம் | 4 காசிடை |
| வேப்பெண்ணெய் | 2 காசிடை |

இவ்விரண்டையும் ஒருமிக்கச்செய்து குழந்தையின் வயிற் றின் மேல் பத்து போடத் தீரும்.

## 797. குழந்தைகளுக்கு மாந்தத்தினுல் ஏற்படும் இழுப்புக்குப் பத்து

வெள்ளைப்பூண்டு வசம்பு
குப்பைமேனி

இம்மூன்றையும் அரைத்து வெதுப்பி குழந்தையின் தலை முதல் பாதம் வரையில் பூச இழுப்பு தீரும்.

## 798. குழந்தைகளுக்கு அடி புறப்பட்டால் அதற்குப் பத்து

1) புளியக்கீரை இலந்தையிலை
இலந்தைப்பழம் சுக்கு

இவைகளை தயிர்விட்டு நைவாயரைத்து ஆசனத்தின் மேல் வைத்து ஆசனத்தை நன்ருக உள்ளுக்குத்தள்ளி அதன்மேல் கட்டுகட்டவும். இவ்விதம் செய்ய ஆசனம் உள்ளுக்குச் செல்லும்.

2) முற்றின தேங்காய் திருகல் ஈரமஞ்சள்
விடத்தாரையிலை

இம்மூன்றையும் கல்லுரலிலிட்டிடித்துத் தூள்செய்து பிறகு அத்தூளை நன்ருக வறுத்துக்கொள்ளவும். தினம் ஒரு நெல்லிக்காய்ப் பிரமாணம் 7 நாட்கள் உட்கொள்ள ஆசனம் உள்ளுக்குச் செல்லும்.

## 799. குழந்தைகளின் சுரம், இருமல், மூச்சு முதலானதற்குப் பத்து

காட்டுவெந்தயம் விடத்தாரையிலை

இவைகளைக் கல்வத்திலிட்டுக் காடிவார்த்து நைவாய் அரைத்து உடம்பில் பூச மேற்கூறிய வியாதிகள் தீரும்.

சத்ரபதி பிரதாபசிம்ஹ ராஜா சாகேப்
போன்ஸ்லே அவர்களின்

60-வது ஆண்டு நிறைவு விழா
நினைவு மலர்



# ஸ்ரீ சரபேந்திர
# வைத்திய ரத்னவளி



## பிரகீரணம் (இதரவகைகள்)

## விஷங்களுக்கு மாற்று மருந்துகள்

### 800. நாகப்பாம்பு முதல் சகல விஷ ஜந்துக்களின் விஷத்திற்கு

| | |
|---|---|
| வெள்ளைப்பாஷாணம் | பாதரசம் |
| நெல்லிக்காய் கந்தகம் | மனோசிலை |
| பெருங்காயம் | மயில்துத்தம் |
| சிறுபாகல்விதை | |

இவைகள் வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை வீதமெடுத்துக் கொண்டு அத்துடன் சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு $1\frac{3}{4}$ பலத்தையும் சேர்த்துக் கல்வத்திலிட்டுத் தேவையான அளவு எலுமிச்சம்பழ ரசத்தைவிட்டு ஒரு ஜாமம் வரையில் நைவாயரைத்தெடுத்து கொம்பினால் செய்த டப்பியில் அடைத்துக்கொள்ளவும்.

**அனுபானம்:** சகலவிதமான விஷங்களுக்கும் பனை வெல்லத்தில் ஒரு மிளகுப் பிரமாணம் மருந்தை வைத்துக் கொடுக்கவும். விஷம் இறங்கும்

**பத்தியம்:** உப்பில்லாமல் மோர்சாதம் சாப்பிடவும்.

### 801. எலிக்கடிக்கு மருந்து

தவசி முருங்கையிலையை நைவாயரைத்து கொட்டைப் பாக்களவு எடுத்து $\frac{1}{4}$ சேர் பசுவின் நெய்யுடன் கூட்டிச் சாப்பிடவும்.

**பத்தியம்:** பருப்புப்பொங்கல், கிச்சடி முதலியவைகளை சாப்பிடவும்.

### 802. சகலவிஷம், எலிக்கடி, மூச்சு முதலானதற்கு

கழற்சிக்காயளவு வெல்லத்தில் 3 துளி எருக்கம்பாலை விட்டு உருண்டைசெய்து ஏழு நாட்களுக்குக் காலையில் மட்டும் உட்கொள்ளவும்.

பேய்ப்பீர்க்கின் விதையைச் சூரணித்து வெற்றிலைச் சாற்றில் கலந்து கல்வத்தின் ஒரு பக்கத்தில் அப்பிவைத்து வெய்யிலில் வைக்க அதினின்று எண்ணெய் கசியும். அதைத் தனியே எடுத்துச் சீசாவில் அடைத்து வைத்துக் கொள்ளவும். சகல விஷ ஜந்துக்களின் விஷத்திற்கு 4 அல்லது 5 துளி மருந்தை வெற்றிலையின் மேல்தடவி உட்கொள்ளவும். கண்களிலும் கலிக்கம் இடலாம்.

## 803. விஷங்களுக்கு நஸ்யம்

அரைப்புக்கட்டி (இலுப்பைக்கட்டி), பூவந்தி பழத்தின் தோல், வெங்காரம் இவைகளைச் சமமாகக்கொண்டு சூரணித்து சிறுநீரில் கலந்து நஸ்யமிட பிணமும் மூர்ச்சை தெளிந்து எழுந்திருக்கும்.

## 804. எலிக்கடிக்கு

கொல்லன் கோவைக்கிழங்கு 10 வராகனெடை எடுத்து வெள்ளாட்டுப்பாலில் நைவாயரைத்து 3 நாட்கள் கொடுக்கவும்.

**பத்தியம்:** உப்பை விலக்கவும்.

## 805. தேள், பூரான், சரடு, சர்ப்பம் இவைகளின் விஷத்திற்கு

*(1)* மூக்கறட்டை வேரைத் தண்ணீர் விட்டரைத்து 9 தோலா தண்ணீரை உள்ளுக்குப் புகட்ட விஷமிறங்கும்.

*(2)* வாகையிலை வாகைப்பூ
வாகைப்பட்டை

இவைகளை வெள்ளாட்டு நீரில் அரைத்து உள்ளுக்குப் புகட்ட விஷமிறங்கும்.

(3) கடுக்காய் பச்சிலை
லோத்திரம் பெருங்காயம்
வசம்பு மிளகு

இவைகள் வகைக்கு 1 வராகனெடை வீதம் எடுத்துத் தண்ணீர் விட்டரைத்து உள்ளுக்குப் புகட்டவும். அல்லது அரிசியின் கழுநீரில் மேற்கூறியவற்றை அரைத்தும் புகட்டலாம்.

(4) தேள் கடிக்கு எருக்கிலை அலரியிலை

இவ்விரண்டையும் அரைத்து கடிவாயில் பத்துபோட விஷம் இறங்கும்.

(5) நேர்வாளப்பருப்பு 1 வராகனெடை எடுத்துக் கழுநீரில் அரைத்து உள்ளுக்குப் புகட்டவும். தேளின் விஷமிறங்கும்.

(6) கருவேலங்காயைக் கொணர்ந்து சிறு துண்டுகள் செய்து வெள்ளெருக்கின் பாலில் ஊறவைத்துப் பால் முழுவதும் கருவேலங்காயில் ஊறிப்போகும்வரையில் நிழலில் வைத்து உலர்த்திக்கொள்ளவும். தேள்கடித்ததும் ஒரு சிறு துண்டை வாயிலடக்கிக்கொண்டு நன்றாக மென்று உமிழ உடனடியாக விஷமிறங்கும்.

## 806. சகல விஷங்களுக்கும்

பாதரசம் நேர்வாளப்பருப்பு
ஆமணக்குவிதை மயில்துத்தம்

இவைகள் வகைக்கு 9 தோலா

பூவந்திப்பழத்தின்தோல் 1 படி
வெள்ளாட்டு நீர் ,,

பூவந்திப்பழத்தை வெள்ளாட்டுநீரில் ஒருநாள் முழுவதும் ஊறவைத்துப் பிறகு அதை நன்றாகப் பிசைந்து வடிகட்டி அத்துடன் மேற்கூறிய மருந்துகளையும் போட்டு மெழுகு

பதமாகக்காய்ச்சி வைத்துக்கொள்ளவும். சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி மருந்தைத் தக்க அனுபானத்தில் கூட்டியுங் குறைத்தும் கொடுக்கவும்.

## 807. எலிக்கடிக்கு

உத்தாமணிச் சமூலத்தைக் கொணர்ந்து நைவாயரைத்து கொட்டைப்பாக்குப் பிரமாணம் உருண்டை செய்து அரை வீசம்படி வெள்ளாட்டுப்பாலில் கலந்து மூன்று நாட்கள் சாப்பிடவும்.

**பத்தியம்:** கடுமையான பத்தியமிருக்கவும். துவரம் பருப்பைச் சேர்த்துக்கொள்ளலாம்.

## 808. விஷபூபதி எண்ணெய்

| | |
|---|---|
| பாதரசம் | கந்தகம் |
| கடுக்காய்த்தோல் | வத்ஸநாபி |
| நேர்வாளம் | பூவந்திப்பழத்தோல் |

இவைகள் வகைக்கு ஒரு வராகனெடை வீதமெடுத்து வேண்டிய அளவு வேப்பெண்ணெயுங் கலந்து 4 ஜாமம் அரைத்து மெழுகுபதமாக எடுத்து பத்திரப்படுத்திக் கொள்ளவும். வேளை ஒன்றுக்கு ஒரு குன்றிமணியெடை மருந்தை சகல விஷங்களுக்கும் உள்ளுக்குக் கொடுக்க விஷ உபாதையினல் ஏற்பட்ட சகல வியாதிகளும் தீரும்.

## 809. மீன்கடிக்கு

அழிஞ்சில் இலையைச் சுட்டு கருக்கி கடிவாயில் பூசிடத் தீரும்.

## 810. புலியின் கடிக்கு

| | |
|---|---|
| கசப்புக்கோவை | அரிசி |
| மிளகு | |

இவைகளை சமமாகக்கொண்டு தண்ணீர் விட்டரைத்து உள்ளுக்குப் புகட்ட புலியால் தாக்குண்டு ஏற்பட்ட விஷமிறங்கும்.

### 811. முதலையின் விஷத்திற்கு

வெண்டியின் வேரை இடித்துக் கால்சேர் சாறு எடுத்து அத்துடன் சுக்கு, மிளகு, திப்பிலி இவைகளின் சூரணம் 3 வராகனெடையும் கூட்டி உள்ளுக்குப்புகட்டவும். முதலையின் விஷமிறங்கும்.

### 812. சகல விஷத்திற்கு

சமுத்திரப்பழத்தை பசுவின் நெய்யில் கொடுக்கவும். சகல விஷமும் திரும்.

### 813. பாம்பின் விஷத்திற்கு

மூன்று இதழ்களுடைய எருக்கம்பூவின் கொத்து ஒன்று
தும்பைச்சமூலம் குப்பைமேனியின் சமூலம்
மிளகு 100

இவைகளை ஒன்றுகூட்டி நைவாயரைத்து ஒரு கழற்சிக் காயளவு உருண்டைகள் செய்து 3 உருண்டைகளை முருங்கைச் சாற்றில் உரைத்து நசியமிடவும்.

### 814. தேள்கடிக்கு மருந்து

(1) கற்றாழையின் சோற்றை எடுத்து கடிவாயின் பேரில் நன்றாகத் தேய்க்கவும், கற்றாழைச் சோற்றைச் சிறிது எடுத்து உள்ளுக்குப் புகட்ட விஷமிறங்கும்.

(2) சகதேவியிலைச் சாற்றைக் கடிவாயில் தேய்க்க விஷமிறங்கும்.

(3) நத்தைச்சூரி இலையைக் கடிவாயில் தேய்க்க விஷமிறங்கும்.

(4) குப்பைமேனியிலை உப்பு இவ்விரண்டையும் கசக்கி அதன் சாற்றை இடது பக்கத்தில் விஷம் தீண்டியிருந்தால் வலது பக்கத்துக் காதில் பிழியவும். வலது பக்கத்தில் தீண்டியிருந்தால் இடதுபக்கத்துக் காதில் பிழிய விஷமிறங்கும்.

## 815. விஷமண்டலி கடிக்கு

ஒரு நெல்லிக்காயளவு எட்டிவேர்த்தோலை எடுத்து 4½ தோலா தண்ணீரில் அரைத்து உள்ளுக்குப் புகட்டவும். கத்தரியைச் சுட்டு கடிவாயின்மேல் வைத்துப் பந்தனம் செய்யவும்.

## 816. இரத்த மண்டலியின் விஷத்திற்கு

யானைவணங்கி இலையை எலுமிச்சங் காயளவு எடுத்து நைவாயரைத்துத் தண்ணீரில் கலந்து உள்ளுக்குப் புகட்ட விஷம் இறங்கும்.

## 817. பூரான்கடிக்கு

குப்பைமேனியின் சாற்றை மேல் பூசினால் விஷமிறங்கும்.

## 818. வெறிகொண்ட நாயின் கடிக்கு மருந்து

(1) கற்றாழை உப்பு

இவ்விரண்டையும் சமமாகக் கொண்டிடித்து மூன்று நாளைக்குக் கடிவாயில் வைத்து பந்தனம் செய்யத் தீரும்.

(2) பேயத்திவேர் ஆலம்வேர்
வேப்பிலே

இம்மூன்றும் வகைக்கு 10 பலம் வீதம் எடுத்து நன்ருக் இடித்து 1 படி கழுநீரில் கலந்து நன்ருகக் கொதிக்கவைத்து குழம்புப் பதமானதும் எடுத்து ஏழு நாட்கள் சாப்பிடவும்.

தவிர விஷ உபாதைகளுக்குகந்தவாறு விரேசன மருந்தையும் சாப்பிடவும். இவ்விதம் செய்ய மிகுதியான அனுகூலங்கிட்டும்.



# விசேஷமான விரேசன வகைகள்

## 819. ஆக்ரான விரேசனம்

| | |
|---|---|
| பாதரசம் | கந்தகம் |
| நேர்வாளப்பருப்பு | காட்டாமணக்குவித்து |
| பொரித்தவெங்காரம் | ஆமணக்குவிதை |
| தேவதாளிவிதை | கொன்றைப்பழம் |
| கடுக்காய் | சிவதைவேர் |
| பலாசம்வேர் | |

இவைகள் சமமாகக்கொண்டு வெள்ளாட்டுப் பாலில் 3 நாள் அரைத்து ஓர் முற்றின தேங்காயை எடுத்து அதில் துளையிட்டு உள்ளிருக்கும் தண்ணீரைக் கொட்டிவிட்டு மேற்கூறிய மருந்தின் விழுதை தேங்காயினுள் அடைத்து வெய்யிலில் வைக்கவும். இவ்விதம் செய்ய அதனுள் எண்ணெய் உற்பத்தி ஆகும். இதை எடுத்து ஒரு பீங்கான் பாத்திரத்தில் அடைத்துக்கொள்ளவும். ஒரு பூச்செண்டை எடுத்து அதன்மேல் ½ குன்றிமணியெடை எண்ணெயைப் பூசி முகர்ந்து பார்க்க பத்து தடவை விரேசனமாகும்,

எண்ணெயை எடுத்து நாபிக்குத்தடவி சிறிது நாழிகை காத்திருக்க 10 தடவை சுக விரேசனமாகும்.

## 820. சுகவிரேசனத்திற்கு

| | | |
|---|---|---|
| சுக்கு | மிளகு | திப்பிலி |
| கொடிவேலி | சீரகம் | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி | |

இவைகள் சமமாகக்கொண்டு சூரணித்துக்கொண்டு சூரணத்திற்குச் சமயெடை வெல்லத்தை எடுத்துப் பாகு செய்து சூரணத்தையுங்கொட்டி மேலும் தேவையான அளவு நெய்யையுங்கூட்டி நன்முக மத்தித்து வைத்துக் கொள்ளவும்.

இதை விரேசனத்திற்கு உபயோகிக்கவும்.

பித்தத்தை வெல்லும், தீபன சக்தியை அதிகரிக்கும்.

## 821. இராசயோக நாபிவிரேசனம்

1) வெள்ளைக்குன்றிமணி நேர்வாளம்
வெள்ளைக்காக்கரட்டான் சமூலம்

இம்மூன்றையும் வெள்ளைக்காக்கரட்டான் சாற்றில் அரைத்து நாபியில் தடவ விரேசனமாகும்.

வயிற்றிலுள்ள வியாதிகளும் தீரும்.

2) இலுப்பைவிதையை நன்றாக அரைத்து வில்லை தட்டி இரவில் ஆசனவாயில் வைத்துப் பந்தனம் செய்து தூங்க விடியற்காலையில் சுகவிரேசனமாகும்.

## 822. சுகவிரேசனத்திற்கு

| | |
|---|---|
| தேற்றான்கொட்டை | 1 பலம் |
| சிரகம் | ½ பலம் |

இவ்விரண்டையும் நன்றாக இடித்து ஒரு பாத்திரத்தில் போட்டு அதன்மேல் இரண்டு விரல்கள் உயரம்வரை தண்ணீரை ஊற்றி மறுநாட்காலையில் தண்ணீரை இறுத்திவிட்டு மருந்துகளை எடுத்து அம்மியின்பேரில் வைத்து மெழுகு போல் நைவாயரைத்து அத்துடன் 1 சேர் பேதிக்குக் கொடுக்கும் எண்ணெய் (?) ஒருசேர் சுத்தமான தண்ணீர் இவ்விரண்டையும் சேர்த்து ஒருநாள் முழுவதும் ஊற வைத்து மூன்றும் நாள் அப்பாத்திரத்தை அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாய்க் காய்ச்சவும்.

பிறகு அதை எடுத்து நன்றாக வடிகட்டி பத்திரப் படுத்தவும்.

இதில் $1\frac{1}{2}$ பலம் அல்லது $\frac{1}{4}$ சேர் வரை சரீரத்திற்குத் தகுந்தபடி வெந்நீரில் கலந்து உள்ளுக்குச் சாப்பிட சுக விரேசனமாகும். தேகத்திலுள்ள உஷ்ணம் (காங்கை,) மேக சம்பந்தமான வியாதிகள், மற்ற சகலவிதமான வியாதிகளும் அனுகூலமாகும்.

## 823. சிறுபிள்ளைகளுக்கு விரேசனத்திற்கு

1) காட்டுமல்லிகையிலை ஈரவெங்காயம்

இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு இடித்துச் சாறு பிழிந்து சிறிது ஆமணக்கெண்ணெயில் கலந்து கொடுக்க விரேசனமாகும்.

வயிற்றிலுள்ள அசடு முதலியவைகள் வெளியேறும்.

2) வெள்ளைப்பூண்டு முட்டையின் வெள்ளைக்கருவு
செம்பு வேலிப்பருத்தியிலை
பீர்க்கிலை நாய்வேளையிலை
நல்வேளையிலை கோழியவரையிலை

இவைகள் சமமாகக்கொண்டு நைவாயரைத்து ஆமணக்கெண்ணெயுடன் சேர்த்துப் பக்குவப்படுத்திக்கொண்டு உபயோகிக்கவும். இம்மருந்து மிகவும் கைகண்டது.

## 824. பிள்ளைகளுக்கு விரேசன மருந்து

1) நிலப்பனங்கிழங்கை அரைத்து விழுதாக்கி தாது வளை பழத்தின் எடை அளவு எடுத்துக்கொண்டு முலைப் பாலில் குழைத்துக்கொடுக்க விரேசனமாகும்.

2) இவ்விழுதை தயிரில் கலந்து கொடுக்க வயிற்றுப் போக்கு நிற்கும்.

## 825. பேதியை நிறுத்த

1) அகஸ்தி மரப்பட்டையை ஒரு கொட்டைப் பாக்களவு எடுத்து எருமையின் பழைய மோருடன் கலந்து

அத்துடன் ½ காசிடை எள்ளெண்ணெயைக் கலந்து 3 நாட்கள் காலையில் மட்டும் உட்கொள்ள மலபந்தம் ஏற்படும். மிகுதியான கழிச்சல் முதலானவைகள் தீரும்.

2) குப்பைமேனிவேரை முலைப்பாலில் அரைத்து ஒரு காசிடை அளவு உள்ளுக்குக் கொடுக்க பேதி நிற்கும்.

## 826. பிள்ளைகளுக்கு ஏற்படும் கழிச்சல், இரத்தக் கழிச்சல் முதலானதற்கு

கருநிறமானவேம்பின் ஈர்க்கு — சுக்கு
வசம்பு — சீரகம்
நெல்லிமுள்ளி

இவைகள் சமமாகக்கொண்டு அதாவது வகைக்கு 1காசிடை வீதம் எடுத்துச் சிறிது இடித்து 1 படி தண்ணீர் கலந்து ½ படி கஷாயம் இறக்கிக்கொண்டு அதிலுள்ள விழுதையும் எடுத்து நைவாயரைத்துக் கஷாயத்துடன் கலந்து உள்ளுக்குக் கொடுக்க கழிச்சல் நிற்கும். இத்துடன் அரசம்பட்டைக் கஷாயத்தையும் மேலும் குடித்திட சுரம், இரத்தம் விழுதல், கடுப்பு, அடிக்கடி உண்டாகும் பேதி முதலியவைகள் தீரும்.

## 827. சிறுபிள்ளைகள் முதல் பெரியோர்கள் வரை ஏற்படும் இரத்தக்கழிச்சல், கடுப்புடன் கூடிய கழிச்சல் முதலானதற்கு

1) பெரியதொரு எலுமிச்சம்பழத்தை இரண்டாக வெட்டி ஒரு துண்டை நெருப்பின்மேல் வைக்க அது நுரைக்கும். அச்சமயம் பருத்திக்கொட்டைப் பிரமாணம் அபீன் அல்லது மாம்பிசினைச் சிறிது சிறிதாகப் போட்டு நன்றாக கொதிக்கவைத்து ஆறியபின்பு சாறுபிழிந்து உள்ளுக்குப் புகட்ட கழிச்சல் முதலானவைகள் தீரும்.

2) $\frac{1}{2}$ படி பசும்பால் அல்லது வெள்ளாட்டுப்பாலை அடுப்பின்மேலேற்றி இரண்டு கொதி வரும் வரையில் காய்ச்சி அதை இரண்டு பாகங்களாகச் செய்து ஒரு பாகத்தில் அரசம்பட்டையின் சாற்றைப் பிழிந்து அதன் மேல் மற்றொரு பாகப் பாலையும் ஊற்றி மறுபடியும் நன்றாகக் காய்ச்சி ஒருமிக்கச் செய்து மூன்றுவேளைக்குச் சாப்பிட வயிற்றுக்கடுப்புத் தீரும்.

## பற்களின் சம்பந்தமான நோய்களுக்கு மருந்து

### 828. தந்தவாயுவுக்குப் பொடி

சேராங்கொட்டை 30 (எண்ணிக்கையில்)
களிப்பாக்கு 1 பலம் கொட்டைப்பாக்கு 30பலம்
மயில்துத்தம் 1 பலம் கத்தைக்காம்பு 1 பலம்
உப்பு $\frac{1}{2}$ படி இலுப்பை இலை 1 தூக்கு (?)
உப்பிலிட்ட மாம்பருப்பு 30 (எண்ணிக்கையில்)
எருக்கம்பழுப்பு 21 („)

கத்தைக்காம்பு, மயில்துத்தம் இவ்விரண்டையும் தூள் செய்து பிறகு மற்றவைகளை நன்றாகச்சுட்டு கருக்கிச் சூரணித்து யாவற்றையும் ஒன்றுபடக்கலந்து தேங்காய் குடுக்கைக்குள் அடைத்து வைத்துக்கொள்ளவும். இவ்விதம் தயாரித்த பற்பொடியால் தினம் பல் துலக்கிவர பல்வலி முதலான நோய்கள் தீரும்.

### 829. பல்வியாதிக்கு மருந்து

கருவேலம்பட்டை 10 சேர் கிலுவைப்பட்டை 10 சேர்
தண்ணீர் 16 சேர்

பட்டைகளை நன்றாக இடித்து ஒரு பானையில் போட்டு தண்ணீர் விட்டு 4 சேர், கஷாயமிறக்கி ஒரு சட்டியில் வைத்துக் கொள்ளவும். அதில் தைலம் நீக்கிய

சேராங்கொட்டை 4 சேர் கையாந்தகரைச்சாறு 2 சேர் இவ்விரண்டையும் சேர்த்துக்கொள்ளவும்.

பிறகு இரும்புத்தூளை ஒரு எலுமிச்சம்பழ ரசத்துடன் கலந்து வெய்யிலில் வைத்து நன்ருக உலர வைத்துக் கொள்ளவும்.

| | | |
|---|---|---|
| களிப்பாக்கு | கத்தக்காம்பு | மயில்துத்தம் |
| துத்தம் | கடுக்காய்த்தோல் | |

இவைகள் வகைக்கு 6 வராகனெடை, ஜாதிக்காய் 1 வராக னெடை இவ்விதமெடுத்துத் தனித்தனியே இடித்துத் தூள் செய்துகொள்ளவும்.

பிறகு எல்லா சாமான்களையும் ஒருமிக்கச் செய்து இரும்புப் பொடியையும் கலந்து மேற்கூறிய கஷாயத்தில் போட்டு அடுப்பின்மேலேற்றி கூழ் பக்குவமானதும் இறக் கிக்கொண்டு அதை வெய்யிலில் நன்ருக உலர வைத்துப் பிறகு தூள்செய்து தேங்காய் குடுக்கைக்குள் பத்திரப் படுத்தவும்.

தினமும் இப்பொடியைக் கொண்டு பல் துலக்கி வந் தால் சகல தந்த ரோகங்களும் தீரும். பல் ஈரலும் கெட்டிப் படும்.

## 830. தந்தரோகத்திற்கு மருந்து

| | |
|---|---|
| மருக்காரை | சுக்கு |
| மருதம்பட்டை | வெள்வேலம்பட்டை |
| எருக்கம்வேர் | ஆவாரம்பட்டை |
| திராயம்பட்டை | |

இவ்வேழும் வகைக்கு 1 சேர் வீதமெடுத்து நன்ருக இடித்து ஒருபானையில் போட்டு 8 படி தண்ணீரையும் ஊற்றி 2 படி கஷாயமிறக்கிக்கொண்டு வாய்கொப்பளிக்க உபயோகப் படுத்தவும். தந்தவாயு முதலான பல் வியாதிகள் தீரும்.

கஷாயம் புளித்துவிட்டால் மறுபடியும் புதிதாகச் செய்து உபயோகிக்கவும்.

### 831. பற்கள் கெட்டிப்படுவதற்கு மருந்து

| | |
|---|---|
| களிப்பாக்கு | 10 (எண்ணிக்கையில்) |
| மயில்துத்தம் | 1 காசிடை |
| வெள்ளைக்கத்தக்காம்பு | 3 தோலா |
| இரும்புப்பொடி | 3 தோலா |
| மாசிக்காய் | 3 தோலா |

இவைகளை ஒன்றுகூட்டிச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து பற்களில் தடவினால் பற்கள் கெட்டிப்படும்.

### 832. தந்தமஞ்சனம் (பற்பொடி)

| | |
|---|---|
| கத்தக்காம்பு | மயில்துத்தம் |
| மாசிக்காய் | மரமஞ்சள் |
| தேஜ்பலம் | படிக்காரம் |
| தான்றிக்காய்த்தோல் | நெல்லிமுள்ளி |
| கோஷ்டம் | கொட்டைப்பாக்கு |

இவைகள் வகைக்கு 3 தோலா வீதமெடுத்துச் சூரணித்து இதன் மொத்த எடைக்குச் சமனெடை சேராங்கொட்டையைத் துண்டுசெய்து கலந்து, மேலும் கற்றாழைச் சோற்றையுங்கூட்டி ஒரு சட்டியிலிட்டு அடுப்பின் மேலேற்றி நன்றாக உலர்ந்து பொடியாகும் வரையில் எரித்துப் பிறகு அதைப் பொடித்துப் பல் துலக்க உபயோகப்படுத்தவும்.

### 833. தந்தமஞ்சனம் (மற்றொருவிதப் பற்பொடி)

கறியுப்பு 3 தோலாவை எருக்கம்பாலில் ஊறவைத்து உலர்த்திக்கொள்ளவும். இவ்விதம் மூன்று முறை பாவனை செய்யவும். பிறகு அத்துடன்

மாசிக்காய் 3 தோலா கமுகமரப்பூ (பாக்குமரப்பூ) 3 தோலா

துவர்ப்பு கொட்டைப்பாக்கு ரூமாமஸ்தகி
மிளகு காட்டாவரை வித்து
ஏலக்காய் உலர்ந்த ரோஜாப்பூ
பொரித்த சிஞக்காரம் பலகறை பற்பம்
கத்தக்காம்பு வால்மிளகு

இவைகள் வகைக்கு 1½ தோலா

இசுபுகோல்விதை 3 தோலா கற்பூரம் 1 தோலா
ஓமம் ¾ தோலா கடுக்காய்த்தோல் ½ தோலா
சுட்டுக் கரியாக்கிய வாதுமை ஓடு 5 தோலா
மூங்கிலுப்பு 1 தோலா

இவைகளை நன்குய்ப் பொடித்துக்கொண்டு ஆட்டின் சுவரொட்டியைக் கொணர்ந்து நெருப்பில் சுட்டு கருக்கித் தூள் செய்து மேற்கூறிய மற்ற சூரணத்துடன் ஒன்றுபடக்கலந்து பிறகு யாவற்றையும் வஸ்திரகாயஞ்செய்து பத்திரப் படுத்தவும்.

தினம் இப்பற்பொடியைக் கொண்டு பல் துலக்கிவர சகல தந்த ரோகங்கள் தீர்ந்து அசையும் பற்களும் இறுகி கெட்டிப்படும்.

## 834. தந்த மஞ்சனம் (வேறுவிதம்)

1) கடுக்காய்த்தோல் தான்றிக்காய்த்தோல்
கருவேலம்பட்டை மாசிக்காய்
உலர்ந்த ஆடாதோடைஇலை கல்நார்
கருவாப்பட்டை

இவைகள் வகைக்கு 8 பலம்.

கத்தக்காம்பு கற்பூரம் இந்துப்பு

இவைகள் வகைக்கு 2 பலம்.

| | |
|---|---|
| ஏலக்காய் | படிக்காரம் |
| வால்மிளகு | |

இவைகள் வகைக்கு 4 பலம். யாவற்றையும் மெல்லியதாய்த் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்யவும். பிறகு அத்துடன் சீமைச்சுண்ணும்பு (chalk) 40 பலத்தை எடுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்து, கறியுப்பு ½ படியும் தூள்செய்து கலந்து பிறகு எல்லாத்தூளையும் ஒருமிக்கச் செய்து பத்திரப் படுத்திக்கொண்டு தினம் இப்பொடியால் பல் துலக்கிவர சகல பல் நோய்களும் தீரும்.

| | |
|---|---|
| 2) ஜாதிக்காய் | வெள்ளைக்கத்தக்காம்பு |

இவ்விரண்டும் வகைக்கு 1 சேர்.

| | |
|---|---|
| கடுக்காய்த்தோல் | ஒண்ணேகாலேயரைக்கால்சேர் |
| கத்தக்காம்பு | ,, |
| கருவாப்பட்டை | 2 சேர் |

இவைகளை ஒன்றுகூட்டி நன்ருயிடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து பல்துலக்க உபயோகிக்கவும்.

| | |
|---|---|
| 3) எருக்கம்பழுப்பின் தூள் | 1 படி |
| கறியுப்பு | 1 படி |
| சுத்திசெய்த சேராங்கொட்டை | ½ சேர் |
| கொட்டைப்பாக்கு | 4 சேர் |
| கடுக்காய்த்தோல் | 1 சேர் |
| சுக்கு | ½ சேர் |

இவைகளை எல்லாம் நன்ருய் இடித்துத் தூள்செய்து வஸ்திர காயஞ் செய்து பல்துலக்க உபயோகப்படுத்தவும்.

## 835. பல் அசைவுக்கு மருந்து

1) இரும்புத்தூளை இரும்புச்சட்டியிலிட்டு நன்ருக வறுத்து அதில் தேனைவிட்டு நைவாயரைத்து சிறிய மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திக்கொண்டு ஒரு

குளிகையை தாடையிலடக்கிக் கொள்ள அசையும் பற்கள் இறுகும்.

2) சிறுகீரையை வாயிலடக்க பல்வலி தீரும்,

3) முட்காவேளைவேரின் தோலை இடித்து சிறிய உருண்டை செய்து தாடையிலடக்க அசையும் பற்கள் இறுகி கெட்டிப்படும்.

### 836. பல்வலி, பற்புழு முதலியவைகளுக்கு

1) வெள்ளைப்பூண்டு, வசம்பு, நாயுருவிவேர், நாயுருவி இலை இவைகளை இடித்து வாயிலடக்கிக் கொண்டு, முழங்காலில் ஆமணக்கெண்ணெய் தடவி வெய்யிலில் சிறிது நேரம் உட்கார பற்புழு வெளியேறும். பல்வீக்கம், பல்வலி முதலானவைகள் திரும்.

2) மகிழம்பட்டையைக் கொணர்ந்து பஞ்சுபோல் இடித்து வாயில்போட்டு மெல்ல சகலவிதமான பல்வலி களும் திரும்,

3) கண்டங்கத்திரி விதையை உலர்த்தித் தூள்செய்து நல்லெண்ணெயில் மத்தித்து முழங்காலில் பத்துப்போட பல்வலி, கடுப்பு முதலானது தீரும். அனுபவங் கண்ட மருந்து.

4) சரக்கொன்றைப் பட்டையைக் கொணர்ந்து கொட்டைப்பாக்குடன் கூட்டி இடித்து வைத்துக் கொண்டு தினமும் சிறிது எடுத்து வாயில் போட்டு மென்று பிறகு வெந்நீரில் வாயைக் கொப்பளிக்க பல்வலி, கடுப்பு முத லானவைகள் திரும்.

இது மிகவும் குணந்தரவல்லது.

## 837. பல்லசைவு, பல்வியாதி முதலானதற்கு

1) கருவேலம்பட்டை, பிரப்பம்பழம், காட்டுவாகை, இவைகள் சமமாகக்கொண்டு நான்கு மடங்கு தண்ணீர் விட்டு அடுப்பின் மேலேற்றி நீர் சிவக்கும் தருணம் வரை கொதிக்கவைத்துப் பிறகு அதை வடித்துத் தினமும் காலை மாலை இருவேளையும் வாய் கொப்பளித்துவர பல்வலி, கடுப்புவலி, வீக்கம் முதலான வியாதிகள் தீரும்.

2) கருங்காலிப்பட்டை வெள்வேலம்பட்டை
வசம்பு

இவைகள் சமமாகக்கொண்டு இடித்துச் சிறிது தண்ணீர் விட்டு அரைத்து அதற்குச் சமஎடை கடுக்காய்த்தோல் சூரணத்தைக் கலந்து நைவாயரைத்து வெந்நீருடன் கலந்து வாய் கொப்பளிக்க பல்லசைவு தீர்ந்து பல் இறுகும்.

3) இரும்புத்தூள் கத்தக்காம்பு மயில்துத்தம்

இவைகள் வகைக்கு 1 விராகனெடை மயில்துத்தத்தை மட்டிலும் சேராங்கொட்டை எண்ணெயிலரைத்து மற்றவைகளுடன் கலந்து ஒருமிக்கப்பட அரைத்து வைத்துக்கொள்ளவும். மருந்தை உபயோகிக்குங் காலத்தில் புளியங் கொட்டை பிரமாணம் எடுத்து கரண்டியில் போட்டு வெதுப்பி தினம் இருவேளையுமாக நான்கு நாட்கள் பல்லில் தடவ பல் இறுகும்.

4) ஒரு புதுப்பானையில் $\frac{1}{4}$ படி பசும்பாலை ஊற்றி அத்துடன் $\frac{1}{4}$ படி கறியுப்பும் போட்டு, 2 வராகனெடை மயில்துத்தத்தின் தூளையும் தூவி அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைக்கவும். பால் சுண்டி மருந்துகளின் தூள் மட்டிலும் இறுதியில் நின்ற உடன் அதை எடுத்து பத்திரப் படுத்திக்கொள்ளவும்.

இத்தூளைக்கொண்டு காலை மாலை இருவேளையும் பல் துலக்கிவர அசையும் பற்கள் இறுகும்

5) மருதம்பட்டை வெள்வேலம்பட்டை
மருக்காரை கண்டுபாரங்கி

இவைகளை இடித்து 2 படி தண்ணீருடன் கலந்து அடுப்பின் மேலேற்றி காய்ச்சவும். ½ படி சுமாருக்கு கஷாயமிறக்கி தினம் காலை மாலை இருவேளையும் வாயை கொப்பளித்துவர பல்வலி, பல்லசைவு முதலான நோய்கள் தீரும்.

## 838. பற்புழுவுக்கு மருந்து

நாயுருவிவேர் நாயுருவிஇலை

இவ்விரண்டையும் கொணர்ந்து இடித்துச்சிறிய உருண்டை செய்து தாடையிலடக்கிக்கொள்ள பற்புழுக்கள் வெளிப்படும்.

## 839. பல் விக்கம், பல்வலி முதலானதற்கு

கருஊமத்தை வேரை ஞாயிற்றுக்கிழமை கொணர்ந்து வலியுள்ள இடத்தில் சிறிது நேரம் வைத்து அடக்கிவர வியாதிகள் தீரும்.

## 840. கூந்தல் வளர்வதற்கு மருந்து

ஆகாசத்தாமரை சமூலத்தை எடுத்து அதற்குச் சம எடை கொப்பரையைச் சேர்த்து நன்ருயிடித்துக் சாறு பிழிந்துகொள்ளவும். பிழிந்த சாற்றுக்கு சம அளவு வெள்ளைச்சாறணையின்சாறு, கஞ்சாயிலைச்சாறு இவ்விரண்டையும் அத்துடன் கூட்டி தலைக்கு துவளையிடவும். இவ்விதம் 40 நாட்கள் செய்ய கூந்தல் அடர்த்தியாக வளரும்.

## 841. நரையை ஒழிக்க மருந்து

கையாந்தகரைச்சாறு பிழிந்து அத்துடன் சுத்தமான தண்ணீரையுங் கலந்து ஒரு துளி பசுவின் நெய்யுங் கூட்டி ஏழுநாட்கள் உட்கொள்ள சரிரம் கெட்டிப்பட்டு நரை

தீரும். இவ்விதமே 14 நாட்கள் உட்கொள்ள கண்களில் தேஜஸ் ஏற்படும். 21 நாட்கள் உண்ண சரீரத்திற்கு மிகுதியான அழகு ஏற்படும். 3 மாதங்கள் இவ்வாறே உட்கொள்ள நரை முழுமையும் மாறி கூந்தல் கருநிறமடையும்.

## 842. கூந்தல் உதிர்தலுக்கு மருந்து

சுத்திசெய்த சேராங்கொட்டை
முள்ளங்கிவிதை
முள்கத்தரியின் வித்து

இம்மூன்றையும் கல்லுரலிலிட்டிடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு அதில் இரண்டு சிட்டிகை எடுத்துத் தேனுடன் மத்தித்து மயிர் உதிர்ந்த இடங்களில் தினம் இருவேளையுமாக தடவ உதிர்ந்த ரோமங்கள் வளர்ந்து பின்னும் ரோமம் உதிர்தல் நிற்கும்.

## 843. கூந்தல் கருநிறங்கொள்ள மருந்து

1) சிந்தில் இலை
கொட்டைப்பாசி
முட்சங்கிலை

இம்மூன்றையும் நைவாயரைத்து தலைக்குத்தடவ கூந்தல் கருநிறமடையும். இதே மருந்தை மோரில் கலந்துண்ண நரை தீரும்.

## 844. கூந்தல் வளராதிருக்க மருந்து

நெல்லிமுள்ளி திப்பிலி

இவ்விரண்டையும் தூள்செய்து அத்துடன் சதுரக்கள்ளியின் பாலையும் கலந்து மத்தித்து கேசத்தின்மேல் தடவ ரோமம் உதிர்ந்து வழுக்கை விழும். மறுபடியும் அவ்விடம் உரோமம் வளராது.

## 845. தலையின் பொடுகுக்கு மருந்து

1) கசகசாவைப் பாலில் அரைத்து தலைக்குத் தடவ பொடுகு திரும்.

2) மாம்பருப்பு, பிஞ்சுக்கடுக்காய் இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு சூரணம்செய்து பாலில் கலந்து நைவாய் அரைத்து தலைக்குப் பத்துப்போடவும். சிறிது நேரம் கழித்து ஸ்நானம் செய்ய தலையிலுள்ள பொடுகு தீரும்.

## 846. கூந்தல் கருநிறமடைய மருந்து

தாளகம் 3 தோலா சேராங்கொட்டை 20 தோலா இவ்விரண்டையும் நன்ருயிடித்துக்கொள்ளவும். பலாச மரத்தின் கட்டையை 5 சாண் நீளத்திற்கு வெட்டி கொணர்ந்து அதனடுவில் மேற்கூறிய இடித்த மருந்துகள் கொள்ளுமளவு பெரியதொரு துவாரமிட்டு அத்துவாரத்தை அதே ஜாதி மரத்தினுல் மூடிசெய்து துளையை அடைத்து கட்டையின்மேல், சீலைமண்செய்து ஒருசாண் உயரம், இரண்டு சாண் நீளம், இரண்டு சாண் அகலமுள்ள புடத்தில் வைத்து எரிக்கவும். புடம் எரிய ஈரமரத்தினின்று தண்ணீர் கசியும். அதற்காக புடம் எரிய எரிய மேலும் வறட்டியைப் போட்டுக்கொண்டுவரவும். கடைசியில் கட்டை ஒரு சாண் நீளம் எஞ்சி இருக்கும் சமயத்தில் எரிப்பை நிறுத்திவிட்டு கட்டையை வெளியே எடுத்து அதிலுள்ள மருந்தை மட்டி லும் சேகரித்துத் தூள்செய்து பத்திரப்படுத்திக் கொள்ள வும்.

இம்மருந்தில் 1 குன்றிமணியெடை முதல் 3 குன்றிமணி யெடை வரையில் சரீரத்திற்குத் தகுந்தபடி கூட்டிக் கொடுக்கவும். ஆரம்பத்தில் சிறிய அளவு மருந்தை உண்டு நாள்போக்கில் சமயானுசாரம் அதிகரித்துக் கொள்ளவும்.

இவ்விதம் 40 நாட்கள் செய்ய நரை திரும். பின்னும் வளரும்; ரோமங்களும் கருநிறமாகவே வளரும்.

## 847. குன்மத்திற்கு மருந்து

சுத்திசெய்த குங்கிலியம்
வேப்பம்பட்டை
சீந்தில்தண்டு
கண்டங்கத்தரி

இம்மூன்றில் குங்கிலியத்தை சுத்திசெய்து கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| ஏலக்காய் | கொத்தமல்லி |
| ஜாதிக்காய் | கிராம்பு |
| வாலுளுவையரிசி | அதிமதுரம் |
| அரத்தை | கொடிவேலி |
| சுக்கு | மிளகு |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை

| | |
|---|---|
| சர்க்கரை | 5 பலம் |
| தேன் | 5 பலம் |
| பசுவின் நெய் | $2\frac{1}{2}$ பலம் |

திரவபதார்த்தம், சர்க்கரை இவைகளைத்தவிர மற்றதை இடித்துச் சூரணித்துக் கொள்ளவும். சர்க்கரையைப் பாகுசெய்து சூரணத்தையும் கொட்டி பிறகு தேன், நெய் முதலியவைகளையும் போட்டு பக்குவஞ்செய்து கொள்ளவும்.

**அனுபானமும் தீரும் வியாதியும் :**

வேளை ஒன்றிற்கு ஒரு கழற்சிக்காயளவு இரு வேளையுமாக உட்கொள்ள நெஞ்சுவலி, வயிற்றுச்சூலை, ஜுரம், குன்மம், அதிசாரம் முதலான வியாதிகள் தீர்ந்து சரீரத்தில் தாதுபுஷ்டி ஏற்படும். சகல மேகங்களும் தீரும்.

**பத்தியம்:** புளிப்பு, கைப்பு இவைகளை விலக்கவும்.

## 848. குன்மத்திற்கு மோரின் மருந்து

| | |
|---|---|
| (1) அகில் | கொடிவேலி |
| கரிவேப்பிலை | சுத்திசெய்த சேராங்கொட்டை |
| நாய்க்கடுகு | புங்கம்பட்டை |
| நல்வேளை | காட்டுமல்லிகை |
| தேள்கொடுக்கிலை | மூக்கரட்டை |
| வசம்பு | செவ்வியம் |
| வெள்ளைப்பூண்டு | இளம்முள்ளங்கி |
| சிவதைவேர் | வில்வவேர் |
| சாரணைவேர் | |

இவைகள் வகைக்கு 5 பலம் வீதம் எடுத்து கல்லுரலி லிட்டிடித்து 4 படி தண்ணீரையும் ஊற்றி அடுப்பின் மேலேற்றி 1 படி கஷாயமிறக்கிக் கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| உப்பு $\frac{1}{4}$ படி | கடுக்காய்த்தோல் 20 பலம் |
| ஜாதிக்காய் | சுக்கு |

இவைகளைச் சூரணித்து முன்பு தயாரித்த கஷாயத்தில் கலந்து அத்துடன்

| | |
|---|---|
| மோர் $1\frac{1}{2}$ படி | காடி $\frac{3}{4}$ படி |
| நெய் $\frac{1}{2}$ படி | |

இவைகளையும் கலந்து மறுபடியும் அடுப்பின் மேலேற்றிப் பக்குவமாகும் சமயத்தில்

| | |
|---|---|
| பெருங்காயம் | மிளகு |
| ஓமம் | கருஞ்சீரகம் |
| பொரித்த இந்துப்பு | திப்பிலி |
| சுக்கு | சீரகம் |

இவைகள் வகைக்கு 8 பலவீதமெடுத்துச் சூரணித்துக் கஷாயத்தில் சேர்த்து பக்குவமாய் இறக்கிக்கொள்ளவும்.

தினம் இம்மருந்தைச் சிறிது உட்கொள்ளவும். இதனால் குன்மம், கிராணி, சூலை முதலான நோய்கள் தீரும்.

## 849. குன்மத்திற்கு மருந்து

| | |
|---|---|
| அகில்பட்டை | புங்கம்பட்டை |
| சாரணைவேர் | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| இந்துப்பு | கடுக்காய் |

இவைகளைச் சமமாகக்கொண்டு ஒன்றிரண்டாக கல்லுரலி லிட்டிடித்து 16 பங்கு தண்ணீர்விட்டு 8 பாகம் கஷாயமிறக் கிக்கொண்டு இரவில் குடித்திட குன்மரோகம் ஒழியும்.

## 850. மதுஸ்மிக இரசாயனம்

| | |
|---|---|
| வால்மிளகு 10 பலம் | சுக்கு |
| திப்பிலி | மிளகு |
| கடுக்காய் | தான்றிக்காய் |
| நெல்லிமுள்ளி | ஏலக்காய் |
| கிராம்பு | ஜாதிக்காய் |
| ஜாதிப்பத்திரி | கருவாப்பட்டை |
| குரோசானிஓமம் | வாயுவிளங்கம் |
| ஓமம் | சிற்றரத்தை |
| சிறுதேக்கு | செவ்வியம் |
| திப்பிலிமூலம் | கொத்தமல்லி |
| சீரகம் | சடாமாஞ்சில் |
| கோஷ்டம் | விலாமிச்சைவேர் |
| அமுக்கராக்கிழங்கு | சிறுநாகப்பூ |
| வெட்பாலை | வாலுளுவை |
| அரேணுகம் | கசகசா |
| நீர்முள்ளிவிதை | |

இவைகள் வகைக்கு $2\frac{1}{2}$ வராகனெடை

| | |
|---|---|
| நிலப்பனங்கிழங்கு | 1 பலம் |
| முருங்கப்பூ | 1 பலம் |
| முந்திரிப்பழம் | $\frac{1}{2}$ பலம் |
| பேரீச்சம்பழம் | $\frac{1}{2}$ பலம் |

| | |
|---|---|
| தேன் | $\frac{1}{4}$ படி |
| வெள்ளை முசலிக்கிழங்கு | 1 பலம் |
| தூதுவளைப்பூ | 1 பலம் |
| கற்கண்டு | 5 பலம் |
| சிந்தில்சர்க்கரை | $\frac{1}{4}$ பலம் |
| நெய் | $\frac{1}{4}$ படி |

இவைகளைக்கொண்டு முறையே இரசாயனம் தயாரித்துக் கொள்ளவும்.

**இம்மருந்தினுல் தீரும் வியாதிகள் :**

உடம்பின் காங்கை, மேகம், அரோசகம், தாது சூன்யம், சூன்யவீரியம் முதலானவைகள் தீரும்.

## 851. வாந்தியுடன் கூடிய பேதிக்கு மருந்து

செம்மரத்தால் செய்யப்பட்ட படி ஒன்றைக் கொணர்ந்து அதன் வாயின்மேல் ஒரு சவுக்கத்தைக் கட்டி, துணியின்பேரில் கற்பூரத்தை வைத்துக் கற்பூரம் முழுமையும் மூடும்படியான அளவுக்கு அப்பிரகத்தகட்டை வைத்து அத்தகட்டின்மேல் நெருப்பை வைத்து நெருப்பு அணையாது விசிறியால் காற்று போட்டுவர கற்பூரம் தணலில் உருகி துணியின் வழியாக செம்மரப்படியில் இறங்கும். இவ் விதம் இறங்கிய கற்பூர்த்தைலம் சிறிது சிவந்த நிறமுடையதாயிருக்கும். இத்தைலத்தை எடுத்து ஒரு புட்டியிலடைத்துப் பத்திரப்படுத்தவும்,

**மருந்தின் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

4 அரிசியெடை மருந்தைத் தேனுடன் மத்தித்து வாந்தியுடன் கூடிய எவ்விதமான பேதிக்கும் கொடுக்க உடனே நிற்கும். மிகவும் உத்தமமான மருந்து.

## 852. இருமலுக்கு மோதக மருந்து

ஒரு சிறங்கை அளவு பச்சரிசியை எடுத்துத் தண்ணீரில் ஊறவைக்கவும். பிறகு அதை நைவாய் அரைத்து

கொழுக்கட்டை செய்யவும். கவசம்போல் செய்து வைத்துக்கொள்ளவும்.

பிறகு ஒரு சிறங்கை பனைவெல்லமும், சுக்கு, மிளகு திப்பிலி வகைக்கு ஒரு வராகனெடை விதமெடுத்து வெல்லத்துடன் பிசைந்து கொழுக்கட்டைக் கவசத்தின் நடுவில் இவைகளை வைத்து கொழுக்கட்டை செய்வது போல் செய்யவும்.

அடுப்பின்மேல் வாணலியை ஏற்றி நெய்யூற்றி அதில் கொழுக்கட்டையைப் பொரிக்கவும். பொரிக்கும்பொழுது 4 கோழிமுட்டையின் வெள்ளைக் கருவை மட்டிலும் அதன் மேல் ஊற்றி பொரித்துக்கொண்டு இரவில் போஜனத்தை முடித்துக்கொண்டு படுக்கைக்குப் போகுமுன் இம் மோதகத்தைச் சாப்பிட்டு தூங்கவும்.

### 853. காதின் கிருமிக்கு மருந்து

| | |
|---|---|
| ஆமணக்குப்பூ | வசம்பு |
| மணத்தக்காளி | வெள்ளைப்பூண்டு |

இவைகளை நன்றாக இடித்துத் துணியில் பொட்டணங்கட்டி காதில் பிழிய காதின் கிருமிகள் ஒழியும்.

### 854. காது மந்தத்திற்கு மருந்து

வயல் நண்டைக் கொணர்ந்து அதன் கால்களை அரிந்துவிட்டு அத்துடன் ஒவ்வொரு வராகனெடை அரைத்த வசம்பும் இந்துப்பும் கூட்டி துணியில் பொட்டணங் கட்டி காதில் பிழிந்து காதின் துவாரங்களில் பஞ்சை அடைத்து வைக்கவும். இவ்விதம் தினம் இருவேளையுமாக 10 தினங்களுக்குச் செய்ய காதுமந்தம் தீரும்.

### 855. காது வலிக்கு மருந்து

| | |
|---|---|
| வலம்புரிக்காய் (முற்றாதது) | வசம்பு |
| கடல்நுரை | |

இவைகள் $\frac{1}{4}$ பலமெடுத்து தூள்செய்து அத்தூளை பன்னி நெய் $\frac{1}{2}$ சேரில் கலந்து பக்குவமாய் காய்ச்சி காதில்போட காதுவலி தீரும்.

## 856. காதடைப்புக்கு மருந்து

*(1)* இஞ்சிச்சாறு, வெள்ளைக்குதிரை (நகோராக் குதிரை)யின் இலத்தியின்சாறு இவ்விரண்டையும் ஒன்று படக் கலந்து இதில் 4 துளி மருந்தை காதிலிட மந்த கர்ணம், காது அடைப்பு முதலானவைகள் தீரும்.

*(2)* முருங்கையிலை, முருங்கைவேர், சரக்கொன்றைப் பட்டை இம்மூன்றும் சமமாகக்கொண்டு பஞ்சுபோல் இடித்து துணியில் பொட்டணங்கட்டி இரு காதுகளிலும் பிழிய மந்தகர்ணம் தீரும். கைகண்ட மருந்து.

## 857. சிரங்கு, கருங்கிரந்தி, செங்கிரந்தி, சகலவித கிரந்தி நோய்களுக்கும் மருந்து

| | |
|---|---|
| சிற்றாமணக்கெண்ணெய் | $1\frac{1}{4}$ சேர் |
| மஞ்சள் | $1\frac{1}{4}$ சேர் |
| நேர்வாளம் | 9 தோலா |
| காட்டுச்சீரகம் | $\frac{1}{4}$ சேர் |
| பச்சைக்கற்பூரம் | $\frac{1}{8}$ தோலா |
| குங்குமப்பூ | $\frac{1}{8}$ தோலா |

இவைகளைக் கல்வத்திலிட்டு நைவாயரைத்துக்கொள்ளவும். ஒரு கலயத்தினடியில் பச்சைப்பயறு கொள்ளுமளவு துவாரமிட்டு அதனுள்ளே தயாரித்திருக்கும் மருந்தை ஊற்றி கலயத்தின் வாயை மூடிச்சீலைமண்செய்து கீழொரு கலயத்தை வைத்து 10 வறட்டியில் புடம்போட்டு எரித்து உபயோகிக்கவும்.

இம்மருந்தில் 5 வயதிற்குமேல் 5 துளிமுதல் 6 துளி வரையில் வியாதிக்குத் தக்கவாறு கொடுக்கவும்.

## 858. பிரமியம், வாதப்பிரமியம், விரணம், சூலை முதலானதற்கு பரங்கிப்பட்டையின் மருந்து

120 வராகனெடை பறங்கிப்பட்டையைக் கொணர்ந்து அதன் மேலுள்ள தோலைப்போக்கி பாக்குச் சீவலைப்போல் சீவி வைத்துக்கொள்ளவும். இதை வெய்யிலில் நன்முக உலரவைத்து இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து 2 படி பசு நெய்யுடன் கூட்டி ஒரு பாண்டத்தில் வைத்து அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சவும். இத்துடன் மேலும் 20 வராகனெடை சீரகத்தை அரைத்துத் தூள்செய்து போட்டு பக்குவமாய்க் காய்ச்சி இறக்கிக்கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

ஒரு கழற்சிக்காயளவு உருண்டைகள் செய்து 10 நாட்கள் சாப்பிடவும். 4 நாட்களுக்கு பத்தியமிருக்கவும். மறுபத்தியத்திற்கு உப்பு புளி இவைகளை விலக்கவும்.

கோழிக்குஞ்சைச் சமைத்து உப்பில்லாமல் சாப்பிடவும். துவரம் பருப்பைச் சேர்த்துக்கொள்ளவும். இம் மருந்தினல் பிரமியம், விரணங்கள், சூலை முதலானது தீரும்.

## 859. வீரிய விருத்திக்குத் தனி மருந்துகள்

(1) புலிநக வேரின் சாறு 4 தோலா எடுத்து வெள்ளாட்டுப் பாலில் கலந்துண்ண இந்திரியமேற்படும்.

(2) நாயுருவி விதையிலுள்ள அரிசி 1 சேர்
சர்க்கரை 2 சசர்

இவைகளைச் சூரணித்து தினமும் 3 தோலா வீதம் உட்கொள்ள தாது விருத்தியாகும்.

(3) சிறுகாஞ்சொரியின் உள் தோலை நிழலில் உலர்த்திச் சூரணித்து 3 தோலா பழைய வெல்லத்துடன் கூட்டி உருண்டைகள் செய்து தினமும் 1 உருண்டையை

நெய்யுடன் கலந்து 21 நாட்களுக்குச் சாப்பிட அனுகூல மேற்படும்.

(4) நெல்லிமுள்ளி கடுக்காய்

இவ்விரண்டும் சமமாகக்கொண்டு சூரணித்து தேன் சர்க்கரை இத்துடன் கலந்து தினமும் உட்கொண்டு மேலும் பசும்பாலைக் குடித்திட வீரிய விருத்தியுண்டாகும்.

(5) நெருஞ்சில்வேர் நீர்முள்ளிவிதை
பூனைக்காலிவிதை நிலப்பனங்கிழங்கு

இத்துடன் சமஎடை நிலப்பனங்கிழங்கு சமூலத்தின் சாற்றைச்சேர்த்து எல்லாவற்றையும் இடித்துச் சூரணித்து வைத்துக்கொள்ளவும். தினமும் 3 தோலா எடுத்து நெய், சர்க்கரை, தேன் இத்துடன் கலந்துண்ண வீரியவிருத்தி யுண்டாகும்.

(6) நீர்முள்ளி விதையை தினமும் $\frac{1}{2}$ சேர் வெள்ளாடு அல்லது பசுவின் பாலில் அரைத்துக் குடித்திட வீரிய விருத்தி உண்டாகும். இவ்வாறு 21 நாட்கள் செய்ய மிகுதியான பலன் அளிக்கும்.

(7) அமுக்கராக்கிழங்கு, எள், உளுந்து, நிலப்பூசணி, அரிசி இவைகள் வகைக்கு 2 தோலா வீதமெடுத்து $\frac{1}{4}$ சேர் வெள்ளாட்டுப்பாலில் அரைத்து சாயங்காலம் குடித்திட வீரிய விருத்தியுண்டாகும்.

(8) அதிமதுரம் 4 தோலாவை எடுத்துச் சூரணித்து 2 தோலா வெல்லத்துடன் கூட்டி விடியற்காலையில் புசிக்க வீரிய விருத்தியுண்டாகும்.

## 860. கர்ப்பமுண்டாக மருந்து

| | | |
|---|---|---|
| (1) | கோவைக்கிழங்கு | 10 தோலா |
| | வெல்லம் | 9 தோலா |
| | சிறுகீரை விதை | 9 தோலா |

இவைகளை ஒன்றுகூட்டி 2 சேர் பாலில் போட்டு பால் சுண்டும் வரையில் பக்குவம்செய்து 7 நாட்களுக்குப் புசிக்க கர்ப்பம் நிலைக்கும்.

| | | |
|---|---|---|
| (2) | செம்பரத்தைப்பூவின்சாறு | 12 தோலா |
| | பத்மினிக்கிழங்கின்சாறு | ,, |
| | தேன் | ,, |

இவைகளை ஒருமிக்கச்செய்து பிறகு மூன்று பாகங்களாகச் செய்து மூன்று நாட்கள் உட்கொள்ள கர்ப்பந்தரிக்கும்.

## 861. தாய்ப்பால் அதிகரிக்க மருந்து

| | | |
|---|---|---|
| (1) | கோஷ்டம் | அமுக்கராக்கிழங்கு |
| | யானைத்திப்பிலி | வசம்பு |

இவைகளை அரைத்து ஸ்தனங்களில் பத்துப்போட பால் பெருகும்.

| | | |
|---|---|---|
| (2) | பாதிரிவேர் | மருதோன்றிவேர் |

இவ்விரண்டையும் சிகப்புநிறப் பசுவின் பால் விட்டரைத்து குடித்திட கங்கை, பாகீரதி போன்று பாலின் பிரவாகம் உண்டாகும்.

## 862. மேகம், சிரங்கு முதலானதற்கு மருந்து

அருகம்வேருடன் கத்தகாம்பு அல்லது இலந்தை இலையுடன் கத்தக்காம்பைச் சேர்த்து அரைத்து பத்து போட்டு பட்டி கட்டவும்.

## 863. அபின் சாப்பிடுவோரின் பழக்கத்தை மாற்ற மருந்து

அபின் சாப்பிடுவோர் மாதம் 30 நாட்களுக்கு எவ்வளவு அபின் சாப்பிடுகிறார்களோ அந்த அளவு அபினை எடுத்து தண்ணீர் கலந்து குழம்பாக்கி அத்துடன் 1 தோலா

ஓமத்தையுங் கூட்டி நிழலில் உலர்த்தி 30 பாகங்களாகச் செய்து தினம் 1 பாகத்தை எடுத்து அத்துடன் அதே அளவு புதிய ஓமத்தையுங் கலந்து சாப்பிட்டுவர நாளாவட்டத்தில் அபினி சாப்பிடும் பழக்கம் அறவே ஒழியும்.

## 864. தலைவலிக்குப் புகை

சுத்தமான வெள்ளைக் கடுதாசியை எடுத்துச் சுருட்டி அதை வாயில் புகைபிடித்து மூக்கின் வழியாக புகையை வெளிக்குவிட தலைவலி தீரும்.

## 865. தீபனம், பசியின்மை முதலானதற்குப் பாகு

இஞ்சிச்சாறு $\frac{1}{2}$ சேர் முள்ளங்கிச்சாறு $\frac{1}{2}$ சேர்

அடுப்பின்மேல் ஒரு கலயத்தை வைத்து கலயம் நன்கு சூடேறியதும் அதில் மேற்கூறிய சாறுகளை ஊற்றினால் அச்சாறுகள் முறிந்துவிடும். பிறகு தெளிவை மட்டும் இறுத்துக்கொள்ளவும். இவ்விதமே $\frac{1}{2}$ சேர் வெங்காயச் சாற்றையும் தனியே முறித்து தெளிவை எடுத்துக்கொள்ளவும்.

அடுப்பின்மேல் வேறு ஒரு சட்டியைவைத்து அதில் இறுத்து வைத்திருக்கும் சாறுகளின் தெளிவையூற்றி மேலும் சுயமான தேனையுங்கொட்டி நன்குகக் கிண்டி பின்பும் $\frac{1}{2}$ சேர் எலுமிச்சம்பழ ரசத்தையும்விட்டு ஒருமிக்கச் செய்து பாகு செய்துகொள்ளவும்.

**மருந்தின் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

கழற்சிக்காயளவு மருந்தைச் சாப்பிடவும். வாயுவுக்கு ஓமம் அல்லது கிராம்புத்தூளுடன் கலந்துகொடுக்க தீபனம், பசி முதலானவைகள் ஏற்படும். வயிறும் தாராளமாகக் கழியும்.

## 866. உஷ்ணத்தினுல் கண்கள் சிவந்திருந்தால் மருந்து

நெருஞ்சிலிலை வெங்காயம் சீரகம்

இவைகளை இடித்துப் பொட்டணங்கட்டி கண்ணில் சிறிது பிழிய உஷ்ணம் தீரும்.

## 867. வீரியவிருத்திக்கு மருந்து

ஒரு பல எடையுள்ள லிங்கக்கட்டியை எடுத்து அதன் பேரில் 2 பலம் ரோமத்தால் (தலைமயிரால்) உருண்டையாக சுற்றி லிங்கம் தெரியாதபடி பந்தனம் செய்யவும். பிறகு அதன்மேல் சீலைமண்செய்து குக்குட புடத்தில் வைத்து எரிக்கவும். புடம் ஆறியபின்பு எடுத்து சுற்றியுள்ள ரோமம், கவசம் முதலானவற்றை நீக்கிவிட்டு சேவலின் வாய்க்குள் புகும்படியான அளவு சிறு துண்டுகளாகச் செய்துகொள்ளவும்.

பெட்டைக்கோழியின்பேரில் உட்காராத (சேராத) சேவல் ஒன்றைக் கொணர்ந்து அதன் வாயில் இத்துண்டு களைப்போட்டு விழுங்கச்செய்யவும். அவ்விதம் செய்யுமுன் அச்சேவலுக்கு முதல்நாள் முழுவதும் ஆகாரம் கொடுக்காமல் பட்டினியாய் வைக்கவேண்டியது.

பிறகு இவ்விதம் லிங்கம் ஊட்டிய சாவலை சிறியதொரு கூடைக்குள் காலையில் மூடிவைத்து சாயந்திரம் 6 மணிக்கு அதை எடுத்து அறுத்து வயிற்றிலுள்ள லிங்கக்கட்டிகளை மட்டும் எடுத்து நன்ருகத் துடைத்து பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளவும். இம்மருந்தில் ஒரு குன்றிமணியெடை எடுத்துத் தேனில் உரைத்து உள்ளுக்குப் புகட்டவும். மிகுதியான வீரிய விருத்தி ஏற்படும்.

## 868. வாதரோகத்திற்குமேல்பூச பிண்டத்தைலம்

| | |
|---|---|
| மஞ்சிஷ்டம் | நன்னாரிவேர் |
| அதிமதுரம் | தேன்மெழுகு |
| பால்சாம்பிராணி | |

இவைகள் 5 வராகனெடை

மெழுகைத்தவிர மற்றதை நன்றாக இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ் செய்யவும். இச்சூரணத்தை தேவையான அளவு தண்ணீருடன் கலந்து அடுப்பின் மேலேற்றி நன்றாய் காய்ச்சி ½ பாகம் கஷாயமிறக்கிக் கொண்டு அதை வஸ்திரகாயஞ் செய்யவும். கஷாயத்துடன் எண்ணெய், மெழுகு இவைகளையும் போட்டு கஷாயத்திலுள்ள நீர்ப்பசை கண்டும்வரையில் காய்ச்சி ஆறிய பிறகு எடுத்து பத்திரப்படுத்தி உபயோகிக்கவும்.

## 869. வயிற்று வலிக்கு மருந்து

| | |
|---|---|
| இந்துப்பு | வெடியுப்பு |
| உஷர் லவணம் | சௌவர்ச்சலவணம் |
| கறியுப்பு | *கோஹிஉப்பு |
| கந்தகம் | தேன் |
| பனைவெல்லம் | நெய் |

இவைகள் வகைக்கு 1 பலம்

பிரண்டையைக் கொணர்ந்து கணுக்களை வெட்டி நீக்கிவிட்டு அதைச் சாறுபிழிந்து 2 படி திட்டத்திற்கு சாறு எடுத்துக்கொள்ளவும். இதை ஒரு பாத்திரத்தில் ஊற்றி அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி ¾ பாகம் சுண்டியதும் அதில் மேற்கூறிய சரக்குகளில் நெய், தேன் இவைகளைத் தவிர மற்றவைகளைத் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து பிரண்டைச் சாற்றில் போட்டு காய்ச்சி ஹல்வா பதம் வந்தவுடன் அதில் நெய், தேன் இவைகளையும் ஊற்றி நன்றாகக் கலந்து கீழிறக்கிக்கொள்ளவும்.

---

*இது யுனானி மருந்து.

**பத்தியம்:—** காலையில் பச்சைப்பயறும், பச்சரிசியும் சேர்த்து பொங்கல் செய்து சாப்பிடவும்.

இம்மருந்து உட்கொள்ளும் முதல்நாள் விரேசனத்திற்கு சாப்பிடும் மருந்தின் விபரம்:—

மிளகு $\frac{1}{4}$ சேர் சீரகம் $\frac{1}{4}$ சேர்

இவ்விரண்டையும் ஓர் புதுப்பானையில் போட்டு அடுப்பின் மேலேற்றி வறுத்து வெடிக்கும் சப்தம் கேட்டவுடன் $\frac{1}{2}$ சேர் ஆமணக்கெண்ணெயை ஊற்றி மருந்து தூளாகும்படி கரண்டியால் நன்றாகக் கடைந்து பிறகு எடுத்து வடிகட்டி வைத்துக்கொள்ளவும். சரீரத்திற்கு தகுந்தபடி வீசம்சேர் முதல் அரைக்கால் சேர் வரையில் சாப்பிட விரேசனமாகும்.

## 870. கபத்திற்கு மருந்து

(1) வாழைக்கிழங்கை உலரவைத்துச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து அதில் சிறிது தூளை எடுத்து சாதத்துடன் கலந்து இரண்டு கவளம் சாப்பிடவும்.

(2) பலாசம்பட்டையை இடித்துத் தூள்செய்து கஷாயமிறக்கிக் குடிக்க கபம் தீரும்.

## 871. வாழைப்பழ சர்பத்

நல்ல தினுசான வாழைப்பழம் 25

பழத்தின் தோலைப்போக்கி பழத்தை மிருதுவாகப்பிசைந்து புதிய பானையில் போட்டு அத்துடன் வஸ்திரகாயஞ்செய்த மகிழம்பட்டைத் தூளையும் கலந்து ஒருமிக்கச் செய்து ஒரு இரவு முழுவதும் மூடிவைத்து மறுநாட் காலையில் கம்பளித் துணியில் சிறிது சிறிதாகப்போட்டு பிழிந்துகொள்ளவும். இவ்விதம் செய்து இதற்குச் சமயெடை சர்க்கரையைச் சேர்க்கவும். இதற்குமுன் பசுநெய்யில்

கிராம்பு ஏலக்காய் கறுவாப்பட்டை

இம்மூன்றையும் பொன்னிறமாக வறுத்துக்கொள்ளவும். முன்பு தயாரித்திருக்கும் வாழைப்பழச்சாற்றில் சர்க்கரையைப்போட்டு பாகுசெய்துகொண்டு அதில் மேற்கூறிய வறுத்த சாமான்களைத் தூள்செய்துபோட்டு இளந்தியிட்டு பாகில் காற்றுக்குமிழிகள் வர ஆரம்பித்ததும் கீழிறக்கிக் கொண்டு அதில்

குங்குமப்பூ கஸ்தூரி
அம்பர் பன்னீர்

இவைகளைச் சேர்த்து பத்திரப்படுத்தவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

தினம் வேளை ஒன்றிற்கு 1 தோலா பிரமாணம் இரு வேளையுமாகச் சாப்பிட நெஞ்சுவலி, இரத்தசிதம், இரத்த பேதி, மூலவியாதி, அஸ்திஉஷ்ணம், மேகம், பிரமியம், தாதுநஷ்டம் முதலான நோய்கள் தீரும்.

## 872. பஞ்சாம்ருத சர்பத்

புதினாச்சாறு இஞ்சிச்சாறு
புளிப்புமாதுளைச்சாறு துரிஞ்சிப்பழச்சாறு
எலுமிச்சம்பழச்சாறு

இச்சாறுகளுக்கு சமயெடை திராக்ஷைப்பழ ரசத்தை மற்ற சாறுகளுடன் கலந்து, இவைகள் எல்லாவற்றிற்கும் சம யெடை சர்க்கரையைக் கூட்டி மூன்று அல்லது நான்குமுறை வடிகட்டி அதிலுள்ள நுரையை நீக்கிவிட்டு அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சி சர்பத் பக்குவத்தில் இறக்கிக்கொண்டு அதில்,

குங்குமப்பூ பன்னீர் அம்பர்

இவைகளைக் கலந்து வைத்துக்கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

ஒரு தோலா முதல் 2 தோலா வரையில் சாப்பாட்டிற்கு முன் அல்லது பின் உட்கொள்ள அஜீரணம், வாயு, பித்தம், அரோசகம், வயிறு இரைதல் முதலான வியாதிகள் தீரும்.

## 873. வல்லாரை சர்பத்

வல்லாரையை இடித்துத் தேவையான சாற்றைப் பிழிந்து கொள்ளவும். ஒரு புதிய செங்கல்லை நெருப்பிலிட்டு நன்ருகச் சுட்டு அதை மேற்கூறிய சாற்றில் நனைத்து சாறு ஆறியதும் கல்லை நீக்கிவிடவும். பிறகு வல்லாரைச் சாற்றை வஸ்திரகாயஞ்செய்து அதற்கு சமயெடை சர்க்கரையைச் சேர்த்து சர்பத் செய்யும் முறைப்படி சர்பத் காய்ச்சிக் கொள்ளவும். சர்பத்தை அடுப்பிலிருந்து கீழே இறக்கியதும் அதில்,

| | |
|---|---|
| குங்குமப்பூ | பன்னீர் |
| அம்பர் | கஸ்தூரி |

இவைகளையும் கலந்து புட்டியிலடைத்துக் கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் நோயும் :**

தினம் வேளை ஒன்றுக்கு 2 தோலா பிரமாணம் இரு வேளையுமாக உட்கொள்ள ஞானப்பிரகாசம் உண்டாகும், புத்தி அதிகரிக்கும், ஞாபகசக்தி மிகுதியாகும். பித்தம், மயக்கம், கிருகிருப்பு முதலியவைகள் தீரும்.

## 874. செம்பரத்தைப்பூ சர்பத்

தேவையான செம்பரத்தைப்பூவைக் கொணர்ந்து அதில் தண்ணீர்விட்டு நன்ருகக்கொதிக்கவைத்து அதற்குச் சமஎடை கற்கண்டைச் சேர்த்து சர்பத் செய்யுமுறைப்படி சர்பத்தை காய்ச்சவும். சர்பத் அடுப்பிலிருந்து கீழிறக்கி ஆறியதும் அதில்,

கஸ்தூரி　　　　　அம்பர்
குங்குமப்பூ　　　　　பன்னீர்
பச்சைக்கற்பூரம்

இவைகளையும் ஒருமிக்கக் கலந்து புட்டியிலடைத்துக் கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

தினம் வேளை ஒன்றுக்கு 2 தோலா முதல் 3 தோலா வரையில் இருவேளையும் உட்கொள்ள உஷ்ணத்தினால் ஏற்பட்ட சகல வியாதிகளும் தீரும். தேகத்திற்கு ஆரோக்கியமளிக்கும்.

### 875. பித்த குன்மத்திற்கு மருந்து (சோமரசம்)

சுத்திசெய்த வத்ஸநாபி
சுத்திசெய்த பாதரசம்
சுத்திசெய்த தாளகம்

இவைகள் சமயெடை எடுத்துக்கொள்ளவும். தேக்கு மரத்தின் இலை, அதன் காய், பூ இவைகளை இடித்துச் சாறு பிழிந்து மேற்கூறிய சுத்திசெய்த மருந்தில் ஊற்றி ஊற வைத்துப் பிறகு அதே சாற்றில் இரண்டு நாட்கள் அரைத்துப் பிறகு பொன்னாங்காணியின் சாற்றில் மறுபடியும் இரண்டு நாட்கள் அரைத்து ஒரு மூசையில் அடைத்துச் சீலைமண் செய்து ஒரு குழியில் வைத்துப் புடம் போடவும். இவ்வாறே 5 புடங்களில் எரித்து மருந்தை பத்திரப்படுத்திக் கொள்ளவும். இம்மருந்தின் சமஎடை நேர்வாளப் பருப்பை எடுத்துத் தூள்செய்து மேற்கூறிய மருந்துடன் கலந்து குப்பியிலடைத்துக் கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் நோயும் :**

பசுவின் நெய்யில் ஒரு குன்றிமணியெடை மருந்தை குழைத்துக் கொடுக்க பித்தகுன்மம் தீரும்.

## 876. ஹைபத்தி சூரணம்

| | |
|---|---|
| நெல்லிமுள்ளி | வாயுவிளங்கம் |
| ஏலக்காய் | கறுவாப்பட்டை |
| இலவங்கப்பத்திரி | கோரைக்கிழங்கு |
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | |

இவைகள் சமமாகக் கொண்டு இடித்துத் தூள் செய்யவும். இத் தூளுக்கு மூன்றுபங்கு சுத்திசெய்த சிவதைவேரின் சூரணத்தையும் கலந்துகொள்ளவும். சிவதைத்தூள், மற்றவைகளின் தூள், இவ்விரண்டிற்கும் சமயெடை சர்க்கரையைக் கூட்டிப் பத்திரப்படுத்தவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும்:**

½ பலம் சூரணத்தை வெந்நீரில் கலந்து உட்கொள்ள குன்மம், கிராணி, சுவாசகாசம், கிருமி, குட்டம், வாதரோகம், பித்தம், கபரோகம், சுக்கிலரோகம், ருத்ரரோகம் முதலான வியாதிகள் தீரும்.

## 877. தாது புஷ்டிக்கு மருந்து

| | |
|---|---|
| நெருஞ்சில்முள் | 1 பலம் |
| குசும்பாப்பூ | 2 பலம் |
| அஷ்டகிராம் சர்க்கரை | 3 பலம் |

நெருஞ்சில்முட்களை நிர்மலமாகக் கழுவி உலரவைக்கவும். இவ்விதமே குசும்பாப்பூவையும் கசக்கி அதனின்று மஞ்சள் நிறம் போகும் வரையில் நன்றாகக் கழுவி சுத்தம் செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும்.

பிறகு நெருஞ்சில் முட்களையும், குசும்பாப்பூக்களையும் ஒன்று கூட்டி இடித்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து அஷ்டகிராம் சர்க்கரையையுங் கலந்து பத்திரப்படுத்தவும்.

**இதன் பரிமாணமும் தீநர் வியாதியும்:**

மூவிரல்கொண்ட அளவு சூரணத்தை உட்கொண்டு அதற்குமேல் காய்ச்சாத பசும்பாலைக் குடிக்கவும். இவ்விதம் 7 நாட்களுக்குச் செய்யவும்.

**பத்தியம்:** புளி, புகையிலை, ஸ்திரீ சேர்க்கை இவை விலக்கவும்.

## 878. மலவிசர்ஜனத்திற்கு குல்கந்து

| | |
|---|---|
| சுத்தமான ரோஜாப்பூவின் குல்கந்து | 1 சேர் |
| ஆவாரைவிதை | $3\frac{1}{2}$ பலம் |
| கடுக்காய்ப்பிஞ்சு | $1\frac{1}{2}$ பலம் |

ஆவாரம்விதை, கடுக்காய்ப்பிஞ்சு இவ்விரண்டையும் இலேசாக வறுத்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து கொள்ளவும். குல்கந்தையும் அரைத்து அத்துடன் இத்தூளையும் கூட்டி பின்பும் நைவாயரைத்து ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் அடைத்துக்கொள்ளவும்.

**இதன் பரிமாணம்:** வயது கிரமத்தின் படியும் தேகத்தின் பலத்தை அனுசரித்தும் சுமார் $\frac{3}{4}$ தோலா அளவுக்கு கூட்டியுங் குறைத்தும் இரவில் போஜனத்திற்குப் பின் சாப்பிடவும்.

## 879. கபரோகம், இருமல் இவைகளுக்கு மருந்து

| | |
|---|---|
| வெந்தயம் | படிக்காரம் |
| அதிவிடயம் | கொத்தமல்லி |
| கல்நார் | சந்தனம் |
| சுக்கு | திப்பிலி |

இவைகள் வகைக்கு 5 வராகனெடை எடுத்து ஒரு சேர் பசுநெய்யில் பொன்னிறமாக வறுத்துத் தூள்செய்து, வறுத்தபின்பு எஞ்சிய நெய்யையும் அதில் கூட்டி நைவாயரைத்து கழற்சிக்காயளவு மாத்திரைகள் செய்து பத்திரப்படுத்தவும்.

**இதன் பரிமாணமும் தீரும் நோயும் :**

தினம் வேளை ஒன்றுக்கு ஒரு உருண்டை வீதம் இரு வேளையும் அரைமண்டலம் வரை உட்கொள்ள கபரோகம், இருமல், உலமாந்தம் க்ஷயரோகம் முதலானவைகள் தீரும்.

## 880. மூலவியாதிக்கு உசிதமான மருந்து

| | |
|---|---|
| ஊஞ்ஞங்கொழுந்து | 2 பலம் |
| வெங்காயம் | 2 பலம் |
| முலைப்பால் | 1 சேர் |
| சிற்றாமணக்கெண்ணெய் | 1 சேர் |
| சர்க்கரை தேவையானது | |

இவைகளைக்கொண்டு பக்குவமாய் லேகியம்போல் செய்து கொண்டு விடியற்காலையில் உபயோகிக்கவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

ஒரு வேளைக்கு ஒரு வராகனெடைப் பிரமாணம் 10 நாட்களுக்கு உண்ண கனத்தினல் குழந்தைகளுக்கு ஆசனம் (மூலம்) வெளியே தள்ளி இருந்தால் அல்லது சீத இரத்தக் கழிச்சல் ஏற்பட்டிருந்தால், அல்லது பத்து வருடங்கள் வரை சிறுவர்களுக்கு மூலம் வெளியே தள்ளி இருந்தால் இவைகள் எல்லாம் தீரும். இது மிகவும் அனுபவங்கண்ட மருந்து.

(2) ஊஞ்ஞங்கொழுந்து வேரைக் கொண்டுவரும் பொழுது பெரிய கொடியாகப் பார்த்து எடுக்கவும். அதை ஒரு ஜாண் அளவுக்கு துண்டுகள் செய்யவும். வெட்டிய க்ஷணத்தில் அத்துண்டை வாயில் வைத்து ஊத அதிலிருந்து பால் சொட்டும். இவ்விதம் ஒவ்வொரு துண்டையும் வெட்டும்பொழுது ஊதிப் பாலை ஒரு சிறு பாத்திரத்தில் சேகரிக்கவும். இவ்விதம் சேகரித்த பாலை மூலத்தின்மேல் தடவ மூலம் உள்ளுக்குப்போய் நோய் தீரும்.

(3) முன்பு கூறிய முறைப்படி ஊஞ்ஙகொழுந்தின் பாலை 9 தோலா அல்லது $4\frac{1}{2}$ தோலா வரையில் சேகரித்து முன்பு (1)ல் சொல்லி இருக்கும் எண்ணெயுடன் கலந்து பக்குவம் செய்தால் இம்மருந்து மிகுதியான குணமளிக்கும்.

## 881. நவச்சார ரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | 10 பலம் |
| சுத்திசெய்த கந்தகம் | 10 பலம் |
| நவச்சாரம் | 5 பலம் |

இம்மூன்றையும் கல்வத்திலிட்டு முருங்கைப்பூவின்சாற்றை விட்டு 12 ஜாமம்வரை அரைத்து நிழலில் நன்றாக உலர வைத்து காசிக்குப்பியில் அடைத்து குப்பியின் வாயை மாவுக்கல்லால் மூடி 7 சீலைமண்செய்து உலரவைக்கவும்.

பிறகு சிந்தூரம் செய்யும் சட்டியில் 3 விரல்கள் உயரம் உப்பைப்போட்டு அதன்மேல் குப்பியை வைத்து குப்பியைச் சுற்றிலும் உப்பைக்கொட்டி அதன்மேல் குப்பி முழுகும்வரையில் மணலை நிரப்பி மேலுமோர் சட்டியை மூடி வாயை சீலைமண் செய்து காற்றில்லாத இடத்தில் அடுப்பை ஏற்றி சட்டியை வைத்து 12 ஜாமம் கமலாக்கினி யால் எரிக்கச் சிந்தூரம் குங்குமத்தைக் காட்டிலும் சிவந் திருக்கும்.

இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :

ஒரு பணவிடை மருந்தைத் தக்க அனுபானத்துடன் கொடுக்க குன்மம், சூலை, கைகால் முடங்கல், விரணம் முதலான நோய்கள் தீரும்,

## 882. குன்மத்திற்குத் துத்தநாகச் சிந்தூரம்

துத்தநாகம் 10 பலம் எடுத்து அதன்மேல் இலுப் பெண்ணெயும் பசு வெண்ணெயும் தடவி நாகத்தை உருக்கி 20 தடவை வெள்ளாட்டுப்பாலில் சுறுக்கங் கொடுக்கவும். இவ்விதஞ்செய்ய நாகம் சுத்தியடையும்.

பிறகு ஒரு சட்டியை அடுப்பின் மேலேற்றி நாகத்தை யும்போட்டு அதன்மேல்,

| | |
|---|---|
| வெடியுப்பு | 1 படி |
| சுக்கு | 1 படி |
| ஓமம் | ½ படி |
| மஞ்சள் | 1 பலம் |

இவைகளைப் பொடித்துச் சட்டியில் சிறிது சிறிதாகப் போட்டு நாயுருவிச்செடியின் தண்டுகளால் கிண்டவும். இவ்வாறு வெடியுப்பு சேர்ந்த தூள்களை சிறிது சிறிதாதப் போட்டு வறுத்துவர நாகமானது பொரிந்து மாதுளம் பூவைவிடச் சிவந்த நிறமுடைய சிந்தூரமாகும். இச் சிந்தூரத்தை எடுத்து பத்திரப்படுத்தி உபயோகிக்கவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

(1) 3 குன்றிமணியெடை சிந்தூரத்தை கொடிவேலி வேர்த்தூளுடன் கூட்டித்தேனில் மத்தித்து 10 நாட்களுக்குக் கொடுத்திட வாந்தியுடன் கூடிய குன்மம், வாயு குன்மம், கடுப்புடன் கூடிய குன்மம், 18 வித குட்டங்கள் முதலான வைகள் தீரும.

(2) சுக்கு, மிளகு, திப்பிலி இவைகளைச் சிறிது எடுத்து வறுத்துத் தூள்செய்து தினம் வேளை ஒன்றுக்கு 1 சிட்டிகை தூளுடன் 3 குன்றிமணியெடை மருந்து கலந்து இரு வேளையுமாக ஒரு மண்டலம்வரை உட்கொள்ள இருமல், கபம், எலிக்கடி, சுவாசகாசம், வாதகாசம், 96 கபரோகம், இத்திரதாபம், கண்டதாபம், 18 வித பிரமியம் 20 வகை பித்தரோகம், 12 வித சோமவியாதி, நெஞ்சுவலி வாய் எரிவு, கால் எரிவு முதலான சகல நோய்களும் தீரும்.

(3) ஆவாரை இலை, பூ, வேர், காய், சமூலம் இவை களை உலர்த்தித் தூள்செய்து சூரணித்து ஒரு சிட்டிகை சூரணத்துடன் இச் சிந்தூரத்தையும் கலந்து ஒரு மண்டலம் வரையில் உட்கொள்ளவும். அல்லது மேற்கூறிய ஆவாரை யின் அம்சங்களைச்சேர்த்து இறக்கிய கஷாயத்துடன் இச்

சிந்தூரத்தைக் கலந்து ஒரு மண்டலம் உட்கொள்ள 12 வித அஸ்திரோகங்கள், க்ஷயரோகம், ஸ்திரீகளுக்கு ஏற்படும் மார்புவலி, ஸ்திரீகளின் ஸ்தனங்களில் உண்டாகும் புற்று முதலான விரணங்கள் தீரும். இம்மருந்து மிகவும் அபூர்வமானதும், அனுபவங்கண்டதும்.

## 883. பிரமியத்திற்கு மருந்து

1 பலம் சுயமான எள்ளெண்ணெயுடன் 1 பலம் கையாந்தகரைச் சாற்றையும் ஒன்றுபடக் கலந்து 3 நாட்கள் குடித்திட பிரமியம் தீரும்.

## 884. சுவர்ண ரச சிந்தூரம்

| | |
|---|---|
| சுத்திசெய்த பாதரசம் | 8 பலம் |
| ,, தங்கம் | 4 பலம் |
| ,, மனோசிலை | 7 பலம் |
| ,, தாளகம் | 6 பலம் |
| ,, கந்தகம் | 12 பலம் |

இவைகளைக் கல்வத்திலிட்டு மாதுளம்பூவின் சாற்றில் 3 நாட்கள் அரைத்து நிழலில் உலரவைத்துப் பிறகு காசிக் குப்பியிலடைத்துக் குப்பியின் வாயைமூடிச் சீலைமண் செய்து சிந்தூரம் செய்யும் சட்டியில் 4 விரல்கள் உயரம் மணலைக்கொட்டி அதன்மேல் குப்பியை வைத்து மேலும் மணலைப்போட்டுக் குப்பியை மூடி அதன் மேல் ஓர் சட்டியை மூடி அடுப்பின் மேலேற்றி இரவு பகலாய் இடைவிடாது கமலாக்கினித் தீயால் எரித்து, பிறகு புடம் தானுகவே ஆறியதும் எடுத்து உடைத்துப்பார்க்க சிந்தூரமானது மாதுளம்பூவைவிட நேர்த்தியான நிறமுடையதாய் இருக்கும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும்:**

ஒரு பணவிடை மருந்தைத் தகுந்த அனுபான பேதங்களில் பத்து நாட்களுக்குக் கொடுக்க சுவாசம், க்ஷயம், இருமல், குன்மம், இருமல், சுரம் முதலான நோய்கள் தீரும். இது மிகவும் அனுபவங்கண்டது.

## 885. வயிற்றுச் சூலைக்கு மருந்து

| | |
|---|---|
| ஊழிவேர் (?) | 1 வராகனெடை |
| *ருபார்ப் | 1 வராகனெடை |
| பெருங்காயம் | 1 வராகனெடை |
| அபின் | ½ வராகனெடை |

இவைகளை ஒன்றுகூட்டி நைவாயரைத்து 3 முதல் 30 மாத்திரைகள் வரையில் செய்து உபயோகப்படுத்தவும்.

## 886. பஞ்சாமுருதம்

| | |
|---|---|
| இரசசிந்தூரம் | தங்கச்சிந்தூரம் |
| காந்தசிந்தூரம் | அப்பிரகசிந்தூரம் |
| வெள்ளிபற்பம் | |

இவைகள் வகைக்கு 1 பலவிதமெடுத்து கல்வத்திலிட்டு நன்ருக அரைத்து ஒரு டப்பியிலடைத்துக் கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும்:**

1) க்ஷயரோகத்திற்குத் திப்பிலிச் சூரணத்துடன் நெய்யைக் கூட்டி 1 பணவிடை மருந்தையும் குழைத்துச் சாப்பிட தீரும்.

2) பாண்டு ரோகத்திற்கு 1 பணவிடை மருந்துடன்

| | |
|---|---|
| கிராம்பு | சீரகம் |
| மல்லி | மிளகு |

இவைகளைப் பொடித்து நெய்யுங்கூட்டி உட்கொள்ளத் தீரும்,

3) கிராணிக்கு 1 பணவிடை மருந்துடன்

| | |
|---|---|
| கிராம்பு | ஜாதிக்காய் |
| அதிவிடயம் | சீரகம் |

இவைகளை வறுத்துத் தூள்செய்து தேனுடன் குழப்பி உட்கொள்ள கிராணி நோய் தீரும்.

---

*யுனானி மருந்து.

4) தவிர இம்மருந்தை அனுபான பேதங்களில் உட்கொள்ள சகல ரோகங்களும் தீரும்,

## 887. உஷ்ணம், வெட்டை முதலானதற்கு

காசுக்கட்டி மரத்தின் வேரை வெந்நீரில் அரைத்து $\frac{1}{4}$ சேர் நீரை உட்கொள்ளத் தீரும்.

## 888. விசர்ப்பம், படை முதலானதற்கு

| | |
|---|---|
| புளியங்கொட்டை | 1 பிடி |
| கொட்டைப்பாக்கு | 4 (எண்ணிக்கையில்) |

இவ்விரண்டையும் கருக்கித் தூள்செய்து வஸ்திரகாயஞ் செய்து $\frac{1}{2}$ சேர் கருஞ்சீரகயிலைச் சாற்றில் பாவனை கொடுத்து, சாறு முழுமையும் தூளில் கிரஹிக்கும்படி செய்து அதை மேலுக்குத் தடவ உபயோகிக்கவும்.

இதை 21 நாட்களுக்கு உபயோகிக்க விசர்ப்பம் முதலான வியாதிகள் தீரும்.

## 889. நாசியிலிருந்து இரத்தம் விழுதலுக்கு மருந்து

1) துளசிவேர் சிறுகீரைவேர்

இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு பசும்பால்விட்டு அரைத்துத் தினம் இருவேளையும் குடித்திட மூக்கிலிருந்து இரத்தம் விழுதல் நிற்கும்.

2) அரக்கு நிறமுடைய உத்பலத்தை எடுத்து தலையின் மேல் வைத்துப் பந்தனம் செய்ய மூக்கிலிருந்து வரும் இரத்தம் நிற்கும்.

3) ஒரே கரணையுள்ள வெங்காயம் 1 (எண்ணிக்கையில்)

| | |
|---|---|
| வெற்றிலையின் காம்பு | 1 சிறங்கை அளவு |
| மிளகு | 3 (எண்ணிக்கையில்) |

இவைகளை இடித்துச் சாறுபிழிந்து சிறிதெடுத்து மூக்கில் பிழிய இரத்தம் விழுதல் நிற்கும்.

4) நெல்லிக்காய்ச் சாற்றை மூக்கில் பிழிய இரத்தம் நிற்கும்.

## 890. உதட்டின் வெடிப்பு, வெண்குட்டம் முதலானதற்கு

1) அவுரியிலைச்சாற்றில் குன்றிமணிப் பருப்பை உரைத்து இரவில் படுக்கைக்குச் செல்லும்பொழுது உதட்டில் தடவித் தூங்க உதட்டின் விரணம், வெண்குட்டம் முதலானவைகள் தீரும்.

2) அக்கராகரம் யானைத்தந்தம்
கோஷ்டம்

இம்மூன்றையும் சமமாக எடுத்துக்கொண்டு எலுமிச்சம்பழ ரசத்தில் உரைத்து இரவில் படுக்கைக்குப் போகும்பொழுது உதட்டிற்குத் தடவி தூங்க உதட்டின் வெண்குட்டம் ஒழியும்.

3) வில்வப்பழவோட்டை முலைப்பாலில் உரைத்து உதட்டில் தடவ விரணம், வெடிப்பு, வெண்குட்டம் முதலான நோய்கள் 10 தினங்களில் தீரும்.

4) பாதரசம் சுந்தகம்

இவ்விரண்டையும் கல்வத்திலிட்டு எருக்கம்பால்விட்டு மை போல் நைவாயரைத்துப் பிறகு பாதரசத்தைக் கழுவி கழுவிய நீரைமட்டிலும் எடுத்து அதைப் பக்குவமாய்க் காய்ச்சி உதடுகளின் விரணத்திற்குப் பூச தீரும். பற்களிலுண்டான கிரந்தியும் ஒழியும்.

## 891. தலைவலிக்கு மருந்து

அருகம்வேரைக் கொணர்ந்து பசுவின்பாலில் நைவாயரைத்து புருஷர்களுக்குத் தலைவலி கண்டால் அவர்களுடைய நெற்றியின் இடது பக்கத்தில் பத்துப்போடவும். ஸ்திரீகளுக்கு இந்நோய் கண்டால் அவர்களுடைய நெற்றியின் வலது பக்கத்தில் பத்துப்போட தலைவலி உடனே தீரும்.

## 892. நீரிழிவுக்குப் பஞ்சசர்க்கரை

1) சிந்திற்கொடியின் மேல்தோலைச்சீவி நீக்கிவிட்டு பானையில் தண்ணீர்விட்டு அதில் சீவிய சிந்திற்றண்டுகளை நன்ருகக் கசக்கவும். பின்பு அச்சக்கைகளை நன்கு பிழிந்து கொண்டு பானையிலுள்ள தண்ணீரை வடிகட்டிக்கொண்டு, தெளிய வைத்து மேல்நீரை நீக்கி அடிமண்டியை மட்டும் எடுத்துக்கொள்ளவும்.

(2) நீர்வள்ளிக்கிழங்கை இடித்து இவ்விதமே செய்து அதன் மண்டியை மட்டும் எடுத்துத் தனியே வைத்துக் கொள்ளவும்.

(3) பிறகு நிலக்குமிழ்வேர் ஒரு குருணி கொணர்ந்து அதை அரைத்து வடிகட்டின தண்ணீரில் ஒரு மூடி எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து தெளியவைத்து அதிலிருந்து கிடைக்கும் அடிமண்டியைக் காய்ச்சிக்கொள்ளவும்.

(4) நிலப்பனங்கிழங்கை முன்பு நீர்வள்ளிக்கிழங்கிற்குக் கூறியுள்ள முறைப்படி செய்து அதன் அடிவண்டலையும் எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

(5) கோவைத்தண்டை முன்பு கூறியபடியே செய்து தண்ணீரில் கலக்கித் தெளியவைத்து மண்டியை இறுத்திக் கொள்ளவும்.

இவ்விதம் தயாரித்த 5 வித சர்க்கரையையும் சமயெடை எடுத்து ஒன்ருய்ச் சேர்த்துக்கொண்டு, $\frac{1}{2}$ பணவிடை காந்த பற்பத்திலாவது, வங்க பற்பத்திலாவது இந்தப் பஞ்சசர்க்கரை 1 வெருகடி அளவுக்கு வைத்து தேனிலோ, வெண்ணெயிலோ அல்லது மோரிலோ கலந்து சாப்பிட நீரிழிவு தீரும்.

## 893. நீரிழிவுக்கு ஆவாராதி அடை

ஆவாரையிலை ஒரு பிடி
குருவையரிசி ஒரு உழக்கு

இவ்விரண்டையும் உப்பைச் சேர்க்காமல் அரைத்து வடை தட்டி நல்லெண்ணெயில் தோய்த்து எட்டு நாட்கள் விடாமல் காலை மாலை சாப்பிட நீரிழிவு தீரும்

## 894. நீரிழிவுக்கு ஈரவெங்காயப் பிட்டு

ஈரவெங்காயம் ஒரு குறுணி எடுத்துத் தோலை நீக்கிச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும்.

எள்ளுப்புண்ணுக்கு 1 படி எடுத்து நன்ருக இடித்து வஸ்திரகாயஞ் செய்துகொள்ளவும்.

ஒரு புதுச்சட்டியில் ஒரு படி எருமை மோரை விட்டு அச்சட்டியின் வாய்க்கு ஒரு துணியால் வேடுகட்டி வெங்காயத்தையும், பிண்ணுக்கையும் அவ்வேட்டின்மீது வைத்து அடுப்பின் மேலேற்றிப் புட்டவியலாக அவித்து எடுத்துக் காலையும் மாலையும் சாப்பாட்டில் போட்டு நல்லெண்ணெய் கூட்டிக்கொண்டு சாப்பிட்டுவர நீரிழிவு தீரும்.

## 895. நீரிழிவுக்கு வெள்ளிலோத்திர மா

வெள்ளி லோத்திரப்பட்டையை மாவாகும்வரை நன்ருக இடித்து வெள்ளரிப் பிஞ்சினுள் கழஞ்சளவால் ஒரு இரவு முழுவதும் வைத்துக் காலையில் சாப்பிடவும்.

கடுப்புடன் கூடிய நீரிழிவு தீரும். மூர்ச்சையுண்டா ஞல் தயிர் சாதம் சாப்பிடவும். மேகரோகம் மாறும்.

### 896. நீரிழிவுக்குத் தாமரை வளையப்பிட்டு

தாமரையிலேச்சுருள் துடரிக்கொழுந்து
ஆவாரைவிதை

இம்மூன்று சரக்குகளையும் சமமாகக்கொண்டு நிழலி லுலர்த்திச் சூரணம்செய்து ஒரு வாயகன்ற சட்டியில் மோரைவிட்டு அதன் வாய்க்குத்தக்க வேடுகட்டி மேலே கூறிய சூரணத்திலும் மோர்விட்டுப் பிசைந்து அதை அவ்வேட்டின்மேல் வைத்து மேலே ஒரு சட்டியை மூடி அடுப்பின் மேலேற்றிக் கொதிக்கவைத்துப் பிட்டாய்ச் சுட்டு இறக்கி காலே மாலே இருவேளையும் சாப்பிட நீரிழிவு தீரும்.

### 897. பிரமியத்திற்குக் கரிசலாங்கண்ணி மருந்து

கரிசலாங்கண்ணி கருஞ்சீரகம்

இவ்விரண்டையும் சமமாகக்கொண்டு நிழலிலுலர்த்தி அதற்குச் சமயெடை சர்க்கரையுங் கூட்டி நன்ருகக் கல்லுர லிலிட்டிடித்து வஸ்திரகாயஞ் செய்துகொண்டு ஒரு கடியளவு எடுத்து தினமும் சாப்பிட்டு வரவும். *3* நாட்க ளுக்குச் சாப்பிட சகல பிரமிய நோய்களும் தீரும்.

**பத்தியம்:—** புளியை நீக்கி, நெய் வார்த்து சாதம் சாப்பிடவும்.

### 898. எட்டுவித பிரமியத்திற்கும்

கோவையிலே அரைத்த விழுது எலுமிச்சங்காயளவு ஓமம் அரைத்த விழுது எலுமிச்சங்காயளவு, புளியிலேச் சாறு ½ படி இவைகளே ஒன்றுபடச்செய்து கலக்கிக் குடிக்க சகல பிரமியங்களும் தீரும்.

## 899. பிரமியத்திற்கு பஞ்சகவிய கிருதம்

| | |
|---|---|
| பசுவின் தயிர் | பசுவின் பால் |
| பசுவின் நெய் | பசுவின் மூத்திரம் |
| பசுவின் சாணம் | |

இவைகள் சமமாகக்கொண்டு யாவற்றையும் ஒன்றுபடக் கலந்துகொள்ளவும். இதன் மொத்த அளவு 1 படியா யிருக்கவேண்டும்.

| | |
|---|---|
| இளநீர் | 1 படி |
| தாழை விழுதின் சாறு | ,, |
| பொன்னாங்காணிச்சாறு | ,, |
| தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு | ,, |
| கருப்பஞ்சாறு | ,, |

இவைகளை ஒன்று கலந்து, அதில்

| | |
|---|---|
| அதிமதுரம் | செங்கழுநீர்க்கிழங்கு |
| கிராம்பு | ஏலக்காய் |
| கோஷ்டம் | கொறுக்காப்புளி |
| தான்றிக்காய்தோல் | கடுக்காய்த்தோல் |

இவைகள் வகைக்கு 1 பலமெடுத்து 8 படி தண்ணீர் விட்டு எட்டிலொன்ருய்க்காய்ச்சி அத்துடன் சாறு, நெய் வகைக ளும் கலந்து 3 நாட்கள் எரித்து, நான்காவது நாளன்று கடுகுதிரளக் காய்ச்சி வடிக்கவும். இதனுடன்சீனி சேர்த்து 3 பேயன் வாழைப்பழத்தையும் மாலையில் அதில் போட்டு மறுதினம் காலையில் மூன்று பழங்களையும் உட்கொள்ளவும்.

**இதனால் தீரும் வியாதிகள் :**

பித்தப்பிரமேகம், நீர் எரிச்சல், 5 வகை பிரமிய ரோகங்கள் முதலியவை தீரும்.

## 900. இரத்தப் பிரமியம், சுக்கிலப் பிரமியம் முதலானதற்குக் களி

(1) அத்திப்பட்டை குருவையரிசி

இவ்விரண்டையும் சமமாக எடுத்துச் சிறிது தண்ணீர் விட்டு அடுப்பின் மேலேற்றி களிப்பதமாகக் கிண்டிச் சாப்பிடவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும்:**

இக்களியில் நார்த்தங்காயளவு எடுத்து சுத்தமான நல்லெண்ணெயில் குழப்பி உட்கொள்ள, வெகுநாட்பட்ட இரத்தப் பிரமேகம், சுக்கிலப் பிரமேகம் முதலான நோய்கள் தீரும்.

(2) கருஞ்சீரகம் கருந்தக்காளியிலை

இவ்விரண்டும் சமமாக எடுத்து அரைத்து வெள்ளாட்டுப் பாலில் குழப்பி உட்கொள்ள இரத்தபிரமியம், சுக்கிலப் பிரமியம் தீரும்.

(3) தாழைவிழுதின் சாற்றில் சர்க்கரையைப்போட்டு சாப்பிட்டாலும் அல்லது மாக்கல் பொடி ஒரு காசிடைக்கு 2 நாழித்தயிர் விட்டுச் சாப்பிட்டாலும், அதிக சீக்கிரத்தில் இரத்தப்பிரமியமும், சுக்கிலப்பிரமியமும் தீரும்.

(4) மயிர்மாணிக்கம் இலை 1 பிடி

இதைக்கொணர்ந்து நைவாயரைத்துப் பசுவின் பாலில் குழப்பிச் சர்க்கரை சேர்த்துத் தினம் ஒரு வேளை வீதம் 3 நாட்களுக்கு அதிகாலையில் குடித்திட இரத்தபிரமேகம், சுக்கிலப்பிரமேகம் முதலான நோய்கள் தீரும்.

(5) செம்முள்ளியிலையைப் பறித்துவந்து அப்படியே வேகவைத்து அதை மறுபடியும் நெய் தெளித்த சட்டியில் இட்டு வறுத்து ஒரு எலுமிச்சங்காயளவு எடுத்து நெய்யில் குழைத்துச் சாப்பிட தீரும்.

(6) முசுமுசுக்கையை சமூலமாகவே கொணர்ந்து தண்ணீர் விடாமல் இடித்துச் சாறு பிழிந்து ஒரு உழக்கு சாறெடுத்து தலையில் தேய்த்துக்கொண்டு, ஆமணக்கெண்ணெயை 3 நாளைக்குத் தலையில் தேய்த்து, நான்காவது நாள் தலை முழுக சுக்கில பிரமேகம், நீர் கடுப்பு முதலானவைகள் தீரும்.

(7) தும்பையிலையை ஒரு புன்னைக்காயளவு எடுத்து அம்மியிலிட்டு தண்ணீர் விடாமல் நைவாயரைத்து எருமை மோருடன் கலந்து 10 நாட்களுக்கு உட்கொள்ள சுக்கிலப் பிரமேகம் தீரும்.

## 901. நீர்மோருபோல் கழிகிற கழிச்சலுக்கு மா

(1) குருவையரிசிமாவைத் தண்ணீர்விட்டான் கிழங்குச் சாற்றில் ஊறவைத்து அடுப்பின்மேல் ஏற்றிக்களிபாகக் கிண்டவும். இதை 3 நாட்கள் நல்லெண்ணெயில் தோய்த்துத் திண்ணவும்.

(2) பெருந்துத்திவேரை பசுவின் பாலில் அரைத்துக் குடிக்கத் தீரும்.

(3) தூதுவளை வேரைப் பசுவின் பாலில் அரைத்துக் குடிக்க தீரும்.

## 902. இருபதுவகைப் பிரமியத்திற்கும் பாகு

| | |
|---|---|
| காட்டுக்கருணைக்கிழங்கு | 16 பலம் |
| கடுக்காய் | 5 ,, |
| செங்கொடிவேலி வேர் | 5 ,, |
| அழிஞ்சில் வேர் | 4 ,, |
| சவ்வியம் | 3 ,, |
| மிளகு | 1 ,, |
| சீரகம் | 1 ,, |
| திப்பிலி | 1 ,, |

இவைகளை இடித்து வஸ்திரகாயஞ்செய்து இதற்குச் சம எடை சினி சேர்த்துத் தண்ணீர் விட்டு அடுப்பிலேற்றிப் பாகு காய்ந்து குழம்பாய் வரும்பொழுது இறக்கிக் கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

ஒரு மண்டலம் வரை தினம் காலை மாலை 1 கழஞ்சு அளவு உட்கொள்ள மூத்திரக்கிருச்சிரம், குஷ்டம், மூலக் கிராணி, குன்மம், 20 வகை பிரமேகம், பாண்டுரோகம் முதலான நோய்கள் திரும்.

## 903. ஸ்திரீகளின் பெரும்பாட்டிற்கு மருந்து

(1) அத்திப்பிஞ்சை இடித்து வெந்நீர் விட்டுப் பிசைந்து வடிகட்டி 10 நாட்கள் தினம் காலை, மாலை இரு வேளையும் சாப்பிட்டு, மேலே ½ படி சுத்த ஜலம் சாப்பிட ஸ்திரீகளின் பெரும்பாடு தீரும்.

(2) காரையிலையை அரைத்து அதில் எருமை மோரை யுங் கலந்து காலையும் மாலையும் உட்கொள்ள ஸ்திரீகளின் பெரும்பாடு தீரும்.

## 904. மேக வாயுவுக்கு அசுவகந்திப் பிட்டு

அமுக்கராக்கிழங்கைப் பசுவின் பாலில் சுத்திசெய்து நிழலிலுலர்த்தி அதில் ½ சேர் பறங்கிப்பட்டை 1 சேர் எடுத்து முசுமுசுக்கைச்சாற்றில் ஊறவைத்து அதையும் உலர்த்திக்கொள்ளவும்.

இவ்விரண்டையும் இடித்துத் தூள்செய்து சரிநிறை எடுத்துக்கொண்டு அத்துடன்

இரசகற்பூரம் மிருதார்சிங்கு
சாதிலிங்கம்

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

கொடிவேலி வேர்ப்பட்டை 1 பலத்தையும் சேர்த்து எல்லாச் சரக்குகளையும் முசுமுசுக்கைச் சாறு விட்டு அரைத்துக்கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| சந்தனம் | சாம்பிராணி |
| குங்கிலியம் | ஓமம் |
| கருஞ்சீரகம் | |

இவைகள் வகைக்கு 1 பலம் எடுத்து ஒரு சட்டியில் போட்டு வேடுகட்டி அதன்மேல் மேற்கூறிய தூள் செய்தவைகளை வைத்து மேலும் ஓர் சட்டியை மூடிச் சீலைமண் செய்து அடுப்பின் மேலேற்றி இளந்தீயாக ஒரு முகூர்த்தம் (இரண்டு நாழிகை) வரை எரித்து எடுத்துக்கொள்ளவும்.

இதைத் தினமும் ஒரு காசிடைப் பிரமாணம் எடுத்து ஒரு மண்டலம் வரையில் சாப்பிட்டுவர, சூடு (காங்கை) மேக வாயு குணமாகும்.

### 905. மேகத்துக்கு பறங்கிப் பட்டை

| | |
|---|---|
| சீனக்கற்கண்டு | 3 பலம் |
| பறங்கிப்பட்டை | 3 பலம் |
| வெள்ளைக்குங்கிலியம் | 1 பலம் |
| சீரகம் | ,, |
| சோம்பு | ,, |

இவைகளைத் தூள் செய்து எலுமிச்சம்பழச்சாறு நல்லெண்ணெய் இவ்விரண்டையும் சமமாகச் சேர்த்து, மருந்துத் தூளை அதில் போட்டு கையால் நன்றாய் மத்தித்து மேலும் அதிமதுரத் தூளையும் போட்டு ஒன்றுபடக் கலந்து, தினம் காலையும் மாலையும் கொட்டைப்பாக்களவு சாப்பிட்டுவர பலவகைப் பிரமியம் தீரும்.

**பத்தியம்:—** கைப்பும், புளிப்பும் நீக்கவும்.

## 906. மேகம் 21 வகை, கல்லடைப்பு பகுமூத்திரம், வெட்டை, கண்காலெரிவு, பாண்டு முதலானதற்குச் சந்திரகாதி மருந்து

| | |
|---|---|
| முந்திரிப்பழம் | சீரகம் |
| மூங்கிலுப்பு | நிலக்குமிழ்வேர் |
| இலவம்பிசின் | கோஷ்டம் |
| அதிமதுரம் | நிலப்பனங்கிழங்கு |
| தக்கோலம் | இலவங்கப்பத்திரி |
| கொத்தமல்லி | முருங்கைவிதை |
| பேரீச்சங்காய் | சிறுநாகப்பூ |
| தண்ணீர்விட்டான்கிழங்கு | நெருஞ்சிக்காய் |
| சிலாஜத்து | மரமஞ்சள் |
| பூனைக்காலிவிதை | ஏலம் |
| பொன்னுங்காணிவேர் | அறுகம்வேர் |
| விளாமிச்சைவேர் | ஜாதிக்காய் |
| கல்நார் | கோரைக்கிழங்கு |
| அமுக்கராவேர் | செங்கழுநீர்க்கிழங்கு |
| பச்சைக்கற்பூரம் | |

இவைகள் வகைக்கு 1 பலம் எடுத்து மெல்லியதாக இடித்து வஸ்திரகாயஞ் செய்து யாவற்றிற்கும் சமஎடை சீந்திற் சர்க்கரையைச் சேர்த்துப் புதிய சட்டியில் எடுத்து வைத்துக்கொள்ளவும்.

### இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :

இதில் 2 வராகனெடை வீதம் எடுத்துத் தேனில் கலந்து தினம் காலை, மாலை இருவேளையும் சாப்பிட, 21 வகை வெட்டை, வெகு மூத்திரம், நீரடைப்பு, பெரும்பாடு, கைகால் எரிவு, யோனிரோகம், தாகம், பித்த உஷ்ணம், மேகரோகத்தினுல் ஏற்படும் காய்ச்சல் முதலியவைகள் தீரும். இதற்குச் சந்திரகாதி மருந்து என்று பெயர்.

## 907. மது மேகத்திற்குத் தான்யாதி மருந்து

| | |
|---|---|
| தினை | சாமையரிசி |
| கேழ்வரகு | கம்பு |
| சோளம் | அரிசி |
| வரகரிசி | குறப்பரிசி |
| உடும்புத்தலை | ஆவாரையரிசி |
| ஆவரைப்பட்டை | விடத்தேரியிலை |
| விளாம்பிசின் | |

இவைகளைச் சமமாகக்கொண்டு சட்டியில்போட்டு வறுத்து நன்ருய் இடித்துச் சூரணஞ்செய்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ளவும். இதில் ஒரு வெருகடிப்பிரமாணம் எடுத்து சாப்பிட்டுவர மேற்கூறிய நோய்கள் தீரும்.

## 908. பறங்கிப்பட்டை அல்வா

| | |
|---|---|
| பறங்கிப்பட்டை | பிரப்பங்கிழங்கு |
| சுக்கு | வால்மிளகு |
| கறுவாப்பட்டை | சீரகம் |
| மிளகு | வெந்தயம் |
| பெருஞ்சீரகம் | பிஞ்சுக்கடுக்காய் |
| நிலப்பனங்கிழங்கு | |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை

| | |
|---|---|
| குழவுஜீனி | அஷ்டகிராம்சர்க்கரை |
| முசுமுசுக்கைப்பழம் | பேய்ப்புடல் |
| நிலாவரை | |

இவைகள் வகைக்கு $\frac{1}{4}$ சேர்

| | |
|---|---|
| பற்பாடகம் | நன்ஞரிவேர் |
| கோரைக்கிழங்கு | திராக்ஷை |
| வில்வவேர் | தேஜோவதி |
| அமுக்கராக்கிழங்கு | தூதுவளைப்பழம் |
| இரத்தப்பூவரசு | |

இவைகள் வகைக்கு 3 வராகனெடை.

கடுக்காய் தான்றிக்காய்
நெல்லிமுள்ளி ஜாதிக்காய்
ஜாதிப்பத்திரி கோரோசனை
சிறுநாகப்பூ

இவைகள் வகைக்கு 1 வராகனெடை

சம்பைச் சரக்குகளை இலேசாக வறுத்துத் தூள்செய்து வஸ்திரகாயஞ்செய்து கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| இஞ்சிச்சாறு | ½ சேர் |
| பால் | 1 சேர் |
| தேன் | 1½ சேர் |
| வெங்காயச்சாறு | ½ சேர் |
| நெய் | 1½ சேர் |

சர்க்கரையைப் பாகு செய்யவும். பாகு காயும்பொழுது பாலைவிட்டு அதிலுள்ள அழுக்கை நீக்கிவிடவும். பிறகு எல்லாச் சாமான்களையும் கொண்டு அல்வா செய்யும் முறைப்படி செய்து கிண்டி எடுத்துக்கொள்ளவும்.

தினம் இருவேளையும் இம்மருந்தை உட்கொண்டு வரவும். வாயுபதார்த்தங்களை பத்தியத்திற்கு விலக்கவும்.

நெய், பால் இவைகளை மிகுதியாகச் சேர்த்துக் கொள்ளவும்.

## 909. ஸ்திரீகள் கர்ப்பந்தரிக்க

அத்திவேரைக் கொணர்ந்து நன்ருக இடித்துத் தூள் செய்து வஸ்திரகாயஞ்செய்து, இத்துடன் சர்க்கரையும், அரிசிமாவையும் சமமாகக்கலந்து நெய்யையுங் கூட்டி பக்குவஞ் செய்து 21 நாட்கள் உட்கொள்ள கர்ப்பந்தரிக்கும்.

## 910. விஷபேதிக்கு மருந்து

மிளகு சூடம்
ஜாதிக்காய் கருவாப்பிசின்

| | |
|---|---|
| அபின் | இரசகற்பூரம் |
| நெல்லிமுள்ளி | வெந்தயம் |
| கிராம்பு | பெருங்காயம் |

இவைகள் வகைக்கு 2 வராகனெடை வீதம் எடுத்து சடைக் கஞ்சாச் சாற்றில் அரைத்து, கடலை அளவு உருட்டி உலர வைத்து சாராயத்திலாவது தேனிலாவது ஒரு மாத்திரை யைக் கொடுக்க பேதி நிற்கும்.

அதிகமான தாகம் ஏற்பட்டால் அப்பொழுது கொடி வேலியும் சுக்கும் போட்டு சுண்டக்காய்ச்சி வடிகட்டிக் கொடுக்கவும். நெற்பொரியும் தண்ணீரும் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிக்கொடுக்கத் தாகம் தீரும்.

## 911. இடுப்புவலிக்கும் தாதுவிருத்திக்கும் மருந்து

| | |
|---|---|
| புரசம்பிசின் | ½ வராகனெடை |
| ஜாதிக்காய் | ,, |
| ஜாதிப்பத்திரி | ,, |
| கிராம்பு | ,, |
| நிலக்கடம்பு | 1 வராகனெடை |
| நீர்முள்ளிவிதை | 2 பலம் |
| எள் | 1 பலம் |

பச்சைக் கடலைமாவு தேவையான அளவு

இவைகளை எல்லாம் இடித்து ஒரு தேங்காயில் துவாரமிட்டு அதனுள் தண்ணீரை நீக்கிவிட்டு இம்மருந்துகளை, உள்ளுக் குத் திணித்துத் துவாரத்தை மூடி தேங்காயின்மேல் சாணத் தால் 3 விரல்கனம் கவசஞ் செய்து புடத்தில் வைத்து எரிக் கவும். தேங்காய் வெந்து வெடித்த உடன் எடுத்து அதி லுள்ள மருந்து, கொப்பரை முதலானவைகளை எடுத்துக் கொண்டு அத்துடன் 2 பலம் வெல்லத்தையும் சேர்த்து பக் குவமாய் அரைத்து வைத்துக்கொண்டு தினம் இருவேளை யும் சாப்பிட்டுவர இடுப்புவலி தீர்ந்து, தாதுபுஷ்டியுமுண் டாகும்.

## 912. மேகரோகங்களுக்கு கந்தக லேகியம்

சுத்திசெய்த 1 பலம் கந்தகத்தை உருக்கி வெள்ளை அம்மான் பச்சையரிசிச் சாற்றில் ஊற்றிச் சுருக்கங்கொடுக்கவும் பிறகு 20 ரஸ்தாளிப்பழச் சாற்றில் கந்தகத்தூளைப்போட்டு இவைகளின் மொத்த எடைக்கு கற்கண்டைப் பொடித்துப் போட்டு தேன் $\frac{1}{4}$ சேர், நெய் $\frac{1}{4}$ சேர் இவைகளையும் கூட்டி பிறகு லேகியபதமாகும் வரையில் தினம் சூரிய புடத்தில் வைக்கவும்.

இம்மருந்தைத் தினம் இரு வேளையுமாக 10 நாள், 21 நாள், 41 நாள் வரையில் ஒரு கொட்டைப்பாக்களவு எடுத்துச் சாப்பிட மேகவாயு, மேகவிரணம், மேகஊறல், மேகக்கருப்பான், மேகக்கிரந்தி முதலானவைகள் தீரும்.

**பத்தியம் :** இச்சாபத்தியமிருக்கவும்.

**குறிப்பு :** (வாழைப்பழத்துடன் உமியைச் சேர்த்துப் பிசைந்து பிழிந்தால் சாறு வரும்.

## 913. பெரும்பாட்டிற்குச் சாறு

நாவற்பட்டையைப் புளித்த எருமை மோரில் போட்டு பஞ்சுபோலிடித்து, அதைப் பிழிந்து ஒரு ஆழாக்கு சாறு எடுத்து, அதில் நல்ல சந்தனம் $\frac{1}{2}$ பலம் கலந்து மூன்று நாட்கள் காலையில் மட்டும் உட்கொள்ள பெரும்பாடு திரும்.

இம்மருந்திற்குப் பத்தியமில்லை.

## 914. அம்ரபாகம் (மாம்பழப் பாகு)

நன்றாகப் பழுத்த மாம்பழங்களை எடுத்துச் சாறு பிழிந்து 1024 தோலா எடை அளவுக்குச் சாறு தயாரிக்கவும். பிறகு

| | | |
|---|---|---|
| கற்கண்டு | 156 | தோலா |
| நெய் | 128 | ,, |
| சுக்கு | 64 | ,, |
| மிளகு | 32 | ,, |
| திப்பிலி | 16 | ,, |
| தண்ணீர் | 256 | தோலா |

இவைகளை எல்லாம் ஒன்றுகூட்டி ஒரு புதுப்பானையில் போட்டு மரத்துடுப்பினுல் கிளறிக் கொடுக்கவும். பிறகு இதில்

| | |
|---|---|
| திப்பிலிமூலம் | கோரைக்கிழங்கு |
| செவ்வியம் | கொத்தமல்லி |
| சீரகம் | கருஞ்சீரகம் |
| ஏலக்காய் | நாககேசரம் |
| கறுவாப்பட்டை | தாளீசபத்திரி |

இவைகள் எல்லாம் சேர்த்துச் செய்த சூரணம் 16 தோலா. பிறகு சர்க்கரையைப் பாகு செய்து அதில் மேற்கூறியதையும் சர்க்கரையைப் பாகு பக்குவமானதும் அதில் 164 தோலா தேனையும் கூட்டி எல்லாம் ஒன்றுபடக் கலந்து எடுத்துக் கொள்ளவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும்:**

இதில் போஜனத்திற்கு முன் தினம் 4 தோலா அளவு எடுத்து உட்கொள்ள இருமல், க்ஷயம், பீனிசம், ஜலதோஷம், அம்லபித்தம், இரத்த பித்தம், முகரோகம், ஸ்வர பங்கம், சகல மூலவியாதி, பாண்டுரோகம், காமாலை, இருதய ரோகம், கபால சூலை, அநாஹம், மலபந்தம், மூத்திர பந்தம், சொறி, சிலேத்தும பித்தம் இவைகள் தீரும்.

தவிர இதை ஒருவன் உட்கொள்வதால் நிரோகி, குணவான், நூறு வருடங்கள் வரை ஆயுளுடையவன், அழகுடையவன் இவ்வாறு விளங்குவான். கற்பச் சிதைவு ஏற்படக் கூடிய ஸ்திரீகளுக்குப் புத்திரசந்தானமேற்படும். தினம்

இதை ஒருவன் உட்கொண்டால் அனுமனைப்போல் பலிஷ்டனாவான்.

## 915. குங்கும லேகியம்

| | |
|---|---|
| சுக்கு | மிளகு |
| திப்பிலி | கறுவாப்பட்டை |
| ஏலக்காய் | இலவங்கப்பத்திரி |
| சிறுநாகப்பூ | கடுக்காய் |
| தான்றிக்காய் | நெல்லிமுள்ளி |
| கிராம்பு | காரகில் |
| வெண்சந்தனம் | நீர்முள்ளிவிதை |
| அக்கராகாரம் | ஜாதிக்காய் |
| பூனைக்காலிவிதை | இலவம்பிசின் |
| மயிர்மாணிக்கவிதை | அமுக்கராக்கிழங்கு |
| ஆனைநெருஞ்சில் | கருப்புமுசலிக்கிழங்கு |
| வாயுவிளங்கம் | சமுத்திரசோகைவித்து |
| சுத்திசெய்தஎட்டிவிதை | ஜாதிப்பூ |
| வால்மிளகு | |

இவைகள் சமமாகக் கொள்ளவும். பிறகு இவைகளின் மொத்த அளவில் 20 பாகம் குங்குமப்பூவும், கஸ்தூரி 16 பாகமும், சர்க்கரை 4 பாகமுமாய் எடுத்துக்கொள்ளவும். பிறகு இத்துடன்,

| | |
|---|---|
| வங்கபற்பம் | பாதரசம் |
| அப்பிரகபற்பம் | லோகபற்பம் |
| காந்தபற்பம் | தாமிரபற்பம் |

இவைகள் வகைக்கு 1 பாகம்

தங்கரேக்கு 300 வெள்ளிரேக்கு 200
சுத்திசெய்த கஞ்சாயிலை 8 பாகம்

இவ்வாறு மருந்துகளை எல்லாம் எடுத்து லேகியம் செய்யும் முறைப்படி செய்து உபயோகிக்கவும்.

**இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :**

தினமும் விடியற்காலையில் 1 தோலா லேகியத்தை உட்கொண்டுவரச் சகல வியாதிகளும் தீர்ந்து வீரிய விருத்தியுண்டாகும்.

வாதரோகம், வலியுடன் கூடிய வாதரத்தம், அஸ்திரோகம் சந்திரரோகம் முதலான நோய்கள் தீரும்.

## 916. நாரிகேள வடை

| | |
|---|---|
| தேங்காய் | 64 தோலா |

இதை அம்மியின்மேல் வைத்து நைவாயரைத்து உருண்டை செய்யவும். பிறகு ஒரு பெரிய பாத்திரத்தில் அதைப் போட்டு அதில் தேங்காயின் தண்ணீர் விட்டு 16 தோலா சுத்தமான பசுவின் நெய், 64 தோலா சர்க்கரையையும் போட்டு அடுப்பின் மேலேற்றி இளந்தீயிட்டுக் கரண்டியால் மிருதுவாகக் கடைந்து பாகு செய்யவும். அந்தப்பாகு கரண்டியில் ஒட்டவாரம்பித்ததும் அதில்

| | |
|---|---|
| கறுவாப்பட்டை | ஏலக்காய் |
| இலவங்கப்பத்திரி | மிளகு |
| சுக்கு | சீரகம் |
| வாயுவிளங்கம் | பெருஞ்சீரகம் |
| ஜாதிப்பத்திரி | |

இவைகள் வகைக்கு 1 தோலா வீதம் எடுத்துப் பொடி செய்துபோட்டு இந்த பாகை சூட்டுடன் ஒரு பெரிய தாம்பாளத்தில் ஊற்றி ஆறவைக்கவும். பிறகு அதை எடுத்து வடை தட்டவும். ஒரு பழகிய நெய்ப்பானைக்கு சுகந்த தூபத்தினுல் தூபமிட்டு அதில் வடைகளை பத்திரப் படுத்தவும்.

**இதனுல் தீரும் வியாதிகள் :**

இம்மருந்து இருதயத்திற்கு ஹிதம் செய்ய வல்லது. சீதளமானது, தம்பனம் செய்யவல்லது. இதனுல் இரத்த

பித்தம், விஷ தோஷம், வாத இரத்தம், நேத்திர ரோகம் வாதம், பித்தம் இவைகள் தீரும். வீரியம், பலம், சுகம், தாது, சௌந்தரியம், சரீர காந்தி முதலானவைகள் ஏற்படும். தவிர தினவு, கண்ட ரோகம், இருதய ரோகம் மூலவியாதி, உன்மாதம், நான்கு வகை பெரும்பாடு முதலான நோய்களைக் கண்டிக்கும்.

## 917. சியவனப்ராசம்

| | |
|---|---|
| பாதிரி | அகில் |
| பெருங்குமிழன் | வில்வம் |
| பெருமரம் | நெருஞ்சில் |
| சிற்றுமல்லி | பேராமல்லி |
| கண்டங்கத்தரி | சிறுவழுதுணை |
| திப்பிலி | கர்கடகசிங்கி |
| திராக்ஷை | சிந்தில் |
| கடுக்காய் | சிற்றுமுட்டி |
| கீழாநெல்லி | ஆடாதோடை |
| ருத்தி | ஜீவந்திப்பாலை |
| பூலாங்கிழங்கு | சீரகம் |
| நிஷபகம் | கோரைக்கிழங்கு |
| அல்லிக்கிழங்கு | சிறுகோவைக்கிழங்கு |
| நரிப்பயறு | பெருவீடு |
| கொள்ளி | நிலப்பூசணிக்கிழங்கு |
| சாரணை | காகோலி |
| க்ஷீரகாகோலி | தாமரை |
| மேதா | மகாமேதா |
| சிற்றேலம் | அகில்கட்டை |
| சந்தனம் | |

இவைகள் வகைக்கு 1 பலம் எடுத்து ஒன்றிரண்டாக இடித்துச் சூரணம் செய்து ஒரு பெரிய பாத்திரத்தில் 32 சேர் தண்ணீர் விட்டு மேற்கூறிய சூரணத்தையும் போட்டு மேலும் 500 நெல்லிக்கனிகளையும் போட்டு பக்குவம் செய்து, எட்டிலொரு பங்கு கஷாயமிறக்கி வடிகட்டி அதிலுள்ள நெல்லிக்காயை எடுத்துக் கொட்டைகளை நீக்கி வஸ்திரத்தில் போட்டு நன்ருய் பிழிந்துகொள்ளவும். பிறகு சக்கையை எடுத்து ஏழு பலம் நெய்யில் சிறிது சிறிதாகப்போட்டு பொரித்துக்கொண்டு தூள் செய்து முன்பு கூறிய கஷாயத்தில் சேர்த்து பின்னும் 50 பலம் கற்கண்டைத் தூள்செய்து போட்டு லேகிய பதமாகக் கிண்டி எடுத்துக்கொள்ளவும். பிறகு

| | |
|---|---|
| திப்பிலி | 2 பலம் |
| மூங்கிலுப்பு | 4 பலம் |
| இலவங்கப்பட்டை | ஏலம் |
| இலவங்கப்பத்திரி | நாககேசரம் |

இவைகள் வகைக்கு மூன்றுவீசம் பலம் எடுத்துச் சூரணித்துத் தயாரித்திருக்கும் லேகியத்தில் ஒன்றுபடக் கலந்து, 6 பலத் தேனையும் அதில் ஊற்றி கிளறி எடுத்துக் கொள்ளவும்.

### இதன் பரிமாணமும் தீரும் வியாதியும் :

க்ஷயரோகத்தினுல் பீடிக்கப்பட்டவர்கள் சரீர பலத்தையும், ரோக பலத்தையுமனுசரித்துக் கூட்டியும் குறைத்தும் சாப்பிடவும். இம்மருந்தைச் சிறுவர்கள் முதல் வயோதிகர்கள் வரை சாப்பிடலாம். தாது சூன்யமுடையவர்கள், இருதய ரோகமுள்ளவர்கள், ஸ்வரம் க்ஷீணித்தவர்கள் உபயோகிக்க மிகுதியான அனுகூலங்கிட்டும். காசம், சுவாசம், நாவறட்சி, வாத இரத்தம், மார்பிடிப்பு வாத பித்தம், சுக்கிலதோஷம், மூத்திரதோஷம் முதலானவைகள் தீரும். புத்தி தீக்ஷண்யம், ஞாபக சக்தி, புருஷத்துவம், தாதுபுஷ்டி, தேககாந்தி முதலானவைகள் மிகுதியாக உண்டாகும்.

## சுத்தி வகைகள்
### (மருந்துகளின் சுத்தி)

### 918. தங்க சுத்தி

அபரஞ்சித் தங்கத்தகட்டைச் செம்மண்ணால் கவச மிட்டு நெருப்பைப்போல் சிவக்கக் காய்ச்சி எடுக்க சுத்தியா கும்.

### 919. வெள்ளியின் சுத்தி

வெள்ளியை மெல்லிய தகடாகத் தட்டிக்கொண்டு காட்டுப்பாகல் கிழங்கின் சாற்றில் 7 தடவை சுறுக்கங் கொடுக்க வெள்ளி சுத்தியடையும்.

### 920. தாமிரத்தின் சுத்தி

(1) அப்பிரகம் பாதரசம்
வெங்காரம் குன்றிமணிப்பருப்பு
சதிக்ஷாரம் கா துகுரும்பை

இவைகள் வகைக்கு 1 வராகனெடை யாவற்றையும் கல்வத்திலிட்டு எருக்கம்பால் விட்டு அரைத்து தாமிரத் தகட்டின்மேல் கவசஞ்செய்து 10 வறட்டியில் வைத்துப் புடம்போட்டு எரிக்க சுத்தியாகும்.

(2) தாமிரத்தை ஈசலிறகைப்போல் மெல்லியதாய்த் தட்டி நெருப்பைப்போல் பழுக்கக்காய்ச்சி கொள்ளுக் கட்டில் நனைத்துச் சுறுக்கம் கொடுக்கவும். இவ்விதம் ஏழு தடவை பாவனம் செய்துகொள்ளவும். பிறகு,

பொன்னாங்காணியிலைச்சாறு புளித்தமோர்
புளியிலைச்சாறு கற்றாழைச்சாறு

இச்சாறுகளில் தனித்தனியே எவ்வேழு தடவை தாமிரத் தைக் காய்ச்சி சுறுக்கம் கொடுத்து எடுத்தபின் தாமிரம் சுத்தியாகும்.

(3) ஆகாசத்தாமரையின்சாறு
கலியாணமுருங்கைப்பூவின் சாறு

இவ்விரண்டில் ஏதேனுமொரு சாற்றை ஒரு கலயத்தில் போட்டு அதில் ஏழு தடவை தாமிரத்தை உருக்கி ஊற்றச் சுத்தியாகும்.

## 921. கருவங்கம், வெள்வங்கம் இவைகளின் சுத்தி

| | |
|---|---|
| எள்ளெண்ணெய் | கோமூத்திரம் |
| காடி | புளித்தமோர் |
| கொள்ளுக்கட்டு | எருக்கம்பால் |
| வெள்ளாட்டுப்பால் | |

இவைகளில் வங்கத்தை உருக்கி ஒவ்வொரு வகையிலும் எவ்வேழுதடவை சுறுக்கம் கொடுக்கச் சுத்தியாகும்.

## 922. கருவங்கச்சுத்தி

வெள்ளாட்டுப் பாலில் பிரண்டைக் கொடியை அரைத்துக் குழப்பி அத்துடன் நல்லெண்ணெயும் கலந்து அதில் வங்கத்தை உருக்கி 10 தடவை ஊற்றி சுறுக்கங் கொடுக்க வங்கமானது சுத்தியாகும்.

## 923. இரச கற்பூரச் சுத்தி

வெற்றிலை மிளகு

இவ்விரண்டின் சாற்றில் தனித்தனியே ஒவ்வொரு தடவை இரசகற்பூரத்தை டோலாயந்திர முறைப்படி மூன்று நாட்களுக்கு ஊறவைத்துப் பிறகு காய்ச்சி எடுத்துக்கொள்ள இரச கற்பூரமானது சுத்தியடையும்.

## 924. வெங்கலச் சுத்தி

வெங்கலத்தைத் தணல்போல் காய்ச்சி புளியிலைச் சாற்றில் மூன்றுமுறை ஊற்றிச் சுறுக்கம் கொடுக்கவும்.

பின்பும் மூன்று முறை இவ்விதமே கொள்ளுக்கட்டில் சுறுக்கம் கொடுக்க வெங்கலம் சுத்தியடையும்.

## 925. உலோகத்தூளின் சுத்தி

(1) உலோகத்தூள் (இரும்புத்தூள்) 2 சேர் எடுத்து ஒரு கிண்ணத்தில் போட்டு 6 மாதக் காடியை வார்த்து தூள் முழுவதும் முழுகும்படி செய்யவும். இதில் 4 எலுமிச்சம்பழ ரசத்தைப் பிழிந்து 7 நாட்களுக்கு வெய்யில் அல்லது நிழலில் வைத்து சாறு சுண்டியதும் மேலும் எலுமிச்சம்பழ ரசத்தை ஊற்றி வரவும். இவ்வாறு ஏழு நாட்களுக்குப் பின்பு இதை எடுத்து ஏழு தடவை நிர்மல மான தண்ணீரில் கழுவி வைக்க இரும்பு சுத்தியாகும்.

(2) இரும்புத்தூளை ஒரு நாள் எலுமிச்சம் பழச் சாற்றில் ஊறவைத்து மறுநாள் எள்ளெண்ணெயில் ஊற வைக்கவும். பிறகு அதை எடுத்து ஒரு பானையில் போட்டு நன்முக வறுத்துக் காடியில் கழுவி மறுபடியும் கருவேலம் பட்டையின் சாற்றில் போட்டு நன்ருகக் காய்ச்சி காடியில் கழுவிச் சுத்தம் செய்துகொள்ள இரும்புத்தூள் சுத்தியடை யும்.

## 926. பாதரசத்தின் சுத்தி

பாதரசம் 20 வராகனெடை

இதை ஒரு புதுப்பானையில் போட்டு மேலும் 9 தோலா உத்தாமணியிலைச் சாற்றை அதில் கொட்டி கையால் நன்ருக மத்திக்கவும். இவ்வாறு மத்தித்த பாத ரசமானது ஈயம் உருகியது போலாகும். அப்பொழுது மறுபடியும் சிறிது உத்தாமணிச் சாற்றை விட்டு மத்தித்து அப்பாண்டத்தினுள் பாத்திரங்களுக்கு ஈயம் பூசுவதுபோல் உள்ளே பாதரச விழுதைப் பூசவும். பிறகு இப்பானையை எடுத்து வெய்யிலில் வைக்க நுரை எல்லாம் அடங்கி பாதரசம் மட்டிலும் எஞ்சி நிற்கும். இதை தென்னை

நாரினுல் சுறண்டி எடுத்து பத்திரப்படுத்தவும். இதே பாதரசத்தின் சுத்தி.

## 927. இலிங்க சுத்தி

தேன் முலைப்பால்

இவ்விரண்டில் ஊறவைத்து மறுநாட்காலையில் இலிங்கத்தை எடுத்து.

எலுமிச்சம்பழச்சாறு குப்பைமேனிச்சாறு
முலைப்பால்

இவைகளை எல்லாம் ஒன்றுகூட்டி அதில் இலிங்கத்தைக் காய்ச்சி ஒரு ஜாமம் முழுவதும் சுருக்கம் கொடுக்க இலிங்கம் சுத்தியாகும்.

## 928. இரசசௌவீரத்தின் சுத்தி

இளநீர்த் தண்ணீருடன் சிறிது கற்பூரத்தைக் கலந்து வைத்துக் கொள்ளவும். இதில் இரசசௌவீரத்தை டோலா யந்திர முறைப்படி தொங்கவிட்டு காய்ச்சி எடுக்க சுத்தியாகும். மருந்தை திரவத்தில் படாதபடி தொங்க விடவும்.

## 929. முத்து சுத்தி

ஊமத்தையின் சாற்றில் முத்தை ஒருநாள் முழுவதும் ஊறவைத்துப் பிறகு மறுநாட் காலையில் புளியிலைச் சாற்றில் ஊறவைத்து எடுத்து சுத்தமான தண்ணீரில் கழுவி எடுக்கச் சுத்தியாகும்.

## 930. வயிரத்தின் சுத்தி

சுத்தம் செய்த வயிரத்தை பிரண்டையின் சாற்றில் மூன்று நாட்கள் ஊறவைத்து நான்காவது நாள் எடுத்து வெய்யிலில் உலரவைத்துக்கொள்ள வயிரம் சுத்தியாகும்.

## 931. மரகதத்தின் சுத்தி

நாகப்பூ மரத்தின் வேரை அரைத்து உருண்டை செய்து அதனடுவில் மரகதத்தை வைத்து நன்ருக மூடி மேலும் சிலைமண் செய்து குக்குட புடத்தில் வைத்தெரிக்க மரகதம் சுத்தியடையும்.

## 932. நீலத்தின் சுத்தி

நீலத்தைக் கழுதையின் மூத்திரத்தில் ஒரு நாள் முழுவதும் ஊறவைத்து மறுநாள் வெய்யிலில் உலர்த்திப் பிறகு கழுவி எடுக்கச் சுத்தியாகும்.

## 933. மாணிக்க சுத்தி

மாணிக்கத்தைக் குதிரையின் மூத்திரத்தில் 3 நாட்கள் ஊறவைத்து நான்காம் நாள் வெய்யிலில் காயவைத்து பிறகு சுத்தமான தண்ணீரில் கழுவி எடுக்க மாணிக்கம் சுத்தியடையும்.

## 934. வைடூரிய சுத்தி

வைடூரியத்தைக் குதிரையின் மூத்திரத்தில் ஒரு நாள் முழுவதும் ஊறவைத்து அடுத்த நாள் எடுத்து பூசணிக காய்ச் சாற்றில் போட்டு வெய்யிலில் வைத்துப் பிறகு அதை எடுத்து நன்ருகக் கழுவி வைத்துக்கொள்ள வைடூரியம் சுத்தியாகும்.

## 935. பவளத்தின் சுத்தி

எலுமிச்சம்பழச் சாற்றில் பவளத்தை ஒரு நாள் முழுவதும் ஊறவைத்து மறுநாள் எடுத்து வெந்நீரில் கழுவி எடுக்க சுத்தியாகும்.

## 936. புஷ்பராகத்தின் சுத்தி

புஷ்பராகத்தை வெள்ளாட்டு மூத்திரத்தில் ஒரு நாள் முழுவதும் ஊறவைத்து மறுநாள் எடுத்து வெய்யிலில் வைத்து உலர்த்தி எடுக்கப் புஷ்பராகம் சுத்தியாகும்.

## 937. கோமேதக சுத்தி

கோமேதகத்தைக் குதிரையின் மூத்திரத்தில் 3 நாட்கள் ஊறவைத்துப் பிறகு எடுதது கழுவிக்கொள்ள சுத்தியாகும்.

## 938. அப்பிரகப் பரீக்ஷை

அப்பிரகமானது பார்வதிதேவியின் விரியத்திலிருந்து பிறந்தது. இது நான்கு வகைப்படும் :–

1. மண்டுகாப்பிரகம்
2. வஜ்ஜிராப்பிரகம்
3. நாகாப்பிரகம்
4. பிஞகாப்டிரகம்

## 939. மண்டுகோப்பிரகத்தின் பரீக்ஷை

மண்கோப்பிரகம் கொல்லனுலேயில் வைத்துக் காய்ச்சிஞல் தவளையைப்போல் தாவும்.

## 940. வஜ்ஜிராப்பிரகத்தின் பரீக்ஷை

வஜ்ஜிர அப்பிரகாரத்தைக் கொல்லனுலேயில் வைத்துக் காய்ச்சிஞல் புகையைப்போல் எரிந்து பறந்து போதும். இதைவிட இதை நெருப்பில் போட்டு பரீக்ஷை பார்ப்பது உசிதம்.

## 941. நாகாப்பிரகத்தின் பரீக்ஷை

நாகாப்பிரகத்தைக் கொல்லனுலேயில் வைத்துக்காய்ச்ச சர்ப்பத்தைப் போல் சீறி எழும்.

## 942. பிஞகாப்பிர பரிசை

பிஞகாப்பிரகத்தைக் கொல்லனுலேயில் வைத்துக் காய்ச்ச அப்பிரகம் உருகி சிவந்த நிறத்துடன் விளங்கும்.

## 943. அப்பிரகத்தின் குணம்

1. மண்டுகாப்பிரகம் வியாதியை உண்டாக்கும்.
2. பிஞகாப்பிரகம் வாயுவைக் கண்டிக்கும்,
3. நாகாப்பிரகம் சிலேத்தும உபத்திரவங்களே உண்டாக்கும்.
4. வஜ்ஜிராப்பிரகம் சகலவியாதிகளேயும் வெல்லும்.

## 944. அப்பிரக நிறத்தின் குணங்கள்

அப்பிரகத்தில் நான்கு வகை வர்ணங்கள் உண்டு.

1) சிவந்த நிறமுடைய அப்பிரகம் வாதரோகத்தை வெல்லும்.
2) வெந்நிறமுடைய அப்பிரகம் சிலேத்தும வியாதிகளேக் கொல்லும்.
3) பொன்னிறமான அப்பிரகம் உஷ்ணத்தை வெல்லும்.
4) கிருஷ்ணுப்பிரகம் (கருநிறமுடைய அப்பிரகம்) சகலவியாதிகளேயும் தீர்க்கும்.

## 945. அப்பிரகத்தின் வெண்ணெய் செய்யும் முறை

கிருஷ்ணுப்பிரகத்தை மூன்றுநாட்கள் காடியில் ஊற வைத்து நான்காவது நாள் உரலில் போட்டு மெல்லியதாக இடித்துக்கொள்ளவும். மறுபடியும் 3 நாட்கள் காடியில் போட்டுவைக்கவும்.

நான்காவதுநாள் அகலமான வாயுடைய ஒரு சட்டியை எடுத்து அதன் வாயை புதுத்துணியால் மூடி இறுகக் கட்டவும். பிறகு காடியில் ஊறிய அப்பிரகத்தூளை சிறிது சிறிதாக எடுத்து அந்தத் துணியின்மேல் போட்டு அத்தூளுக்கு ½ பங்கு நெல்லையும் கூடப்போட்டு சிறிது சிறிதாக காடியும் வார்த்து கையினுல் தேய்க்கவும். இவ்வாறு தேய்க்க சட்டியின் அடியில் அப்பிரகத்தின் நுண்ணிய தூள் குழம்பு பதத்துடன் இறங்கும். இதை எடுத்து அதிலுள்ள காடியை மட்டிலும் இறுத்து எடுத்துவிட்டு எஞ்சிய அப்பிரக வெண்ணெயைப் பத்திரப்படுத்தவும் இதற்குத்தான் அப்பிரக நவநீதம் அல்லது அப்பிரக வெண்ணெய் என்று பெயர்.

இதை உபயோகித்து அநேகவிதமான மிகவும் உயர்ந்த மருந்துகளைச் செய்யலாம். இதைக்கொண்டே அப்பிரக சிந்தூரம், பற்பம் முதலானவைகள் செய்வது வழக்கம்.

## 946. மனேசிலை சுத்தி

1) மனேசிலை 10 வராகனெடை எடுத்து பீங்கான் பாத்திரத்தில் போட்டு அது முழுமையும் முழுகும்வரையில் எலுமிச்சம்பழரசத்தைவிட்டு ஒரு இரவு முழுவதும் ஊற வைத்து மறுநாட்காலையில் எடுத்துத் கழுவி வைக்க மனேசிலை சுத்தியாகும்.

2) காடி அல்லது வெள்ளாட்டு நீரில் மனேசிலையைப் பொட்டணம் கட்டி டோலாயந்திர முறைப்படி காய்ச்சி பிறகு எடுத்துக் கழுவ மனேசிலை சுத்தியாகும்.

## 947. தாளகத்தின் சுத்தி

சுண்ணும்புக்கற்களின் நடுவே தாளகக்கட்டியை வைத்து கழுதையின் மூத்திரத்தை ஊற்றி சுண்ணும்பை மலரவைக்கவும். இவ்விதம் ஏழுதடவை செய்ய தாளகம் சுத்தியடையும்.

## 948. சகல பாஷாணங்களுக்கும் சுத்தி

பாஷாணங்களின்மேல் துணியைச் சுற்றி ஏழு தடவை ஆவியில் அவித்தெடுக்கச் சுத்தியாகும். இதைத்தவிர வேறு எந்த முறையினுலும் பாஷாணங் களிலுள்ள எண்ணெய் வெளிப்படாது என்பதை அறியவும்.

## 949. வத்ஸநாபியின் சுத்தி

கோமூத்திரத்தில் 3 நாட்கள் ஊறவைத்து நான்காம் நாள் எடுத்து நிர்மலமான தண்ணீரில் கழுவி பத்திரப் படுத்த வத்ஸநாபி சுத்தியாகும்.

## 950. சிவதையின் சுத்தி

பசுவின் பாலில் சிவதையின் வேரை அவித்து உலர வைக்க சிவதைவேர் சுத்தியாகும்.

## 951. கல்நார் சுத்தி

எலுமிச்சம்பழச்சாறு சுண்ணும்புநீர்
உத்பலத்தின் சாறு பசுவின்பால்

இவைகளை ஒன்றுகூட்டி அல்லது ஏதேனுமொரு திரவத்தில் கல்நாரை டோலாயந்திர முறைப்படி தொங்கவிட்டு அவித்து எடுக்க கல்நார் சுத்தியாகும்.

## 952. முர்தார்சிங்கு சுத்தி

வெள்ளாட்டு மூத்திரத்தில் போட்டு ஒரு ஜாமம்வரை காய்ச்சச் சுத்தியடையும்.

## 953. நிமிளையின் சுத்தி

நிமிளையை எடுத்து வாழைக்கிழங்கின் சாற்றில் போட்டு அடுப்பின் மேலேற்றி நன்முகக் கொதிக்க வைக்க

வும். அல்லது நிமிளையைக் காடியில் போட்டு 3 நாட்கள் ஊறவைத்தெடுக்கச் சுத்தியாகும்.

## 954. கந்தகத்தின் சுத்தி

(1) நெல்லிக்காய் கந்தகம் 20 வராகனெடை எடுத்து இரும்புக்கரண்டியில் போட்டு அதில் 1 வராகனெடை நெய்யும் ஊற்றி அடுப்பின் மேலேற்றிக் காய்ச்சவும். தீ கரண்டியின்மேல் படாமல் எரிக்கவும். கந்தகம் உருகியதும் மணத்தக்காளிச்சாறு 4 சேர், பசுவின் பால் 4 சேர் இவ்விரண்டையும் கூட்டி பிறகு யாவற்றையும் ஏழு பாகங்களாகச்செய்து ஏழு கரண்டியில் போட்டு மறுபடியும் காய்ச்சி கந்தகம் உருகியதும் எடுத்து எல்லாவற்றையும் ஒன்ருகக் கலந்துகொள்ளவும். இவ்விதம் ஏழு தடவை செய்து கடைசியில் கந்தகத்தை எடுத்து நன்ருகத் துடைத்து பத்திரப்படுத்தவும்.

(2) தேவையான கந்தகத்தை எடுத்து ஒரு இரும்புக் கரண்டியில் போட்டு உருக்கி கையாந்தகரைச் சாற்றில் ஊற்றிச் சுருக்கம் கொடுக்கச் சுத்தியாகும்.

## 955. காந்த சுத்தி

(1) எலுமிச்சம்பழச்சாறு காடி
புளித்தமோர்

இவைகளில் காந்தத்தூளை ஒவ்வொரு நாள் முழுதும் ஊறவைத்து மறுநாள் வெய்யிலில் உலரவைத்தெடுக்க சுத்தியாகும்.

(1) ஒரு சேர் காந்தத்தை எடுத்துப் புளியங் கொட்டைப் பிரமாணத்திற்கு உடைத்துப் பானையில் போட்டு கொள்ளின் வேர், கொள்ளின் சமூலத்தின் சாறு 1 படி, கொள்ளுக்கட்டு 1 படி இவைகளையும் போட்டு நன்ருகக் காய்ச்சி $\frac{1}{2}$ சேர் சுமாருக்கு இறக்கிக்கொண்டு

சுத்தமான தண்ணீரில் காந்தத் துண்டுகளைத் துடைத்து எடுத்து வைத்துக்கொள்ளவும்.

### 956. கௌரிபாஷாணத்தின் சுத்தி

தேவையான அளவு கௌரிபாஷாணத்தை எடுத்து அதற்கு ½ பங்கு மிளகும், ½ பங்கு உளுந்தும் சேர்த்து எருக்கம் பாலை ஊற்றி நன்ருக அரைத்து பாஷாணத்தின் மேல் கவசஞ்செய்து அதற்குமேல் துணியைச்சுற்றி வேடு கட்டி நீராவியில் வேகவைத்துப் பிறகு எடுத்து அவுரிச் சாற்றில் கழுவி எடுத்துக்கொள்ள சுத்தியடையும்.

### 957. சுக்கின் சுத்தி

சுக்கின் மேலுள்ள தோலை நீக்கிவிட்டு அதன்மேல் சுண்ணும்பைப்பூசி அது உலர்ந்தபின் சுக்கைத் தட்டி உலர்ந்த சுண்ணும்பை நீக்கிவிட்டு பத்திரப்படுத்த சுக்கு சுத்தியாகும்.

### 958. மிளகின் சுத்தி

புளித்த மோரில் 3 நாட்களுக்கு மிளகை ஊறவைத்துப் பிறகு அதை வறுத்தெடுக்க சுத்தியாகும்.

### 959. ஓம சுத்தி

சுண்ணும்பை தண்ணீரில் கரைத்து தண்ணீரை மட்டிலும் இறுத்தி அதில் ஓமத்தை ஒரு ஜாமம் முழுவதும் ஊறவைத்து உலர்த்தி எடுக்கச் சுத்தியாகும்,

### 960. திப்பிலியின் சுத்தி

எலுமிச்சம்பழ ரசத்தில் ஊறவைத்தெடுக்க திப்பிலி சுத்தியாகும்,

### 961. சகல வகை சீரகங்களின் சுத்தி

சுண்ணும்புத் தெளிவில் ஏழு ஜாமம் சீரகத்தை ஊற வைத்துப் பிறகு உலரவைக்கச் சுத்தியாகும்.

### 962. மாசிக்காய் சுத்தி

பசுவின் நெய்யில் மாசிக்காயைப் பொரித்துக் கொள்ளவும். பொரிக்கும்பொழுது மாசிக்காய் வெடிக்கும். உடனே அதை எடுத்துக்கொள்ளவும். இவ்விதஞ் செய்ய மாசிக்காய் சுத்தியாகும்.

### 963. நேர்வாளத்தின் சுத்தி

1வது சுத்தி:— நேர்வாளம் 1 சேரைக் கொணர்ந்து தரையில் கொட்டி உடைத்து அதிலுள்ள பருப்புகளைப் பொறுக்கிக்கொண்டு தோலை நீக்கி பருப்பை ஒரு மெல்லிய துணியில் முடிந்து ஒரு மண்பாண்டத்தில் 1 படி எருமையின் நீரைவிட்டு இரண்டு சிறங்கை சாணத்தையும் போட்டு நன்ருகக் கலக்கி அதிலுள்ள திப்பி எல்லாவற்றையும் எடுத்துவிட்டு அதில் நேர்வாள முடியை வைத்து அடுப்பின் மேலேற்றி சுண்டக்காய்ச்சி மூட்டையை எடுத்துக் கழுவி பருப்பின் நடுவிலிருக்கும் நஞ்சென்று இதழை பிளந்தெடுத்துவிடவும்.

2-வது சுத்தி:— 3 சேர் கற்ருழையின் சோற்றை எடுத்து ஒரு பாண்டத்திலிட்டு அரைபடி தண்ணீர்விட்டு இதில் நேர்வாளப் பருப்பைக் கொட்டி நீர் சுண்டும் வரையில் எரித்து எடுக்கவும்,

3-வது சுத்தி:— இரவில் வடித்த சாதத்தின் பழைய கஞ்சித் தண்ணீர் ¾ படி எடுத்து ஒரு பாண்டத்தில் போட்டு அதில் நேர்வாளப் பருப்பைக் கொட்டி நீர் சுண்டும் வரையில் நன்ருகக் காய்ச்சி எடுத்துக்கொள்ளவும்.

**4-வது சுத்தி:—** இரண்டு பலம் சர்க்கரையை ஷி பாண்டத்திலிட்டு ¾ படி தண்ணீர்விட்டு அதில் ஷி பருப்பைப் போட்டு நீர்சுண்ட எரித்துத் தீயாமல் பார்த்து இறக்கிக்கொள்ளவும்.

**5-வது சுத்தி:—** 50 எலுமிச்சம்பழச் சாறு எடுத்து அதைப் பாண்டத்திலூற்றி மேலும் நேர்வாளப் பருப்பை யுங்கலந்து அடுப்பின் மேலேற்றி நீர்சுண்ட எரித்துக் கொள்ளவும்.

**6-வது சுத்தி:—** ¾ படி பசுவின் பாலைப் பாண்டத்தில் இட்டு பருப்பையும் அத்துடன் போட்டு நீர்சுண்டக் காய்ச்சி இறக்கவும்.

**7-வது சுத்தி:—** ½ சேர் பசுவின் நெய்யை ஷி பாண்டத்திலிட்டு சிவந்த நிறமாக பருப்பை வறுத்துக் கொள்ளவும்.

இவ்விதம் நேர்வாளத்தைச் சுத்திசெய்து இதை மருந்துகளோடு சேர்த்து உபயோகிக்க நெஞ்சு கரிக்காது. வாந்தி ஆகாது, வயிற்றுப் பிரட்டல் முதலானவைகள் ஏற்படாது. விரேசனம் அதிகமானலும் யாற்று மருந்துகளைக்கொடுக்க நேர்வாளத்தின் வேகம் குறைந்து விரேசனமாவது நிற்கும்.

## 964. சேராங்கொட்டையின் சுத்தி

சேராங்கொட்டையைச் சிறு துண்டுகளாக வெட்டி ஒரு மண் பாண்டத்தில் போட்டு எருமைச் சாணியும், ஒரு படி எருமைக் கோமியத்தையும் சேர்த்து அடுப்பின் மேலேற்றி சுண்டக் காய்ச்சி எடுக்க, சேராங்கொட்டையிலுள்ள விஷ எண்ணெய் அதிலிருந்து கசிந்து சாணியில் இறங்கும். அவ்விதம் இறங்கியதும் சாணி கருநிறமடையும். அச்சமயத்தைப் பார்த்துப் பாண்டத்தை அடுப்பிலிருந்து கீழிறக்கிப் பருப்பை மட்டிலும் எடுத்துச் சுத்தமாகக் கழுவி துடைத்துக்கொள்ளவும்.

